தன்னானானே

# பொங்குதே கண்ணீரு

செட்டி நாட்டு ஆச்சிகள் பாடியவை

முனைவர் பழ. அன்பு மீனாள்



# பொங்குதே கண்ணீரு

(செட்டிநாட்டு ஆச்சிகள் பாடியவை)

தொகுத்தவர்

முனைவர் பழ. அன்புமீனாள்

தன்னனானே பதிப்பகம்

பொங்குதே கண்ணீரு
(செட்டிநாட்டு ஆச்சிகள் பாடிய ஒப்பாரிப் பாடல்கள்)
தொகுத்தவர் : **முனைவர் பழ. அன்பு மீனாள்**
© தொகுப்பாசிரியருக்கே
பதிப்பாசிரியர் : காவ்யா சண்முகசுந்தரம்
முதல் பதிப்பு : ஜூலை 2002

வெளியீடு :
**தன்னனானே பதிப்பகம்**
எண்.14, முதல் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம்,
கோடம்பாக்கம், சென்னை - 600 024.
தொலைபேசி எண். 4801603

அட்டை வடிவமைப்பு : முத்து
ஒளி அச்சு : சுந்தரம் கிராபிக்ஸ், சென்னை 24.
அச்சாக்கம் : மணி ஆப்செட், சென்னை - 4.

விலை : ரூ.150/-

# பதிப்புரை

ஒப்பாரி என்றசொல் புலம்பல், பிலாக்கணம், அழுகை, கதறல் என்ற பொருள்களில் பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஒப்பு + ஆரி தான் ஒப்பாரி என்பர். ஒப்புச் சொல்லி அழுவது அதாவது இறந்தவரை நினைத்து அவரை மற்றவர்களோடு ஒப்பிட்டும், அவரது இருப்பையும் மறைவையும் ஒப்பிட்டும் பாடி அழுவது ஒப்பாரி என்றால் சரியாக இருக்கும். ஒப்புக்கு (பேருக்கு) அழுவதும் ஒப்பாரியாகும் என்பர். உற்றவர்கள் உருகி அழுவதும் மற்றவர்கள் ஒப்புக்கு அழுவதும் இயற்கைதான். கையறு நிலை என்பது சங்க வழக்கு.

எனக்குத் தெரிந்து ஒப்பாரிப் பாடல்களைத் தனியாகத் தொகுத்து வெளியிட்டவர்கள் குறைவு. 'கண்ணீர் பூக்கள்' என்ற தொகுதி கணபதி அவர்களால் எழுபதுகளில் வெளியிடப்பட்டது. 'கண்ணீர் வயல்கள்' என்ற பெயரில் ஒருவர் ஒப்பாரிக்கு விளக்கம் எழுதியதாகத் தெரிகிறது. மற்றபடி தாலாட்டையும் ஒப்பாரியையும் ஒப்பிட்டும் விளக்கியும் சில நூல்கள் வந்துள்ளன. எனவே இந்த நூல்தான் பெரிய அளவில் ஒப்பாரிப் பாடல்களின் தொகுப்பாக 'பொங்குதே கண்ணீரு' என்ற பெயரில் வெளி வருகிறது.

இதன் தொகுப்பாளராக பேராசிரியர் முனைவர் பழ. அன்பு மீனாள் விளங்குகிறார். இவரது அருமையும் பெருமையும் இந்நூல் மூலம் வெளிப்படுகிறது. நாட்டுப்புறத் தமிழுக்கு நகரத்தாரின் சேவை அளவிடற்கரியது. அவ்வரிசையில் இவ்வரிய நூல் வெளிவருவது சிறப்புக்குரியது.

கவியரசு கண்ணதாசன் அவர்கள் ஒருமுறை 'கவிஞர்கள் ஒப்பாரியிலும் தாலாட்டிலும் நமது தாய்மார்களிடம் தோற்றுப் போனார்கள்' என்று குறிப்பிட்டுள்ளதாக ஞாபகம். உண்மைதான். கவிஞர்கள் நமது ஆச்சிகளிடம் தோற்றுப் போவதற்கான தடையங்களை இந்நூல் பறை சாற்றும்.

கடந்த முப்பது ஆண்டுகளுக்கு மேலாக 'நாட்டுப்புறவியலை' தமிழுக்கு அறிமுகப்படுத்தி அதன் ஆய்வுகளில் ஆர்வத்தோடு ஈடுபட்டு வருபவன் நான். தன்னனானே மூலம் இதுவரை இருபத்தைந்து நூற்களுக்கு மேல் வெளியிட்டுள்ளேன். எங்கள் பயணத்தில் இந்நூல் ஒரு மைல்கல்.

**காவ்யா சண்முகசுந்தரம்.**

# அணிந்துரை

அறிஞர் சுப. **அண்ணாமலை,** எம்.ஏ., எம்.லிட்., பி.எச்டி.,
''கயல்'',
98, அறிஞர் அண்ணா நகர், மதுரை - 625 020.

நகரத்தார் சீமையில் வழங்கும் நாட்டுப் பாடல்களில், ஒப்பாரிப் பாடல்களைத் தொகுத்து திருமதி. பழ.அன்புமீனாள் அவர்கள் இந்நூலாக வெளியிடுகிறார்கள். நாட்டுப் பாடல் இலக்கிய வரிசையில் இந்நூலில் இடம்பெற்றுள்ள பாடல்கள் சிறந்ததோர் இடத்தைப் பெறும்.

கண்ணீரில் பூத்த கவிதை மலர்களாகிய இப்பாடல்கள் அவல உணர்ச்சியின் ஆழத்தைத் தொட்டுக் காட்டுவதோடு கவிநலமும் உடையவையாகும். இப்பாடல்களைப் பாடிய நகரத்தார் மகளிர் படித்தவர்கள் அல்லர். யாப்பிலக்கணமும், சொல்லிலக்கணமும் அவர்களுக்குத் தெரியாது. மேலும் இலக்கியப் பயிற்சியும் அவர்களுக்கு இல்லை. ஆயினும் கவிதை அழகு பொருந்த அவர்கள் இப்பாடல்களைப் பாடியுள்ளமை வியப்பைத் தருகிறது.

'உணர்ச்சியில் பிறப்பது கவிதை' என்னும் உண்மையை இப்பாடல்கள் மெய்ப்பிக்கின்றன. துயர நிகழ்ச்சி ஒன்று நடந்தால் கண்ணீரை எவ்வாறு அடக்க முடியாதோ, அப்படியே நெஞ்சத்தின் ஆழத்தில் பதிந்து போன நினைவுகளெல்லாம் மேல் மட்டத்தில் குமிழியிடுகின்றன. அவற்றை எவ்வாறாவது வெளிப்படுத்த வேண்டும். என்ற உந்துதலில் இயல்பாக வெளிப்படுவது ஒப்பாரிக் கவிதை. ஒப்பாரி என்ற சொல்லுக்கு ஒப்புமை என்று பொருள். ''மக்களே போல்வர் கயவர் அவரன்ன ஒப்பாரி யாம் கண்டது இல்'' என்னும் குறளே இதற்குச் சான்று. ஒருவர் இறந்த பிறகு, அவர் இருந்த காலத்து நினைவுகள் மட்டும் வெளிப்படாமல், அந்த 'வளத்திற்கு' நேர் மாறாக, அவர் பிரிந்த காலத்தின் 'வறட்சி', எதிரே தோன்றி, ஒன்றுக்கொன்று முரண்பட்டு நிற்கின்றன. இந்த மாறுபாட்டையே விதையாகக் கொண்டு ஒப்பாரிக் கவிதை பிறந்து விடுகின்றது. மாறுபாடும் ஒருவகையாக, ஒப்புமையிலிருந்து பிறப்பதுதான் அணிநூல் எழுதியவர்கள் இதை வேற்றுமை என்பார்கள்.

ஆங்கிலத்தில் ஒருவர் இறந்ததனால் ஏற்படும் துயரத்தை வெளிப்படுத்தும் பாடல்கள் "Elegy" எனப்படும். கவிஞர் Wordsworth தம்முடைய சகோதரர் ஜான் இறந்தபோது, அவர் மலர்களை விரும்பி நேசித்ததையெல்லாம் நினைவு கூர்ந்து பாடுகிறார். ஒரு நகரத்தார் பெண் தன்னுடைய பாட்டி (ஆயா) பிரிவுற்ற போது அவர் வாழ்ந்த காலத்தில் மலர்களை நேசித்ததை ஒரு துயரமான கற்பனைச் சூழலில் வைத்துப் பாடுகிறார்.

அந்த மூதாட்டியின் கணவர் இருக்கின்றார். அவர் இருக்க அந்த அம்மையார் வாழ்வரசியாகப் பிரிந்துவிட்டார். அடக்கஞ் செய்வதற்காக அவரது உடம்பைப் பூவோடும் பொட்டோடும் சென்று மயானத்தில் இறக்கி வைத்தபோது, அந்த மயானத்தின் வெறுமைக் காட்சி, அந்த மூதாட்டியார் வாழ்ந்த காலத்தில் பார்த்து மகிழ்ந்த மலர்வனத்துக்கு - இறந்தபோதும் அவரது பூச்சுமந்த கூந்தலுக்கு - முரணாக இருப்பதை, ஒப்பாரி பாடுகின்ற பெண் கற்பனையில் நினைத்துப் பார்க்கிறார். அவரது துயரக்குரல் ஒலிக்கிறது.

**வடமசைய மணிகுலுங்க**
**வயிரத்தேர் முத்துதிர**
**வாழ்ந்திருந்தார் தேவி**
**வனம்பார்க்க வாரான்னு**
**வனமோ தெறந்திருக்கும்**
**மல்லிகை முல்லை**
**மலரோ மலர்ந்திருக்கும்**

இவ்வாறு கற்பனையில் கண்ட பெண், அதனால் தானே தனக்கு ஆறுதல் கூறிக் கொள்கிறாள்.

கற்றறிந்த புலவர்கள் பாடிய கவிதைகளில் காணப்படும் உருவகம், படிமம், அறநெறிச் செய்திகள் முதலியவையும் ஆற்றல் வாய்ந்த உவமைகளும் நகரத்தார் மகளிர் பாடிய ஒப்பாரிப் பாடல்கள் பலவற்றில் காணப்படுகின்றன. கணவனைப் பிரிந்த ஒரு பெண் பாடும் பாடலில் இரண்டு உயிர்கள் ஒன்றாயின என்ற உருவகம் காணப்படுகின்றது.

**உயிருமது ஒண்ணு**
**உடல்தான் வேறே**
**சிந்தையது ஒண்ணு**

திரேகமது வேறே

ஆவியது ஒண்ணு

ஆளுமது வேறே

ஒரே உருவகத்தை மூன்று வகையாகக் கூறுவதைப் பார்க்கிறோம். கணவனோடு தான் பிரியாமல் வாழ்ந்ததை அந்தப் பெண் மற்றொரு உருவகத்தில் வைத்துப் பாடுகிறார்.

சாமியும் அம்மனும்

தள்ளி இருந்தாலும்

தருமரும் தேவியும்

தள்ளி இருந்ததில்லை

இந்த உருவகத்தின் அடிப்படை இறைவனோடு அம்பிகை பிரியாதவளாய் இருக்கிறாள் என்பது. ஒருவேளை அந்த இணைப்புப் பிரிந்தாலும் தங்களது இணைப்புப் பிரிந்ததில்லை என்கிறாள் அந்தப் பெண்.

புதுவகையான உவமைகளையும் இந்தப் பெண் கையாளத் தவறவில்லை. அவரது கணவர் ஊர்ப் பஞ்சாயத்திற்குத் தலைமை ஏற்று வழக்கிற்குத் தீர்ப்புச் சொல்லும் போது, அது மிகச் சரியாக இருக்கும். நீதிக்கு ஒத்திருக்கும் என்பதை உவமைகளால் எடுத்துச் சொல்கிறாள்.

கருணர் வழக்குரைச்சாக்

கவுருருவி விட்டாப்போல்

செல்வர் வழக்குரைச்சாத்

தேங்காய் ஒடைச்சாப்போல்

அருச்சுனவா வழக்குரைச்சா

அம்புருவி விட்டாப்போல்

கணவன் மனைவி இணை பிரியாமையை மற்றொரு பெண், இலக்கியத்தில் கையாள்வது போல் உவமை அடுக்குகளால் காட்டுகின்றாள்.

கலையும் கலைமானும்

கலந்து வெளையாண்டாப்போல்

சாரையும் சர்ப்பமும்

சருகி வெளையாண்டாப்போல்

கந்தருடை வள்ளியம்மை

கைகலந்த பாவனைபோல்

தளர் நடை நடக்கும் பேரன் பேசும் மழலையை, ஒரு பெண்

தன்னுடைய கணவன் இறந்தபோது நினைத்து அதைக் கேட்டு மகிழ அவரில்லையே என்று வருந்துகிறாள். பேரன் பேசும் மழலையைத் தமிழோசை என்கிறாள்.

தங்க விளக்கெரிய
நம்மதங்க மகன் வாசலெல்லாம்
தம்பி தமிழ்பாடிவர
தம்பி தமிழோசை
சாஞ்சிருந்து கேட்டிருந்தோம்.

என்று மகன் பேசிய மழலையை அனுபவித்ததை நினைவு கூர்ந்து, இப்போது பேரன் பேசும் மழலையைக் கேட்பதற்கு அவர் இல்லையே என்று ஏங்குகிறாள். நாட்டுப் பாடலே ஆனாலும் 'தமிழோசை' என்ற வழக்கு பொதுவாக நாட்டுப் பாடல்களில் காணக் கிடைக்காத அரிய வழக்காகும். தமிழ்த் தோத்திரப் பாடல்களில் திருமூலர் முதன் முதலாகத் 'தமிழோசை' என்று வழங்கினார்; இன்று இலண்டன் வானொலி நிலையம் தமிழ் நிகழ்ச்சிகளை இப்பெயரால் தருகின்றது.

இவ்வாறு சொல்லாட்சியாலும், உவமையாட்சியாலும், கற்பனையாலும், உணர்ச்சிப் பெருக்காலும், கலைக் கவிதைகளை ஒத்து விளங்கும் ஒப்பாரிப் பாடல்களைப் பாடிய படிக்காத மேதைகளை - அந்த கவிநலம் செறிந்த பெண்களைத் தலைதாழ்த்தி வணங்குகிறோம்.

முனைவர் திருமதி பழ. அன்பு மீனாள் அவர்கள் தமது 'டாக்டர்' பட்டத்துக்காக இந்த அழகிய நாட்டுப் பாடல்களை ஆராய்ச்சி செய்து ஆய்வுநூல் வெளியிட்டிருப்பதோடு இக்கவிதைகளை மக்களே படித்துக் கவிதை நலம் நுகர்வதற்காகத் தனியே தொகுத்து வெளியிடுகிறார்கள். அவர்களுடைய பணி பாராட்டுதற்குரியது. ஏட்டில் எழுதாத இலக்கியமாகிய இவற்றைப் புத்தக வடிவில் தந்து, இந்த இலக்கிய மரபு எஞ்சாமல் வளர்வதற்கு வழிகண்ட அவரை உளமார வாழ்த்துகிறேன்.

**ச.ப. அண்ணாமலை**
18.6.2002

# நாட்டுப்புறப் பாடல் அணிவகுப்பு

**தமிழண்ணல்**
முன்னைத் தமிழ்த்துறைத் தலைவர்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை

நாட்டுப்புறப் பாடல்கள் என்பன வாய்மொழி இலக்கியம். 'கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே, முன்தோன்றியது' என்ற தொடர் இதற்குப் பொருந்தும். எழுத்து மொழி தோன்று முன்பே, மக்கள் ஆடிப் பாடத் தொடங்கி விட்டனர். அவர்கள் ஆஅஅ ஈஇஇ ஊஉஉ என ஒலித்துப் பாடி ஆடியதனால், மொழி தோன்றியதென்பர். அன்று முதல் இன்று வரை, வாய்மொழியாகவே கேட்டு வழிவழியாகப் பாடிவரும் மரபு உளது.

பாமர மக்களிடமும் காணப்படும் இதனைக் கல்வியறிவில்லாதவர் திறமை எனக் கருதுதல் தவறு; கற்றலில் கேட்டலே நன்று அல்லவா? கேள்வியறிவால் வளர்ந்த புலமை இவற்றில் பளிச்சிடும்.

வாய்மொழியாகப் பாடுபவர் உடனுக்குடன் பாட வேண்டும்; நின்று சிந்தித்துத் தொடர முடியாது. இடைவெளி வரின், உடனே அதை நிரப்பத் தெரியவேண்டும். இது எப்படி முடிகிறது? வாய்மொழிப் பாடல்களிடையே, சில மரபு வழித் தொடர்த் தொகுதிகள் இருக்கும்; புராணக் கூறுகள் கைவசம் இருக்கும். தயங்குமோ என நினைவு ஓடும்போது அந்தச் சேமிப்புத் தொடர்கள் (Stock Phrases and Epithats) வந்து கைகொடுக்கும். இவை பரம்பரைதோறும் வழிவழியாகக் கேட்டு வருவன. இதனால் இவர்கள் பாடத் தொடங்கினால் குற்றாலத்துத் தேனருவி போலவும் பொங்குமாங்கடலருவி போலவும் ஐந்தருவி போலவும் அவை ஓடிவரும்.

நாட்டுப்புறப் பாடல் அணிவகுப்பில் தலைமையிடம் பெறும் தகுதியுடையன, இவ் ஒப்பாரிப் பாடல்கள். பொதுவாக அவலச் சுவை. இலக்கிய ஆளுமையால், நெஞ்சைக் கவ்வி ஈர்ப்பது. நகரத்தார் மகளிர் இயல்பாகத் திருந்திய, செவ்விய தமிழ்ச் சொற்களை ஆள்பவர்கள். குழந்தை பிறந்ததைப் 'பேறு' கேட்டல் என்பார்கள். பெண்ணைத் 'திருத்தமாக' இருக்கிறாள் என்பார்கள். போற்றி வளர்ப்பதை 'ஓவியப்' படுத்துவதாய்ச் சொல்வார்கள். வாணிகத்தைக் கொண்டு விற்றல் என்பார்கள். தூரத்தே உள்ளதை 'எட்டாக் கை' என்பார்கள். இவர்களின் பேச்சு வழக்கே இலக்கியம் போன்றது. இவர்கள் ஒப்பாரி பாடும்போதும் அது கவிதை நயத்துடன், அருவிபோல் ஓடி வருகிறது. 'ஒப்பாரி யாம் கண்டது இல்' (1071) என்பது குறள். ஒப்பு என்பதுமுண்டு; ஒப்புச் சொல்லுதல் எனலாம். உலகுடன் ஒப்பிட்டு அழுவது இது. துன்பம் என்பது இன்பத்துடன் ஒப்பிடுவதால் வந்ததே. அதனால்தான் எது இன்பம், எது துன்பம் எனத் துல்லியமாக வரையறுக்க முடிவதில்லை.

கணவனுக்கு முன் இறப்பவளை 'வாழ்வரசி'யாகப் போய்விட்டாள் என்பர். மக்கள் பலரைப் பெற்று, மகிழ்ச்சியுடன் வாழ்ந்து, குடி தழைக்க வைத்தவள் போய்விட்டாளாம்.

**வாழ்வரசி வாழ்வரசி**
**மதிப்பான வாழ்வரசி**
**அஞ்சு தலைமுறைக்கும்**
**அழகான வாழ்வரசி**
**ஏழு தலைமுறைக்கும்**
**எடுப்பான வாழ்வரசி**
**பத்துத் தலைமுறைக்கும்**
**பவுரான வாழ்வரசி**

பேச்சு நடையில் இருப்பதை, மேலே இலக்கிய நடையில் எழுதியுள்ளேன். சங்கப் பாடல் போன்றவற்றைப் பிரிக்காது முதலிலும் பிரித்து எடுத்தும் பதிப்பிப்பதுண்டு. நாட்டுப்புறப் பாடலைப் பேச்சுத் தமிழில் முதலிலும் அதையே அடுத்துக் கட்டளை மொழி வடிவிலும் பதிப்பிப்பது நல்லதென்பது என் கருத்து. அதனால் பக்கம் கூடும்; விலையும் உயரும்.

கணவன் இறந்தபின், அவன் பெருமை சொல்லி அழும்போது, கேட்பவர் மனமும் உருகும்; கண்கள் பனிக்கும். அவன் வீடு, தோட்டம், விளைநிலம் எல்லாம் மிகச் சிறந்தவை. கணவனை இழந்தவள் சொல்லிச் சொல்லி அழுகிறாள்.

பிள்ளை அழுதா
பலா மரமும் பிஞ்சிறங்கும்
குழந்தை அழுதா
கொய்யாவும் பிஞ்சிறங்கும்
செம்பொன் அழுதா
தென்னையும் பிஞ்சிறங்கும்!

இயற்கை மனமிரங்கி, மைந்தன் அழுகையை நிறுத்த, பிஞ்சுகளை இறக்குமாம். மரத்தில் பிஞ்சு தோன்றிக் காய்ப்பதைப் 'பிஞ்சு இறங்கும்' என்று கூறுவது எத்துனை நயமான சொல்லாட்சி! இயற்கையோடு மனிதவாழ்வை இயைத்துப் பாடிய சங்கச் சாயல் இதில் இல்லையா?

தாலாட்டில் கூட 'பூ எடுத்துப் பூசை செய்யும் புண்ணியவர் பேரேனோ; மலரெடுத்துப் பூசை செய்யும் மகராசர் பேரேனோ;' எனப் பாடுவார்கள். பூப் பறித்தலை விட, பூக் கொய்தலைவிட, செவ்வி மலரைத் தொட்டால் வந்து விடுமாதலால், 'பூ எடுத்தல்' மிக நயமான சொல்லாட்சி.

நகரத்தார் நாகரிகம் அவர்கள் கட்டிய கோயில்களில் காணப்படும்; வீடுகள் எனப்படும் மாளிகைகளில் வெளிப்படும்; அவர்கள் நடை உடை பாவனைகளில் புலப்படும். தமிழும் சிவநெறியும் அவர்களது கண்கள். அவர்களுடைய வட்டார வழக்குச் சொற்கள். முழுவதும் தொகுக்கப்பட்டால், படிப்பவரை வியப்பிலாழ்த்தும். நகரத்தார் மகளிர் பாடிய தாலாட்டும் ஒப்பாரியும் இலக்கியத் தரம் மிக்கவை. உலக நாட்டுப்புற இலக்கிய வடிவிற்கு முடிமணி எனத் திகழ உள்ளது. உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை.

முனைவர் பழ.அன்புமீனாள் தமிழ்ப் பேராசிரியை; தமிழ்த்துறைத் தலைவர். ஏடு தேடித் தொகுப்பதுபோல், இவ் ஒப்பாரிப் பாடல்களை அரும்பாடுபட்டுத் தொகுத்துள்ளார். இவை இன்று இவ்வரிவடிவு பெறாவிட்டால், காற்றிலே மிதந்த கவிதையாய்க் கரைந்து காணாமற் போயிருக்கும்.

வாய்மொழி இலக்கிய ஆய்வாளருக்கு ஒரு பெரிய ஆய்வுக்களம் இத் தொகுப்பில் கிடைத்துள்ளது. இதைப் பல பார்வைகளில் மேன்மேலும் ஆராயலாம். சமுதாயம், உளவியல், பண்பாட்டு மானுடவியல், இலக்கியவியல், ஒப்பியல் ஏனைய ஆய்வுகளுக்கு இந்நூல் ஓர் அடித்தளமாதல் கூடும்.

மகளிரிடம் பாடல்களைப் பாடவைத்துப் பெறுவது மிகமிகக் கடினம்.

கடின உழைப்பாலும் இடைவிடாத முயற்சியாலும் இத்தனை பாடல்களைத் தொகுத்தளித்த பேராசிரியை அன்பு மீனாளுக்குத் தமிழுலகம் கடமைப் பட்டுள்ளது. சங்கப் பனுவல்களைப் போல, பெரியதோர்களஞ்சியப் படைப்பில், மறைந்தவை பல போகக் கிடைத்தவை சிலவே. இவையாயினும் கிடைத்தனவே என மகிழலாம். ஆயினும் இத்துறை ஆர்வலர்கள் மேலும் மேலும் தேடித் தொகுப்பின், அது ஒரு சிறப்புள்ள தமிழ்ப் பணியாகும்.

ஒரு சமுதாயம் தானும் வாழ்ந்து; பிறரையும் வாழ்விப்பது என்றால் அதை நகரத்தார் சமூகம் எனலாம். தமிழர்களுக்கு முன்னோடியாய் வழிகாட்டுவது, இதுவரை முழுமைத் தமிழராய் வாழ்ந்து வருவது இது. இவ் இனப் பெருமைக்கு ஓர் உரைகல்லாக, இத்தொகுப்பு என்றும் விளங்கும். பழனியப்ப அன்பு மீனாளின், பணி வாய்மொழிப் பாடல்போல், வழிவழிச் சிறக்கும் என்பது உறுதி.

**தமிழண்ணல்**

ஏரகம்
மதுரை - 625 020.

பேராசிரியர் டாக்டர் அர.சிங்காரவேலன் (எ) அரசி
மீனாட்சி அரங்கம், 106, வ.உ.சி. தெரு,
கண்டனூர் - 630 104.

**நகரத்தார் சிறப்புகளின் திறவு கோலே**
**நம்மனத்தை வளர்க்கின்ற ஞானப் பாலே.**

(1)

அன்புக்குத் திருவுருவம் இரண்டே ஆகும்
ஆண்டவனார் முதலுருவம் : அடுத்துக் கண்ணீர்
அன்புடையார் ஆண்டவனை அடையும் நேரம்
அவ்விரண்டும் சங்கமிக்கும் கண்கள் ஓரம்
துன்பமெனும் தூரிகையைக் கண்ணில் தோய்த்தும்
தூயதமிழ்க் காரிகையைத் துணைக்குச் சேர்த்தும்
அன்புமீனாய் நீந்தும்பா இரங்கற் பாவாம்
**அன்புமீனா கையிலவை ஏற்றப் பாவே.**

(2)

பாவையவர் நம்மாச்சி **அன்பு மீனா**
பரவையெனும் கடல்தாண்டிப் பொருள்கள் தேடிச்
சாவைவெல்லும் அறப்பணிசெய் நகரத் தாரின்
சகலகலை வல்லமையை மனைவி மக்கள்
நாவைத்தம் உளியாக்கி இல்வெட் டாக்கும்
நகரத்துள் கல்வெட்டாம் இரங்கற் பாக்கள்
கோவை செய்த சமர்த்துக்கு மதுரை மீனா
கொடுத்திருக்கும் பெரும்பரிசே டாக்டர் பட்டம்.

(3)

அப்பச்சி பழநியப்பர் இராம கிருஷ்ணர்
ஆவிச்சி உறுதுணைவர் விவேகா நந்தர்
ஒப்பான உமையாச்சி சார தாம்மை
ஒய்வில்லாத் தேனீயாம் அன்புமீனா

ஒப்பரிய நகரத்தார் நாட்டுக் கோட்டை
உயரினத்தின் பண்பாட்டைக் காக்கும் கோட்டை
ஒப்பாரி எனும் அவலப் பாட்டுக் கோட்டை
உயராய்வு நூல்கோட்டைத் திறவு கோலே.

(4)

உறவாட்டும் பம்பரம்தான் மனித வாழ்க்கை
ஒருநாளின் இரவுபகல் இன்பதுன்பம்
பிறந்தவுடன் கேட்பதுவும் அழுகை ஓசை
பிரிந்தவர்கள் எழுப்புவதும் அழுகை ஓசை
பிறப்பதனை மங்கலமாய்க் கருதுகின்றோம்
பிரிவதனை அமங்கலமாய்க் கருதல் ஏனோ?
**சிறப்புகளின் திறவுகோலாம் இந்த நூலே**
**செம்மனத்தை வளர்க்கின்ற ஞானப் பாலே.**

(5)

ஞானப்பால் சுரந்தளித்த இராம கிருஷ்ணர்
ஞாயிற்றின் ஒளிபெற்ற பழநி யப்பர்
வானத்தில் முழுமதியாம் சார தாம்மை
வளர்கோயில் ஆசிரமம் அமைத்துக் காக்கும்
தானத்தின் தருமத்தின் புண்ணி யத்தாய்
தக்கதிரு மக்களெனப் பிறந்தார் தம்முள்
தேனொத்த தமிழ்கற்ற அன்பு மீனா,
திருவாளர், மனைமக்கள், வாழ்க! நன்றே!

அன்புடன் வாழ்த்தும்
**அர. சிங்காரவேலன்**
10.6.2002

சொல்லோவியர், பொற்கிழிக் கவிஞர்
விரிவுரை வித்தகர், திருமந்திரச் சொல்மணி
**சொ.சொ.மீ.சுந்தரம்** எம்.காம்., எம்.ஃபில்.
வணிகவியல் துறைத் தலைவர்
சௌராஷ்டிரக் கல்லூரி, மதுரை - 625 004.

**உழவும் தொழிலும் இசை பாடும்**
**உண்மைச் சரித்திரம் அசைபோடும்**
**இழவில் அழுதிடும் பெண்கூட**
**இசையோ டழுவது கண்கூடு**

என்று பாடினார் நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை. செட்டிநாட்டு ஆச்சிமார் பாடும் ஒப்பாரிப் பாடல்கள் இசையோடு மட்டுமில்லாது, நெஞ்சைப் பிழியும் உணர்வோடும், கண்ணீர் பெருக வைக்கும் சொற்களோடும் இணைந்தவை. இவற்றைப் பாடினால் எத்தகைய கல்மனமும் கரையும். இது ஒரு பேரிலக்கியம் இதற்கு இலக்கணம் இனிமேல்தான் வகுக்கப்பட வேண்டும். இன்ப உணர்ச்சிகளை விடத் துன்ப உணர்ச்சிகள் வலுவானவை. ஆழமானவை. அவை சொற்களாக மாறும்போது, பேராற்றல் வெளிப்பட்டு, நெஞ்சைப் பிழிகின்றன. பெரும்பாலான ஒப்பாரிப் பாடல்கள் இதுவரை "எழுதாக்களவி" யாகவே இருந்து வந்தன. நகரத்தார் பெண் மக்களிடம் சென்று, இந்தப் பாடல்களைக் கேட்டு முறைப்படுத்தி, தொகுத்து நூலாக வெளியிட்டுப் பெரும்பணி செய்திருப்பவர் மதுரை அருள்மிகு மீனாட்சி அரசு கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவரும் பேராசிரியையுமான அன்புக்கும் மரியாதைக்கும் உரிய சகோதரி முனைவர் அன்புமீனாள் அவர்கள். இப்பணியின் மூலம் இதுவரை அடைத்துக் கிடந்த ஓர் இலக்கியக் கதவைத் திறந்துவிட்டு, இனிவரும் ஆய்வுகளுக்கும் இடமளித்துள்ள பேராசிரியை அன்பு மீனாள் அவர்களுக்கு நகரத்தார் பெருமக்கள் மட்டுமின்றித் தமிழ்நாடும், தமிழ்மொழி பேசும் தமிழர் அனைவரும் கடமைப்பட்டிருக்கிறார்கள். நமக்கு வாய்த்த சாமிநாதையர் முனைவர் அன்புமீனாள் அவர்கள்.

இந்நூலில் சுமார் 125 பெருமக்களிடம் கேட்டறிந்த பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றைப் படிக்கத் தொடங்கினால் முடிக்காமல் கீழே வைக்க முடியாது. நம் கண்களில் இருந்து பெருகும் கண்ணீரையும் கட்டுப்படுத்த முடியாது.

கணவன் இருக்கும்பொழுது வாழ்வரசியாக மறைந்த பெண்ணை "மாலைக் கழுத்தி மடிநெறஞ்ச பூக்காரி மல்லிகைப்பூ வாசமுள்ளாள் தாலிக் கழுத்தி தலைநெறஞ்ச பூக்காரி தாழம்பூ வாசமுள்ளாள்" என்று பாடும்பொழுது எதுகையும் மோனையும் போட்டி போட்டுக்கொண்டு வந்து

துன்பத்தில் பங்கேற்கக் காண்கிறோம். அவள் கணவன் பெருமை அவள் பெருமை இரண்டையும் இணைத்து

தள்ளியிரு என்காத தருமருக்கு வாழ்ந்திருந்தா
தருமருக்கு முன்போகத் தவங்கள் மெத்தச் செய்திருந்தா
அடசி இரு என்காத அருச்சுனருக்கு வாழ்ந்திருந்தா
அருச்சுனர்க்கு முன்போக அனேக தவம் செய்திருந்தா
வெலகி இரு என்காத வீமருக்கு வாழ்ந்திருந்தா
வீமருக்கு முன்போக வெகுதவங்கள் செய்திருந்தா

என்று பாடும் பொழுது யாராவது கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியுமா?

கணவனை இழந்த மனைவியின் சோகம் கணக்கில் அடங்காது கவிதையிலும் அடங்காது.

ஆளுக்கு மோசமில்லே - நான் - ஆகாத பெண்ணாச்சே
உருப்படிக்கு மோசமில்லே - நான் - உதவாத பொண்ணாச்சே
நம்ம - கோடி சனத்திலே நான் - வாழ்விழந்த பொண்ணு
கூடி இருக்க ஆகாதே - நம்ம
மகுர சனத்திலே - நான் - மன்னரிழந்த பொண்ணு
வந்திருக்க ஆகாதே

என்று தன்னை உலகம் ஒதுக்கி வைக்கும் நிலையை நினைத்துத் தேம்புகிறாள். பொழுது போகாமல் தவிக்கிறாள். தனியே கிடந்து தடுமாறி.

ஆகாப் பொழுதை அனுப்பிவிட்டாப் போகலையே
போகாப் பொழுதைப் புடிச்சுவிட்டாப் போகலையே
மாயாப் பொழுதை மறிச்சுவிட்டாப் போகலையே

என்று அவள் மனம் வாடும் பொழுது. நாம் போய் இந்தப் போகாப் பொழுதைப் போக்கிவிடலாமா என்று தோன்றுகிறதல்லவா?

"சீலை நூல் அந்தாச் சேத்துப் பொருதலாம்
பட்டுநூல் அந்தாப் பார்த்துப் பொருதலாம்
தாலிநூல் அந்ததுவைச் சரிபண்ண மாட்டலியே
மாலைநூல் அந்ததுவை வழிபண்ண மாட்டலியே"

"பவனளக்கும் நாழியின்னு பக்கம் வந்து நின்னவளை
உப்பளக்கும் நாழியின்னு ஒதுங்கிப் போய் நிக்கவச்சா
முத்தளக்கும் நாழியின்னு முன்னே வந்து நின்னவளைத்
தவிடளக்கும் நாழியின்னு தள்ளிப்போய் நிக்கவச்சா"

என்று அந்தப் பெண் மனம் படும் பாட்டையும் அவள் பாடும் பாட்டையும் கேட்டால் எமனும் இரங்க மாட்டானா?

ஆராரு வந்தாலும் அவுக்காத மங்கிலியம்
கள்ளர் படை வந்தாலும் கழுத்தாத மங்கிலியம்
மறவர் படை வந்தாலும் வாங்காத மங்கிலியம்
ஏமர் படை வந்து எழையைப் பெருக்கிவிட்டா

தூதர் படை வந்து தும்பைத் தெரிச்சுவிட்டா

என்று அழும் பெண்ணின் குரலைக் கேட்டால், எடுத்த எமனே திரும்பி வந்து கொடுக்கமாட்டானா?

சிறுவயதில் இறந்தவர்களை நினைத்து அழும்பொழுது
அழகை எழுதினவன் ஆயுள் எழுதலையே
வடிவை எழுதினவன் வயசை எழுதலையே

என்று பாடக் கேட்டால் அந்தப் பிரமன் மீதே சினம் வரவில்லையா?

ஒரே நாளில், தாய் தந்தையரை இழந்த மக்கள், அதை நினைத்து
காயைக் கனியைக் கலந்து பறிப்பாக - நாங்க
தாயைத் தகப்பனைத் தட்டிப் பறிச்ச மக்க
பூவைப் பிஞ்சைப் பின்னிப் பறிப்பாக - நாங்க
பெத்தாரை மாதாவைப் பின்னிப் பறிச்ச மக்க

என்று பாடும்பொழுது உணர்ச்சிவெள்ளம் கரைபுரண்டு ஓடவில்லையா?

இந்நூல் ஒரு பேரிலக்கியம். படிக்காத பெண் மக்கள், தங்கள் உணர்ச்சிகளுக்கு வடிகாலாகப் பாடிய பாடல்கள் உள்ளத்துள்ளது கவிதை என்பதனை உணர்த்துகின்றன. தமிழுக்கு நகரத்தார் பெருமக்கள் செய்த சேவைகளில் இது மிகப் பெரிய சேவை . இந்நூலை எழுதிய தாய்மார்கள் பலர். தேடித் தொகுத்து முறைப்படுத்தி "ஆய்வு செய்த டாக்டர் அன்புமீனாள் அவர்களுக்கும், அவருக்கு உற்சாகமளித்து எழுதத் தூண்டிய அவர்கள் தந்தையார், மிகச் சிறந்த கல்வித் தொண்டர் பழனியப்ப செட்டியார் அவர்களுக்கும் உறுதுணையாக இருக்கும் நூலாசிரியரின் கணவர் பேராசிரியர் ஆவிச்சி அவர்களுக்கும் நாம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம்.

இந்நூல் ஒவ்வொரு தமிழரின் இல்லத்திலும் இருக்க வேண்டிய கவிதைநூல். இதை வெளியிடுபவர்கள் கொடுத்து வைத்தவர்கள். படிக்கும் நாம் மிகமிகக் கொடுத்து வைத்தவர்கள்.

கண்ணீர் பெருக்கெடுக்கும்; காலனுக்கும் நெஞ்சுருகும்;
மண்ணும் கலங்கி மனம்வெடிக்கும் ; - எண்ணமிகும்
ஒப்பாரிப் பாட்டில் ஒருவரியைத் தம்காதில்
தப்பாமல் கேட்டுவிடத் தான்.

செட்டிநாட் டொப்பாரி தேர்ந்த தமிழ்க்கவிதை ;
எட்டரிய கற்பனையாம் ஏணியின்மேல் - பட்டென்று
துன்பம் உடைக்கத் தொடர்ந்த மனப் போராட்டம் ;
மன்னுதமிழ் வாழும் மலை.

ஊரெல்லாம் சென்று மனத்துள்ளே குடிபுகுந்து
சீர்சிறக்கும் ஒப்பாரி தேடிவைத்துப் - பேர் பெற்றார்
மங்கலம்சேர் நங்கை வளரன்பு மீனாள் நற்
பங்கயத்துச் செல்வி பணிந்து.

மூச்சாய்த் தமிழை முறையாகக் கற்றுணர்ந்தார்
ஆச்சிமார் சொல்லை அளக்கின்றார் - பேச்செல்லாம்
செந்தமிழே ஆகத்திகழ் அன்புமீனாள் சீர்
தந்தநக ரத்தார் தவம்.

ஒப்பாரு மின்றி உயர்ந்த தமிழ்மீனாள்
ஒப்பாரி தேடி உயர்வுற்றார் - எப்பொழுதும்
சங்கத் தமிழ்தேடும் சாமிநா தையரைப் போல்
மங்கலமாய் வாழ்க மகிழ்ந்து.

துன்பம் அளந்து துடித்த தமிழ் ஒப்பாரி
என்றும் உருக்கும் இலக்கியமாம் - நன்றாக
ஆராய்ந்து நூல் எழுதும் அன்புமீனாள் என்றும்
சீராக வாழ்க செழித்து.

பணிவுள்ள

*சொ.சொ.மீ.சுந்தரம்*

27.6.2002

# நன்றியுரை

"நகரத்தார் குலத்தில் வழங்கும் கையறு நிலைப் பாடல்கள்" என்ற தலைப்பில் முனைவர் பட்டம் பெற, நகரத்தார் மகளிர் பாடிய ஒப்பாரிப் பாடல்களைத் தொகுக்கும் அரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. கண்ணீரில் பூத்த கவிதை மலர்கள் நூலாக வெளிவர உதவிய நன்னெஞ்சங்களுக்கெல்லாம் இருகரம் கூப்பி என் பணிவன்பு கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

என் ஆய்வுக்கு மேற்பார்வையாளராக இருந்து வழிகாட்டியதோடு, இந்நூலுக்கு அணிந்துரையும் நல்கிய எங்கள் ஆசான். அறிஞர். சுப.அண்ணாமலை அவர்களுக்கு நான் என்றென்றும் கடப்பாடுடையேன்.

ஆய்வுக்காகத் தொகுக்கப்பெற்ற ஒப்பாரிப் பாடல்கள் அச்சில் வரவேண்டும் என்று என்னைக் காணும் போதெல்லாம் ஊக்கப்படுத்தி ஒப்பாரிப் பாடல்களின் அணிவகுப்பு நூலாக வருகையில் அதற்கு அணிந்துரையும் நல்கிய அன்புள்ளம் கொண்ட தமிழண்ணல் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்க வேண்டும் என அன்புடன் வேண்டிக் கொண்டபோது, மனமுவந்து அணிந்துரையைக் கவிதையாக்கி அளித்த கவிஞர் அறிஞர் அர.சிங்காரவேலன் அவர்களுக்கு என் இதயம் கனிந்த நன்றி.

'பொங்குதே கண்ணீரு' என்ற ஒப்பாரி பாடல்களில் தோய்ந்து, கண்ணீர் பெருக்கி உள்ளத்து உணர்வையெல்லாம் கவிதையாக்கி, நகரத்தார் ஆச்சிகளைப் பாராட்டியும், என்னை வாழ்த்தியும் அணிந்துரை வழங்கிய பொற்கிழிக்கவிஞர் சொ.சொ.மீ.சுந்தரம் அவர்களுக்கு உளம் நிறைந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

தகவலாளர்களைச் சந்திக்கவும், களப்பணியின்போது உடனிருந்து பாடல்களைத் தொகுக்கவும் முக்கிய காரணமாக இருந்த என் தந்தையார் திரு.பழ.லெ.பழனியப்ப செட்டியார் அவர்கள் ஒப்பாரிப் பாடல்கள் நூலாக வெளிவரவும் முதற்காரணமா இருந்தவர்கள். அவையத்து முந்தி இருக்க வைத்த என் தந்தையை எனக்களித்த இறைவனுக்கு என்றென்றும் என் நன்றி உரியது.

மிகக் குறுகிய காலத்தில் இந்நூல் சிறப்பாக வெளிவர மனமுவந்து செயற்பட்ட காவ்யா திரு.சண்முகசுந்தரம் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

நகரத்தார் தொன்மையில் வாழ்ந்த காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து வெளிவரும் இந்நூலைக் கவிதைக் களஞ்சியங்களான - ஒப்பாரிப் பாடல்களைப் பாடி உதவிய - நகரத்தார் ஆச்சிகளுக்கு நன்றியோடு காணிக்கையாக்குகிறேன்.

பழ. அன்புமீனாள்

## நூலாசிரியர் பற்றி........

திரு.பழ.லெ.பழனியப்ப செட்டியார் -உமையாள் ஆச்சி பெற்றோர். 7.8.1948. பி.ஏ.பொருளாதாரம், எம்.ஏ. தமிழ், சென்னை மாநிலக் கல்லூரி, பி.எச்டி. மதுரை காமராசர் பல்கலைக் கழகம், 1989. மாணவப் பருவத்தில் பேச்சுப்போட்டி, கட்டுரைப் போட்டிகளில் மாநில அளவில் பரிசுகள். 33 ஆண்டுகள் அரசுக் கல்லூரிகளில் ஆசிரியைப் பணி. தற்பொழுது அருள்மிகு மீனாட்சி அரசு மகளிர் கல்லூரி தமிழ்த் துறைத் தலைவர். இளைஞர் நலம், பெண்கள் முன்னேற்றம், நாட்டுப்புறப் பாடல்களில் ஆர்வம்.

கணவர் திரு.மெ.ஆவிச்சி எம்.ஏ., எம்.ஃபில் ஆங்கிலப் பேராசிரியர் - தியாகராசர் கல்லூரி, மதுரை.

முகவரி:
**பழ. அன்புமீனாள்**
மனை எண். 363, 'விவேக்'
அண்ணா நகர், மதுரை - 625 020.
தொ.பேசி எண் 536897

# நகரத்தார் ஒப்பாரிப் பாடல்கள் - ஓர் அறிமுகம்

தமிழ் நாகரிகத்தின் எடுத்துக்காட்டாக விளங்கும் நகரத்தார்கள் திரைகடலோடிப் பெரும் பொருள் ஈட்டியவர்கள். தமிழின் பெருமையை உலகெங்கும் பரப்பியவர்கள்; சைவ சமயத்தைக் கட்டிக் காத்தவர்கள்; கோவில் பணிகளையும், கல்விப் பணிகளையும் குறைவின்றிச் செய்தவர்கள்; அலைகடலுக்கு அப்பாலும் அறப்பணி செய்து உலகறிந்த சமூகத்தினராக விளங்குபவர்கள். இத்தகைய இனத்தாரின் மகளிர் பாடும் வாய்மொழிப் பாடல்களான ஒப்பாரிப் பாடல்கள் இவர்கள் வாழ்வை உள்ளபடி காட்டும் கண்ணாடிகளாகவும், இவர்தம் மரபையும் பண்பாட்டையும் வெளிப்படுத்தும் இலக்கியப் பெட்டகங்களாகவும் விளங்குகின்றன.

'நகரத்தார் குலத்தில் வழங்கும் கையறுநிலைப் பாடல்கள்' என்ற ஆய்வேட்டை, மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் அளிக்க நகரத்தார் ஒப்பாரிப் பாடல்கள் மிகுதியும் தேவைப்பட்டன. இதுவரை தொகுக்கப்பட்ட பாடல்கள் குறைவான எண்ணிக்கையில் இருந்தமையால், செட்டிநாட்டைச் சேர்ந்த ஏழுவட்டகைப் பிரிவுகளிலும், பல ஊர்களிலும் நகரத்தார் மகளிரிடம் ஒப்பாரிப் பாடல்களைக் கேட்டுத் தொகுக்கும் திட்டம் உருவானது.

ஒப்பாரிப் பாடல்களை நன்றாகப் பாடக்கூடியவர்களை ஒவ்வோர் ஊரிலும் வாழும் மக்கள் அறிந்து வைத்திருக்கிறார்கள். உறவினர்கள், நண்பர்கள், தெரிந்தவர்கள் வாயிலாகவும், நேரடியாகவும் தகவலாளர்களை அணுகிப் பாடல்கள் சேகரிக்கப் பெற்றன. பாடுவோரைக் கண்டுபிடித்து, அவர்கள் பாடவிருப்பம் தெரிவித்தாலும் உடனே பாடுவதில்லை. தொடக்கத்தில் சற்றே தயக்கம் காட்டினாலும், பின்னர் ஆர்வத்துடன் பாடிக் காட்டினார்கள். சிலர் விதி விலக்காக விளக்கு வைத்த பிறகும் பாடினர். தம் உறவினர் இறப்புக்காகத் தாங்கள் பாடிய ஒப்பாரிப் பாடல்களை நினைவுபடுத்திப் பாடினர், சூழலைச் சொல்லிப்பாடும்படி கேட்டபொழுது, பாடப்படும் சூழலை மனதில் வரவழைத்துக் கொண்டு பாடினர். இழவு வீடுகளில் பிறர் பாடத்தாம் கேட்ட பாடல்களையும் நினைவுபடுத்திப் பாடினர். தோற்றுவிக்கப்பட்ட சூழலில் பாடத் தொடங்கியவர்கள். உணர்ச்சி வசப்பட்டுத் துன்பநினைவுகளில் மூழ்கி, முந்தைய துயரத்தை நினைந்து மடைதிறந்த வெள்ளம் போல் பாடத் தொடங்கினர்.

பாடியவர்களில் சிலர் சூழலுக்கேற்பக் கருத்துகளைப் படைக்கவும், புதிது புதிதாகச் சேர்க்கவும் வல்லமை பெற்றிருந்தனர். வயது முதிர்ந்த

பெண்களிடம் நீண்ட ஒப்பாரிப் பாடல்களைச் சேகரிக்க முடிந்தது. பழைய பழக்க வழக்கங்கள், சமுதாய நடைமுறைகள், இளமை மணம், கைம்மைக் கொடுமை, அயல் நாட்டு வணிகத் தொடர்பு, மறைந்து போன பழக்க வழக்கங்கள் பற்றிய அரிய செய்திகள் ஆகியவற்றை வயது முதிர்ந்த பெண்கள் பாடிய பாடல்களிலே காணமுடிந்தது. அறுபது வயதிற்கு மேற்பட்ட எழுத்தறிவில்லாத பெண்களின் பாடல்களில் இயல்பான மோனை, எதுகை, முரண் இயைபு, சீரான பாடலமைப்பு ஆகியன காணப்படுவது குறிப்பிடத்தக்கது. இவர்களிடம் படைப்பாற்றல் சிறந்து காணப்படுகிறது. ஐம்பது வயதுக்கு மேற்பட்ட கல்வியறிவுடைய எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் பிறர் பாடியதை நினைவில் வைத்தும், தாமாகச் சிலவற்றைச் சேர்த்துப் பாடவும் ஆற்றல் உடையவராக இருந்தனர். ஐம்பது வயதுக்குக் கீழ்ப்பட்டவர்கள் பிறர் பாடிய ஒப்பாரிப் பாடல்களைக் கேட்டு, அவற்றை நினைவில் வைத்துப் பாடுகிறார்கள். இவர்களிடம் தாமாகப் படைக்கும் ஆற்றல் இல்லை.

ஒப்பாரிப் பாடல்களைப் பாடியவர்கள் பல உறவினர்க்கும் பாடும் பாடல்களைப் பாடிக் காட்டினர். பிறந்த வீட்டு உறவு, புகுந்த வீட்டு உறவு என உறவடிப்படையில் பாடினர்.

தாய் தந்தை இறப்புக்காகப் பாடும் பாடல்களில், பெற்றோர்கள் பெண்ணைப் பேணி வளர்ப்பதையும், அன்புடன் பாதுகாப்பதையும், சீர்வரிசைகள் செய்து மணம் முடிப்பதையும், திருமணத்திற்குப் பின்னும் முறைகள் தந்து பேணுவதையும், துயர் துடைப்பவர்களாக விளங்குவதையும் குறிப்பிட்டுப் பாடுகிறார்கள்.

**"சாலோட தண்ணி**
**சாச்சுக் குடிச்சாலும்**
**தாய் வாத்த தண்ணிபோல்**
**தாகந் தெளியாதே**
**தாகவிடாய் தீராதே"**

தாயின் அன்புக்கு இணையே இல்லையல்லவா?

சகோதர - சகோதரி உறவின் நெருக்கத்தையும், பாசத்தையும் காட்டும் ஒப்பாரிப் பாடல்களில் சகோதரனைப் பெற்றோருக்கு அடுத்த நிலையில் பெற்றோரின் கடமைகளைத் தனக்குச் செய்பவனாகப் பாடுகிறார்கள். இருவரின் உறவும் இறுதிவரை தொடரும் என்றும், சகோதரியின் இறப்புக்குப் பின்னும் இறப்பை ஒட்டிய சடங்குகள் செய்பவன் என்றும் பாடுகின்றனர். தாங்கள் கூடிப் பிறந்ததையும், வளர்ந்ததையும், பாசமுடன் வாழ்ந்ததையும் நினைவு கூர்ந்து,

அடுத்துப் பொறக்க
அநேக நாள் செல்லுமே
அடுத்துப் பொறந்தாலும்
அன்பான நற்பொறப்பு
அடையக் கிடைக்காதே

என உருக்கமாகப் பாடுகின்றனர்.

பிறந்த வீட்டுப் பிற உறவுகளும் அன்புறவாகவே ஒப்பாரிப் பாடல்களில் காட்டப் பெறுகின்றன. புகுந்த வீட்டு உறவில் கணவன், மகன், மகள், மாமியார், நாத்தனார் முதலியவர்கள் இறப்புக்காகப் பாடும் பாடல்கள் பல உள. தொகுக்கப் பெற்ற பாடல்களில் கணவன் இறப்புக்காகப் பாடப் பெற்ற பாடல்களே அளவிலும், எண்ணிக்கையிலும் மிகுதியாக இருந்தன. கணவன் இறப்புக்காகப் பாடப் பெற்ற பாடல்களை வெவ்வேறு நிலைகளில் பாடப்பட்டவையாக வகைப்படுத்தலாம்

பெண்ணின் வாழ்வில் கணவன் வேராக விளங்குவதை

'வேருமெத்த ஓடியும்
விருட்சமுள்ள பூமரத்தே
சல்லிவேர் அந்தா
தழை உதிரும் பாவனைபோல்
தருமர் எழுந்து எனக்குத்
தவிக்குதே எம்மனசு'

என்று ஒரு பெண் பாடுகிறாள். கணவனின் பாதுகாப்பையும் அன்பையும் இழப்பதோடு வாழ்வின் இன்பங்களையும் முழுவதுமாக இழந்து விடுகிறாள். கணவன் இறப்புக்காகப் பாடப் பெற்ற பாடல்களில் பொதுவாக மங்கலப் பொருட்களான பொட்டு, மை, மஞ்சள், பூ முதலியவற்றையும், விலையுயர்ந்த ஆடை அணிகலன்களையும் இழந்து மகளிர் வருந்துவது காணப்படுகிறது. வெள்ளாடை அணிந்து வீட்டின் ஒரு மூலையில் இருந்து, எளிய உணவை உட்கொண்டு வீட்டு வேலைகளைச் செய்தே காலங்கழிக்க வேண்டியுள்ளதே என்று வருந்தும் நிலையை உணர முடிகிறது. இவற்றோடு கணவனை இழந்த பெண் சமூக மதிப்பையும் இழந்து, வீட்டிற்குள்ளேயே முடக்கப்படுவதும், மங்கல நிகழ்ச்சிகளில் ஒதுக்கப்படுவதும் அவர்கள் எதிர்ப்படுவதே சகுனத் தடையாகக் கருதப்படுவதும் வெளிப்படுகின்றன. இத்துணை இழப்புகளும், அவமதிப்புகளும் கணவன் இறப்பால் ஏற்படுவதால், விதவை நிலைக்கு அஞ்சி, கணவனுக்கு முன் பூவோடும் பொட்டோடும் இறந்துபடுதலைப் பெரும் பேறாகக் கருதும் மகளிர் மனநிலையையும் பாடல்கள்

வெளிப்படுத்துகின்றன. முற்காலப் பாடல்களில் கணவனை இழந்த பெண்கள் பட்ட வேதனைகள், துன்பங்கள் வெளிப்படுகின்றன. காலப் போக்கில் விதவையர்க்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் குறைந்து வருவதையும் பாடல்கள் காட்டுகின்றன.

கணவன் இறப்புக்காக மனைவி பாடும் பாடல்களில் அவலச்சுவை மிக அதிகமாகக் காணப்படுகிறது. அதிலும் பொருளீட்ட வேண்டி, மனைவியை இங்கேயே விடுத்து, கடல் கடந்து சென்ற கணவன் அங்கேயே இறந்துபட, அவன் முகத்தைக் கூடக் காணமுடியாத மனைவி,

**"போன முகத்தைப்**
**பொன் முகத்தைப் பார்க்கலியே**
**மாண்ட முகத்தை**
**மதிமுகத்தைப் பார்க்கலியே**
**நீங்க செத்ததுக்குப் பிற்பாடு**
**தேதியவும் கேட்டமுதோம்"**

என்று வருந்தியழும் பாடலடிகள், ஆடவர் கடல் கடந்து செல்கையில் மகளிரை அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லாத காலத்தில், இந்த நிலை தவிர்க்க இயலாமற் போனதைக் காட்டுகின்றன. வியப்புக்குரிய விதத்தில் கருத்து வேறுபட்டால் கணவனைப் பிரிந்து வாழ்ந்த மனைவி - கணவன் இறப்புக்காகத் தான் வருந்தவில்லை என்று பாடிய பாடலும் கூடக் கிடைத்தது. இத்தகைய பாடல் உண்மை நிலையைக் கூறினாலும், இந்நிலை அரிதாகவே உள்ளது.

தான் பெற்றெடுத்த மக்கள் இழப்புக்காகத் தாய் பாடும் பாடல்களில், பிள்ளைகளைப் பெறத் தாய் செய்த தவங்கள், வளர்த்த அருமை, பிள்ளைகள் தன்னிடம் காட்டிய பாசம் முதலியவை வெளிப்பட்டு நெஞ்சை நெகிழ வைக்கின்றன. மூத்த மகனோ மூத்த மகளோ பெற்றோர்க்கு முன்னர் இறந்து படுதல் அவலத்தை இன்னும் ஆழப்படுத்துகின்றது. மகன் கொள்ளியிடலும், மகள் வாய்க்கரிசியிடப் பச்சை குத்துதலும் தனக்குக் கிடைக்கவில்லையே என வருந்துவது பல பாடல்களில் வெளிப்படுகின்றது. அவலத்திலும் பேரவலம்

**பெத்தாரை அனுப்பாம**
**பெரிய எழவைக் கூட்டாம**
**பெத்தாரைப் பாவியங்கப்**
**பிள்ளைகள் இறப்பது.**

புகுந்த வீட்டில் பெண்ணின் மணவாழ்வின் மகிழ்ச்சிக்கும், பெருமைக்கும் காரணமாக விளங்குபவள் மாமியார். ஒப்பாரிப் பாடல்களில் மாமியார் - மருமகள் உறவைப் போராட்ட உறவாகக் காட்டும் பாடல்களும்

உள்ளன. அன்புறவாகக் காட்டும் பாடல்களும் உள்ளன.

மனையிலே பாம்பிருந்து
எங்களை வாழவிட ஒட்டலியே

என்று கணவருடன் சேர்ந்து வாழவிடாத மாமியாருக்கும்

பிஞ்சு மக்கள் அப்பத்தா
பூலோகத்திச் சொல்லுக்கு
போர் விசயன் தேவியிம்பா
புத்திக்கும் தொண்டைக்கும்
பெத்த புள்ளை போலயிம்பா

என்று மருமகளைப் பெற்ற மகள் போல் பேணிய மாமியாருக்கும் பாடல்கள் உள்ளன.

அன்பான மருமகளின் இறப்புக்காக மாமியார் பாடும் பாடலில் மருமகளின் பிரிவு தன் மகனையும், பேரக் குழந்தைகளையும், தன்னையும் வெகுவாகப் பாதிக்கிறது எனப் பாடும் பாடல்களும் உள்ளன. நாத்தனாருக்குப் பாடும் பாடல்களிலும் அன்பும் பகைமையும் வெளிப்படும்படி பாடிய பாடல்கள் கிடைத்தன. மருமகன் இறப்புக்காக மாமியார் பாடும் பாடல்களில் மகள் மங்கலமிழந்ததும் வாழ்விழந்ததும் மையப் படுத்தப்படுகின்றன. ஒரு பெண்ணின் குடும்ப உறவு பிறந்த வீட்டில் தொடங்கிப் புகுந்த வீட்டில் தொடர்ந்து இறுதி வரை இருபிணைப்புகளும் தொடர்வதை நகரத்தார் ஒப்பாரிப் பாடல்கள் காட்டுகின்றன. பிறந்த வீட்டில் தந்தைக்கும், சகோதரனுக்கும், புகுந்த வீட்டில் கணவனுக்கும் மகனுக்கும் பாடப்படும் ஒப்பாரிப் பாடல்களே துன்பச் சுவை மேலோங்கி நிற்கின்றன. ஆண் முதன்மை பெறும் நகரத்தார் சமூக அமைப்பும், அவனைச் சார்ந்தே பெண் இயங்கும் சார்பு நிலையும் ஒப்பாரிப் பாடல்களால் உறுதி செய்யப்படுகிறது.

இறந்தவர்களின் உறவைச் சுட்டியும், தங்களுக்கு ஏற்பட்ட இழப்புக் குறித்தும் பாடும் ஒப்பாரிப் பாடல்களில் இறந்தவர்களின் தோற்றம், பண்பு நலன்கள், பொருளாதார நிலை, நட்பு, திறமை, புத்திக் கூர்மை, சமூக மதிப்பு, தலைமைச் சிறப்பு, மக்கட்பேறு ஆகியவற்றையும் உள்ளபடி பாடுகிறார்கள். இறந்தவரின் தோற்ற வருணனை, ஒப்பாரிப் பாடல் கேட்பவரின் மனக்கண் முன்னே இறந்தவரை நிறுத்துகிறது.

கும்பிட்ட மூக்கழகும்
கோதுகனி வாயழகும்

தெண்டனிட்ட மூக்கழகும்
தெய்வகனி வாயழகும்
சந்தனப் பொட்டழகும்
தகுந்த நடையழகும்
தரணியிலே காணமே
ஒய்யாரப் பொட்டழகும்
ஒசந்த நடையழகும்
ஊரிலேயும் காணமே

என ஆடவரையும்

பொன்னும் பொறப்பு
பொட்டு வச்சுப் பட்டுடுத்திப்
புதுவயிரம் மேச்சாத்திப்
புடி ஒசந்த பட்டுடுத்திப்
பூத்தமலர் சூடிப்
பொண்ணு வெளி வந்தாக்கப்
பொன்னழகி அம்மா
பொறப்பட்டாப் போலிருக்கும்

என மகளிரையும் மனக்கண் முன்னே நிறுத்தும் தோற்ற வருணனைகள் நினைக்கத் தக்கன. எல்லோர்க்கும் உதவும் பண்பாளர்

தழைஞ்சமரம் கம்பொதுக்கி
தங்கவந்த பேர்கள் ரொம்ப
தங்க வந்த பேர்களுக்கும்
தருமமிட்டார் எங்கொளிஞ்சா" எனவும்

சமூக மதிப்பும், தலைமைச் சிறப்பும் உடையோர்

ஊரும் மதிச்ச மன்னர்
உத்யோகஸ்தர் மதிச்ச மன்னர்
நாடும் மதிச்ச மன்னர்
நகரத்தா மதிச்ச மன்னர்

எனவும் பாராட்டப்படுகின்றனர். மகளிர் இறப்புக்குப் பாடப்படும் பாடல்களில் அவர்கள் சமையலின் மணம், திறமை, கை வேலைப்பாடு, செயல்திறமை விதந்துரைக்கப்படுகின்றன.

பொங்குற இடம் மணக்கும்
பொறவளவில் போய் மணக்கும்

பிஞ்சு மக்கள் ஐயா
புடிச்சுண்ண வாய் மணக்கும்''

குடும்ப உறவுகள், அவற்றின் இழப்புகள், இறந்தவர் பெருமை இவை மட்டுமன்றி நகரத்தார் வாழ்க்கை முறையும் இப்பாடல்களில் வெளிப்படுகிறது.

வெகுசனத்தைக் கண்டாக்க
விருந்தாக்க நல்லமனம்
விருந்தாக்கிக் கூட்டி உண்டு
வீத்திருக்க நல்லமனம்

இனத்தாரைக் கண்டாக்க
எலைபோட நல்லமனம்
சனத்தாரைக் கண்டாக்க
சாதமிட நல்லமனம்
அருமை விருந்தும்பா
ஆடுகொள்ள வேணுமும்பா''

என்று அவர்கள் விருந்தோம்பும் பண்பு விரித்துரைக்கப்படுகிறது.

மகப்பேறுடையார் போற்றப்படுதலும், பிள்ளை வேண்டித் தவமும், தானமும், தருமமும் செய்யும் வழக்கமும், புலப்படுத்தப்படுகின்றன. மக்கட்பேறுடையார்,

வெள்ளிக் கொடியேறி
வெதவெதமாக் காச்சிருந்தா
தங்கக் கொடியேறி
சரஞ்சரமாக் காச்சிருந்தா

எனப் பாராட்டப்படுகின்றனர். பிள்ளைப் பேறு இல்லாதவர்கள் அதனைப் பெருங்குறையாக எண்ணி வருந்துவதும் சில பாடல்களில் புலனாகிறது. மக்கட்பேறு வாய்க்காதவர்களும், பெண் குழந்தைகள் மட்டும் உள்ளவர்களும் தம் கோவிலையும், பிரிவையும் சார்ந்த வேறொருவர் மகனைச் 'சுவீகாரம்' செய்து கொள்ளும், நகரத்தார் வழக்கம் ஒப்பாரிப் பாடல்களாலும் உறுதி செய்யப்படுகிறது.

''மத்தொருதர் வாசல்
வகுத்திக் கெடந்தாப்போல்
மஞ்சன் அழைச்சு வந்தா''

இப்பாடல்களில் உறவினர் இறந்த நேரம், நாள், இடம் பற்றியும் இயற்கையாக ஏற்படும் திடீர் இறப்பு, நோய், விபத்து, கொலை, தற்கொலை முதலிய காரணங்களால் ஏற்படும் இறப்புப் பற்றியும் குறிப்பிட்டுப் பாடுகிறார்கள். பேருந்து விபத்தில் மாண்ட பெண்ணிற்கு

**மாபாவி ஓட்டிய**
**மணிக்காரு அடிக்கையிலே**
**மணிக்காருக்குள்ளாக**
**மாசனங்கள் இருக்கையிலே**
**நீ மாதொருதி மாண்டுவிட்டே!**

எனப் பாடுவதைக் காணலாம். வீட்டில் இறப்பு நேராமல், வெளியூரில், வெளிநாட்டில் இறந்தவர்க்கு

**போறதுவே உண்டானால்**
**நம்மபூமி வந்து சேரலியே**

எனப் பாடுகின்றனர். வணிகம், தொழில், வேலை வாய்ப்புக் காரணமாக வெளியூரில் வாழும்போது இறப்பு நேரிடினும், சொந்த ஊரில் சொந்த வீட்டிலேயே இறப்பை ஒட்டிய சடங்குகள் செய்யப்படுவது நகரத்தார் வழக்கம். நகரத்தாரின் சொந்த ஊர்களில் கட்டப்பட்டுள்ள அரண்மனை போன்ற வீடுகள் பற்றியும், அவற்றின் பெருமைகளும் ஒப்பாரிப் பாடல்களில் கூறப் பெறுகின்றன.

**ஐயா மதிச்சாண்டார் கட்டிய**
**மகுந்த மனையை**
**வருணிச்சு நின்னாக்க**
**வருசம் ஒண்ணு சென்று விடும்**

என்றும்

**பளிங்காலே வீடு கட்டி**
**பலகை மொகப்பு வச்சு**
**பாத்தா மொகந் தெரியும்**
**பாதம் வச்சா முத்துதிரும்**
**பாஞ்சாலன் சேத்த மனை**

என்றும் ஒப்பாரிப் பாடல்களில் வரும் வீடுகள் பற்றிய வருணனை உயர்வு நவிற்சியில்லை உண்மை நவிற்சியே என்பது நகரத்தார் வீடுகளைக் காண்பவர்க்குப் புலனாகும்.

நகரத்தாரின் குலத் தொழில்களான, நவரத்தின வியாபாரம், பொருள்களை அயல்நாடுகளில் கொண்டு போய் விற்பது, வட்டிக் கடைகளை நடத்துதல் முதலியன இப்பாடல்கள் மூலம் வெளிப்படுகின்றன. கடல் கடந்து சென்று பொருளீட்டுதல் குலமரபு என்பதும், ஆடவர் இளமையாக இருக்கும் போதே கடல் கடந்து பொருளீட்டச் செல்வர் என்பதும் தெரிய வருகிறது.

கணக்கெடுத்த நாமொதலாக்
கப்பல்லே வியாபாரம்
தூக்கெடுத்த நாமொதலாத்
தோணியிலே வியாபாரம்
ஏடெடுத்த நாமொதலா
எலங்கையிலே வியாபாரம்
நகம் மொளச்ச நாமொதலா
நித்தம் கொண்டுதலை

தொழில் காரணமாகக் கடல் கடந்து செல்வதற்குச் சொந்தமாகவே பாய்மரக் கப்பல்களை வைத்திருந்த செய்தி

சவுங்கம் மொதலாளி
தனிக்கப்பல் வியாபாரி
முத்து மொதலாளி
மூணு கப்பல் வியாபாரி

என வரும் அடிகளால் புலனாகின்றது. இரண்டாம் உலகப் போர் பற்றிய செய்திகளும், அதனால் நகரத்தார் தொழில் வீழ்ச்சியடைந்ததைப் பற்றிக் கூறும் வரலாற்றுச் சான்றுகளையும் நகரத்தார் ஒப்பாரிப் பாடல்களால் அறியலாம்.

இரண்டாம் உலகப் போரைப் பற்றி,

அம்புவிட்டான் குண்டுவிட்டான்
அநேகசனம் கொண்ணுவிட்டான்
குண்டுவிட்டான் அம்பு விட்டான்
கோடிசனம் கொண்ணுவிட்டான்

என்றும், இதன் விளைவால்

உயிர்தப்பி வருவமுன்னு
ஓடிவந்தா எத்தனையோ
காலப் பசியாலே

களச்ச சனம் எத்தனையோ
மதியப் பசியாலே
மாண்ட சனம் எத்தனையோ
அந்திப் பசியாலே
அணைஞ்ச சனம் எத்தனையோ

என நகரத்தார் தாயகம் திரும்பியதை ஒரு பெண் பாடிய பாடலடிகள் குறிக்கின்றன.

நகரத்தார் செய்த அறப்பணிகளான கோவில் கட்டுதல், குளம் வெட்டுதல், சத்திரங்கள் அமைத்தல், மடங்கள் கட்டுதல், கோவில் வழிபாட்டிற்குப் பொருள் அளித்தல், கல்விக் கூடங்கள் அமைத்தல் ஆகியவற்றையும் நகரத்தார் ஒப்பாரிப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

காடு செடி வெட்டி
கருமலைக்குக் கல்லெடுத்து
கஞ்சிமடம் உண்டு பண்ணி
காலைப் பசி தீர்த்த
கருணவார் தேவியில்ல

என்ற பாடல் வரிகள் கஞ்சிமடம் கட்டிய நகரத்தாரின் அறப்பணிக்குச் சான்று பகரும்.

நகரத்தாரின் சமயக் கோட்பாடு, இறை நம்பிக்கை, வழிபாட்டு நியமங்கள், தனிமனிதரின் பக்தி முதலியவற்றையும் ஒப்பாரிப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. இறந்தவரின் பக்தியை

"சிவசிவா என்று சொல்லி
சிவன் பூசை செய்து
திருநீறணிந்து
சேர நெனச்சவுக"

என்றும்

"சாமியின்னு சொன்னா
சதமா நெனச்சவுக
அம்மன்னு சொன்னா
அழுத்தமாக் கையெடுப்பா"

என்றும் பாடுவதைக் காணலாம்.

நகரத்தாரின் தெய்வ நம்பிக்கையோடு பிற நல்வினை தீவினை தொடர்பான நம்பிக்கை தலையெழுத்து விதி பற்றிய நம்பிக்கை, நாள் கோள்நிலை, நேரம், இராசி பற்றிய நம்பிக்கை, கனவுகள், சகுனங்கள் கண்ணேறு பற்றிய நம்பிக்கை ஆகியவற்றையும் நகரத்தார் ஒப்பாரிப் பாடல்களில் காணலாம். கனவு பற்றி ஒரு பாடலில்

**காப்புக் கழலுமுன்னு**
**கனவிலேயும் தட்டவில்லே**

என்றும், கண்ணேறு பற்றி,

**கண்ணகியா பானைக்குக்**
**கண்ணேறு வந்ததென்ன**

என்றும், தீய சகுனங்களாகக் கருதுவனவற்றை

**எல்லைவிட்டுப் போகயிலே**
**எண்ணெய் விக்கும் வாணியன்**
**எதிராக வந்தானோ**
**பூனை குறுக்காச்சா**
**புதுப்பானை முன்னாச்சா**" என்றும் பாடுகின்றனர்.

நகரத்தார்க்கென அமைந்த சடங்குகளும், பழக்க வழக்கங்களும் ஒப்பாரிப் பாடல்களில் பரந்து காணப்படுகின்றன. குழந்தைப் பேற்றை ஒட்டியன - சுவீகாரப் புதுமை கார்த்திகைப் புதுமை, திருமணத்தை ஒட்டியன - தத்தம் கோவில்களில் திருமணங்களைப் பதிதல், இசைபிடிமானம் (திருமண ஒப்பந்தம்), எழுதுதல், சாமான் பரப்புதல், சீர்வரிசைகள் பெண்ணுக்குக் கொடுத்தல், மணமான தம்பதியரைத் தனிக்குடித்தனம் வைப்பதாகிய வேறு வைத்தல், பிறப்பு முதல் இறப்பு வரை நிகழ்த்தப் பெறும் சடங்குகள் எல்லாம் ஒப்பாரிப் பாடல்களில் பதிவு செய்யப் பெற்றுள்ளன. நகரத்தார் மகளிர் அணியும் அணிகள், ஆடைகள் அவற்றின் வேலைப்பாடுகள், மகளிர் ஒப்பனை, நகரத்தாரின் அன்றாட உணவு வகைகள், சிறப்பான சைவ அசைவ உணவுகள், நோயுற்றார்க்குத் தரும் உணவு, ஆகியவை பற்றியும் ஆங்காங்கே விளக்கப்பட்டுள்ளன. நகரத்தாரின் குலத்தொழில்கள், செல்வச் செழிப்பு, அறச் செயல்கள், சமய வழிபாடு உள்ளிட்ட நகரத்தார் வாழ்வியல் தொடர்பான அனைத்துச் செய்திகளும் நகரத்தாரின் ஒப்பாரிப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

மேற்கண்ட இத்துனைச் செய்திகளையும் உள்ளடக்கிய நகரத்தார் ஒப்பாரிப் பாடல்களின் அமைப்பைக் காணும் பொழுது சில திட்டவட்டமான

வரையறைகளுடன் நகரத்தார் மகளிர் ஒப்பாரிப் பாடல்களைப் பாடுவது புலனாகும்.

குழந்தைகள், சிறியவர்கள் இறப்புக்கான பாடல்கள் அளவில் சிறியதாய் உள்ளன. பெரியவர்களுக்கும், வயது முதிர்ந்தவர்களுக்குப் பாடும் பாடல்கள் நீண்ட அளவினதாய் அமைந்துள்ளன. பாடலின் அளவு உரைப்போரின் உள்ளக்கருத்தை ஒட்டியும் அமையும். கால அளவிற்கேற்பக் கூட்டியும், குறைத்தும் பாடுதலும் குறிப்பிடத்தக்கது.

ஒப்பாரிப் பாடல்களின் தொடக்கங்கள் இறந்தவரின் வயது, உறவு, பொருளாதார நிலை, இறப்பு நேர்ந்த விதம், பாடுவோர் உறவு, பாடுவோர்க்கு ஏற்பட்ட அவலம் இவற்றை ஒட்டிப் பலவகையாக அமைந்துள்ள பான்மை குறிப்பிடத்தக்கது. பாடலின் உள்ளடக்கம், சடங்குகள் பாடலின் முடிவு அமையும் முறை எனச் சில மரபுகள் ஒரு சீராகப் பின்பற்றப்படுகின்றன.

ஒப்பாரிப் பாடல்கள் வாய்மொழிப் பாடல்கள் ஆதலின் வாய்மொழி இலக்கிய வகைக்குரிய சிறப்புக் கூறுகள் பெற்றமைந்துள்ளன. சங்க அகப்பாடல்களில் ஒருவர் பெயர் சுட்டாமரபு காணப்படுவதுபோல ஒப்பாரிப் பாடல்களிலும் ஆண், பெண் இருபாலரையும் இயற்பெயர் சுட்டாது உறவுப் பெயர்களையே சுட்டிப் பாடும் மரபு காணப்படுகிறது. தொல்காப்பியம் கூறும் 'முன்னம்' (இவ்விடத்து இம்மொழி இவரிவர்க்குரிய என்று அவ்விடத்து அவரவர்க்கு உரைப்பது) நகரத்தார் ஒப்பாரிப் பாடல்களிலும் (இன்னார் பாடுவது, இன்னார்க்குப் பாடுவது என்பதைக் கேட்போர் எளிதில் விளங்கிக் கொள்ளும் வகையில்) அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

புராணங்கள், கதைகள், தெய்வ அடியார் இதிகாசப் பாத்திரங்கள், வரலாற்றுப் பாத்திரங்கள் முதலியன உவமைகளாகவோ உருவகங்களாகவோ நகரத்தார் ஒப்பாரிப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. ஒப்பாரி பாடுவோர் தம்மையும், பாடப்படுவோரையும் புராண காலத் தேவர்களாகவும், இதிகாசப் பாத்திரங்களாகவும், வரலாற்றுக்கால மன்னர்களாகவும் சமூகத்தில் உயர்நிலையில் உள்ளவர்களாகவும் உருவகித்துப் பாடும் போக்கும் காணப்படுகிறது.

வாய்மொழி இலக்கியக் கூறுகளின் சிறப்பியல்பான 'திரும்பவரல்' என்னும் தன்மையை நகரத்தார் ஒப்பாரிப் பாடல்களில் சிறப்பாகக் காண முடிகிறது. ஒரே பாடலில் சொல், தொடர், அடி, கருத்துகள் திரும்பவரல் எனப் பல நிலைகளில் அமைந்துள்ளன. பொதுவாக எந்த இனத்தவரின் ஒப்பாரிப் பாடல்களிலும் ஒரு கருத்து பெரும்பாலும் ஒருமுறை மட்டும் கூறப்படுவதில்லை. பெரும்பாலும் பிற இனத்தவர் பாடல்களில் ஒரு கருத்து இரண்டு அல்லது மூன்று முறைக்கு மேல் திரும்ப வருதல் இல்லை. நகரத்தார்

பாடல்களில் ஒரு கருத்து இரண்டு முறை முதல் ஆறு முறை வரை திரும்ப வருதலைச் சிறப்பாகக் காணமுடிகிறது. ஒரே கருத்து மூன்று முறை திரும்ப வந்துள்ள பாடல்

காலைக் கொலுவிழந்தேன்
காக்கொடலைப் பூவிழந்தேன்
களையொசந்த அந்தணரைக்
கடவில் விடச் சம்மதிச்சேன்
காக்கோடித் தங்க நகை
கழட்டி வைக்கச் சம்மதிச்சேன்

உச்சிக் கொலு விழந்தேன்
ஒரு கொடலைப் பூவிழந்தேன்
ஓசத்தியுள்ள அந்தணரை
ஊரைவிடச் சம்மதிச்சேன்
ஒரு கோடித் தங்க நகை
உருவி வைக்கச் சம்மதிச்சேன்

அந்திக் கொலுவிழந்தேன்
அரைக் கொடலைப் பூவிழந்தேன்
அழகொசந்த அந்தணரை
அனுப்பிவிடச் சம்மதிச்சேன்
அரைக்கோடித் தங்கநகை
அவுத்து வைக்கச் சம்மதிச்சேன்

நகரத்தார் ஒப்பாரிப் பாடல்களில் 'திரும்பவரல்' எனும் வாய்மொழிக் கூறு மிகச் சிறப்பாக அமைந்துள்ளமை பாராட்டற்குரியது.

நகரத்தாரின் ஒப்பாரிப் பாடல்களில் மொழி நடை மிக எளிமையாக, பேச்சு மொழிகளால் அமைந்த போதிலும், அழகுடனும் கட்டுக்கோப்புடனும் ஒப்பாரிப் பாடல்கள் அமைந்துள்ளன. பாடலின் இசையைவிடப் பாடுவோருக்குச் சொற்கள்தான் முதலிடம் பெறுகின்றன. ஈரசை மூவசை கொண்ட குறளடிகளாக அமைந்து, கேட்போர்க்கும் பாடுவோர்க்கும் எளிதில் பொருள் விளங்கி மனதில் நிலைத்து இடம்பெற உதவுகின்றன. இருசீரடி நான்காய் ஒருபொருள் மேல் மூன்றடுக்கி வரும் வஞ்சித்தாழிசை போன்ற அமைப்பு பாடப் பெற்றுள்ள பாடல்களில் பல இடங்களில் இயல்பாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. எழுத்திலக்கியத்தின் தாயாக விளங்குவது வாய்மொழி இலக்கியமே என்பதற்குத் தக்க சான்றுகளாகவும் இவை விளங்குகின்றன.

**தள்ளியிரு என்காத**

**தருமருக்கே வாழ்ந்திருந்தேன்**
**தருமருக்கு முன்போகத்**
**தவங்கள் மெத்தச் செய்யலியே**

**வெலகியிரு என்காத**
**வீமருக்கே வாழ்ந்திருந்தேன்**
**வீமருக்கு முன்போக**
**வெகுதவங்கள் செய்யலியே**

**அடசியிரு என்காத**
**அர்ச்சுனர்க்கு வாழ்ந்திருந்தேன்**
**அர்ச்சுனர்க்கு முன்போக**
**அநேக தவம் செய்யலியே**

இத்தகைய திருத்தமான செவ்விய ஒழுங்கு படிப்புப் ப்யிற்சியில்லாத, யாப்பிலக்கணமறியாத பெண்களின் பாடல்களில் இடம் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

மேலும் யாப்பு உத்திகளான மோனை, இயைபு, முரண் முதலியன நகரத்தார் பாடல்களில் வெகு சிறப்பாக அமைந்துள்ளன. தொகுத்த ஒப்பாரிப் பாடல்களில் மோனை இடம் பெறாத பாடல் ஒன்று கூட இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. வருக்க மோனைகள் அதிலும் குறிப்பாகப் பகரவருக்கமும், மகரவருக்கமுமே மிகுதியாக வருகின்றன. வருக்க மோனையமைப்பில் சகரத்திற்குத் தகரமும், மகரத்திற்கு வகரமும் இன எழுத்துக்களாக அமைவதையும் காணமுடிகிறது.

நகரத்தாரின் ஒப்பாரிப் பாடல்களில் இயைபுத் தொடை இயல்பாக அமைகிறது.

**நல்லமணி சிண்டுமணி**
**நறுக்கிக் கடஞ்சமணி**
**நயமான சிண்டுமணி**
**உருக்கிக் கடஞ்ச மணி**
**ஓசையுள்ள சிண்டு மணி**

இயைபுத் தொடை பாடலுக்கு நல்ல ஓசையைத் தருவதைக் காணலாம்.

ஒப்பிட்டுக் காணும் வாய்ப்பு மிகுதியும் உள்ள ஒப்பாரிப் பாடலில் முரண் சொல்லாலும், பொருளாலும் அமைகின்றது. ஒரே பத்தியில் இரண்டு முரண்பட்ட கருத்துகளை ஒன்றாகக் கூறுவது அவல உணர்வை மிகுதிப்படுத்த உதவுகிறது. கணவன் இருந்தபோது மதிப்புடனும், பெருமையுடனும் வாழ்ந்தவள், கணவன் இறப்புக்குப் பின் அவமதிப்புக்கும்,

சிறுமைக்கும் ஆளாக்கப்படுகிறாள்.

"பவளைக்கும் நாழியின்னு
பக்கம் வந்து நின்னவளை
உப்பளக்கும் நாழியின்னு
ஒதுங்கிப்போய் நிக்கவச்சா"

நகரத்தார் ஒப்பாரிப் பாடல்களில் உவமையும், உருவகமும் சிறப்பிடம் பெறுகின்றன. குழந்தைகள், ஆடவர், மகளிர்க்கேற்ற உவமைகள் உருவகங்கள், சமூகம், சமயம், இயற்கை ஆகியவற்றின் அடிப்படையில் பொருத்தமாகக் கையாளப்படுகின்றன. வீட்டில் அன்றாடம் பார்க்கும், பயன்டுத்தும் பொருட்களைப் பொருத்தமாகப் பயன்படுத்துகின்றனர்.

**சீரகம் போலச்**
**சிறுகத் தணல் வூத்து**
**மேனிச் சிகப்பு**
**மெருகிட்ட மாதிரிபோல்**

என வரும் உவமைகள் குறிப்பிடத்தக்கன.

பெண்ணை மணமுடித்ததையும், அவள் மக்கட்பேறடையாமல் இறந்து போனதையும் உருவகமாகக் கூறும் பகுதி உருக்கமானது.

**"வெளயும் நிலமுன்னு**
**வெள்ளரியைப் போட்டு வந்தோம்**
**வீசிப் படரலையே**
**வெதை மிச்சம் ஆகலியே"**

சங்க கால இலக்கிய மரபினை ஒட்டி ஊரை உவமையாகச் சொல்வதும் காணப்படுகிறது.

**குன்னக்குடி போலக்**
**கொடியோடிக் காச்சிருந்தேன்**

என ஒரு பெண் மக்கட்பேறு பெற்றுச் சிறந்ததை உவமிக்கிறாள்.

அணிநயமும் பெற்று நகரத்தார் ஒப்பாரிப் பாடல்கள் விளங்குகின்றன. செல்வர் குடியில் பிறந்த பெண் தனக்கு,

**மானத்து மீனைவிட**
**மத்ததெல்லாம் சீதனம்தான்**

என உயர்வு நவிற்சியாகப் பாடுவதும்

பின்ன மரத்திலேயும்
பேயிலயும் பொண்ணைவச்சா
பின்னலும் பின்னுதே
பேயும் புடுங்குதே

எனத் தன் மாமியார் கொடுமையைப் பிறிது மொழிதலாகப் பாடுவதும் சான்றுகளாக விளங்குகின்றன.

அவலச்சுவையே மேலோங்கி ஒப்பாரிப்பாடல்களில் நின்றாலும், பிற சுவைகளுக்கும் ஒப்பாரிப் பாடல்களில் இடமுண்டு என்பதையும் நகரத்தார் ஒப்பாரிப் பாடல்கள் காட்டுகின்றன.

காலமறிஞ்சு கம்பளந்து நிப்பாக
நேரமறிஞ்சு நெல்லளந்து நிப்பாக
பஞ்சமறிஞ்சு படியளந்து நிப்பாக

எனக் கொடையால் வந்த பெருமித உணர்வும்

காலெடுக்கச் செல்வம்
கனகம் சொரிஞ்சுதாம்
அடிஎடுக்கச் செல்வம்
அள்ளிச் சொரிஞ்சுதாம்

எனச் செல்வச் செழுமையில் வந்த உவகை உணர்வும் பாடல்களில் இடம்பெறுகின்றன.

இப்பாடல்களில் மாந்தர், இடம், பொருள், பொழுது, செயல்கள் முதலியன அழகுற வருணிக்கப்படுகின்றன. காலைப் பொழுதைப் பற்றிய வருணனை

அதிகாலை வேளையிலே
அடுக்கரளி பூக்கயிலே
அருணோதயம் ஆகயிலே
அழகுமயில் கூவயிலே
ஆண்டிருக்கும் பொண்களெல்லாம்
அள்ளித் தெளிக்கையிலே
ஆசை மக்கள் அப்பத்தா
அடஞ்சா கைலாசம்

என அமைகின்றது. சடங்குகள், இறுதி ஊர்வலங்கள் பற்றிய வருணனைகள் நேர்முக வருணனைகளாக அமைந்து ஒப்பாரிப் பாடலைக் கேட்போர் நெஞ்சில் காட்சிகளைப் பதிய வைக்கின்றன.

ஒப்பாரிப் பாடல்களைப் பாடிக் காட்டிய பெரும்பாலோர் பள்ளிக்குச் சென்று முறையாகக் கல்வி கற்றவர்களல்லர். எனினும் இவர்கள் பாடும் பாடல்களில் இலக்கியங்களின் சாயல்கள் இடம் பெறுகின்றன. அன்னங்காள் பூங்கிளிகாள் அல்லிவரக் கண்டீகளா என வரும் பாடலடிகள் சிலப்பதிகாரத்தில் வரும் அன்னங்காள் அடும்புகாள் எனும் தொடரை நினைவூட்டுகின்றன. பட்டினத்தாரின் பாடல் வரிகள் நகரத்தார் ஒப்பாரிப் பாடல்களில் அப்படியே இடம் பெறுகின்றன.

**முந்தித்தவமிருந்து**
**முன்னூறு நாள் சுமந்து**
**அந்தி பகலாய்**
**ஆதரித்த தாயார்க்கு**
**தொந்தி தடவிச்**
**சோறிட்ட தாயார்க்குத்**
**தொட்டுத் தணல் மூட்டியிட்டார்**

என வருகிறது.

ஒழுங்குபட்ட ஓசை, வளமான சொல்லாட்சி விரிந்த கற்பனை, தங்கு தடையற்ற வெளிப்பாடு, தாழிசை அமைப்பு, நீண்ட அடிவரையறை முதலியன நகரத்தாரின் ஒப்பாரிப் பாடல்களை வாய்மொழி இலக்கியப் பகுப்புக்குள் மட்டும் அடக்கி விடாமல் எழுத்திலக்கியத் தகுதியைப் பெற்றதாகவும் காட்டுகின்றன.

செட்டி நாட்டில் ஒப்பாரி பாடுவது பெண்களிடையே ஒரு கலையாக மிளிர்கிறது. கற்பனைத்திறன் முழுவதையும் வெளிப்படுத்திச் சரமாரியாகப் பாடல்களை அடுக்கிக் கொண்டே போகிறார்கள். இவ்வாறு ஒப்பாரி பாடுதற்குச் சில அடிப்படைச் சூழல்கள் அமைந்திருத்தல் வேண்டும்.

நகரத்தாரின் கட்டுக்கோப்பான சமூக வாழ்வு, கோயிலை மையமிட்ட சமூக அமைப்பு, அயல்நாட்டுத் தொடர்பு, பிறந்த மண்ணோடு கொண்ட நிலைத்த பிடிப்பு, தனிக்குடும்பமும் கூட்டுக் குடும்பமும் இணைந்த விரிவாக்கக் குடும்ப அமைப்பு, செல்வ வளம், அரண்மனை போன்ற வீடுகள், விரிவான உணவுப் பழக்க வழக்கங்கள், விருந்தோம்பும் சிறப்பு, நடைமுறை வாழ்வில் இவர்கள் பயன்படுத்தும் பலவகை ஆடை, அணிகலன்கள், பிற

பொருட்கள், விரிவான சடங்குகள், ஆற்றிய அறப்பணிகள், சமய உறுதி ஆகியன நகரத்தாரின் ஒப்பாரிப் பாடல்களின் கருத்து விரிவுக்குப் புதிய செய்திகளை அளிக்கின்றன. இச்செய்திகளைப் பற்றிய அறிவும் சொற்களஞ்சியச் செறிவும், ஒப்பாரி பாடும் ஆர்வமும் நகரத்தார் மகளிர்க்கு இயல்பாக அமைந்துள்ளதும் குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ் மொழியும் இலக்கியமும் இவ்வினத்தார் வாழ்ந்த மண்ணோடு, இவர் தம் குருதியோடு ஊறிக் கலந்து ஏற்றமுடைய பாடல்கள் முறையான படிப்பறிவு பெறாதவர்களிடமிருந்தும் கூட வெளிவரக் காரணமாயிருக்கின்றன.

முன்காலத்தில் ஆடவர் வெளிநாடுகளில் தங்கும் காலங்களில் விரிவான சமையல், விருந்தோம்பல் முதலிய இல்லப் பணிகள் மிகுதியுமின்மையால் அதிகமாகக் கிடைத்த ஓய்வு நேரத்தில் தாலாட்டு, ஒப்பாரி போன்ற பாடல்களை இயற்றவும், கேட்கவும், பாடவும், கற்றுக் கொள்ளவும், கற்றதைப் பெருக்கிக் கொள்ளவும் வாய்ப்புப் பெற்றனர் எனலாம். நகரத்தார் வணிக இனமாதலின் இயல்பாகவே இவ்வினத்துப் பெண்களிடம் சொல்வன்மை அமைந்து கிடப்பதும் இவர்கள் ஒப்பாரிப் பாடல்கள் சிறக்கக் காரணம் எனலாம்.

இன்றும் நகரத்தார் ஒப்பாரிப் பாடல்கள் நகரத்தார் சமூகத்தில் ஏற்படும் சமூக, பொருளாதார மாற்றங்களைக் காட்டும் காலக் கண்ணாடியாகவும், முன்னைப் பழமைக்கும் பின்னைப் புதுமைக்கும் பாலமாகவும், நகரத்தார் பண்பாடு நாகரிகம் ஆகியவற்றை விளக்கும் கலைக் களஞ்சியமாகவும், வரலாற்று ஆவணங்களாகவும் இலக்கியச் செல்வங்களாகவும் விளங்குகின்றன.

தொகுக்கப்பட்டவை மிகச் சிலவே. தொகுக்கப்பட வேண்டியவை மிகப் பல.

## தாய்க்கு

வா(ழ்)வரசியாக மாண்ட தாய்க்கு மகள் பாடியது. தாயும் தந்தையும் மனமொன்றி வாழ்ந்தது, நன் மக்களைப் பெற்று வளர்த்து மணமுடித்தது, பேரன் பேத்திகளைக் கொஞ்சி மகிழ்ந்தது ஆகியவற்றை யும் தாயின் மறைவினால் பிறந்த வீட்டில் தனக்கு முன்போல உரிமை இருக்காதே என்றும் மகள் வருந்திப் பாடியது.

வாவரசி வாவரசி
என்சமத்தி மாதா
மதிப்பான வாவரசி
அஞ்சு தலமொறைக்கும்
அழகான வாவரசி
ஏழு தலமொறைக்கும்
எடுப்பான வாவரசி
பத்துத் தலமொறைக்கும்
பவுரான வாவரசி

தூரவருவார்க்கும்
துலக்கமுள்ள வாவரசி
எட்ட வருவார்க்கும்
எடுப்பான வாவரசி
தொலைப்பயணம் போவார்க்கும்
துலக்கமுள்ள வாவரசி
காதப்பயணம் போவார்க்கும்
கணிசமுள்ள வாவரசி
கப்பல்பயணம் கடும்பயணம்
போவார்க்கும்
கணிசமுள்ள வாவரசி
தொலைக்கூட்டு வைப்பார்க்குத்
துலக்கமுள்ள வாவரசி
கடைக்கூட்டு வைப்பார்க்குக்
கணிசமுள்ள வாவரசி
ஆதாயம் காண்பார்க்கு

என்சமத்தி மாமா
அதிட்டமுள்ள வாவரசி

மாசமத்தி மாதா
மாலைக் கழுத்தி
மடிநெறஞ்ச பூக்காரி
மல்லியப்பூ வாசமுள்ளாள்

பெருஞ்சமத்தி மாதா
தாலிக் கழுத்தி
தலைநெறஞ்ச பூக்காரி
தாழம்பூ வாசமுள்ளாள்

தள்ளியிரு என்காத
தருமருக்கு வாழ்ந்திருந்தா
தருமருக்கு முன்போகத்
தவங்கள் மெத்தச் செய்திருந்தா.

அடசியிரு என்காத
அருச்சுனருக்கு வாழ்ந்திருந்தா
அருச்சுனர்க்கு முன்போக
அநேகதவம் செய்திருந்தா

வெலகியிரு என்காத
வீமருக்கு வாழ்ந்திருந்தா
வீமருக்கு முன்போக
வெகுதவங்கள் செய்திருந்தா

மகுரமக்கள் கண்டிருந்தா
மாத்திமஞ்சன் பெத்திருந்தா
போதமக்கள் கண்டிருந்தா
பின்னிமஞ்சன் பெத்திருந்தா

போதாக் குடியைப்
பெருகவச்சா சித்திரமா
பத்தாக் குடியை
மகுரவச்சா சித்திரமா
அறுந்தா குடியை
ஆளவச்சா சித்திரமா

மகுந்த மகனுக்கு
வளந்தை ஒசத்தியின்னு
வளந்தையுட மாதை
மகுந்தமொறைவாங்கி
மணிவயிரம் சீர்வாங்கி
மலர்சேத்துக் கூட்டிவந்தா
மகுந்த மகளை
வாவரசி மஞ்சனுக்கு
மஞ்சன் தனியருக்கு
மகுரவெள்ளம் சீர்குடுத்து
மட்டத்த சாமானை
வளவில் பரப்பிவச்சு
மலரசைச்சுப் பாத்திருந்தா
மகுந்த மகனும்
மஞ்சன்மொதல் ஆகலன்னு
மனசிலேயும் தாங்கலுன்னா

பெரிய மகனுக்குப்
பொறந்தை ஒசத்தியின்னு
பொறவியுட மாதைப்
போதமொறை வாங்கிப்
புதுவயிரம் சீர்வாங்கிப்
பூச்சேத்துக் கூட்டிவந்தா
பெரிய மகளைப்
போரழகி மஞ்சனுக்குப்
புள்ளை தனியருக்குப்
போதவெள்ளம் சீர்குடுத்துப்
பெருவாரிச் சாமானைப்
பூமிப் பரப்பிவச்சுப்
பூவசைச்சுப் பாத்திருந்தா
பெரிய மகனும்
பெத்துமொதல் ஆகலன்னு
புத்தியிலே தாங்கலுன்னா

மறுத்துப் பொறந்த
மக்கள் எல்லாம்
மலர்சேத்துப் பாத்திருந்தா
மலர்சேத்த மக்களெல்லாம்
வளத்துவரக் கண்டிருந்தா
மனசாசை ரொம்பவுன்னா
மாதுடைய மக்களையும்
வாள்விசயன் மக்களையும்
வருந்திவச்சுப் பாத்திருந்தா

பிம்பு பொறந்த
புள்ளை எல்லாம்
பூச்சேத்துப் பாத்திருந்தா
பூச்சேத்த மக்களெல்லாம்
பெத்துவரக் கண்டிருந்தா
பேராசை ரொம்பவுன்னா
பொண்ணுடைய மக்களையும்
போர்விசயன் மக்களையும்
போத்திவச்சுப் பாத்திருந்தா

போதமக்க கண்டதுக்குப்
போத்தியிட்டுப் பாத்திருந்தா
போதக் குடுத்திருந்தா
புத்திகொள்ளாச் சந்தோஷம்
புடிச்சு முத்தம் கொண்டிருந்தா
புள்ளைக்கலியும் பெருங்கலியும்
தீந்த துன்னா
பேராசை அன்போடு
புடிச்சுமுத்தங் கொண்டிருந்தா
போதமக்கள் கண்டதுக்குப்
புத்தி இனிக்குதுன்னா
போத்தாசை தோணுதுன்னா
மகுரமக்கள் கண்டதுக்கு
வரிசையிட்டுப் பாத்திருந்தா
மகுரக் குடுத்திருந்தா
மனங்கொள்ளாச் சந்தோஷம்
வாரிமுத்தங் கொண்டிருந்தா
மஞ்சன்கலியும் மனக்கலியும்
தீந்ததுன்னா
மனசாசை அன்போடு
வாரிமுத்தங் கொண்டிருந்தா
மகுரமக்கள் கண்டதுக்கு

மனசும் இனிக்குதுன்னா
வருந்தஆசை தோணுதுன்னா

வச்சிருந்தா சித்திரமா
வரிசையிட்டா நூறுவிதம்
போத்தியிட்டா சித்திரமா
பேணியிட்டா நூறு விதம்

சங்கு ஈனாஈன
சாலை கொழிச்சுவந்தா
முத்து ஈனாஈன
மூலை கொழிச்சுவந்தா

மக்களுடைய வாசலெல்லாம்
மகுரச்சோறு உண்டிருந்தா
மகிழ்ச்சிச்சோறு உங்கலியே
பொண்களுடை வாசலெல்லாம்
போதச்சோறு உண்டிருந்தா
பெருமைச்சோறு உங்கலியே

மானம் நெனச்சாக்க
மழைவரிசை உண்டாகும்
நாங்கமக்கள் நெனச்சாக்க
மாதா கெடையாதே

பூமி நெனச்சாக்கப்
பூரிச்சுநெல் விளையும்
நாங்கபொண்கள் நெனச்சாக்கப்
பெத்தா கெடையாதே

மாளும் அறுதி
மாதா கெடையாதே
போகும் அறுதி
பெத்தா கெடையாதே

சாலோட தண்ணி
சாச்சுக் குடிச்சாலும்
தாய்வாத்த தண்ணிபோல
தாகந் தெளியாதே
தண்ணிவிடாய் தீராதே

வெள்ளரித் தோட்டம்
வெலையில்லாப் பூந்தோட்டம்
எஞ்சமத்தி மாதா
மெல்லிநல்லா போனபின்பு
நான்பொறந்த சாமி
வீமர் இருந்தாலும்
வெள்ளரித் தோட்டம் இனி
வெலையோட பூந்தோட்டம்

கத்திரித் தோட்டம்
கணக்கில்லாப் பூந்தோட்டம்
எஞ்சமத்தி மாதா
காரிழையா மடிஞ்சபின்பு
கட்டிப்பொறப் பெல்லாம்
கனசமத்தர் இருந்தாலும்
கத்திரித் தோட்டம் இனி
கணக்கோட பூந்தோட்டம்

மாதுடைய வாசல்எல்லாம்
மக்க பெரிசானாக
மாலையிட்டுப் பாக்கலியே
மதிப்புக்கு இருக்கலியே

பொண்களுடைய வாசல் எல்லாம்
புள்ளை பெரிசானாக
பூச்சேத்துப் பாக்கலியே
பெருமைக்கு இருக்கலியே

பொட்டோட மையோடப்
பொறந்த கெடியோடப்
பொய்கையிலே நீர் மோந்து
பொறந்த எடத்துப் பட்டுவந்து
பூந்தோப்பு மாலைவந்து
போர்விசய மஞ்சனும்
புள்ளையெல்லாம் எண்ணயிட்டுப்
பொட்டியிலே பொன்கழட்டிப்
புள்ளைமுடி தீத்தமகன்
புத்திரனும் கைகுடுத்து

ஐயா போந்தமுடி வாங்கிவைக்கப்
பூவோடு தீக்கலக்கப்
புண்ணியத்தைச் செய்திருந்தா

மையோட பொட்டோட
வளந்த கெடியோட
வையையிலே நீர்மோந்து
மாந்தோப்பு மாலைவந்து
வாள்விசயன் மஞ்சனும்
மாதுடைய மக்களும்
மஞ்சனெல்லாம் எண்ணையிட்டு
மரவையிலே பொன்கழட்டி
மஞ்சமுடி தீத்த மகன்
மகனாருங் கைகுடுத்து
ஐயாமதிச்சமுடி பாத்திருக்க
மலரோடு தீக்கலக்க
மாதவத்தைச் செய்திருந்தா

வாழ்வரசியாக மாண்டவர்க்குச் செய்யும் சடங்கு கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

OOO

மக்கள் நிறையப் பெற்ற தாய் இறந்தபோது, தாயின் அன்பையும், அரவணைப்பையும் இழந்தோமே என்றும் தாயை இனிமேல் காணவே முடியாது என்றும், தங்கள் மகனுக்குப் 'புதுமை' என்னும் சடங்கினைச் செய்து காணாமல் மறைந்தாளே என்றும் மகள் வருந்திப் பாடியது.

நாளும் சரியாச்சா
என்சமத்தி மாதா
நடப்பதுக்கு நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா
பெருஞ்சமத்தி மாதா
போறதுக்கு நாளாச்சா

பெத்தாரும் போன
பொனம்பாக்கப் போனமுன்னா
வளத்தாரும் போன
வனத்தை நெனச்சமுன்னா

என்னப் பெத்தாத்தா
வாவரசி வாழ்வெடுத்து
மகுரமக்கள் கண்டிருந்தா
மாத்திமஞ்சன் பெத்திருந்தா
மகுரமக்கள் கண்டதிலே
வையகம் ஐயோங்க
வாவரசி பேரழைச்ச
மகுந்தமக கொள்ளையிட்டா
மாத்திமஞ்சன் கண்டதிலே
வாழ்ந்திருந்த ஐயா
மச்சம் ரொம்பக்கண்ட
மதிச்சாண்டார் பேரழைச்ச
மகுந்தமக கொள்ளையிட்டான்

என்னப் பெத்தாத்தா
போரழகி வாழ்வெடுத்துப்
போதமக்கள் கண்டிருந்தா
பின்னிமஞ்சன் பெத்திருந்தா
போதமக்கள் கண்டதிலே
பூலோகம் ஐயோங்க
போரழகி பேரழைச்ச
பெரியமக கொள்ளையிட்டா
பின்னிமஞ்சன் கண்டதிலே
பொலிஞ்சிருந்த ஐயா
பொன் னதிகங்கண்ட
புண்ணியவார் பேரழைச்ச
பெரியமகன் கொள்ளையிட்டா

என்னைப் பெத்தாத்தா
பூலோகம் வாயூறப்
போதப் பொறந்தாத்தா
பொறக்கரியா வாயூறப்
போதமக்கள் கண்டாத்தா
புலிவளர்த்துத் தப்பவிட்ட

பொழைதனிமை சொல்லுவமா

வையகம் வாயூற
மகுரப் பொறந்தாத்தா
வளக்கரியா வாயூற
மகுரமக்கள் கண்டாத்தா
மான்வளத்துத் தப்பவிட்ட
வகுத்தெரிச்ச சொல்லுவமா

அவசரத்தே மாண்ட
ஆரை நெனச்சழுவோம்
சீக்கிரத்தே மாண்டாரைச்
சேர நெனச்சழுவோம்

தவிச்சா வருவமுன்னு
தயிர்ச்சோறு வச்சிருப்பா
நெனச்சா வருவமுன்னு
நீர்ச்சோறு வச்சிருப்பா

பாலூத்திச் சோறிடுவா
படலை மறவுவைப்பா
நெய்யூத்திச் சோறிடுவா
நெழலை மறவிடுவா
தயிருத்தின் சோறிடுவா
தட்டி மறவிடுவா

சுத்தாரம்சுத்தி வந்தோம்
என்னைப் பெத்தாத்தா
தோகைகொரல் கேக்கலியே
ஆசாரம் சுத்தி வந்தோம்
அல்லிகொரல் கேக்கலியே
வட்டாரம்சுத்தி வந்தோம்
வளத்தாகொரல் கேக்கலியே

அள்ளிவச்ச பூப்போல
அடிக்கொருக்காச் சோம்பினாலும்
ஆத்தாவைப் பாப்பதில்லே
புடுங்கிவச்ச பூப்போலப்
பொழுதொருக்காச் சோம்பினாலும்
பெத்தாரைப் பாப்பதில்லே

வாங்கிவச்ச பூப்போல
மணிக்கொருக்காச் சோம்பினாலும்
வளத்தாரைக் காண்பதில்லே

என்னைப் பெத்தஆத்தா
சொப்பனத்தி வந்தாலும்
சோட்டை தெளிவதில்லே
சோறிடவும் போறதில்லே

என்னைப் பெத்த ஆத்தா
அனந்தல்லே வந்தாலும்
ஆவல் தெளிவதில்லே
அன்னமிடப் போறதில்லே

கண்டதெல்லாம் போதுமுன்னு
கைலாசம் சேந்தாயா
பாத்ததெல்லாம் போதுமுன்னு
பரமலோகம் சேந்தாயா

இன்னம் பகிசி
இனிக்காட்சி ரொம்ப இருக்கே
மறுத்துப் பகிசி
மக்களுடைய வாசல் எல்லாம்
மங்களங்கள் ரொம்ப இருக்கே
கட்டி மக்கள் வாசல் எல்லாம்
கல்யாணம் ரொம்ப இருக்கே
கண்ணால் மதிச்ச
கல்யாணம் எத்தனையோ
மனசால் மதிச்ச
மங்களங்கள் எத்தனையோ

மாதுடைய மஞ்சனுக்கு
வயிரம் வச்ச மாராப்பு
வளையயிலே காணலியே
பொண்ணுடைய மஞ்சனுக்குப்
புதுவயிர மாராப்புப்
பூட்டயிலே காணலியே
சின்னஞ் சிறுபுதுமை
தென்னை நிறுத்திச்

செய்வோம் மொதப்புதுமை
வாழை நிறுத்தி
வளைவோம் மறுபுதுமை
ஊதுவான் நாதசுரம் ஆயா
ஒக்க இருந்தும் கேக்கலியே
கொட்டுவான் மேளம் ஆயா
கூடஇருந்தும் கேக்கலியே
கனசனந் தன்னோடு
கைகலந்து மொய்எழுதிக்
கலத்திப் பணம் போட்டு
கல்லெழச்ச மாராப்பு
கட்டயிலே காணலியே
முத்துவச்ச மாராப்பு
முடியயிலே காணலியே

புதுக்கோட்டைச் சீனி
புடிச்சுருசி பாக்கலியே
வங்காளஞ் சீனி
வாங்கிருசி பாக்கலியே
சேலத்துச் சீனி
தின்னுருசி பாக்கலியே

ஆயலியே நெல்லு
அரிக்கலியே காப்பரிசி
குத்தலியே நெல்லு
கொழிக்கலியே காப்பரிசி
புதுமைச் சோறு
பெருமைச் சோறு உங்கலியே ஓம்
பேராசை தீரலியே
மாராப்புச் சோறு
மகிழ்ச்சிச்சோறு உங்கலியே ஓம்
மனசாசை தீரலியே

மக்களுடைய வாசல் எல்லாம்
மகிழ்ச்சிச்சோறு உங்காம
மகுரச்சோறு உண்டிருந்தா
பொண்களுடை வாசல் எல்லாம்
பெருமைச்சோறு உங்காம
போதச்சோறு உண்டிருந்தா

பெரிய மகனும்
பொறசாதிப் பொண்ணைப்
பூவசைச்சுப் பாத்ததினால்
புள்ளியொட சேரலியே
பேரு வெளங்கலியே
பெருமையாத் தோணலியே
புத்தியிலே தாங்கலுன்னா
மகுந்த மகனும்
மறுசாதிப் பொண்ணை
மலரசைச்சுப் பாத்ததினால்
வரியோட சேரலியே
மதிப்பாத் தெரியலியே
மனசிலேயும் தாங்கலுன்னா

மகுந்த மகளும்
மடிப்பொசந்த பட்டுடுத்தி
மகுந்தநகை சாத்தி
மணியரிசி குத்தியிட்டா
மறுத்துள்ள மகளும்
வண்ணப்பாய் சுத்தி
மலரடியில் மேலவச்சா
மறுத்துப் பொறந்தானும்
மலர்வளத்தா ஓவியமா

பெரிய மகளும்
புடிஓசந்த பட்டுடுத்திப்
பெரியநகை சாத்திப்
பெருவயிரம் மேல்சாத்தி
பொன்னரிசி குத்தியிட்டா
பிம்புள்ள மகளுட்
பின்னப்பாய் சுத்திப்
பூவடியின் மேலவச்சா
பிம்பு பொறந்தானும்
பூவளத்தா ஓவியமா

**முதல் ஆண்குழந்தைக்குச் செய்யும்**

'புதுமை' - அதற்கான, பெண்ணின் பிறந்த வீட்டார் செய்யும் ஏற்பாடுகள், புதுமையில் உறவினர் மொய் எழுதும் வழக்கம் முதலியன புலனாகின்றன.

ooo

*நன்மக்களைப் பெற்று, நிறைவான வாழ்க்கை வாழ்ந்து, மணிவிழாக் கண்டதன் பின்னர் வாழ்வரசியாக மாண்ட தாய்க்கு, மகள் பாடியது.*

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநாள் வாழ்ந்து
மகுந்த கலியாணம்
மகிழ்ச்சிபண்ணிச் செய்திருந்து
மலரோடு தீக்கலக்க
மாசமத்தி மாதா
மாதவத்தைச் செய்திருந்தா

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநாள் வாழ்ந்து
பெரிய கலியாணம்
பெருமைபண்ணிச் செய்திருந்து
பூவோடு தீக்கலக்கப்
பெருஞ்சமத்தி மாதா
பெருந்தவத்தைச் செய்திருந்தா

பூமிக்கு அதிட்டமுள்ளாள்
பொறந்தநாள் செல்வமுள்ளாள்
மண்ணுக்கு அதிட்டமுள்ளாள்
வளந்தநாள் செல்வமுள்ளாள்
எல்லைக்கு அதிட்டமுள்ளாள்
எந்நாளும் செல்வமுள்ளாள்

தங்கப் படியே
தனம்பதித்தார் எல்லையிலே
தளர மிதிச்சிருந்தா
தருமருக்கு முன்போகத்
தவங்கள் மெத்தச் செய்திருந்தா

வெள்ளிப் படியே
வெளங்க மிதிச்சிருந்தா
வீமருக்கு முன்போக
வெகுதவங்கள் செய்திருந்தா

பொன்னும் படியே
பொருந்த மிதிச்சிருந்தா
புண்ணியர்க்கு முன்போகப்
பெருந்தவங்கள் செய்திருந்தா

தேனூத்திப் பாத்திகட்டித்
தென்னைமரம் உண்டு பண்ணி
தென்னை மரமும்
தெகிள்விடப் பாத்திருந்தா

நெய்யூத்திப் பாத்திகட்டி
நெல்லிமரம் உண்டு பண்ணி
நெல்லி மரமும்
நெமைகுளிரக் காச்சிருந்தா

கொள்ளிடத்துத் தென்னைமரம்
கொழுந்துவிட்டுக் காச்சிருந்தா
பட்டணத்துத் தென்னைமரம்
பக்கம்விட்டுக் காச்சிருந்தா

வாளிமகுர மல்லியப்பூப்
பூத்திருந்தா
திண்ணைமகுரச் செம்பகப்பூப்
பூத்திருந்தா
கோட்டைமகுரக் கொத்தரளி
பூத்திருந்தா
வங்காளமல்லி வடமல்லி
பூத்திருந்தா
சிங்கப்பூர்மல்லி
செகமல்லிபூத்திருந்தா
காசிமல்லி கனகமல்லி பூத்திருந்தா
கல்கத்தாமல்லி கதம்பமலர்

பூத்திருந்தா
மல்லியும்ரோசாவும்
மகுரமலர்பூத்திருந்தா
பிச்சியும்ரோசாவும்
பின்னிப்படந்திருந்தா
செம்பகமும்ரோசாவும்
சேந்து படந்திருந்தா

அஞ்சடுக்குத் தீபம்போல்
அருச்சுனரைக் கண்டிருந்தா
அழகான தீபம்போல்
அல்லிகளைக் கண்டிருந்தா

பத்தடுக்குத் தீபம்போல்
பாண்டியரைப் பெத்திருந்தா
பவுரான தீபம்போல்
பாங்கிகளைப் பெத்திருந்தா

எட்டடுக்குத் தீபம்போல்
இந்திரரைப் பெத்திருந்தா
எடுப்பான தீபம்போல்
ஏந்திழையைப் பெத்திருந்தா

ஈட்டி முனைக்கு அஞ்சாத
இந்திரரைப் பெத்தாத்தா
கத்திமுனைக்கு அஞ்சாத
கர்ணரைப் பெத்தாத்தா

மான்வேட்டை ஆடிவரும்
மக்களையும் பெத்தாத்தா
மானைக் கறிசமைக்கும்
மாசமத்திப் பொண்டுகளை
மாலையிட்டுக் கூட்டிவந்தா

புலிவேட்டை ஆடிவரும்
புத்திரரைப் பெத்தாத்தா
புலியைக் கறிசமைக்கும்
பெருஞ்சமத்திப் பொண்டுகளைப்
பூச்சேத்துக் கூட்டிவந்தா

மகுந்தமக வாசல்னா
மாங்காய் மரமேறி
மாங்காயைக் கும்பம்வச்சு
மாவெலையைத் தொண்ணை தச்சு
மாதுமணவாளர் எல்லாம்
மணம்விரிக்கப் பாத்திருந்தா
வாள்விசயன்தேவி எல்லாம்
வளவில் வரக்கண்டிருந்தா

பெரியமக வாசல்னா
தேங்காய் மரமேறி
தேங்காயைக் கும்பம்வச்சு
தென்னெலையைக் தொண்ணைதச்சு
செல்வமக்கள் வாசல் எல்லாம்
திருப்பூட்டப் பாத்திருந்தா
செம்பனுடைதேவி எல்லாம்
தெருவில் வரக் கண்டிருந்தா

பெருஞ்சமத்தி மாதா
பூவோடு தீக்கலக்கப்
பெருந்தவங்கள் செய்திருந்தா
மாசமத்தி மாதா
மலரோடு தீக்கலக்க
மாதவங்கள் செய்திருந்தா

○○○

பேரன் பேத்திகளைக் கொஞ்சி அருமையாக வளர்த்து, நிறைவான வாழ்க்கையை நெடிது வாழ்ந்து, முதிர்ந்த வயதில் வாவரசியாகத் தாய் இறந்த போது, தாயின் அன்பையும் பாசத்தையும் நினைக்கையில் இளம் வயதில் தாயைப் பறிகொடுத்ததுபோல் ஏக்கமாக இருக்கிறது என மகள் வருந்திப் பாடியது.

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநா வாழ்ந்து
மகுந்த கலியாணம்
மகிழ்ச்சிபண்ணிச் செய்திருந்து

எஞ்சமத்திமாதா வாவரசியாக
மாததிட்டம் செய்திருந்தா

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநா வாழ்ந்து
பெரிய கலியாணம்
பெருமைபண்ணிச் செய்திருந்து
பெருஞ்சமத்தி மாதா
போரழகியாகப்
பொண்ணதிட்டம் செய்திருந்தா

மகுந்த மனைக்கும்
மாசமத்தி ஆத்தாவை
மாதழச்ச நாமொதலா
மகிழ்ச்சிக் கொறையுமில்லே
மக்களுன்னா அட்டியில்லே

பெரிய மனைக்கும்
பெருஞ்சமத்தி மாதாவைப்
பொண்ணழச்ச நாமொதலாப்
பெருமைக் கொறையுமில்லே
புள்ளையின்னா அட்டியில்லே

மககலப்பும் புத்திரரும்
மகுரமக்க கண்டாத்தா
பொண்கலப்பும் புத்திரரும்
போதமக்க கண்டாத்தா

கொய்யாவும் மாதுளையும்
குலுங்கப் பழுத்திருந்தா
மாதுளையும் கொய்யாவும்
மகுரப் பழுத்திருந்தா

ஈச்சங்காய் செவ்வெளனி
எணைக்குஎணையாக் காச்சிருந்தா
சாதிக்காய் செவ்வெளனி
சரஞ்சரமாக் காச்சிருந்தா
வெள்ளிக் கொடியேறி
வெதவெதமாக் காச்சிருந்தா

தங்கக் கொடியேறிச்
சரஞ்சரமாக் காச்சிருந்தா

மாதுக்கு ஒருகோட்டை
மணிக்கோட்டை பாத்துவச்சா
மதிச்சாண்டார் எல்லை
மாதழச்சுக் கூட்டி வந்தா

பொண்ணுக்கு ஒருகோட்டை
புதுக்கோட்டை பாத்து வச்சா
பொழிஞ்சாண்டார் எல்லை
பொண்ணழச்சுக் கூட்டிவந்தா

தங்கைக்கொரு கோட்டை
தனிக்கோட்டை பாத்துவச்சா
சத்தியவார் எல்லை
சானகையைக் கூட்டிவந்தா

ஈட்டிமுனைக்கு அஞ்சாத
இந்திரரைப் பெத்தாத்தா
கத்திமுனைக்கு அஞ்சாத
கர்ணரைப் பெத்தாத்தா

மான்வேட்டை ஆடிவரும்
மக்களையும் பெத்திருந்தா
மானைக் கறிசமைக்க
மாசமத்துப் பொண்டுகளை
மாலையிட்டுக் கூட்டிவந்தா

புலிவேட்டை ஆடிவரும்
புத்திரரையும் பெத்திருந்தா
புலியைக் கறிசமைக்க
பெருஞ்சமத்துப் பொண்டுகளைப்
பூச்சேத்துக் கூட்டிவந்தா

மாலையிட்ட மக்களெல்லாம்
வளத்துவரப் பாத்திருந்தா
பூச்சேத்த மக்களெல்லாம்
பெத்துவரப் பாத்திருந்தா

பூமி இருண்டு
பொழுதிருண்டு வந்தாலும்
போர்விசயன் மக்களைப்
பூஞ்சோலைக் குள்ளாகப்
புடிச்சுவச்சுப் பாத்திருந்தா

மானம் இருண்டு
மழையிருண்டு வந்தாலும்
மாதுடைய மக்களை
மாஞ்சோலைக் குள்ளாக
மறிச்சுவச்சுப் பாத்திருந்தா

சீரங்கம் காவேரி
சேந்துகுமிழ் பாஞ்சாப்போல்
சித்தடியா மக்களைச்
சேத்துமுத்தம் கொண்டிருந்தா

வல்லடம் காவேரி
வளைஞ்சுகுமிழ் கொண்டாப்போல்
வாள்விசயன் மக்களை
வாரிமுத்தங் கொண்டிருந்தா

கொள்ளிடம் காவேரி
கூடிக்குமிழ் பாஞ்சாப்போல்
கொம்பனையா மக்களைக்
கூட்டிமுத்தம் கொண்டிருந்தா

பூலோகத்தி உள்ளவுக
பெருஞ்சமத்தி மாதாவைப்
பெரிய வயசும்பா
போறதொரு நாளும்பா
போறதுவே மோச்சமும்பா
பொன்னைக் கொழிச்சதுவும்
பிஞ்சான மக்களைப்
போத்தியிட்டுப் பாத்ததுவும்
போர்விசயன் தேவிக்கெல்லாம்
பெருமைக்கு இருந்ததுவும்
புத்தி நெனச்சாப்
பிஞ்சுவயசில் பொனம்பாக்கப்
போனாப் போல்
பொங்குதே கண்ணீரு

வையகத்தி உள்ளவுக
மாசமத்தி மாதாவை
மகுந்த வயசும்பா
மாளுறதோர் நாளும்பா
மாண்டதுவே மோச்சமும்பா
மச்சம் கொழிச்சதுவும்
மணிவயிர மக்களுக்கு
வரிசையிட்டுப் பாத்ததுவும்
வாள்விசயன் தேவிக்கெல்லாம்
மதிப்புக்கு இருந்ததுவும்
மனசு நெனச்சா
மட்டவயசில் வனம்பாக்கப்
போனாப் போல்
மகுருதே கண்ணீரு

இன்னுஞ் செலகாலம்
இருந்திட்டா சோமாத்தி
கொஞ்சம் செலகாலம்
கூடஇருந்தா சோமாத்தி

வளத்தார் நெனப்புவந்தா
மலர்ந்த மலர்போல
மக்களெல்லாம் வாடுகிறோம்
பெத்தார் நெனப்புவந்தா
பூத்தமலர்போலப்
பொண்களெல்லாம் வாடுகிறோம்.

புடுங்கிவச்ச பூப்போலப்
பொழுதுபட்டா வாடுகிறோம்.
பறிச்சுவச்ச பூப்போலப்
பகல்வந்தா வாடுகிறோம்
அள்ளிவச்ச பூப்போல
அருமைமக்கள் தேம்புறமே

பொன்னுந் தளுகைவச்சு
பூத்தபுஷ்பம் மேலவச்சு

பொறப்பட்டாக் காண்பதில்லே

தங்கத் தளுகைவச்சு
தழைஞ்சபுஷ்பம் மேலவச்சு
தருவிச்சாக் காண்பதில்லே

வெள்ளித் தளுகைவச்சு
விரிஞ்சபுஷ்பம் மேலவச்சு
விரும்பினாக் காண்பதில்லே

காணுவமா காணுவமா
இந்தக் கடவில் வரக் காணுவமா
சித்ரை வீதிநம்ம
தெருவில் வரக் காணுவமா
வைகாசி வீதிநம்ம
வளவில் வரக் காணுவமா
முத்தணி வாசல்நம்ம
முகப்பேறக் காணுவமா
பலகணி வாசல் நம்ம
படியேறக் காணுவமா
பட்டியக் கல்லில்
பல்வெளக்கக் காணுவமா
செப்போடு பாவிய
சிங்கமொகத் திண்ணையிலே
எப்போதும் போல
இனிதிருக்கக் காணுவமா
கோடி சனத்தோட
கூடஇருக்கக் காணுவமா
அநேக சனத்தோட
அமைந்திருக்கக் காணுவமா
நம்ம சேனைதளத்தோடச்
சேந்திருக்கக் காணுவமா

கட்டிமக்கள் வாசலெல்லாம்
காட்சி மகிழ்ந்தாலும் நீ
காணவரப் போவதில்லே
காட்சியெல்லாம் ஒன்னுதுன்னோம்
காணாமல் கண்மறைஞ்சே

பகிசியெல்லாம் ஒன்னுதுன்னோம்
பாராமல் கண்மறைஞ்சே

இன்னும் பகிசிரொம்ப
இனிக்காட்சி மெத்த இருக்கே
காணலாம் காட்சிகளைக்
கண்கள் மலர்சொரியப்
பாக்கலாம் காட்சிகளைப்
பாவை மலர்சொரிய

பொன்னாண்டா மண்ணாண்டா
பெருவாரிநா வாழ்ந்தா
ஐயாபெருமா விசுவாசம்
போகமனம் வல்லையின்னா

மண்ணாண்டா பொன்னாண்டா
மட்டத்தநா வாழ்ந்தா
மக்கள் விசுவாசம்
மாளமனம் வல்லையின்னா

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநா வாழ்ந்து
வாதோடிக் காச்சிருந்து
மகுரமக்கள் கண்டிருந்து
மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருந்து
மாளும் சமயம்
மக்களெல்லாம் தானும்
வையை தெரட்டியிட்டோம்
மகுந்த மகளும்
மடிப்பொசந்த பட்டுடுத்தி
மணிவயிரம் மேச்சாத்தி
மணியரிசி குத்தியிட்டா
வண்ணப்பாய் சுத்தியிட்டா
மாளவழி காட்டிட்டா

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநா வாழ்ந்து
போத்தோடிக் காச்சிருந்து
போதமக்கள் கண்டிருந்து

பெருமையுடன் வாழ்ந்திருந்து
போகும் சமயம்
புள்ளையெல்லாம் தானும்
பொய்யை தெரட்டியிட்டோம்
பெரிய மகளும்
புடியொசந்த பட்டுடுத்திப்
பெருவயிரம் மேச்சாத்திப்
பொன்னரிசி குத்தியிட்டா
பின்னப்பாய் சுத்தியிட்டா
போகவழி காட்டிட்டா

போர்விசயன் மக்களும்
பொண்கள் தெரவியமும்
வாள்விசயன் மக்களும்
மாது தெரவியமும்
பூமி நெருங்கிப்
பூவடியைச் சுத்தி
வளவு நெருங்கி
மலரடியைச் சுத்திப்
பெத்த ஒசத்திபோல
போர்பெத்தா ஓவியமா
வளத்த ஒசத்திபோல
வரிசை பெத்தா ஓவியமா

மொதக் காட்டுக்குள்ளாக
முன்னூறு மூங்கில் வெட்டி
மொதமூங்கில் வில்வளைச்சு
மூணு கலசம் வச்சு
முல்லைப்பூத் தொங்கவிட்டு

நடுக்காட்டுக்குள்ளாக
நானூறு மூங்கில்வெட்டி
நடுமூங்கில் வில்வளைச்சு
நாலு கலசம் வச்சு
மல்லியப்பூத் தொங்கவிட்டு
அடிக் காட்டுக்குள்ளாக
ஐநூறு மூங்கில்வெட்டி
அடிமூங்கில் வில்வளைச்சு
அஞ்சு கலசம்வச்சு
அரளிப்பூத் தொங்கவிட்டு

கொத்தன் அழைச்சுக்
குத்துக்கால் செப்பனிட்டுத்
தச்சன் அழைச்சுத்
தலம்பெரிய தேர்சமைச்சு
வண்ணான் அழைச்சு
வரிவரியா சேலைகட்டி
ஆண்டி அழைச்சு
அடுக்கடுக்கா மாலைகட்டி
கண்ணான் அழைச்சு
கண்ணாடி மேல்பதிச்சு

பம்பாயி போலப்
பாதை ஒதுக்கிவிட்டுக்
கல்கத்தா போலக்
கடவை ஒதுக்கிவிட்டு
ஓட்டுனார் பூந்தேரை
நடுத்தெருவே சாயாமே
தேர்புடிச்ச பேர்களுக்குச்
செவந்திப்பூச் செண்டெறிஞ்சா
வடம்புடிச்ச பேர்களுக்கு
மல்லியப்பூச் செண்டெறிஞ்சா
சந்துக்குச் சந்து
சதிர்வாணம் விட்டாக
சந்திலுள்ள பேர்களெல்லாம்
சதிர்வாணம் ஏதுமுன்னா
தருமவான் தேவிபோற
தங்கரதம் போகுதுன்னா

வீதிக்கு வீதி
வெடிவாணம் விட்டாக
வீதியிலுள்ள பேர்களெல்லாம்
வெடிவாணம் ஏதுமுன்னா
வீமருடைய தேவி
மெல்லிநல்லாள் போற
வெள்ளிரதம் போகுதுன்னா

சிங்கமுகத் தண்டியலும்
சிவனேறாப் பல்லாக்கும்
வந்து பணிஞ்சுதே
மதிச்சாண்டார் எல்லையிலே
வாசலெடங் கொள்ளாமே
தண்டியலைக் கண்டொடனே
தங்காம ஏறிட்டா
பல்லாக்கைக் கண்டொடனே
பாராம ஏறிட்டா

நெல்லுப் பொரி பொரிச்சு
நெறையப் பணங்கலந்து
அரிசிப் பொரிபொரிச்சு
அநேகப் பணங்கலந்து
கட்டத்தலம் போகுமட்டும்
காலரைக்கா விட்டெறிஞ்சா
சுடுகாடு போகுமட்டும்
துட்டுஅரைக்கா விட்டெறிஞ்சா

நடுக்காடு தானிறைக்கி
நல்லபசு தானமிட்டா
சுடுகாடு தானிறக்கிச்
செவலைப்பசு தானமிட்டா

பெருந்தவமோ தானிருந்து
புள்ளை ஒருதனையும்
புத்திரனைக் கண்டிருந்தா
மாதவமோ தானிருந்து
மஞ்சன் ஒருதனையும்
மகனாரைப் பெத்திருந்தா

பெத்த ஒசத்திபோல
புள்ளை தனியனும்
பூவளத்தான் ஓவியமா
வளத்த ஒசத்திபோல
மஞ்சன் தனியனும்
வாழ்ந்திருந்த தாயார்க்கு
மலர்வளத்தான் ஓவியமா

வளத்த ஒசத்திபோல
வரிசைபெத்தா ஓவியமா
பெத்த ஒசத்திபோலப்
போர்பெத்தா ஓவியமா

நகரத்தார் வீடுகளின் பல பகுதிகள், இறுதி ஊர்வலத்தில் அலங்கரிக்கப்பட்ட தேர், வருணனை, வாணம் விடுதல், பசு தானமிடல் ஆகிய செய்திகள் புலனாகின்றன.

ooo

**நன்மக்களைப் பெற்றவளும், பிள்ளைகளிடத்துப் பேரன்பு கொண்டவளுமாகிய தாய் திடீரென்று இறந்து விட, மூத்த மகள் பச்சையும், மூத்த மகன் கொள்ளியும் பெற அதிட்டம் செய்யவில்லையே என மகள் வருந்திப் பாடியது.**

தந்திவந்தாக் கூட
சத்த சொணக்கமுண்டு
சனநேரந் தங்கலுண்டு
சனங்களுக்குத் தாக்கலுண்டு
தந்திவந்த பாவனைக்குச்
சத்த சொணக்கமில்லே
சனநேரந் தங்கலில்லே
சனங்களுக்குத் தாக்கலில்லே
எஞ்சமத்தி மாதா
சானகியா பள்ளியறை

வங்கிவந்தாக் கூட
மணியை சொணக்கமுண்டு
மணிக்குமணி தங்கலுண்டு
மனிதருக்குத் தாக்கலுண்டு
வங்கி வந்த பாவனைக்கு
வங்கிவந்த நேரமில்லே
மணியை சொணக்கமில்லே
மணிக்குமணி தாக்கலில்லே
மனிதருக்குத் தாக்கலில்லே

மாசமத்தி மாதா
மாதுடைய பள்ளியறை

மானம் நெனச்சா
மழை பொழிஞ்சு
நெல் வெளையும்
மனுச நெனச்சா
வயிராக்கியம் உண்டாகும்
மட்டமுள்ள மக்க
மனசு நெனச்சா
மாளு மறதி
மாதா கிடையாதே

பூமி நெனச்சா
பூரிச்சு நெல்வெளையும்
பெரியவுக தான் நெனச்சாப்
பிடிவாதம் உண்டாகும்
பிஞ்சான மக்கள்
புத்தி நெனச்சாப்
போகு மறுதி
பெத்தார் கிடையாதே

தத்துவமா பூர்வமா
தாயா தலமொறையா
தாழ்ந்த வயசில்
தாயார் எழந்தமக்க

பூர்வமா தத்துவமா
பெத்தா தலமொறையா
பிஞ்சு வயசில்
பெத்தார் எழந்தமக்க

மாமூலா தத்துவமா
வளத்தா தலமொறையா
மட்ட வயசில்
வளத்தார் எழந்தமக்க
மாதருமைப்பட்ட மக்க

பெருஞ்சமத்தி மாதா
போதமக்கள் பெத்தாலும்
பி ள் ளை ெ ய ா ண் ணு ம்
சோடையில்லே
புதுவயிர மின்னொளிவு

மாசமத்தி மாதா
மகுரமக்கள் பெத்தாலும்
மஞ்சன் ஒண்ணும் சோடையில்லே
வயிரம்போல் மின்னொளிவு

புதுப் பவனைப்போலப்
போதமக்கள் பெத்த ஆத்தா
மதுரைப் பவனைப் போல
மகுரமக்கள் பெத்தாத்தா
செடிப்பவனைப் போலச்
செழிக்கமக்கள் பெத்தாத்தா

பவன்போல மக்களெல்லாம்
பக்கம்வச்சுப் பாத்தாத்தா
ரத்னம்போல மக்களெல்லாம்
நடுவேவச்சுப் பாத்தாத்தா
சுயம்போல மக்களெல்லாம்
சுத்திவச்சுப் பாத்தாத்தா

சொத்தையில்லே இத்தியில்லே
சாப்பையில்லே ஏப்பையில்லே
இத்தி எளக்கமில்லே
என்ஆத்தா ஏந்திழையா
பெத்த மக்க

சாடையில்லே சோடையில்லே
சாப்பையில்லே ஏப்பையில்லே
சத்தே எளக்கமில்லே
என்ஆத்தா சானகியா
பெத்த மக்க
மாசமத்தி ஆத்தா
மகுந்தகடை வைக்க
மகுந்தமகன் வேணும்பா
மகுந்தகடை மேப்பாக்க

மறுத்துள்ள மகன்
மஞ்சன்வர வேணும்பா
மணிக்கணக்குப் பாக்க
மட்டமுள்ள மகன்
மஞ்சன்வர வேணும்பா

பெருஞ்சமத்தி ஆத்தா
பெரிய கடை வைக்கப்
பெரியமகன் வேணும்பா
பெரியகடை மேப்பாக்க
பிம்புள்ள மகன்
புள்ளைவர வேணும்பா
பெஷல்கணக்குப் பாக்கப்
பிஞ்சான மகன்
புள்ளைவர வேணும்பா

மாசமத்தி ஆத்தா
வறுத்துத் திரிக்க
மகுந்தமக மாது
மாதுவர வேணும்பா
மாசேனை சேகரிக்க
மறுத்துள்ள மக
மாது வரவேணும்பா
மணிக்கணக்குப் பாக்க
வளக்கக் கடைசாரி
மாதுவர வேணும்பா

பெருஞ்சமத்தி ஆத்தா
பொரிச்சு திரிக்க
பெரியமக மாது
பொண்ணுவர வேணும்பா
பெருஞ்சேனை சேகரிக்க
பிம்புள்ள மக
பொண்ணு வர வேணும்பா
பெஷல் கணக்குப் பாக்கப்
பொறக்கக் கடைசாரி
பொண்ணு வரவேணும்பா

மக்களுடைய வாசலெல்லாம்
மாபகிசி பாத்திருந்தா
பொண்ணுடைய வாசலெல்லாம்
பெருபகிசி பாத்திருந்தா
அருமைமகன் வாசலெல்லாம்
அலந்து மலந்துவரும்
அதிசயத்தைப் பாத்திருந்தா
வாள்விசயன் வாசலெல்லாம்
மலந்து அலந்து வரும்
மகிழ்ச்சிகளைப் பாத்திருந்தா

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநா வாழ்ந்து
மகுரமக்க கண்டிருந்து
மாளுஞ் சமயம்
மகுந்த மககையி
மணியரிசி எட்டலியே
மகுந்தமகன் கையி
மலர்வாங்க எட்டலியே
மாததிட்டம் பத்தலியே

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநா வாழ்ந்து
போதமக்கள் கண்டிருந்து
போகுஞ் சமயம்
பெரியமக கையி
பொன்னரிசி எட்டலியே
பெரியமகன் கையி
பூவாங்க எட்டலியே
பொண்ணதிட்டம் பத்தலியே

OOO

**பெண் மக்களின் மக் களுக்குப் 'புதுமை' எனும் சடங்கைச் செய்து காணாமல் மாண்ட தாய்க்கு மகள் பாடியது.**

போதமக்கள் கண்டாலும்
பொலிஞ்சு மிருந்தாலும்

பெருவாரிநாள் சென்னு
பெத்தார்க்குத் தானும்
பொண்கள் இருபேரும்
பொறந்துமுடி தீத்தமுன்னோம்

மகிரமக்கள் கண்டாலும்
மகிழ்ந்து மிருந்தாலும்
மாமாங்கம் சென்று
வளத்தார்க்குத் தானும்
மாது இருபேரும்
வந்துமுடி தீத்தமுன்னோம்

பெத்தா இருபேரும்
போத்தி வளத்திருந்தா
பெண்களிரு பேர்க்கும்
பூச்சேத்துப் பாத்திருந்தா
பூச்சேத்த ஓவியம்போல்
பெத்துவரக் கண்டிருந்தா
புள்ளைமொகங் கண்டாலும்
பூலோகத்திப் போல
புதுமைதனைச் செய்யலியே
பொரிச்சுத் திரிச்சுப்
பெருஞ்சாமான் சேகரிச்சுப்
பெருஞ்சேனை கூட்டிப்
புதுமைதனைச் செய்யாது
புத்தியிலே தாங்கலுன்னோம்

பூலோகத்துக் காப்பரிசி
புடிச்சு ருசிபாத்ததுதான்
பொண்களுடை வாசலிலே
புடிச்சு ருசி பாக்கலியே
பேராசை தீரலியே
பெருமையாத் தோணலியே

வளத்தா இருபேரும்
வருந்தி வளத்திருந்தா
மாதிரு பேர்க்கும்
மலர்சேத்துப் பாத்திருந்தா
மலர்சேத்த ஓவியம்போல்
வளத்துவரக் கண்டிருந்தா
மக்கமொகங் கண்டாலும்
வையகத்துப் போல
மாராப்புக் கட்டலியே
வறுத்துத் திரிச்சு
மகுரவெள்ளம் சேகரிச்சு
மாசேனை கூட்டி
மாராப்புக் கட்டாது
மனசிலேயும் தாங்கலுண்ணோம்
வையகத்துக் காப்பரிசி
வாங்கி ருசிபாத்ததுதான்
மக்களுடைய வாசலிலே
வாங்கி ருசிபாக்கலியே
மனசாசை தீரலியே
மகிழ்ச்சியாத் தோணலியே

## தந்தைக்கு

பேரன்பும், பேராற்றலும், புத்திக் கூர்மையும் உடைய தந்தை மாண்டதற்கு, தாயை மங்கலமிழக்கச் செய்தாரே என்றும், நிறையப் பிள்ளைகள் இருந்தும் அனைவரையும் அன்புடன் பேணியவர், தன் தங்கையின் திருமணத்தைக் காணாமல் மறைந்தவர் என்றும் கூறி தந்தையின் கணக்கறிவையும், கணக்காக வாழும் வாழ்வையும் பெரு மிதத்துடன் கூறி மகள் பாடியது.

பொட்டழிஞ்சா மையழிஞ்சா
பெருஞ்சமத்தி மாதா
புண்ணியவார் பொண்ணு
எங்கையா வாசல்
பொறந்த நெறம் பேந்துவிட்டா
பொறக்கையிலே வச்ச
பொட்டை அழிச்சுவிட்டா
பொறந்துட்டு வச்ச

பூவைப் பறிச்செறிஞ்சா

மையழிஞ்சா பொட்டழிஞ்சா
மாசமத்தி மாதா
மாதவசுப் பொண்ணு
எங்கையா வாசல்
வளந்தநெறம் பேந்துவிட்டா
வளரயிலே வச்ச
மையை அழிச்சுவிட்டா
வளந்திட்டு வச்ச
மலரைப் பறிச்செறிஞ்சா

மகுரக்குடுத்த ஐயா
மகுரமக்க கண்டதுக்கு
வரிசையிட்டுப் பாத்தவுக
வருச மொறையும்
மகுந்தமொறை தந்தவுக
வனம்பாக்கப் போனமுன்னா

போதக்குடுத்த ஐயா
போதமக்க கண்டதுக்குப்
போத்தியிட்டுப் பாத்தவுக
பொங்கல் மொறையும்
போதமொறை தந்தவுக
பொனம்பாக்கப் போனமுன்னா

பொண்ணுடைய வாசல்
பூமிவந்து சேந்தாக்கப்
போதவெள்ளம் கொண்டும்
எங்கபூமிவந்து சேந்திருப்பா
பிஞ்சுமக்கள் அப்பத்தா
புத்தி மகிழ்ந்திருப்பா

மாதுடைய வாசல்
வளவிவந்து சேந்தாக்க
மகுரவெள்ளம் கொண்டு
எங்கவளவிவந்து சேந்திருப்பா
மதலைமக்கள் அப்பத்தா
மனசும் மகிழ்ந்திருப்பா

மறுத்துப் பொறந்த தங்கை
மாதுக்கு அதிட்டமில்லே
வளத்தாரும் மறுத்திருக்கக்
காலமில்லே
மாசேனை கூடி
மாலையிட்டுப் பார்த்தாலும்
வளத்தார் ஓரைக்கும்
வார்த்தை வெலைகாணாது

பிம்புபொறந்த தங்கை
பொண்ணுக்கு அதிட்டமில்லே
பெத்தாரும் பிம்பிருக்கக்
காலமில்லே
பெருஞ்சேனை கூடிப்
பூச்சேத்துப் பாத்தாலும்
பெத்தார் ஓரைக்கும்
பேச்சு வெலைகாணாது

வளத்தார் நெனப்புவந்தா
வையகத்திக் காரு
மணிக்கொரு காரும்பேன்
மலயாண்டி எல்லை
மதிப்புடைய சீமை
மாதுபோய்ச் சேந்திடுவேன்
வளத்தாரு தன்னோட
மகிழ்ந்துமே பேசிடுவேன்
மறுசாதி தானும்
வடிச்சிட்ட சோத்தை
வாரியுண்ணு பாத்திருப்பேன்
வளத்தா இருபேரும்
மகுந்தமனை எதிரே
வையை இருக்குதும்பா
மக்களெல்லாம் சின்னமும்பா
மறுபொழுது தங்காம
வளவில் போய்ச் சேரும்பா

பெத்தார் நெனப்புவந்தா
பூலோகத்திக் காரு

பெசக்காரு போலயிம்பேன்
புதுமலையாண்டி எல்லை
பொழிஞ்சிருந்த சீமை
பொண்ணுபோய்ச் சேந்திடுவேன்
பெத்தாரு தன்னோட
பேசியுமே மகிழ்ந்திடுவேன்
பொறசாதி தானும்
பொங்கியிட்ட சோத்தைப்
புடிச்சுன்னு பாத்திருப்பேன்
பெத்தா இருபேரும்
பெரியமனை எதிரே
பொய்கை இருக்குதும்பா
புள்ளையெல்லாம் சின்னமும்பா
பொழுதோ தங்காம
பூமி போய்ச் சேரும்பா

அதிக அருமையிட்டு
அவசரமாச் சேந்தமுன்னா
மெத்த அருமையிட்டு
வெகுசுருக்காச் சேந்தமுன்னா

அழகர் அதிசயத்தை
அறிஞ்சும் இருந்தாலும்
ஐயா அந்தரமும் யோசனையும்
அறிய முடியாது
அளவிடவும் கூடாது.

மதுரை அதிசயத்தை
மனுசர் அறிஞ்சாலும்
ஐயா மனக்கருத்தும் யோசனையும்
மனுசர் அறிஞ்சதில்லே
மதிப்பிடவும் கூடாது.

கணக்கன் கணக்கிலும்
கால்வீசம் கூட இருக்கும்
ஐயர் கணக்கிலேயும்
அரைவீசம் கூட இருக்கும்
செட்டி கணக்கிலேயும்
தென் வீசம் கூட இருக்கும்

என்னைப் பெத்த ஐயா
நெஞ்சுக் கணக்கிலே
நெறஞ்சமுத்து ஜோதிவிடும்
மனசுக் கணக்கிலே
வயிரமுத்து ஜோதிவிடும்

ஆரொருதர் காசுக்கும்
என்னைப்பெத்த ஐயா
ஆசையுமே பட்டதில்லே
அருச்சுனவார் காசு
அரைவீசம் விட்டதில்லே

இன்னொருதர் காசுக்கு
இச்சையுமே வச்சதில்லே
என்னைப் பெத்த ஐயா
இந்திரவார் காசு
எள்ளளவு விட்டதில்லே

மத்தொருதர் காசுக்கு
மனசாசைப் பட்டதில்லே
மாசமத்தர் ஐயா
மகராசா காசு
மாகாணி விட்டதில்லே

பின்னொருதர் காசுக்கு
பேராசைப் பட்டதில்லே
பெருஞ்சமத்தர் ஐயா
புண்ணியவார் காசு
பொன்வீசம் விட்டதில்லே

ஆக்கும் இடமும்
அடுப்படிக்கு மேப்பாப்பா
பொங்கும் இடமும்
புகையடிக்கு மேப்பாப்பா

உத்தியும் புத்தியும்
ஒருவர் அறிஞ்சதில்லே
உட்கருத்தும் பாவனையும்

ஒருவர் அறிஞ்சதில்லே
மனக்கருத்தும் பாவனையும்
மனிசர் அறிஞ்சதில்லே

நெஞ்சுரத்தைக் கீழ்ப்போட்டு
நிலத்தில் படுத்தமுன்னா
மனவலுவைக் கீழ்ப்போட்டு
மண்ணில் படுத்தமுன்னா

பெருஞ்சமத்தி மாதா
பொழுது விடிஞ்சா
புள்ளையார் கையெடுத்துப்
பெருமாமணி செய்திருந்தா.

பெருஞ்சமத்தி மாதா
பெத்தார்க்கு முன்போகப்
பெருந்தவங்கள் செய்யலியே

மாசமத்தி மாதா
வளத்தார்க்கு முன்போக
மாதவங்கள் செய்யலியே

OOO

**பெருமளவு சீரும் சீதனமும் தந்து தன்னை மணமுடித்து, தனக்கு ஆறுதலும் அருமையும் தந்து அன்பு காட்டிய தந்தை இறந்தபோது, தாங்கள் செய்த தருமங்கள், கட்டிய சத்திரங்கள், கோவிலுக்கென்று ஏற்படுத்திய கட்டளைகள் முதலிய அறச் செயல்கள் தந்தையைக் காக்கவில்லையே என்றும், தாயை மங்கலம் இழக்கச் செய்தனவே என்றும் வருந்தி மகள் பாடியது.**

நாளுஞ் சரியாச்சா
மகிழமுடி ஐயா
நடப்பதுக்கு நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா
பிஞ்சுமக்கள் ஐயா
போறதுக்கு நாளாச்சா

மகுரமக்க கண்டதுக்கு
வரிசையிட்டுப் பாத்தவுக
வனம்பாக்கப் போனமுன்னா
போதமக்க கண்டதுக்குப்
போத்தியிட்டுப் பாத்தவுக
பொனம்பாக்கப் போனமுன்னா

வாங்கவந்த தூதனுக்கும்
வருந்திய மக்களெல்லாம்
வளத்தாரைப் போல
வயிரம் எழைச்ச
பதுமை பண்ணித் தாரமுன்னா
வயிரம் எழைச்ச
பதுமை தேவையில்ல
மாசமத்துக் காரரை
வாங்குனாப் போவமுன்னான்
நம்மவளத்தார் மங்கிலியம்
வாங்கிவச்சாப் போவமுன்னான்

புடிக்கவந்த தூதனுக்கும்
பொன்னான மக்களெல்லாம்
பெத்தாரைப் போலப்
பொன்னால் எழைச்ச
பொம்மை பண்ணித் தாரமுன்னா
பொன்னால் எழைச்ச
பொம்மை செலவுமில்லே
பொறுமையுள்ள ஐயாவைப்
பெருஞ்சமத்துக் காரரைப்
புடிச்சா விடுவமுன்னான்
நம்மபெத்தார் மங்கிலியம்
பெருக்கிவச்சாப் போவமுன்னான்

பாங்கியுடை மங்கிலியம்
பறிச்சுவச்சாப் போவமுன்னான்
ஆரணங்கு மங்கிலியம்
அவுத்துவச்சாப் போவமுன்னான்
கொம்பனையாள் மங்கிலியம்
கோரைபட வேணுமுன்னான்

குத்துவிளக்கு குலவிளக்குஞ்
சீதனம்தான்
மாடவிளக்கு மணிவிளக்குஞ்
சீதனம்தான்
தங்கவிளக்கு சரவிளக்குஞ்
சீதனம்தான்
மானத்துமீனைவிட மத்ததெல்லாம்
சீதனம்தான்
ஊரணித்தண்ணிவிட உத்த
தெல்லாஞ் சீதனம்தான்
அரிக்கிற நிலாவைவிட
அத்தனையும் சீதனம்தான்

வாடாத எலைவாங்கி
வதங்காத காய்வாங்கிச்
சுருளாத எலை வாங்கிச்
சோம்பாத காய் வாங்கி
ஆளுவரப் பாத்ததில்லே
அனுப்பிவிட அட்டியில்லே
சனங்கவரப் பாத்ததில்லே
தருவிக்க அட்டியில்லே

போதமக்கள் பெத்தாலும்
எம்புத்திமான் அப்பா
புள்ளை சவுதமுன்னு
புத்தி நெனச்சதில்லே
பேணி வளத்தவுக
போத்தியிட்டு நின்னவுக

மகுரமக்கள் பெத்தாலும்
மக்கள் சவுதமுன்னு
மனசில் நெனச்சதில்லே
வருந்தி வளத்தவுக
வரிசையிட்டுப் பாத்தவுக

வளமைசொல்லிக் கூப்பிட்டா
வலுக் கொறையுமுன்னு
வரிசையிட்டு வச்சவுக
பேருசொல்லிக் கூப்பிட்டா
பெலங் கொறையுமுன்னு
போத்தியிட்டுப் பாத்தவுக

போனாத்தான் என்ன
பூலோகத்துக்கு அத்துபடி
பெத்ததொரு மக்களுக்குப்
பூச்சேத்துப் பாத்துப்
பொனம்பாக்கப் போனா
பொங்காதே கண்ணீரு
மாண்டாத்தான் என்ன
வையகத்துக்கு அத்துபடி
வளத்ததொரு மக்களுக்கு
மாலையிட்டுப் பாத்து
வனம்பாக்கப் போனா
மகுராதே கண்ணீரு

ஆத்துதலை ஆத்துதலை
அருச்சுனவார் ஆத்துதலை
போத்துதலை போத்துதலை
புண்ணியவார் போத்துதலை
அதிக அருமையிட்டு
அவசரமாச் சேந்தமுன்னா
மெத்த அருமையிட்டு
வெகுசுருக்காச் சேந்தமுன்னா

போரானை கட்டிப்
பிரியமுடன் வாழ்ந்தாலும்
காரானை கட்டிக்
கணிசமுடன் வாழ்ந்தாலும்
நான்பொறந்த சாமிக
ஆராரு இருந்தாலும்
ஆனைகட்டி வாழ்ந்தாலும்
என்னைப்பெத்த ஐயா
அருச்சுனவா சொல்லும்
வார்த்தை தெடம்ஆகாது
மாதா முடிக்கும்
மலர்வெலையும் காணாது
என்னைப்பெத்த ஐயா
புண்ணியவா ஒரைக்கும்

பேச்சுவெலை காணாது
என்னைப்பெத்த ஆத்தா
பொண்ணு முடிக்கும்
பூவெலையும் காணாது

காட்சியுள்ளார் எல்லை
காலைத் தளுகைவரும்
கணேசர் வில்வம் வரும்
மதியத் தளுகைவரும்
வயிரவர் வில்வம் வரும்
அந்தித் தளுகைவரும்
அம்மனுட வில்வம்வரும்
சாமத் தளுகைவரும்
சாமியுட வில்வம் வரும்

இப்பவில்ல சத்திரங்கள்
இங்குமங்கும் சத்திரங்கள்
ஆதியிலே சத்திரம்
எங்கையா வாசல்
ஆத்தோரஞ் சத்திரந்தான்
தலைப்பிலே சத்திரம்
எங்கையா வாசல்
தருமருட சத்திரந்தான்

பெருந்தருமம் செய்தெடத்தே
அந்த பெருந் தருமம் எட்டலியே
பெத்தா பொழைக்கலியே
பிஞ்சான மக்களுக்குப்
பெலானத் தெரியலியே

மாதருமம் செய்தெடத்தே
அந்த மாதருமம் எட்டலியே
வளத்தா பொழைக்கலியே
மட்டமுள்ள மக்களுக்கும்
வலுவாத் தெரியலியே

சம்மதமா சம்மதமா
சாமிக்கே சம்மதமா
பொய்கை எறங்காமே
புள்ளையார் காணாமே
பொங்கிய சோறுண்ணதில்லே
வையை எறங்காமே
மகதேவர் காணாமே
வடிச்ச சோறுண்ணதில்லே

எஞ்சமத்தி மாதா
உடுத்தி உரிஞ்சது
ஒருகோடிப் பட்டிருக்கும்
உடுத்தாம இருக்கது
ஒசந்தவெலைப் பட்டிருக்கும்

மாசமத்தி மாதா
கட்டிக் கழட்டினது
காக்கோடிப் பட்டிருக்கும்
கட்டாம இருக்கது
காக்கோடிப் பட்டிருக்கும்

பெத்த ஒசத்திபோல
நாங்க புள்ளையெல்லாந்தானும்
பூமி நெருங்கிப்
பூவடியைச் சுத்தியிட்டோம்
வளத்த ஒசத்திபோல
நாங்க மக்களெல்லாந்தானும்
வளவு நெருங்கி
மலரடியைச் சுத்தியிட்டோம்
மகுந்த மகனும்
வையகம் நல்லாங்க
மலர்வளத்தான் ஓவியமா
பெரிய மகனும்
பூலோக நல்லாங்கப்
பூவளத்தான் ஓவியமா

OOO

(பிறந்த வீட்டுடன் உறவு இல்லாத
பெண் பாடியது)

ஏழு எலையாம்
எலைபோட்டு உண்ணாக
எழுதின உண்டியலை

இல்லையின்னு சொன்னாக

மதசானை கையாலே
வாங்கின உண்டியல்
விராகன் கணக்குமில்லே
மச்சந் தொகையுமில்லே

எரிச்ச விறகுக்கும்
எண்ணெய்க்கும் காணாது
வடிச்ச சோத்துக்கும்
வாழஎலைக்கும் காணாது
காலைப் பலகாரம்
காப்பிக்கும் காணாது

தீவட்டிக் கம்புக்கும்
செண்டுக்கும் கந்தையில்லே
தெசைகருணன் மஞ்சனுக்குச்
செவ்வாய்ப் பணமுமில்லே
தீவாளி வேட்டியில்லே
பத்துப் பவனுமில்லே
பதைக்கம் மகரியில்லே
கண்டிப் பவனுமில்லே
கனத்த மகரியில்லே
பறச்சிக்குக் கூட
பவர்மொறை ரொம்ப இருக்கே
நான் பாண்டிய்வார் மாது
பணியாரம் வாங்கலியே

வலச்சிக்குக் கூட
வாங்கும்மொறை ரொம்ப இருக்கே
மகராசா மாது நான்
வட்டிசொம்பு வாங்கலியே

பெண்ணின் திருமணத்தின்போது பெண்ணின் பெற்றோர் 'உண்டியல்' எழுதிக் கொடுத்தல், மகள் வீட்டுப் பேரக்குழந்தைகட்குத் தீபாவளிக்குப் புத்தாடை தருதல், திருவிழாவின் போது பணம் கொடுத்தல், 'வேறு வைக்கும்' போது மகளுக்கு வட்டி சொம்பு கொடுத்தல் முதலிய நகரத்தார் பழக்கங்கள் வெளிப்படுகின்றன.

○○○

## தாயும் தந்தையும் ஒன்றாக இறந்தபோது மகள் பாடியது

திருமணமானது போலவே இறப்பிலும் ஒன்றாக இறந்தனரே என்றும், இனி தனக்கு ஆதரவில்லையே என்றும், தங்கள் துன்பம் இறைவனுக்கே சம்மதமா என்றும், தங்கள் துயர் கேட்டால் மரமும், பறவைகளும் கூட இறங்கும் என்று வருந்தி மகள் பாடியது.

மாசமத்தி அப்பத்தா
மாதழைச்ச சித்திரம்போல்
மாலையிட்ட ஓவியம்போல்
மாதாவும் வளத்தாரும்
மாள நெனச்சிருந்தா
பெருஞ்சமத்தி அப்பத்தா
பொண்ணழைச்ச சித்திரம்போல்
பூச்சேத்த ஓவியம்போல்
பெத்தாரும் மாதாவும்
போக நெனச்சிருந்தா

ஒத்து வனம்போக
ஓலை கிழிச்சமுன்னா
சேந்து வனம்போகச்
சீட்டு கிழிச்சமுன்னா

கொத்தவரும் தேவியும்
குடிபோன சீமை
மன்னவருந் தேவியும்
வனம்பாத்த சீமை
செல்லரும் தேவியும்
தெடல்பாத்த சீமை

கொத்தவரும் தேவியும்
குடிபோன பட்டணந்தான்
மன்னவரும் தேவியும்
படையெடுத்த ராஜ்ஜியந்தான்

பெத்தார எழந்த
அநியாயம் சொன்னாக்க
ஆறுஒரு சுத்துவத்தும்
வளத்தார் எழந்த
வகுத்தெரிச்ச சொன்னாக்க
வையை ஒரு சுத்துவத்தும்

காயைக் கனியைக்
கலந்து பறிப்பாக நாங்க
தாயைத் தகப்பனைத்
தட்டிப்பறிச்ச மக்க

பூவைப் பிஞ்சைப்
பின்னிப் பறிப்பாக நாங்க
பெத்தாரை மாதாவைப்
பின்னிப்பறிச்ச மக்க

எச்சா வருவான்னு
இழுத்தடைச்சா பொற்கதவை
தவிச்சா வருவான்னு
சாத்தியிட்டா பொற்கதவை

சட்டிச் சரக்கரைக்கத்
தாயார் எழந்த மக்கள்
தலைக்கடைக்கு நீர்வாக்கத்
தாயார் எழந்த மக்கள்

பொட்டிச் சரக்கரைக்கப்
பெத்தாரைஎழந்த மக்கள்
பொழக்கடைக்கு நீர்வாக்கப்
பெத்தாரை எழந்த மக்கள்

சம்மதமா சம்மதமா
சாமிக்கே சம்மதமா

வடக்கே இருக்கும்
வள்ளியம்மை சம்மதமா

தெற்கே இருக்கும்
தெய்வானை சம்மதமா
ஒசக்கே இருக்கும்
ஒடையாளி சம்மதமா

பூங்காரம் சொன்னாக்க
பொய்கை ஒரு சுத்துவத்தும்
பொசல்காத்து அடியாது
பொய்யைக் குள்ளிருக்கும்
பெரியமீன் துள்ளாது
புகழ்மதுரை மீனா
பூமுடிக்கு மேலிருக்கும்
புறா எறங்கி மேயாது
போட்டஎரையும் திங்காது

வகுத்தெரிச்ச சொன்னாக்க
வையை ஒரு சுத்துவத்தும்
மழைக்காத்து அடியாது
வையைக் குள்ளிருக்கும்
வாளைமீன் துள்ளாது
வடமதுரை மீனா
வயிரமுடி மேலிருக்கும்
மயிலெறங்கி மேயாது
வச்சஎரையும் திங்காது

தழைஞ்ச மரத்தடியில்
தனிமைகளைச் சொன்னா
தழைஞ்ச மரமும்
தழைஉதுந்து போய்விடும்

பூத்த மரத்தடியில்
பூங்காரம் சொன்னா
பூத்த மரமும்
பூவுதுந்து போய்விடும்

OOO

## சகோதரனுக்கு

தந்தையின் மறைவுக்குப் பின், குடும்பப் பொறுப்பேற்றுத் தங்கையர்க்கு மணமுடித்து, சீர்வரிசைகள் செய்த அண்ணன் இறந்தபோது,சுவீகாரம் செய்து வந்த மகன் இறுதிக் கடன்களைச் செய்தமையையும், தன்னிடத்துக் கொண்ட அன்பையும் வெளிப் படுத்தித் தங்கை பாடியது.

கட்டிப்பொறப்பு எழந்தேன்
கண்ணானசொல் எழந்தேன்
வாச்சபொறப்பு எழந்தேன்
வயிரம் வச்ச சொல் எழந்தேன்

பாலைவிட நல்லருசி இந்தப்
பச்சமுள்ள நல்பொறப்பு
தேனைவிட நல்லருசி இந்தத்
தித்திச்ச நல்பொறப்பு

பிஞ்சுவயசில் நம்ம
பெத்தார் மடிஞ்சிட்டு
பிம்பு பொறந்த
பொன்னும் பொறப்பெல்லாம்
போத்திவச்சுப் பாத்திருந்தே
பெத்தாரும் இல்லையின்னு
புத்தி நெனையாமே
பிஞ்சான பொண்களுக்குப்
பெருவாரிசீர் குடுத்துப்
பெரிய நதிகளிலே
பூவசைச்சுப் பாத்திருந்தே
பூவசைச்ச ஓவியம்போல்
பொன்னும் பொறப்பெல்லாம்
போதமக்க கண்டிருக்கோம்

மட்டவயதில் நம்ம
வளத்தார் மடிஞ்சிட்டு
மட்டமுள்ள பொண்களையும்
வருந்திவச்சுப் பாத்திருந்தே
வளத்தாரும் இல்லையின்னு
மனசு நெனையாமே
மட்டமுள்ள தங்கையர்க்கு
மகுரவெள்ளம் சீர்குடுத்து
மகுந்த நகை சீர்குடுத்து
மகுந்த நதிகளிலே
மலரசைச்சுப் பாத்திருந்தே
மலரசைச்ச ஓவியம்போல்
வருசப் பொறப்பெல்லாம்
மகுரமக்க கண்டிருக்கோம்

பெத்தார்க்கும் அதிகமாநீ
பொன்னும் பொறப்பு
போதவில்ல தந்திருந்தே
போகவரப் பாத்திருந்தே
பெருமைமொறை செய்திருந்தே

வளத்தார்க்கு அதிகமா நீ
வருசப் பொறப்பு
மகுரவில்ல தந்திருந்தே
வரப்போகப் பாத்திருந்தே
மகிழ்ச்சிமொறை செய்திருந்தே

வளந்தை வரவேணுமின்னா
மணிக் காரவிட்டு
வளவுக் கழச்சிருப்பே
வளந்தையிடம் சொல்ல
வார்த்தைமெத்த வச்சிருப்பே

பொறந்தா வரவேணுமின்னா
ஸ்பெஷல் காரைவிட்டுப்
பொறவி அழச்சிருப்பே
பொறவியிடம் சொல்லப்
பேச்சுமெத்த வச்சிருப்பே

இந்தத் தைரியம்
இருந்திட்டா ஆகாதா
கொஞ்சத் தைரியம்

*டாக்டர் அன்பு மீனாள்*

கூடஇருந்தா ஆகாதா
பொன்னும் பொறப்புக்குப்
பெத்தா பொறந்தையிலே
போர்மாமன் எல்லையிலே
போதப் பொறந்தாளைப்
பூவசைச்சுக் கூட்டிவந்தா
பூச்சேத்த நாமொதலாப்
புள்ளை மொதலாகலையே
பிம்பு மொருக்கா
போதப் பொறந்தாளைப்
போரழகி மாதைப்
புள்ளைக் கொலமுன்னு
பூச்சேத்து வந்தாக
பிஞ்சான மாதும்
பெருஞ்சேனை போலப்
பெத்து மொதலாகலையே

வருசப் பொறப்புக்கு
மாதா பொறந்தையிலே
மாமருடை எல்லையிலே
மகுரப் பொறந்தாளை
மலரசைச்சுக் கூட்டி வந்தா
மலர்சேத்த நாமொதலா
மஞ்சன் மொதலாகலியே
மறுத்து மொருக்கா
மகுரப் பொறந்தாளை
வாவரசி மாதை
மஞ்சன் கொலமுன்னு
மாலையிட்டு வந்தாக
மட்டமுள்ள மாதும்
மாசேனை போல
வளத்து மொதலாகலையே

பெத்தா கொலமும்
புள்ளைக் கொலந்தானே
பூமாமி கொலமும்
புள்ளைக் கொலந்தானே
பொறந்தையரும் கண்ட

புள்ளை அருமையின்னா
வளத்தா கொலமும்
மஞ்சன் கொலந்தானே
மாமி கொலமும்
மஞ்சன் கொலந்தானே
வளப்பெல்லாம் கண்ட
மஞ்சன் அருமையின்னா

மத்தொருதர் வாசல்
வகுத்திக் கெடந்தாப்போல்
மஞ்சன் அழைச்சுவந்தா
பிம்பொருதர் வாசல்
பொனலில் கெடந்தாப்போல்
புள்ளை அழைச்சுவந்தா

புடிச்சுவந்த மஞ்சனும்
நம்மபிதுர்வழி போலப்
பெத்துமொதலான முன்னான்
போர்விசயன் மஞ்சன் என்று
புடிச்சுமுத்தம் கொண்டதுதான்
பின்பிருந்து பாக்கலியே
வாங்கிவந்த மஞ்சனும்
மாசேனை போல
வளத்துமொதலான முன்னான்
வாள்விசயன் மஞ்சன் என்று
வாரிமுத்தம் கொண்டதுதான்
மறுத்திருந்து பாக்கலியே

போர்விசயன் பொண்ணு
பூலோகம் பேரோங்கப்
பொன்னரிசி குத்தியிட்டா
போகவழி காட்டியிட்டா
பின்னப்பாய் சுத்தியிட்டா
பூவடியைச் சுத்தியிட்டா

வாள்விசயன் பொண்ணு
வையகம் பேரோங்க
வாய்க்கரிசி குத்தியிட்டா
மாளவழி காட்டியிட்டா

வருணப்பாய் சுத்தியிட்டா
மலரடியைச் சுத்தியிட்டா

வாங்கிவந்த மஞ்சனும்
நீங்க மாளும் சமயம்
வையகம் பேரோங்க
மாணிக்கக் கொள்ளி
மயிர்நீக்கி வச்சுவந்தா
வையகத்துப் பாத்தவுக
மகிழ்ச்சியா நின்னாக

புடிச்சுவந்த மஞ்சனும்
நீங்கபோகும் சமயம்
பூலோகம் பேரோங்கப்
பூவளத்தா ஓவியமா
பூலோகத்தி உள்ளவுக
பெருமையா நின்னாக

OOO

கடல் கடந்து பொருளீட்டி வந்த அண்ணன் தாயகம் திரும்பியதும் அவர் மனைவி இறந்துபட, இரண்டாம் தாரம் மணம் செய்து மக்களைப் பெற்று, அவர்கள் வளர்வதைக் காணாமல் இறந்ததற்கு வருந்தி, தங்கை பாடியது.

நாளுஞ் சரியாச்சா
நடப்பதுக்கு நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா
பொன்னும் பொறப்பு
போவதுக்கு நாளாச்சா
இதுவும் சரியாச்சா
இனிய பொறப்பே
இறப்பதுக்கு நாளாச்சா

எம்பொன்னும் பொறப்புக்கு
ஆரைச் சரியிடலாம்
ஆராரை ஒப்பிடலாம்
பத்துக் கடல்தாண்டி
பாக்கடலை வில்முறிச்சு
பார்வதியை மாலையிட்ட
பரமசிவன் ஒப்பிடலாம்

எட்டுக் கடல்தாண்டி
எதித்த கடல் வில்முறிச்சு
ஏந்திழையை மாலையிட்ட
ஈஸ்வரரை ஒப்பிடலாம்

ஆறு கடல்தாண்டி
அலைகடலை வில்முறிச்சு
ஆரணங்கை மாலையிட்ட
அரிராமர் ஒப்பிடலாம்.

அஞ்சு கடல்தாண்டி
அடுத்தகடல் வில்முறிச்சு
அல்லியரை மாலையிட்ட
அருச்சுனரை ஒப்பிடலாம்

எங்க பொறந்தையுட தேவி
பூமி விழுகையிலே
போகநாக் கேட்டமுன்னா
போகநாக் கேட்டாலும்
பூமிக்கு எசஞ்ச
புள்ளை வச்சுப் போகலியே
புள்ளைவச்சுப் போகாட்டா
பொறந்தையுட பேருசொல்ல
பொறவீடு போகும்
பொண்ணுவச்சுப் போகலியே
பொறந்தையுட தேவி
போதப் பெறவுமில்லே
பெருமையைக் காட்டவில்லே
பொறந்தையுட தேவி
பூவசைச்சு நாளாச்சு
புள்ளைமொதல் ஆனதெல்லாம்
பூவா உதிரவிட்டா
பொய்யை கலங்கவிட்டா

எங்கவளந்தையுட தேவி
மண்ணி விழுகையிலே

மாளநாக் கேட்டமுன்னா
மாளநாக் கேட்டாலும்
மண்ணுக்கு எசஞ்ச
மஞ்சன்வச்சுப் போகலியே
மஞ்சன்வச்சுப் போகாட்டா
வளந்தையுட பேருசொல்ல
மறுவீடு போகும்
மாதுவச்சுப் போகலியே
வளந்தையுட தேவி
மகுரப் பெறவுமில்லே
மகத்துவத்தைக் காட்டவில்லே
வளந்தையுட தேவி
மலரசைச்சு நாளாச்சு
மஞ்சன்மொதல் ஆனதெல்லாம்
மலரா உதிரவிட்டா
வையை கலங்கவிட்டா

பொறநாடோ போனவுக எங்க
பொறந்தையுமே தானும்
போரும் நடந்ததினால் எங்க
பூமிவந்து சேரலியே
போரும் முடிஞ்சு
பெருமா வரட்டுமுன்னு
பூமியிலே காத்திருந்தா
போரும் முடிஞ்சொடனே
பொறந்தை வந்து சேந்ததுவும்
பொறந்தையுட தேவி
போகநாக் கேட்டமுன்னா

மறுதேசம் போனவுகளெங்க
வளந்தையுமே தானும்
வாரும் நடந்ததினால் எங்க
வளவு வந்து சேரலியே
வாரும் முடிஞ்சு
மன்னர் வரட்டுமுன்னு
வளவிலே காத்திருந்தா
வாரும் முடிஞ்சொடனே
வளந்தை வந்து சேந்ததும்
வளந்தையுட தேவி
மாளநாக் கேட்டமுன்னா

மாமாங்கம் நாள் வாழ்ந்து
மக்களெல்லாம் இல்லையின்னு
வளந்தையுமே தானும்
மனக்கவலை கொண்டமுன்னா
பெருவாரிநாள் வாழ்ந்து
புள்ளையொண்ணும்
இல்லையின்னு
பொறந்தையுமே தானும்
பெருங்கவலை கொண்டமுன்னா

மறுத்து மொருக்கா எங்க
மாசமத்தித் தாயார்
வளந்தையர்க்குத் தானும்
மாலையிட்டுப் பாத்தமுன்னா

பிம்பு மொருக்கா எங்க
பெருஞ்சமத்தித் தாயார்
பொறந்தையர்க்குத் தானும்
பூச்சேத்துப் பாத்தமுன்னா

ஆனை ரெண்டு ஏறி
மாலை ரெண்டு சூடி
மாது ரெண்டுகைப்புடிச்சு
மக்கமொகங் கண்டமுன்னா

குதிரை ரெண்டு ஏறி
கோதை ரெண்டுகைப்புடிச்சு
கொழந்தைமொகங் கண்டமுன்னா

போரானை ரெண்டு ஏறி
பூவு ரெண்டுகுடி
பொண்ணு ரெண்டுகைபுடிச்சு
புள்ளைமொகங் கண்டமுன்னா

மதசானை ரெண்டுஏறி
மாலை ரெண்டு சூடி
மாது ரெண்டு கைப்புடிச்சு

மக்கள் மொகங் கண்டமுன்னா

மாதவசா வந்த
மக்கள்மொகங் காணாமே
மாசுருக்காத் தானும்
வனத்தை நெனச்சமுன்னா

பெருந்தவசா வந்த
புள்ளைமொகங் காணாமே
பெருஞ்சுருக்காத் தானும்
பொனத்தை நெனச்சமுன்னா

OOO

இளம் வயதில் தந்தையை இழந்த நிலையில், தங்கையர்க்குச் சிறப்பாக மணமுடித்து, பிறந்த வீட்டார் செய்ய வேண்டிய சிறப்புக்களைச் செய்து வந்த சகோதரன் இறந்தபோது, இனி பிறந்த வீட்டு முறைகளைச் செய்ய யாருமே இல்லையே என்றும், இந்த அன்பான உடன்பிறப்புடன் மீண்டும் பிறக்கும் பேறு கிடைக்காதே என்றும் தங்கை வருந்திப் பாடியது.

நாளுஞ் சரியாச்சா
நடப்பதுக்கு நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா எம்
பொன்னும் பொறப்பு
போறதுக்கு நாளாச்சா
தேதி சரியாச்சா எஞ்
செல்லப் பொறப்பு
செல்வதுக்கு நாளாச்சா

இனிய பொறப்பே என்
இன்பமுள்ள சொல்லே
கட்டிப் பொறப்பே என்
கண்ணான சொல்லே
அருமைப் பொறப்பே என்
அன்பான சொல்லே
உண்மைப் பொறப்பே என்
உருக்கமுள்ள சொல்லே

எறந்து பொறந்தாலும்
ஏழுஜென்மம் ஆனாலும்
இந்தப் பொறப்போடே
இன்னிப் பொறப்பதில்லே
இந்தவாச்ச பொறப்போட
மறுத்துப் பொறப்பதில்லே
இந்தக் கட்டிப் பொறப்போடக்
கலந்து பொறப்பதில்லே
இந்தச் செல்லப் பொறப்போடச்
சேந்து பொறப்பதில்லே

பாலிலும் தேனிலும்
பச்சமுள்ள நல்பொறப்பே
பழத்தின்ரசம் போலப்
பச்சமுள்ள நல்பொறப்பே

தேனிலும் பாலிலும்
தித்திச்ச நல்பொறப்பே
தேனின்ரசம் போலத்
தித்திச்ச நல்பொறப்பே

அஞ்சு வயசிலே
அறிவறியா நாளயிலே
பிஞ்சு வயசிலே
பிரிவறியா நாளயிலே
பெத்தாரை நாங்கறியோம்
பேர் சொல்லக் கேட்டதுதான்
வளத்தாரை நாங்கறியோம்
வளமை சொல்லக் கேட்டதுதான்
இன்னமரத்து எலையிங்கக்
கேட்டதுதான்
பின்னமரத்துப்பூவுங்கக்
கேட்டதுதான்

பிஞ்சுவயசிலே நம்ம
பெத்தார் மடிஞ்சிட்டுப்
பிம்பு பொறந்த
பொண்ணும் பொறப்பெல்லாம்
போத்திவச்சுப் பாத்திருந்தே

பெரிய நதிகளிலே
போதக் குடுத்துப்
பூவசைச்சே ஓவியந்தான்

மட்டவயசிலே நம்ம
வளத்தார் மடிஞ்சிட்டு
மறுத்துப் பொறந்த
மட்டமுள்ள பொண்களெல்லாம்
வருந்திவச்சுப் பாத்திருந்தே
மகுந்த நதிகளிலே
மகுரக் குடுத்து
மலரசைச்சே ஓவியந்தான்

பூவசைச்ச ஓவியம்போல்
பொன்னும் பொறப்பெல்லாம்
போதமக்கள் கண்டிருக்கோம்
மலரசைச்ச ஓவியம்போல்
வருசப் பொறப்பெல்லாம்
மகுரமக்கள் கண்டிருக்கோம்
வளந்தையுட வாசல்லே
மகிழ்ச்சியின்னு சொல்லலியே
வேவே எடுக்கலியே நீ
வீரியத்தைக் காட்டலியே
உலுப்பை எடுக்கலியே நீ
ஓவியத்தைக் காட்டலியே

பொங்கல் மொறை செய்யவுன்னு
பெருஞ்சமத்தர் ஐயா
புள்ளைவச்சுப் போனாக
பொன்னும் பொறப்பு
நம்ம ஐயா வாசல்
பொலிஞ்சாண்டார் எல்லை
பெருவாரி நாளைக்குப்
பொழிஞ்சு மிருக்கலியே
பொங்கமொறை செய்யலியே

மக்கள்மொறை செய்யவுன்னு
மாசமத்தர் ஐயா
மஞ்சன்வச்சுப் போனாக
வருசப் பொறப்பு
நம்ம ஐயா வாசல்
மதிச்சாண்டார் எல்லை
மட்டத்த நாளைக்கு
மகிழ்ந்து மிருக்கலியே
வளந்தைமொறை செய்யலியே

கூடிப் பொறக்கக்
கோடிநாச் செல்லுமே
கோடிநாச் சென்னாலும்
இந்தக் கொணமான நல்பொறப்பு
கூடக் கெடக்காதே

அடுத்துப் பொறக்க
அநேகநாச் செல்லுமே
அநேக நாச் சென்னாலும்
இந்த அன்பான நல்பொறப்பு
அடையக் கெடைக்காதே

OOO

**தந்தையாரின் மறு தாரத்துக்குப் பிறந்த அண்ணன், தன்னோடு உறவில்லாமல், தனக்குப் பிறந்த வீட்டுச்சீர் ஏதும் செய்யாமல் இறந்த போது, முதல்தாரத்திற்குப் பிறந்த பெண், சகோதரன் இறந் ததைக் கேட்க வந்தபோது பாடியது.**

மறுதாரஞ் செய்தவுக
இல்லையா வையகத்தே
வாதாடி நின்னவுக
இல்லையா வையகத்தே
மாளும் அறுதி
வளந்தையரும் தங்கையரும்
மகிழந்திருந்து பேசாதா
வையகத்திக் கேட்டியளா
வாங்கின வாசல்
மண்ணிப்பொறந்த அண்ணா
மகுந்தனுவ செய்யயிலே

என்னைமாதை அழைக்கலியே
மகிழ்ச்சிச்சோறு உங்கலியே
வளந்தை மடிஞ்சான்னு
வார்த்தை சொல்லக் கேட்டொடனே
வாழ்ந்திருந்தார் எல்லையிலே
மாயவனார் கோட்டையிலே
வளவிவந்து சேந்திருந்தேன்
மாண்ட மொகத்தை
மதிமொகத்தைப் பார்த்தழுதேன்
வளந்தை மடிஞ்சான்னு
மையெழுத்தை விட்டாக்க
மதிச்சமுடி எல்லை
மாண்டமொறை கேட்டாலும்
வருசமொறை கேளேனே
வடிச்சசோறு உங்கேனே
பின்தாரம் செய்தவுக
இல்லையா பூலோகத்தே
போராடி நின்னவுக
இல்லையா பூலோகத்தே
போகும் அறுதி
பொறந்தையரும் தங்கையரும்
பேசி மகிழாதா
பூலோகத்திக் கேட்டியளா
புடிச்சுவந்தார் எல்லையிலே
பூமிப் பொறந்த அண்ணா
பெரியஅனுவ செய்யயிலே
என்னைப்பொண்ணை
அழைக்கலியே
பெருமைச்சோறு உங்கலியே
பொறவி மடிஞ்சான்னு
பேச்சொரைக்கக் கேட்டொடனே
பொழிஞ்சிருந்தார் எல்லையிலே
பெருமாளோட வாசல்
பூமிவந்தும் சேந்திருந்தேன்
போன மொகத்தைப்
பொன்மொகத்தைப் பாத்தழுதேன்
பொறவி மடிஞ்சான்னு
பேனாவை விட்டாக்க
பொழிஞ்சிருந்தார் எல்லை
போனமொறை கேட்டாலும்
பொங்கல்மொறை கேளேனே
புடிச்சமுது உங்கேனே

அண்ணன்எங்கே தம்பி எங்கே
ஆண்டிருந்தார் மக்களெங்கே
ஆனைரதங்கள் எங்கே
அதிட்டமுள்ளார் மக்களெங்கே

தம்பி எங்கே அண்ணன் எங்கே
சத்தியவார் மக்களெங்கே
தங்கரதங்கள் எங்கே
தருமமிட்டார் மக்கள் எங்கே

பொறவி எங்கே அண்ணன் எங்கே
பூசையிட்டார் மக்கள் எங்கே
பொன்னுரதங்கள் எங்கே
புண்ணியவார் மக்களெங்கே

அண்ணன் குதிரையிலே
அதிமன்னர் தேர்மேலே
தம்பி குதிரையிலே
தமையனார் தேர்மேலே
நீங்க மூவர் குதிரையிலே
மிறி நடந்தவுக

ooo

**தன் மாமியார் வீட்டில் இறந்து போன தன் சகோதரனுக்கு, சகோதரனின் சின்னஞ்சிறிய மக்களைத் தவிக்க விட்டு, மனைவியைத் தேம்பவிட்டு தன் பிள்ளைகட்குத் தாய் மாமன் என்று பெருமையாக முறை செய்யாமல் இறந்ததேன் எனத் தங்கை பாடியது.**

அநியாயச் சாவுக்கு
அடியெடுத்து வச்சமுன்னான்
நீதியில்லாச் சாவுக்கு

நீட்டிப் படுத்தமுன்னான்
நாயமில்லாச் சாவுக்கு
நான் வாரமுன்னான்
வகுத்தெரிச்சல் சாவுக்கு
வணங்கிப் படுத்தமுன்னான்

சாகும் மொறையுமில்லே
சமுத்திரத்துத் துக்கமில்லே
சானகியா மைக்கூந்தல்
தலைவிரிக்க நாயமில்லே
தவிச்சமுக நீதியில்லே

போகும் மொறையுமில்லே
பொய்யைத் துக்கமில்ல
பொற்கொடியா மைக்கூந்தல்
பிரிச்சமுக நாயமில்லே
பொலம்பவுன்னா நீதியில்லே

மாளும் மொறையுமில்லே
வையைத் துக்கமில்லே
மயலனையா மைக்கூந்தல்
விரிச்சமுக நாயமில்லே
மயங்கவுன்னா நீதியில்லே

வளத்தார்க்கும் பொறகுநீ
வாழ்ந்ததெல்லாம் எத்தனைநா
பெத்தார்க்கும் பொறகுநீ
பொழிஞ்சதெல்லாம் எத்தனைநா

நம்ம ஆத்தா
வளத்தா பூமிவிட்டு
வாவரசி கோட்டைவிட்டு
மாமியுட எல்லை
மாளநாள் கேட்டதினால்
மாசேனை பாக்கலியே
வைபோகம் அறியலியே
மாளுஞ் சயம்
மறவருடை சீமை
மண்ணு கெடைக்கலியே

நம்ம ஆத்தா
பெத்தா பூமிவிட்டுப்
போரழகி கோட்டைவிட்டுப்
பூமாமி எல்லை
போகநாக் கேட்டதினால்
பூலோகம் அறியலியே
போகுஞ் சமயம்
பொலவருடை சீமை
பூமி கெடைக்கலியே

மாளுறதே மெய்யானா
மண்ணாளுந் தம்பி
மஞ்சன்வச்சுப் போகலியே
மறுவீடு போய்வாழும்
மகளாக் கண்டமுன்னே
மகுந்த பணமுமில்லே
மன்னர் வலுவுமில்லே
மஞ்சன் துணையுமில்லே
மாதுமொகம் பாத்தா
மகுருதே கண்ணீரு

போகுறதே மெய்யானா
பொன்னாளுந் தம்பி
பிள்ளை வச்சுப் போகலியே
பொறவீடு போய் வாழும்
பொண்ணாக் கண்டமுன்னே
பெரிய பணமுமில்லே
பெருமாள் வலுவுமில்லே
புள்ளை துணையுமில்லே
பொண்ணு மொகம் பாத்தா
பெருகுதே கண்ணீரு
தலைக்குத் தலைவச்சுத்
தங்கமுடி சாயலியே
முடிக்கு முடிவச்சு
முத்துமுடி சாயலியே

பிஞ்சுமக கையி
பொன்னரிசி வாங்கிப்

பொறப்புடைய கையிப்
பூ வாங்கிப்
பிஞ்சு வயசில்
பூலோகம் ஐயோங்கப்
பொனம்பாக்கப் போனமுன்னே
மதலைமக கையி
மணியரிசி வாங்கி
வளப்புடைய கையி
மலர் வாங்கி
மட்ட வயசில்
வையகம் ஐயோங்க
வனம்பாக்கப் போனமுன்னே
பிஞ்சும் பிலாக்காய்
பின்னிவச்சுக் கண்ணசந்த
பொழைதனிமை சொல்லுவமா
அவலை சவலைகளை
அணைச்சுவச்சுக் கண்ணசந்த
அநியாயம் சொல்லுவமா
சின்னஞ் சிறிசுகளைச்
சேத்துவச்சுக் கண்ணசந்த
சீரழிவு சொல்லுவமா

நம்ம ஆத்தா
மகுரமக்க கண்டு
மாபாடு பட்டதை
மனசில் நெனச்சாக்க
மாளக் கருத்துமில்லே
ஐயா மாதவசை எண்ணியிட்டா
மாளவே நாயமில்லே
வளத்தாரைப் போலவுன்னா
மாளநாள் ரொம்பருக்கே

நம்ம ஆத்தா
போதமக்க கண்டு
பெரும்பாடு பட்டதைப்
புத்தி நெனச்சாக்கப்
போகக் கருத்துமில்லே
ஐயா பெருந்தவசை எண்ணியிட்டா
போகவே நாயமில்லே
பெத்தாரைப் போலவுன்னா
போகநாள் ரொம்பருக்கே

நான் மகுரமக்கக் கண்டதுக்கு
மாபாடு பட்டபவுக
வரிசையிட்டுப் பாத்த ஐயா
நான் மலர்சேக்கும் நேரம்
வளத்தார் இல்லையின்னு
மனசில் நெனச்சிருந்தேன்
நான் மலர்சேர்க்கும்நேரம்
மனசுதெடம் உள்ளதம்பி
வளத்தார்க்கும் அதிகமா
வளவில் வந்து சேரலியே
மாமன்னு சொல்லி
வளவில் திரியலியே
மதிப்பாத் தெரியலியே
மாசுருக்காத் தானும்
வனத்தை நெனச்சமுன்னே

நான் போதமக்கள் கண்டதுக்குப்
பெரும்பாடு பட்டவுக
போத்தியிட்டுப் பாத்த ஐயா
நான் பூச்சேக்கும் நேரம்
பெத்தார் இல்லையின்னு
புத்தி நெனச்சிருந்தேன்
நான் பூச்சேக்கும்நேரம்
புத்திதெடம் உள்ள தம்பி
பெத்தார்க்கும் அதிகமா
எங்கபூமிவந்து சேரலியே
பூமாமன்னு சொல்லிப்
பூமித் திரியலியே
பெருமையாத் தெரியலியே
பெருஞ் சுருக்காத் தானும்
பொனத்தை நெனச்சமுன்னே

வேவை எடுக்கலியே
வீரியத்தைக் காட்டலியே

உலுப்பை எடுக்கலியே
ஓவியத்தைக் காட்டலியே
பெருஞ்சுருக்காத் தானும்
பொனத்தை நெனச்சமுன்னே

பொறந்தையின்னு சொன்னா
புத்தி பிரியமும்பே
பெரியமொறை செய்யப்
போதக் குடுக்கப்
பெரியபணம் இல்லையிம்பே
அந்தப் பேச்சை மறந்து
பொனத்திலெடம் கேட்டமுன்னே
வளந்தையின்னு சொன்னா
மனசு பிரியமும்பே
மகுந்தமொறை செய்ய
மகுரக் குடுக்க
மகுந்தபணம் இல்லையிம்பே
அந்த வார்த்தைமறந்து
வனத்திலெடம் கேட்டமுன்னே

ஈனப்பதங் கண்டதுதான்
இருந்துபதங் காணலியே
பெத்தபதங் கண்டதுதான்
பிம்புபதங் காணலியே
வளத்தபதங் கண்டதுதான்
மறுத்துப்பதங் காணலியே

கோரிச்சு வச்சதுவைக்
குடியூதிப் பாக்கலியே
நேமிச்சு வச்சதுவை
நெலநிறுத்திப் பாக்கலியே

மட்டமனை கோரி
மன்னருந் தேவியும்
மகிழ்ந்து மிருக்கலியே
வடிச்சுண்ணு பாக்கலியே
மாளுஞ் சமயம்
மனசிலேயும் தாங்கலுன்னா
வளத்தாரும் பாராதை
பொங்குதே கண்ணீரு

மறுத்திருந்தும் பாக்கலியே

பிஞ்சுமனை கோரி
பெருமாளுந் தேவியும்
பொழிஞ்சு மிருக்கலியே
பொங்கியுண்ணு பாக்கலியே
போகுஞ் சமயம்
புத்தியிலே தாங்கலுன்னா
பெத்தாரும் பாராதைப்
பிம்பிருந்தும் பாக்கலியே

பெத்தா சிறையோட்ட
பொண்ணுசிறை கூடவச்சே
வளத்தா சிறையோட்ட
மாதுசிறை கூடவச்சே
ஆத்தா சிறையோட்ட
அல்லிசிறை கூடவச்சே

எமனெழுத்து இல்லாம
எடைத்தட்டாப் போனமுன்னே
நமனெழுத்து இல்லாம
நடுத்தட்டாப் போனமுன்னே

தண்டியலை அங்கவச்சே
தண்டக்கால் இங்கவச்சே
பல்லாக்கை அங்கவச்சே
பந்தக்கால் இங்கவச்சே

வாங்கவந்தான் தன்னிடத்தில்
மக்களெல்லாஞ் சின்னமுன்னு
வார்த்தையொரைக்க மாட்டலியா
மட்டமுள்ள மாது
மையழிய மாட்டான்னு
வார்த்தைசொல்ல மாட்டலியா

புடிக்கவந்தான் தன்னிடத்தில்
புள்ளையெல்லாஞ் சின்னமுன்னு
பேச்சொரைக்க மாட்டலியா
பிஞ்சான மாது
பொட்டழிய மாட்டான்னு

பேச்சொரைக்க மாட்டலியா

வெளியூரில் இறந்தவர்க்கு, சொந்த வீட்டில் இறுதிச் சடங்குகள் செய்யும் வழக்கம் புலப்படுகிறது.

○○○

## சகோதரிக்கு

அன்புக் கணவனையும், அருமை மக்களையும் மறந்து, தம் குலத்துப் பெண்களைப் போலவே வா(ழ்)வரசியாக மாண்டு போன சகோதரிக்கு, உடன்பிறந்தார் கையில் பட்டாடை பெற்று வா(ழ்)வரசியாக வரிசை பெற்றுப் போனாயே என்று தங்கை பாடியது.

என்பொன்னும் பொறப்பே
பெத்தார் வகுத்தில்
பொறந்தநாச் செல்லாச்சா
புகழ்வேந்தர் தன்னிடத்தில்
போர் பெத்துவந்த
பொழுதுங் கணக்காச்சா

என்செல்லப் பொறப்பே
தாயார் வகுத்தில்
சனிச்சநாச் செல்லாச்சா
தவமுனிவர் தன்னிடத்தில்
தவம் வாங்கிவந்த
தவணை கணக்காச்சா

என்வருசப் பொறப்பே
மாதா வகுத்தில்
வளந்தநாச் செல்லாச்சா
மாமுனிவர் தன்னிடத்தில்
வரம் வாங்கிவந்த
வருசங் கணக்காச்சா

வைபோக வாழ்க்கைஒன்
மனசுக்கு எசயலென்னே
வாழ்ந்திருந்தார் எல்ல
வளவோ பிரியமில்லே

பூலோக வாழ்க்கைஒன்
புத்திக்கு எசயலென்னே
பொலிஞ்சிருந்தார் எல்ல
பூமி பிரியமில்லே

சீமை வாழ்க்கைஒன்
சிந்தைக்கு எசயலென்னே
செல்வமுள்ளார் எல்ல
சிறிதும் பிரியமில்லே

என்கட்டிப் பொறப்பு
கைசோந்து மெய்சோந்து
கனகவளை சோந்து
காதர்களும் தூதர்களும்
கட்டுபிடி எங்கயிலே
காணப்பய மாகலயா
கைலாச சிந்தைவந்து
களச்சி மிருக்கயிலே
கைக்கீழா வச்சிருந்த
கன்னி மறந்தமுன்னா
கருணர் அசத்தமுன்னா
கைலாசம் சேந்தமுன்னா

என்செல்லப் பொறப்பு
மெய்சோந்து கைசோந்து
மேகவளை சோந்து
தூதர்களும் காதர்களும்
தூக்குப்பிடி எங்கயிலே
சொல்லப் பயமாகலயா
சொர்க்கலோகச் சிந்தைவந்து
சோந்து மிருக்கயிலே
தோள்கீழ வச்சிருந்த
தோகை மறந்தமுன்னா
சோழர் அசத்தமுன்னா
சொர்க்கலோகம் சேந்தமுன்னா

தாலி தகதகங்கச்
சரியிட்ட சீலைமின்னச்
சாகுறதே மோச்சமுன்னா
சீலை தகதகங்கச்
சிறுவயிரம் சோதிமின்ன
சென்னாலே மோச்சமுன்னா
மாலை தகதகங்க
மங்கிலிய மின்னலிட
மாளுறதே மோச்சமுன்னா
தட்டக் கிலாரிடுதே
தையல்நல்லா பள்ளியறை
தட்டியிட்டுக் கிட்டநின்னா
தானாத் தொறக்குது
தையல்நல்லா பள்ளியறை

கொட்டக் கிலாரிடுதே
கொம்பனையா பள்ளியறை
கொட்டியிட்டுக் கிட்டநின்னா
கூவித் தொறக்குது
கொம்பனையா பள்ளியறை

சீவுபலகை விட்டே
சிங்காரமெத்தை விட்டே
சிங்கார மெத்தையிலே
சேந்திருந்தமன்னர் விட்டே

கதவுபலகை விட்டே
கண்ணாடி மெத்தை விட்டே
கண்ணாடி மெத்தையிலே
கலந்திருந்தமன்னர் விட்டே

ஒலுகுபலகை விட்டே
ஒய்யார மெத்தை விட்டே
ஒய்யார மெத்தையிலே
ஒக்கஇருந்த மன்னர் விட்டே

ஆருக்கு அமஞ்சுதோ
ஆனிழையா பள்ளியறை

எவருக்கு அமஞ்சுதோ இந்த
ஏந்திழையா பள்ளியறை

இஞ்சிக்கிணறு விட்டே
எலுமிச்சந்தோப்பு விட்டே
இருந்தாள மாட்டாமே
இன்னொருதி ஆளவிட்டே

மஞ்சிக்கவுறு விட்டே
மாதுளந்தோப்பு விட்டே
மையொசந்த மன்னரை
மத்தொருதிஆள விட்டே

நல்லகவுறு விட்டே
நார்த்தம்தோப்பு விட்டே
நாட்டமுள்ள மன்னருடன்
நானிருக்க மாட்டமுன்னே

மருதைமஞ்சள் போல
மாது வனம்போனமுன்னே
தேர்மஞ்சள் போலச்
சீதை வனம்போனமுன்னே
அரக்குமஞ்சள் போல
அல்லி வனம்போனமுன்னே

எங்கமாசேனை அத்தனையும்
மட்ட வயசில்
மன்னர் களைக்கச்சு
மக்கள் பறக்கவச்சு
வளத்தாரைச் சோம்பவச்சு
வாவரசி யானவுக

எங்கபெருஞ்சேனை அத்தனையும்
பிஞ்சு வயசில்
பெருமா களைக்கவச்சுப்
புள்ளை பறக்கவச்சுப்
பெத்தாரைச் சோம்பவச்சுப்
போரழகி ஆனவுக

பூவா மலந்த குடி

பொண்டுகளைத் தோத்தகுடி
அரும்பா மலந்தகுடி
அல்லிகளைத் தோத்தகுடி
மலரா மலந்தகுடி
மயிலிகளைத் தோத்தகுடி

வாவரசிப் பொண்களெல்லாம்
வனத்திலொரு கூட்டம்
வளத்தாரில்லா மக்களெல்லாம்
வளவில் ஒரு கூட்டம்
போரழகிப் பொண்களெல்லாம்
பொனத்திலொரு கட்டம்
பெத்தாரில்லாப் புள்ளையெல்லாம்
பூமி ஒரு கூட்டம்

செம்பகப்பூத் தோட்டந்தான்
நீங்கசித் தடியா கூட்டந்தான்
சித்தடியா மக்களெல்லாம்
தெகைக்கவச்சுப் போனவுக

மல்லியப்பூ தோட்டந்தான்
நீங்கவனத்திலொரு கூட்டந்தான்
வாவரசி மக்களெல்லாம்
மயங்கவச்சுப் போனவுக

அடுக்குமல்லித் தோட்டந்தான்
நீங்க ஆரணங்கு கூட்டந்தான்
ஆத்தா இல்லா மக்களெல்லாம்
அழுகவச்சுப் போனவுக

மஞ்சள் மணமணங்க
மங்கிலியம் தீப்பறக்க
ஆடை தகதகங்க
ஆபரணம் தீப்பறக்க
வரிசைப் பொறப்பு
வளப்புடைய கை
வங்கிவச்ச முந்தாங்கி
வரிசைபெத்துப் போனமுன்னே

OOO

கண்ணிழந்தும், பர்மாவில் தொழில் நொடித்ததால் பணமிழந்தும் வருந்தி இறந்து போன தங்கைக்கு, செல்வமாக வாழ்ந்து, பின்பணத்திற்குப் பரிதவித்ததையும், இனிதாகத் தொடங்கித் துன்பமாக வாழ்வு முடிந்ததையும் கூறி மூத்த சகோதரி வருந்திப் பாடியது.

கண்ணெழந்தா பொன்னெழந்தா
என்கட்டிப் பொறப்பு
கருத்தெழந்து வாடிநின்னா
பொன்னெழந்தா கண்ணெழந்தா
என்பொன்னும் பொறப்பு
பேதலிச்சு வாடிநின்னா

திண்ணைவிட்டுக் கீழிறங்கத்
தெசையும் தெரியாம
தெகைச்சுநின்னா தாளலியே
வளைவிட்டுக் கீழிறங்க
வழியும் தெரியாம
மயங்கி நின்னா தாளலியே

நான் பொறந்த செல்லி
கோடி சனத்தோட
கூடஇருந்து நாளாச்சு
அநேக சனத்தோட
அடுத்திருந்து நாளாச்சு

உடுத்தி உரிஞ்சது
ஒருகோடிப் பட்டிருக்கும்
உடுத்த இருந்தது
ஒருகோடிப் பட்டிருக்கும்

பூட்டி அவுத்தது
புதுவயிரம் மெத்தவில்ல
கழட்டி அவுத்தது
கனவயிரம் மெத்தவில்ல
அவமொழி மின்னும்
மோக மின்னும்

முன்னூத்திக் காத வழி
மூக்குத்தி சோதிமின்னும்
காதிலிட்ட தோடு
கனவயிரம் சோதிமின்னும்
கழுத்திலிட்ட மங்களசரம்
காதவழி சோதிமின்னும்

காருலே ரெண்டுவச்சுக்
கணக்கன்லே நாலுவச்சுப்
போகியிலே ரெண்டுவச்சு
பிரபலமா வாழ்ந்திருந்தா
வீதி கடந்து நம்ம
வருசப் பொறப்பே
வெலகி மாலைசூடாம
சாலை கடந்து நம்ம
தங்கப் பொறப்பே
தள்ளி மாலைசூடாம
அஞ்சடிக் குள்ளாக
நம்மவயிரமுடி ஐயா
ஆசைப் பொறப்பே
அள்ளிமாலை சூடிவச்சா
எட்டடிக் குள்ளாக
நம்மமகிழமுடி ஐயா
ஏந்திழையை மாலையிட்டா

மகுந்த பணமுன்னு
மாது ருதுவாகாமே
மாலையிட்டுப் பாத்தாக
பெரிய பணமுன்னு
பொண்ணு ருதுவாகாமே
பூவசைச்சுப் பாத்தாக

மானும் மரகதமும்
மலர்ச்செண்டும் பம்பரமும்
மல்லிமலர் ரோசாவும்
வயிரமும் ரத்தினமும்
மக்கள் இருவகையும்
மாத்திமக்கள் கண்டு
வாழ்ந்திருந்தே ஓவியமாய்

புலியும் புலிமானும்
பூச்செண்டும் பம்பரமும்
பிச்சிமலர் ரோசாவும்
புதுவயிர ரத்தினமும்
புள்ளை இருவகையும்
பின்னிமக்கள் கண்டு
பொழிஞ்சிருந்தே ஓவியமாய்

மகுரவெள்ளம் குடுத்து
மாலையிட்டுப் பாத்தாலும்
மகிழ்ச்சியோடு வாழ்ந்தாலும்
மாளும் சமயம்
மனதிக்கவலை கொண்டா

போதவெள்ளம் குடுத்துப்
பூவசைச்சுப் பாத்தாலும்
பிரபலமா வாழ்ந்தாலும்
போகும் சமயம்
புத்திக்கவலை கொண்டா

சீமையெல்லாம் சண்டை வந்து
ஜப்பானார் குண்டு வந்து
ஜப்பானார் நோட்டை பாவி அங்கே
சேத்து மடிச்சதினால்
குறிப்புநகலை வாவரசிமக்கள்
எடுத்துமே பாராமே
கூட்டாளி செய்ததுவே
என்னன்னு கேளாம
ஆசாமிக் காரனை
அதட்டி ஒரையாமே
வாங்கும் பணத்தை
வழிபண்ணிச் சேக்காமே

வாழ்ந்த பணமும்
மகுந்த பணம் அங்கிருக்க
வாவரசி கோட்டை
வளவில் வந்துசேராம

போந்த பணமும்
பெரியபணம் அங்கிருக்கப்
போரழகி கோட்டை
பூமி வந்துசேராம
பொன்னால் தேகம்
போரழகி மக்க
பூட்டுவிட்டு நின்னாக
காசாலே தேகம்
காரிழையா மக்க
கட்டுவிட்டு நின்னாக

இல்லையின்னு சொன்னார்க்கு
இனாமாக் குடுத்தபணம்
எறக்குஞ் சமயம்
இல்லைன்னு சொல்லி
ஏங்கிக் க்ளச்ச பணம்

பத்தலைன்னு சொன்னார்க்குப்
பாத்துக் குடுத்தபணம்
போகுஞ் சமயம்
பத்தலைன்னு சொல்லி
பரிதவிச்சு நின்னபணம்

மண்ணில் விழுகையிலே
நான்பொறந்த செல்லி
நீமாற விழுந்துவிட்டே
மணிநேரஞ் செல்லாம
வயிரரதம் கண்டமுன்னே
நம்ம மட்டமுள்ள மக்களுக்கும்
வார்த்தை மறந்தமுன்னே
மன்னருக்குச் சொல்ல
வார்த்தை மறந்துவிட்டே

பூமி விழுகையிலே
பொன்னும் பொறப்பே
நீபெசகா விழுந்துவிட்டே
பொழுது சொணங்காம
பொன்னுரதம் கண்டமுன்னே
நம்மபிஞ்சான மக்களுக்குப்
பேச்சை மறந்தமுன்னே
பிரியாமக் கிட்ட இருந்த
பெருமாளுக்கும் சொல்ல
பேச்சுமில்லே இன்றுவிட்டே

பொட்டோட மையோடப்
பொறந்த கெடியோடப்
போடுசரப் பட்டோடப்
பூந்தோப்பு மாலைவந்து
பொய்கையிலே நீராடிப்
பூமியெல்லாம் பூமிதக்கப்
பொட்டியிலே பொன்கழட்டிப்
புள்ளையெல்லாம் பாத்திருக்கப்
புண்ணியவார் கைகுடுக்கப்
பூவோட தீக்கலக்கப்
பெருந்தவங்கள் செய்திருந்தே

மையோட பொட்டோட
வளந்த கெடியோட
மதராசுப் பட்டோட
மாந்தோப்பு மாலைவந்து
வைகையிலே நீராடி
வளவெல்லாம் பூமிதக்க
மரவையிலே பொன்கழட்டி
மக்களெல்லாம் பாத்திருக்க
மகராசா கைகுடுக்க
மலரோட தீக்கலக்க
மாதவங்கள் செய்திருந்தே

மகுந்த மகளும்
மடிப்பொசந்த பட்டுடுத்தி
மகுந்தநகை சாத்தி
மணிவயிரம் மேல்சாத்தி
மணியரிசி குத்தியிட்டா
மாளவழி காட்டியிட்டா
மகுந்த மகனும்
வையகம் நல்லாங்க
மலர்வளத்தான் ஓவியமா

பெரிய மகளும்
புடிஒசந்த பட்டுடுத்திப்
பெரியநகை சாத்திப்
புதுவயிரம் மேல்சாத்திப்
பொன்னரிசி குத்தியிட்டா
போகவழி காட்டியிட்டா
பெரிய மகனும்
பூலோகம் பேரோங்கப்
பூவளத்தான் ஓவியமா

இரண்டாவது உலகப்போர் பற்றியும் அதனால் ஏற்பட்ட பொருளாதார வீழ்ச்சியும் குறிப்பிடப்பட்டுள்ளன.

OOO

தன் பிறந்த வீட்டில் தன் மகளை உறவில் மணமுடித்துக் கொடுத்து, அவள் பிள்ளைகள் பெறுமுன்னே, நோய்வாய்ப்பட்டு மாண்ட மூத்த சகோதரிக்கு வா(ழ்)வரசியாக மாளும் பேறு பெற்றாளே எனத் தங்கை பாடியது.

நாளில்ல போகுது
நான்பொறந்த செல்லிஒன்
நல்ல மொகங் காணாமே
பொழுதில்ல போகுது
எம்பொன்னும் பொறப்புஒன்
பொன்னுமொகங் காணாமே

மகுரப் பொறந்ததிலே
நான்பொறந்த செல்லிநீ
மாதுமொரு சாயலில்ல
போதப் பொறந்ததிலேநீ
பொண்ணுமொரு சாயலில்ல

போரழகி பொண்ணு
பொண்ணாசை தீத்தமக
போதமக்க கண்டு
பின்னிமஞ்சன் பெத்து
பொரபலமா வாழ்ந்தபொண்ணு

வாவரசி பொண்ணு
மாதாசை தீத்தமக
மகுரமக்க கண்டு
மாத்திமஞ்சன் பெத்து
மகத்துவமா வாழ்ந்தபொண்ணு

வளந்த எடத்திலே
மாது மொருதியை
மாலையிட வேணுமுன்னு
மனசாசைப் பட்டாத்தா
வளந்தையுட மஞ்சருக்கு
மகுரமொறை குடுத்து
மணிவயிரம் சீர்குடுத்து
வளவெல்லாம் பொன்னுதிர
மாலையிட்டுப் பாத்திருந்தே
மாதுடைய மக்களைநீ
வாவரசி காணலியே

பொறந்த எடத்திலே
பொண்ணு ஒருதியைப்
பூச்சேக்க வேணுமுன்னு
பேராசைப் பட்டாத்தா
பொறந்தையுட மஞ்சருக்குப்
போதமொறை குடுத்துப்
புதுவயிரம் சீர்குடுத்துப்
பூமியெல்லாம் பொன்னுதிரப்
பூச்சேத்துப் பாத்திருந்தே
பொண்ணுடைய மக்களைநீ
போரழகி காணலியே

போர்விசயன் வாசலெல்லாம்
புத்திரரைக் கண்டிருக்கா என்
பொறவி அறியலுன்னா
வாள்விசயன் வாசலெல்லாம்
மஞ்சன் பொறந்திருக்கு
வளந்தை அறியலுன்னா

காட்சி மிகுந்தாலும்
காண அதிட்டம் இல்லையின்னா
பகிசி மிகுந்தாலும்
பாக்க அதிட்டம் இல்லையின்னா

பொறந்த எடத்திலே
பொண்ணும் ஒருதியிலே
பொறவியுட வாசலுக்குப்
பெருமைக்கு இருந்தபொண்ணு

வளந்த எடத்திலே
மாதும் ஒருதியிலே
வளந்தையுட வாசலுக்கு
மகிழச்சிக்கு இருந்த பொண்ணு

பொல்லாக் கெடையாலே
போகநாக் கேட்டமுன்னே
மாயக் கெடையாலே
மாளநாக் கேட்டமுன்னே

பொறந்த எடத்திப் பட்டுவந்து
பூந்தோப்பு மாலைவந்து
பொய்கையிலே நீராடிப்
பூமியெல்லாம் பூமிதக்கப்
புள்ளையெல்லாம் பாத்திருக்கப்
பொறந்த ஒசத்திப் போலப்
பூவோட தீக்கலக்கப்
பெருந்தருமம் செய்த பொண்ணு

வளந்த எடத்திப் பட்டு வந்து
மாந்தோப்பு மாலைவந்து
வையையிலே நீராடி
வளவெலாம் பூமிதக்க
மக்களெல்லாம் பாத்திருக்க
வளந்த ஒசத்திபோல
மலரோட தீக்கலக்க
மாதருமம் செய்த பொண்ணு

கட்டத் தலங்களிலே
கதறிவரச் சொன்ன பொண்ணு
பாடைத் தலங்களிலே
பதறிவரச் சொன்ன பொண்ணு.

OOO

**மூத்த சகோதரி இறந்தபோது, இனி சேர்ந்து பிறப்போமா என சோர்ந்து, வாழ்வில் மகிழ்ச்சி காணும் வேளையிலே ஏன் மாண்டாய் எனக் கேட்டுத் தங்கை வருந்திப் பாடியது.**

பொழுதுஞ் சரியாச்சா
பொன்னும் பொறப்பு
போறதுக்கு நாளாச்சா
நாளுஞ் சரியாச்சா
நட்டமுள்ளார் மாது
நடப்பதுக்கு நாளாச்சா

கட்டிப் பொறப் பெழந்தேன்
கண்ணானசொல் லெழந்தேன்
வாச்சபொறப் பெழந்தேன்
வாகானசொல் லெழந்தேன்

கூடிப் பொறக்கக்
கோடிநாச் செல்லுமே
அடுத்துப் பொறக்க
அநேகநாச் செல்லுமே
சேந்து பொறக்கச்
செலகாலஞ் செல்லுமே

பாலிலேயுந் தேனிலேயும்
பச்சமுள்ள நல்பொறப்பே
தேனிலேயும் பாலிலேயும்
தித்திச்ச நல்பொறப்பே

பாலுறைஞ்சாப் போலஇல்ல
பச்சமுள்ள நல்பொறப்பே
தேனுறைஞ்சாப் போலஇல்ல
தித்திச்ச நல்பொறப்பே

தேதிப் பொறப்பிலேயும் நல்ல

தேட்டமுள்ள நல்பொறப்பே
வருசப் பொறப்பிலேயும் நல்ல
வாச்சதொரு நல்பொறப்பே

வருசப் பொறப்பை
வருந்துவார் எல்லையிலே
மகுரத்தனங் குடுத்து
வயிரநகை சீர்குடுத்து
நம்மவயிரமுடி ஐயா
மாலையிட்ட ஓவியமே

பொன்னும் பொறப்பைப்
போத்துவார் எல்லையிலே
போதத்தனங் குடுத்துப்
பெரியநகை சீர்குடுத்து
நம்மபொலிஞ் சாண்டார் ஐயா
பூவசைச்ச ஓவியமே

வளவே அலங்கரிச்சுச்
சீரிட்ட செல்லி
வாசலெல்லாம் கோலமிட்டு
மாவெலையை ஊஞ்சலிட்டு
வண்ணலங்கைப் பாய்விரிச்சு
மாதழைச்ச நாமொதலா
மகிழ்ச்சிக் கொறையுமில்லே

தெருவே அலங்கரிச்சுத்
திண்ணையெல்லாம் கோலமிட்டு
தென்னெலையை ஊஞ்சலிட்டுத்
தென்னெலங்கைப் பாய்விரிச்சுச்
சீதைவந்த நாமொதலாத்
திரும்பிக் கொறையுமில்லே

வருசப் பொறப்பு
மாலையிட்ட ஓவியம்போல்
மகுரமக்கள் கண்டிருந்தா
மாதுமணவாளர் எல்லாம்
மணம்விரிக்கக் கண்டிருந்தா
வாள்விசயன்தேவி எல்லாம்
வளவுவரப் பாத்திருந்தா
மாலையிட்ட மக்களெல்லாம்
வளத்திருக்கக் கண்டிருந்தா
சீதைமணவாளர் எல்லாம்
தெருவில் வரப் பாத்திருந்தா

பொன்னும் பொறப்பு
பூவசைச்ச ஓவியம்போல்
போதமக்கள் கண்டிருந்தா
பொண்ணுமணவாளர் எல்லாம்
பூவிரிக்கக் கண்டிருந்தா
போர்விசயன்தேவி எல்லாம்
பூமிவரப் பாத்திருந்தா
பூவசைச்ச மக்களெல்லாம்
பெத்துவரக் கண்டிருந்தா
பொண்ணுமணவாளர் எல்லாம்
பூமிவரப் பாத்திருந்தா

ஐத்தை மகனைவிட்டே
அடுக்கடுக்கா வீட்டைவிட்டே
மாமி மகனைவிட்டே
வரிவரியா வீட்டைவிட்டே

வாழ்வு பெருகாமே
மாளநாக் கேட்டமுன்னே
கைகொள்ளா வாழ்வைக்
கப்பல்லே ஏத்திவிட்டே
மடிகொள்ளா வாழ்வை
வண்டியிலே ஏத்திவிட்டே

பேரனுண்டு பேத்தியுண்டு
பேத்தி மணவாளருண்டு
பேரனுக்குத் தேவியுண்டு
முப்பதமும் உண்டு
முடிக்கீழ் அரசும் உண்டு
எப்பதமும் உண்டு
ராசபகிசி உண்டு
நான் பொறந்த செல்லி
நீராச பகிசியிலே

நடக்க நாக் கேட்டாயே.
நாங்க சீதை பகிசியிலே
சேரநாக் கேட்டாயே

OOO

அழகும் பண்பும் நிறைந்த தங்கை வாழ்வரசியாக இறந்தபோது, இனிச் சேர்ந்து பிறப்போமா என்றும் பல வேலைகள் இங்கு செய்ய வேண்டியதிருக்க வேலை ஏதும் இல்லாதார் போல மறைந்தாயே என்றும் வருந்தி மூத்த சகோதரி பாடியது.

இனிய பொறப்பே என்
இன்பமுள்ள சொல்லே
கட்டிப் பொறப்பேஎன்
கண்ணான சொல்லே
அருமைப் பொறப்பே என்
அன்பான சொல்லே
உண்மைப் பொறப்பே என்
உருக்கமுள்ள சொல்லே

அடுத்துப் பொறக்க
அநேகநாச் செல்லுமே
கூடிப் பொறக்கக்
கோடிநாச் செல்லுமே
சேந்து பொறக்கச்
செலகாலம் செல்லுமே

எறந்து பொறந்தாலும்
ஏழுஜென்மம் ஆனாலும்
இந்தப் பொறப்போட
இன்னிப் பொறப்பதில்லே
இந்த வாச்ச பொறப்போட
மறுத்துப் பொறப்பதில்லே
கட்டிப் பொறப்போட
இன்னிக் கலந்து பொறப்பதில்லே
செல்லப் பொறப்போடே
சேந்து பொறப்பதில்லே

பொன்னும் பொறப்பு
பொட்டுவச்சுப் பட்டுடுத்திப்
புதுவயிரம் மேச்சாத்திப்
புடிஒசந்த பட்டுடுத்திப்
பூத்த மலர்சூடிப்
பொண்ணு வெளிவந்தாக்கப்
பொன்னழகி அம்மா
பொறப்பட்டாப் போலிருக்கும்

வாச்ச பொறப்பு
மையிட்டுப் பொட்டிட்டு
மணிவயிரம் மேச்சாத்தி
மடிப்பொசந்த பட்டுடுத்தி
மலந்த மலர்சூடி
மாது வெளிவந்தாக்க
வைகாசிக் கொப்பத்தா
வாசவந்தாப் போலிருக்கும்

செல்லப் பொறப்பு
சீவி முடிச்சுச்
செந்தூரப் பொட்டுமிட்டு
சிறுபணுதி போட்டு
செறப்பான பட்டுடுத்திச்
செவந்தி மலர்முடிச்சு
சீதை வெளிப்பட்டாக்க
சித்திரைச் செல்லாயி
தெருவுவந்தாப் போலிருக்கும்

தெருவில் அலங்காரி
செகசனத்து ஒய்யாரி
தேரின்மேல் கண்ணாடி
வளவில் அலங்காரி
மாசனத்து ஒய்யாரி
வாசமேல் கண்ணாடி

வெகுவேலை இங்கிருக்க
வேனல்ல வேலையின்னா
வேலையில்லா போல
வெரசா வழிநடந்தா

கனவேலை இங்கிருக்கக்
கானல்ல வேலையின்னா
காட்சியில்லா போலக்
கடுசா வழிநடந்தா

சோலி எல்லாம் இங்கிருக்கச்
சொடலையிலே வேலையின்னா
சோலியில்லா போலச்
சுருக்கா வழிநடந்தா

தங்கப் படியே
தளர மிதிச்சிருந்தா
தருமருக்கு முன்போகத்
தவங்கள்மெத்தச் செய்திருந்தா

வெள்ளிப் படியே
வெளங்க மிதிச்சிருந்தா
வீமருக்கு முன்போக
வெகுதவங்கள் செய்திருந்தா

பொன்னும் படியே
பொருந்த மிதிச்சிருந்தா
புண்ணியர்க்கு முன்போகப்
பெருந்தவங்கள் செய்திருந்தா

பொறந்தெடத்திக் கண்டாங்கி
பொன்னொசந்த முந்தாங்கி
பொறந்தெடத்தி மல்லியப்பூ
பொண்ணெரம்பச் சூடிவச்சுப்
பொட்டியிலே பொன்கழட்டி
புண்ணியவா கைக்குடுத்துப்
பூமியெல்லாம் பூமிதக்கப்
பூவோடு தீக்கலக்கப்
பெருந்தவத்தைச் செய்திருந்தா

வளந்தெடத்திக் கண்டாங்கி
வயிரம் வச்ச முந்தாங்கி
வளந்தெடத்தி மல்லியப்பூ
மாது எரம்பச் சூடிவச்சு
மரவையிலே பொன்கழட்டி

மகராசா கைக்குடுத்து
வளவெல்லாம் பூமிதக்க
மலரோட தீக்கலக்க
மாதவத்தைச் செய்திருந்தா

○○○

சிறப்பாக மணமுடித்தது போல், செல்வமும் மக்களும் நிறையப் பெற்று பேரன் பேத்தியர் திருமணத்தையும் கண்ட வா(ழ்)வரசியாக மாண்ட மூத்த சகோதரிக்குத் தங்கை பாடியது.

பொழுதுஞ் சரியாச்சா
பொன்னும் பொறப்பே
போறதுக்கு நாளாச்சா
நாளுஞ் சரியாச்சா
நடப்பதுக்கு நாளாச்சா
தேதி சரியாச்சா
செல்லப் பொறப்பே
செல்வதுக்கு நாளாச்சா

போதமக்க கண்டமுன்னு
போந்தமுடி ஐயாக்க
பெருவெதமாச் செய்யலியே
பெரிய எடம்பாத்துப்
பேரொசந்தார் வீடுகேட்டு
போதமொறை குடுத்துப்
புதுவயிரம் சீர்குடுத்துப்
பொண்கௗெல்லாம் செய்ததுவாம்

மகுரமக்க கண்டமுன்னு
மதிச்சமுடி ஐயாக்க
மத்துவமா செய்யலியே
மகுந்த எடம்பாத்து
விலாசமுள்ளார் வீடு கேட்டு
மகுந்தமொறை குடுத்து
மணிவயிரம் சீர்குடுத்து
மக்கௗெல்லாம் செய்ததுவாம்

மதிச்ச கொலத்திலேயும்

பொங்குதே கண்ணீரு

மாதுஇரண்டைச் செய்ததுவாம்
வையைப் பெருக்கிலேயும்
மாதுரெண்டைச் செய்ததுவாம்
பெரிய எடத்திலேயும்
பொண்ணுரெண்டைச்
செய்ததுவாம்
பொய்கைப் பெருக்கிலேயும்
பொண்ணுரெண்டைச்
செய்ததுவாம்

மாலையிட்ட நாமொதலா
வாழ்வாக் கொறையுமில்லே
நான்பொறந்த செல்லி
மக்களுன்னா அட்டியில்லே
பூச்சேத்தநா மொதலா
நான் பொறந்த செல்லி
புள்ளையின்னா அட்டியில்லே

பொன்னும் புலந்திரனும்
பொருந்தக் கொழிச்சிருந்தே
புத்திரரும் செல்வமும்
போதக் கொழிச்சிருந்தே
காசும் புலந்திரனும்
கலந்து கொழிச்சிருந்தே
புத்திரரும் செல்வமும்
போதக் கொழிச்சிருந்தே

பொண்ணுடைய மக்களெல்லாம்
பேரன்மார் தேவி எல்லாம்
பூவசைச்சுக் கண்டிருந்தே
பொண்ணழைக்கப் பாத்திருந்தே
பெருமைச் சோறு உண்டிருந்தே
மயிலனையா பேத்தி எல்லாம்
மார்க்கண்டன் மக்களெல்லாம்
மாலையிடக் கண்டிருந்தே
மாதழைக்கப் பாத்திருந்தே
மகிழ்ச்சிச்சோறு உண்டிருந்தே
மண்ணாண்டு பொன்னாண்டு

மட்டத்தநா வாழ்ந்து
நீமாளுஞ் சமயம்
நம்மவளந்தையுட மஞ்சர்
மாசமத்தர் இல்லையின்னு
வளந்தையிலே செய்தமகள்
மச்சைப் பிரிக்கலியே
வாய்க்கரிசி குத்தலியே
வளந்தையிடம் செய்யாத
மறுத்துப் பொறந்தமக
மச்சைப் பிரிச்சிட்டா
வாய்க்கரிசி குத்தியிட்டா
மாளவழி காட்டியிட்டா
மஞ்சன் ஒருத்தனும்
மலர்வளத்தா ஓவியமா
வளந்தையொட மஞ்சர்
மாப்பிள்ளையும் இங்கிருந்தா
மங்களந்தான் ஒன்னெழவு

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநா வாழ்ந்து
நீபோகுஞ் சமயம்
நம்மபொறந்தையுட மஞ்சர்
பெருஞ்சமத்தர் இல்லையின்னு
பொறந்தையிலே செய்தமகள்
போரைப் பிரிக்கலியே
பொன்னரிசி குத்தலியே
பொறந்தையிடம் செய்யாத
பிம்பு பொறந்தமக
போரைப் பிரிச்சிட்டா
பொன்னரிசி குத்தியிட்டா
போகவழி காட்டியிட்டா
புள்ளை ஒருத்தனும்
பூவளத்தா ஓவியமா
பொறந்தையுட மஞ்சர்
பெருஞ்சமத்தர் இங்கிருந்தா
பெருமைதான் ஒன்னெழவு

ooo

## ஆயாவிற்கு

இளம் வயதில் தாயையிழந்த தனக்கு, தாயில்லாக் குறையே தெரியா வண்ணம் தன்னை அருமையாக வளர்த்து ஆளாக்கி மணமுடித்து, மகப்பேற்றுக்கும் உடன் இருந்து, தன்னை வரப்போகப் பார்த்திருந்த ஆயா இறந்தபோது, பேத்தி அவள் அருமைகளைச் சொல்லிப் பாடியது.

பொன்னாண்டு மண்ணாண்டு
சீரிட்ட செல்லிஎன்
பெருஞ்சமத்தி ஆயா
பெருவாரிநாள் வாழ்ந்து
போறதொரு நாள்தானே
பெத்தாரில்லா மக்களுக்கு ஆயா
போத்தினா போகயிலே
பிஞ்சுகள் போலப்
பெருகுதே கண்ணீரு

மண்ணாண்டு பொன்னாண்டு
சீரிட்ட செல்லிஎன்
மாசமத்தி ஆயா
மட்டத்தநாள் வாழ்ந்து
மாளுறதொரு நாள்தானே
வளத்தாரில்லா மக்களுக்கு ஆயா
வருந்தினா போகயிலே
மட்டங்கள் போல
மகுருதே கண்ணீரு

பிஞ்சு வயசில்
பெத்தாரெழந்த மக்கள்
பெத்தார் அறியாமப்
பேருசொல்லக் கேட்டிருந்தோம்
மட்ட வயசில்
வளத்தாரெழந்த மக்கள்
வளத்தார் அறியாம
வார்த்தைசொல்லக் கேட்டிருந்தோம்

இன்ன மரத்து
எலையிங்கக் கேட்டிருந்தோம்
பின்ன மரத்துப்
பூவுங்கக் கேட்டிருந்தோம்

பெத்தபதங் கண்டதுதான்
போரழகி மாதா
பிம்புபதங் காணலியாம்
வளத்தபதங்க கண்டதுதான்
வாவரசி மாதா
மறுத்துப்பதங் காணலியாம்
ஈனப்பதங் கண்டதுதான்
இருந்துபதங் காணலியாம்

மாசமத்தி ஆயா
வளத்தாரில்லா மக்களுன்னு
வாவரசிப் பொண்ணுமுன்னு
மஞ்சன் தனியருக்கு
வாவரசி மஞ்சருக்கு
மனம்பொறுகாப் பொண்ணுமுன்னு
வருந்துவார் எல்லையிலே
மகுரக் குடுத்திருந்தா
மாலையிட்டுப் பாத்திருந்தா
வளத்திருக்கக் கண்டிருந்தா

பெருஞ்சமத்தி ஆயா
பெத்தாரில்லா மக்களுன்னு
போரழகிப் பொண்ணுமுன்னு
புள்ளை தனியருக்குப்
போரழகி மஞ்சருக்குப்.
போத்துவார் எல்லையிலே
போதக் குடுத்திருந்தா
பூச்சேத்துப் பாத்திருந்தா
பெத்துவரக் கண்டிருந்தா

பெத்தா பொறந்தையிலே
போர்மாமன் எல்லையிலே
பொன்னொசந்த மேடையிலே
பொண்கள் வளந்திருந்தோம்

பெத்தாரும் இல்லையின்னு
புத்தி நெனச்சதில்லே
பெத்தார்க்கும் அதிகமாச்
சீரிட்ட செல்லி
பெருஞ் சமத்தி ஆயா
போத்தி வளத்திருந்தா
போதக் குடுத்திருந்தா
பொன்னொதவி செஞ்சிருந்தா
போரை அனுசரிச்சா
பெத்தவிடம் ஒப்பமிட்டா

வளத்தாரும் இல்லையின்னு
மனசு நெனச்சதில்லே
வளத்தார்க்கு அதிகமாச்
சீரிட்ட செல்லி
மாசமத்தி ஆயா
வருந்தி வளத்திருந்தா
மகுரக் குடுத்திருந்தா
மச்சம்ஒதவி செஞ்சிருந்தா
வாவை அனுசரிச்சா
வளத்தவிடம் ஒப்பமிட்டா

கையேந்தி வானறியோம்
தாயிழந்த மக்களுக்குக்
கனத்துக் கிடக்குமுன்னு
மடியேந்தி வானறியோம்
வாரிச் சொரிஞ்சிருந்தா

வேணுமுங்கக் கேளாம
வெள்ளிமெத்தத் தந்திருந்தா
தாகமுங்கக் கேளாம
தங்கம்மெத்தத் தந்திருந்தா
பிரியுமுன்னு கேளாம
பொன்னகதிகந் தந்திருந்தா

கழுத்துக் கெசஞ்ச
கண்டசரஞ் செஞ்சுவந்தா
என்பொடதிக்கு எசஞ்ச
பெரியநகை சேத்து வந்தா
கைக்கு எசஞ்ச
காப்பதிகம் செஞ்சு வந்தா
முன்னாலே கண்டார்க்கு
மூக்குத்தி சோதிமின்னும்
காதத்தே கண்டார்க்குக்
காதோலை சோதிமின்னும்
வெகுதூரம் வந்தார்க்கு
என்மோதிரமும் சோதிமின்னும்

கோடி கொடுத்தாளைத்
தாயிழந்த மக்க
குடுக்கவில்ல சம்மதிச்சோம்
அநேகங் குடுத்தாளை
ஆத்தா இல்லா மக்க
அனுப்பவில்ல சம்மதிச்சோம்

பூலோகத்தி சொல்லுக்குப்
பொண்ணுடைய மக்களும்பா
புத்திக்கும் தொண்டைக்கும்
பெத்தமக்கள் போலயிம்பா
பொண்ணோட பொண்ணும்பா

வையகத்தி சொல்லுக்கு
வாவரசி மக்களும்பா
மனசுக்கும் தொண்டைக்கும்
வளத்தமக்கள் போலயிம்பா
மாதோட மாதும்பா

வளத்தா மடியிலே
வாவரசி மக்களுக்கு
மகுரலே கண்ணீரு
மட்ட வயசாலே
ஆயாவருந்தினா போகயிலே
மகுருதே கண்ணீரு

பெத்தா மடியயிலே
போரழகி மக்களுக்குப்
பெருகலே கண்ணீரு
பிஞ்சு வயசாலே

ஆயாபோத்துனா போகையிலே
பெருகுதே கண்ணீரு

போதமக்கள் கண்டிருந்தேன்
பின்னிமஞ்சன் பெத்திருந்தேன்
எம்பெத்தார் அறியாத
போரழகி காணாத
பிரபலியம் கண்டிருந்தா
என்பெத்தாரைக் கேளாத
பூலோகத்தி மானுடங்க
பேரனுண்டா என்ற
பெருமையெல்லாம் கேட்டிருந்தா
பெருமைச்சோறு உண்டிருந்தா
போகவரப் பாத்திருந்தா
புள்ளை வளத்திருந்தா
பெருஞ்சோலி பாத்திருந்தா

என்வளத்தார் அறியாத
வாவரசி காணாத
மகிழ்ச்சிமெத்தப் பாத்திருந்தா
என்வளத்தாரைக் கேளாத
வையகத்தி மானுடங்க
சீரிட்ட செல்லியை
மாராயங் கேட்டிருந்தா
மகிழ்ச்சிச் சோறு உண்டிருந்தா
வரப் போகப் பாத்திருந்தா
என்மக்கள் வளத்திருந்தா
மாசோலி பாத்திருந்தா

பொண்ணுக்குப் பொண்ணுமுண்டு
புள்ளைக்குப் புள்ளையுண்டு
பேத்தி மணவாளருண்டு
பேரனுக்குத் தேவியுண்டு
மாதுக்கு மாதுமுண்டு
மஞ்சனுக்கு மஞ்சனுண்டு
முப்பதமும் உண்டு
முடிக்கீழ் அரசும் உண்டு
எப்பதமும் உண்டு
இராச பகிசி உண்டு
இராசபகிசியிலே ஆயா
நடக்கநாக் கேட்டாயே
மக்கபகிசியிலே ஆயா
மாளநாக் கேட்டாயே

 OOO

நீண்ட காலம் வாழ்ந்து, மக்களையும் பேரன் பேத்திகளை யும் கண்டு பெருமகிழ்வு கொண்டு குறையின்றி வாழ்ந்த ஆயாவிற்குப் பேத்தி, ஆயா தங்களை அன்புடன் பேணியது, ஆயாவின் வேலைத் திறமை, சுறுசுறுப்பு, சமையல் மணம், விருந்தோம்பும் பண்பு, சிறப்பான பலகாரங்கள் செய்யும் ஓவியம், பொருட்களைத் தேர்ந்து வாங்கும் திறமை ஆகியவற்றைப் பெருமையாகக் கூறி மனங்குளிரக் கண்டு களிக்க எத்தனையோ மங்கல விழாக்கள் இருக்கக் காணாமல் கண் மறைந்ததற்கு வருந்திப் பேத்தி பாடியது.

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநா வாழ்ந்து
மகுந்த கலியாணம்
மகிழ்ச்சிபண்ணிச் செய்திருந்து
மாசமத்தி ஆயா
வனம்பாக்கப் போனமுன்னா

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநா வாழ்ந்து
பெரிய கலியாணம்
பெருமைபண்ணிச் செய்திருந்து
பெருஞ்சமத்தி ஆயா
பொனம்பாக்கப் போனமுன்னா

நம்ம மாசமத்தி ஆயா
மகுரப் பழுத்தபழம்
மோச்சநதி கண்டபழம்

தேரப் பழுத்தபழம்
தில்லைநதி கண்டபழம்
கனியப் பழுத்தபழம்
காசிநதி கண்டபழம்

மரத்தில் பழுத்த பழம்
வாங்கக் கெடைக்குமே நம்ம
வமிசத்தில் பழுத்த பழம்
வாங்கக் கெடைக்காதே

கொம்பில் பழுத்த பழம்
கொய்யக் கிடைக்குமே
நம்ம குலத்தில்
பழுத்த பழம்
கொய்யக் கிடைக்காதே
வருங்காலஞ் சென்று
மாள நெனச்சமுன்னா
வாழ்ந்தநாப் போதுமுன்னு
வனத்திலெடங் கேட்டமுன்னா

போகுங்காலஞ் சென்று
போகநாக் கேட்டமுன்னா
பொழிஞ்சநாப் போதுமுன்னு
பொனத்திலெடங் கேட்டமுன்னா

கண்ணால் மதிச்ச
கலியாணம் ரொம்பவில்ல
இன்னங் கண்ணால் மதிக்கக்
கலியாணம் ரொம்ப இருக்கே

மனசால் மதிச்ச
மங்களங்கள் ரொம்பவில்ல
இன்னம் மனசால் மதிக்க
மங்களங்கள் ரொம்ப இருக்கே

பாவை மலர்சொரியப்
பகிசி மெத்தப் பாத்திருந்தா
கண்கள் மலர்சொரியக்
காட்சி மெத்தப்பாத்திருந்தா

இன்னம் இருந்தா
இனிக்காட்சி ரொம்பவில்ல
மறுத்து மிருந்தா
மாபகிசி ரொம்பவில்ல

அப்பளம் போளி
அதிரேசம் பால்போளி
கலியாணப் போளி
கண்டுருசி பாத்தவ
சிங்காரப் போளி
தின்னுருசி பாத்தவ

இன்னம் இருந்தாலும்
எய்க்காமப் பாப்பமே
மறுத்து இருந்தாலும்
மாறாமே பாப்பமே

தலையை வலிக்குதுன்னா
தலைகாணி மாத்தி வச்சா
உடம்பை வலிக்குதுன்னா
ஒலுகெடுத்துச் சாத்திவச்சா

காலை ஒருக்கா
கால் எலும்பிச் சூப்பிவச்சா
நேரம் ஒருக்கா
நெஞ்செலும்பிச் சூப்பிவச்சா
வேளை ஒருக்கா
வெண்டிக்காச் சூப்பிவச்சா
தாகம் ஒருக்கா
தக்காளிச் சூப்பிவச்சா

நெய்யால் ஓலையும்வச்சா
நெல்லரிசிச் சாதமிட்டா
நெய்யால் ஓலையும்
நெல்லரிசிச் சாதமும்
நெஞ்சைக் கரிக்குமுன்னா

பாலால் ஓலையும் வச்சா
பச்சரிசிச் சாதமிட்டா

பாலால் ஒலைக்கும்
பச்சரிசிச் சாதத்துக்கும்
பசிக்க எணங்கலன்னா

தேனால் ஒலையும் வச்சா
தெனையரிசிச் சாதமிட்டா
தேனால் ஒலைக்கும்
தெனையரிசிச் சாதத்துக்கும்
செரிக்க எணங்கலன்னா

பனுக்கெண்ணை தடவிய
மினுக்கான கட்டில்லே
பால் செதுக்கிப்
படுத்திருப்பா என்னுருந்தோம்
பரமலோகக் கட்டில்லே
படுத்ததை நாங்கறியோம்

சோறு செதுக்கித்
தூங்குகிறாள் என்னுருந்தோம்
சொர்க்கலோகக் கட்டில்லே
தூங்குனதை நாங்கறியோம்

கஞ்சி செதுக்கிக்
களைச்சிருப்பாள் என்னுருந்தோம்
கைலாசக் கட்டில்லே
களைச்சதை நாங்கறியோம்.

சீரிட்ட செல்லி
வெளக்கிக் கழுவுனா
வெம்பாயி வெங்கலம்போல்
வெம்பாயி வெங்கலத்தை
வெளக்கிவரை போட்டாப்போல்

கழுவிக் கவுத்தாக்
கண்ணாடி வெங்கலம்போல்
கண்ணாடி வெங்கலத்தைக்
கழுவிவரை போட்டாப்போல்

அடுப்பு மெழுகி
அச்சாணிக் கோலமிட்டுச்
சீரகம் போலச்
சிறுகத் தணல்வாத்து
நச்சீரகம் போல
நடுவே தணல்பரப்பி
ஆக்கச் சலியாதா
அடுப்பூதச் சோம்பாதா
பொங்கச் சலியாதா
பொகையூதச் சோம்பாதா

ஆக்கும் அடுப்படி
அழுக்கேற மாட்டாது
பொங்கும் அடுப்படி
பொகைபுடிக்க மாட்டாது
காச்சும் அடுப்படி
கரிபுடிக்க மாட்டாது

சமத்தி சமையலுக்குத்
தண்ணிமெத்தச் செல்லாது
ஏந்திழையா சமையலுக்கு
எண்ணை மெத்தச் செல்லாது
காரிழையா சமையலுக்குக்
கடுகுமெத்தச் செல்லாது
பாஞ்சாலி சமையலுக்குப்
பருப்புமெத்தச் செல்லாது

அன்னம் புடியாத
அவரைக்காய் கொண்டு வந்து
சோறு புடியாத
சுண்டைக்காய் கொண்டு வந்து
காம்பும் அறியாத
கத்திரிக்காய் கொண்டுவந்து
வெதையும் புடியாத
வெண்டிக்காய் கொண்டு வந்து
பீக்கங்காய் கொய்து
புடலங்காய் நார் உரிச்சுக்
கோலவர்ணக் கத்தரிக்காய்
கொய்து கறிசமைச்சுப்
பூப்போல சோறு ஐயாவுக்குப்

பொங்கியிட்டு தின்னவதான்
மைப்போலசோறு ஐயாவுக்கு
வடிச்சிட்டு தின்னவதான்

கண்ணாடித் தோசையும்
கனமான தேன்குழலும்
மெல்லிய தோசையும்
மெதுவான இட்டலியும்
பண்ணும் பலகாரம்
சீரிட்ட செல்லி
பணியாரம் ஓவியந்தான்
செய்யும் பலகாரம்
ஜீராவும் ஓவியந்தான்

எட்டு மணிக்கு
எதவான இட்டலி
பன்னண்டு மணிக்குப்
பசியறிஞ்ச சாப்பாடு
ஏழு மணிக்கு
எதவறிஞ்ச சாப்பாடு

மட்டங்கள் போல
மாசுருக்கா வடிச்செறக்கிப்
பிஞ்சுகள் போலப்
பெருஞ்சுருக்கா வடிச்செறக்கி
ஆக்கி எறக்கி
அடுப்பேறிப் பாத்திருப்பா
பொங்கி எறக்கிப்
பொகழேறிப் பாத்திருப்பா

சத்திரங்கள் கூடச்
சமைக்கச் சொணக்கமுண்டு
சாதமிட அட்டியுண்டு
சானகையா வாசல்
சமைக்கச் சொணக்கமில்லே
சாதமிட அட்டியில்லே

மடப்பள்ளியில் கூட
வடிக்கச் சொணக்கமுண்டு
வாரியிட அட்டியுண்டு
மயிலனையா வாசல்
வடிக்கச் சொணக்கமில்லே
வாரியிட அட்டியில்லே

ஆக்குற எடம்மணக்கும்
அசல்வளவில் போய்மணக்கும்
ஆசைமக்கள் ஐயா
அள்ளிஉண்ண வாய்மணக்கும்

பொங்குற எடம்மணக்கும்
பொறவளவில் போய்மணக்கும்
பிஞ்சுமக்கள் ஐயா
புடிச்சுண்ண வாய்மணக்கும்

சித்தடியா கையி
தேங்கொழக் கையில்ல
பாஞ்சாலி கையி
பணியாரக் கையில்லே
மயிலனையா கையி
மாவுருண்டைக் கையில்ல
அல்லியுடைய கையி
அதிரேசக் கையில்லே
மாசமத்தி ஆயா
மாதுடைய கையி
மணகோலக் கையில்ல

ஆயா மகுந்தவயதாகி
வனம்பாக்கப் போனாலும்
மாவுருண்டை தந்தான்னு
மனசில்வந்து நேரிடுதே
மறக்க முடியலியே

ஆயா பெரியவயதாகிப்
பொனம்பாக்கப் போனாலும்
போதக்குடுத்த ஆயான்னு
பிஞ்சிலே போனாப்போல்
புத்திவந்து நேரிடுதே
பொறுக்க முடியலியே

மானுடச் சென்மம்
மனுச் சென்மமாகாமே
மனுச வயித்தில்
உற்பத்தி யாகாமே
திங்கக் கிழமையிலே
சிவன் பொறந்த வேளையிலே
சிவனார் அடிவாரம்
சீதைவனம் போனமுன்னா

மூன்னூறு மூங்கில்வெட்டி
மொதல்மூங்கில் வில்வளைச்சு
மூணு கலசம்வச்சு
மொதக்கலசம் கல்பதிச்சு

நானூறு மூங்கில்வெட்டி
நடுமூங்கில் வில்வளைச்சு
நாலுகலசம் வச்சு
நடுக்கலசம் கல்பதிச்சு

ஐநூறு மூங்கில்வெட்டி
அடிமூங்கில் வில்வளைச்சு
அஞ்சு கலசம் வச்சு
அடிக்கலசம் கல்பதிச்சு

தச்சன் அழைச்சுத்
தலம்பெரிய தேர் சமைச்சு
கொத்தன் அழைச்சுக்
குத்துக்கால் செப்பனிட்டு
வண்ணான் அழைச்சு
வரிவரியாய்ச் சேலைகட்டி
ஆண்டி அழைச்சு
அடுக்கடுக்கா மாலைகட்டி
கண்ணான் அழைச்சு
கண்ணாடி மேல்பரப்பி

ஈனாத வாழை கொண்டு
எடப்புறமாக் குஞ்சங்கட்டி
வாழாத வாழைகொண்டு
வலப்புறமாக் குஞ்சங்கட்டி

பூவாத வாழைகொண்டு
பிம்புறமாக் குஞ்சங்கட்டி
மொட்டுவிடா வாழை கொண்டு
முன்புறமாக் குஞ்சங்கட்டி

வடத்தைப் பிடியுமென்பார்
வடகோடி சாயாமே
தேரைப் பிடியுமென்பார்
தென்கோடி சாயாமே

நெல்லுப் பொரிபொரிச்சு
நெறையப் பணங்கலந்து
சம்பாப் பொரிபொரிச்சு
சரியாப் பணங் கலந்து
கட்டத்தலம் போகுமட்டும்
காசுஅரைக்கால் விட்டெறிஞ்சு
சுடலைக்கரை போகுமட்டும்
துட்டுஅரைக்கால் விட்டெறிஞ்சு

இடுகாடு தானிறக்கி
இனியபசு தானமிட்டு
நடுக்காடு தானிறக்கி
நல்லபசு தானமிட்டு
சுடுகாடு தானிறக்கி
செவலைப்பசு தானமிட்டு
விராட்டி அடுக்கி
நாலுபுறம் சன்னலிட்டு
ஆக்காவும் தேக்காவும்
அகிலும் வகுந்தடுக்கி
தேக்காவும் ஆக்காவும்
சேர்ந்து வகுந்தடுக்கி
காரவில்லைச் சந்தனமும்
கட்டையுடன் பரப்பி

முக்கால் வலம் வந்து
முடிவணங்கித் தெண்டனிட்டு
ஐங்கால் வணங்கி
அடிவணங்கித் தெண்டனிட்டு

பதியன்கால் வணங்கிப்
பன்னிருக்கால் தெண்டனிட்டு

வார்ப்புக் கொடம்எடுத்து
மண்மேல் நடைபழகி
மஞ்சன் ஒருதரும்
வளத்தாரை நோக்கி
மலர்வளத்தார் ஓவியமாய்

பொன்னுங் கொடம் எடுத்துப்
பூமிமேல் நடைபழகிப் புள்ளை
ஒருதரும் பெத்தாரை நோக்கி
பூவளத்தார் ஓவியமாய்

தங்கக் கொடம் எடுத்துத்
தரையின்மேல் நடைபழகித்
தாயாரை நோக்கித்
தணல்வளத்தார் ஓவியமாய்

முந்தித் தவமிருந்து
முந்நூறு நாள் சுமந்து
அந்தி பகலாய்
ஆதரித்த தாயாருக்குத்
தொந்தி தடவிச்
சோறிட்ட தாயாருக்குத்
தொட்டுத்தணல் மூட்டியிட்டார்
ஆலந் தடவி
அழுதிட்ட தாயாருக்கு
அனல்வளத்தார் ஓவியமாய்
மாசமத்தி ஆயா
வாழ்ந்திருந்த ஓவியம்போல்
வனமறியப் போனமுன்னா
பெருஞ்சமத்தி ஆயா
பொலிஞ்சிருந்த ஓவியம்போல்
பொனமறியப் போனமுன்னா

இறுதி ஊர்வலம் நேர்முக வருணனை போல் பாடப் பட்டுள்ளது.

ooo

சீரும் சிறப்புமாகச் செல்வமுடன் வாழ்ந்து பின் வறுமைப்பட்ட ஆயா, தன் மகன்கள் பொருளீட்டி மீண்டும் செல்வங் கொழிக்கையிலே மாண்டாளே எனப் பேத்தி வருந்திப்பாடியது.

நாளும் சரியாச்சா
என்சீரிட்ட. செல்லி நீ
நடப்பதற்கு நாளாச்சா
பொழுதும் சரியாச்சா
போவதற்கு நாளாச்சா

என் போத்தியிட்ட செல்லி
புத்திரரும் செல்வமும்
போதக் கொழிச்சிருந்தே
பொய்க்கடியைக் கூடவச்சு
போதக் கொழிச்சிருந்தே.
மகனாரும் செல்வமும்
மகுரக் கொழிச்சிருந்தே
மயிலனையைக் கூடவச்சு
மகுரக் கொழிச்சிருந்தே

அரசரும் செல்வமும்
அள்ளிக் கொழிச்சிருந்தே
அல்லியரைக் கூடவச்சு
அள்ளிக் கொழிச்சிருந்தே

புள்ளைமுடி தீத்தமக
பொறந்தையிலே வச்சமக
பிஞ்சுமக்கள் ஆத்தா
போரழகி ஆனதுதான்
பின்பு கொறையுமில்லே

மஞ்சமுடி தீத்தமக
வளந்தையிலே வச்சமக
மதலை மக்கள் ஆத்தா
வாவரசி ஆனதுதான்
மறுத்துக் கொறையுமில்லே

போந்தமுடி ஐயா

போந்தபணம் தோத்து
ஆத்தா பொய்க்கடியை
கொள்ளையிட்டு
நம்ம பூமி வரமாட்டமுன்னு
அந்தப் பொற நாட்டு எல்லையிலே
போக நாக் கேட்டமுன்னா
என் பெருஞ்சமத்தி ஆயா
பொண்ணோ தலகொலஞ்சு
நம்ம பூமி வந்து சேந்தமுன்னே

மகுந்தமுடி ஐயா
மகுந்த பணம் தோத்து
ஆத்தா மயிலனையைக்
கொள்ளையிட்டு
நம்ம வளவில் வரமாட்டமுன்னு
அந்த மலையாளம் சீமையிலே
மாளநாக் கேட்டமுன்னா
நீ மாசமத்தி ஆயா
மாதோ தலகொலஞ்சு
நம்ம வளவில் வந்து சேந்த முன்னே

மறுத்தும் ஒருக்கா
மச்சம் மகுந்தது
என்தாய் பொறவி ராசாக்க
மலையாக் குமிச்சுவந்தா
வரிபோட்டு மேஞ்சு வந்தா
ஐயா மதிச்சமுடி தாணவில்லே
ஆயா மாசமத்தி பாத்திருந்தே

பின்பும் ஒருக்கா
பொன்னோ மகுந்தது
பொன்னுமுடி அம்மாய்ங்க
போராக்குமிச்சு வந்தா
புரிபோட்டு மேஞ்சு வந்தா
ஐயா போந்தமுடி காணவில்லே.
ஆயா பெருஞ்சமத்தி பாத்திருந்தே

பாடு ரொம்பப் பட்டிருந்தே
இப்ப பகிசிரொம்ப பாத்திருந்தே

நீ பெருஞ்சமத்தி ஆயா
பெரும்பாடு பட்டிருந்தே
பொன்னும் பணமாகி
புத்திரரும் மேலாகி
பெரும்பகிசி பாத்திருந்தே

காசும் பணமாகி
கருணரும் மேலாகி
கனபகிசி பாத்திருந்தே

காசால பட்ட
கஷ்டமெல்லாம் ரொம்பவில்ல
இப்ப கனபகிசி கண்டிருந்தே
பொன்னால் பட்ட
பெருந்துயரம் ரொம்பவில்ல
இப்ப பெரும்பகிசி பாத்திருந்தே
தோணிமுகம் பாராமே
என்தாய் பொறவி ராசாக்க
துட்டாக் குமிச்சிருந்தா
கப்பல்முகம் பாராமே
காசாக் குமிச்சிருந்தா
வத்தை முகம் பாராமே
மச்சம் குமிச்சிருந்தா

வையை கடக்காமே
மகுந்த கப்பல் ஏறாமே
மத்தொருதர் சீமை
வாரிவரப் போகாமே
மலையாளஞ் சீமை
பொன்தேடப் போகாமே
புகழ் பெரிய கோவையிலே
பொன்னாக் குமிச்சிருந்தா
காணலாம் காட்சிகளை
கண்கள் மலர்சொரிய
பாக்கலாம் காட்சிகளை
பாவைமலர் சொரிய
பெருஞ்சமத்தி ஆயா
போகுற நாள் இப்பவுன்னா

மாசமத்தி ஆயா
மாளுறநாள் இப்பவுன்னா

OOO

## அப்பத்தாவுக்கு

வயல்வளமும் செல்வ வளமும் மிக்க, விருந்தோம்புதலில் பேரார்வம் உடைய அப்பத்தா இறந்தபோது, தன் தந்தை வெளிநாட்டில் இருந்ததால் அப்பத்தா, மகன் கைக் கொள்ளி பெறாதது குறித்து வருந்திப் பேத்தி பாடியது.

எக்கோடி முக்கோடி
எறந்தவிடம் கண்டமுன்னா
எல்லையத்த நூற்றிருவர்
எறந்தவிடம் கண்டமுன்னா

முக்கோடி எக்கோடி
மாண்டவிடம் கண்டமுன்னா
மட்டத்த சேனைதளம்
மடிஞ்சவிடம் கண்டமுன்னா

பெருமா மடிஞ்ச
பூஞ்சோலை கண்டமுன்னா
நான் மதலைமகள் ஆத்தா
வாவரசி போன
மாஞ்சோலை கண்டமுன்னா

வளந்தையுட மஞ்சனுக்கு
ஐயா வருசப் பொறப்பு
மதிச்சாண்டார் கட்டிய
மகுந்த மனைக்கும்
மகுந்த பணத்துக்கும்
மாசமத்தி ஆயா
மாதவச்சுப் பாத்தமுன்னா
மகுந்த மனையிலே
மாதிருக்க மாட்டலியே
மகுந்த பணமாள ஆத்தா
மாத திட்டம் பத்தலியே

பொறவியுட மஞ்சனுக்கு
ஐயா பொண்ணும் பொறப்பு
பொலிஞ்சாண்டார் கட்டிய
பெரிய மனைக்கும்
போந்த பணத்துக்கும்
பெருஞ்சமத்தி ஆயா
பொண்ணை வச்சுப் பாத்தமுன்னா
பெரிய மனையிலே
பொண்ணிருக்க மாட்டலியே
பெரிய பணமாள ஆத்தா
பொண்ணுக்கு அதிட்டமில்லே

எங்கையா வாசல்
தென்புறத்து மூலையிலே
தேங்காய் குமிஞ்சிருக்கும்
மதிச்சாண்டார் எல்லையிலே
மாங்காய் குமிஞ்சிருக்கும்

சேலத்து மாம்பழம்
தினுசுவகை வந்தெறங்கும்
மதராசு மாம்பழம்
வகைவகையா வந்தெறங்கும்

ஓடையிலே தண்ணிவரும்
உருண்டமணி நெல்வெளையும்
சேங்கையிலே தண்ணிவரும்
சிறுமொளகி நெல்வெளையும்
வாய்க்காலு தண்ணிவரும்
வரக்கருடன் நெல் வெளையும்
காவேரித் தண்ணி வரும்
கார்சம்பா நெல் வெளையும்
ஆத்திலேயும் தண்ணி வரும்
அரைச்சம்பா நெல் வெளையும்

பகளம் வெளையும்
பச்சைமணி நெல்வெளையும்
முத்து வெளையும்

மொளகு சம்பா நெல் வெளையும்
தங்கம் வெளையும்
சரச்சம்பா நெல் வெளையும்
வெள்ளி வெளையும்
வெதவெதமா நெல் வெளையும்

சீரிட்ட செல்லி
பாலுத்திச் சோறுங்க
பவளமணிச் சம்பாவாம்
தயிரூத்திச் சோறுங்க
தங்கமணிச் சம்பாவாம்
மோரூத்திச் சோறுங்க
முத்துமணிச் சம்பாவாம்
நெய்யூத்திச் சோறுங்க
நெறஞ்சமணிச் சம்பாவாம்

ஆக்கப் பழநெல்லும்
அள்ளியிடச் சம்பாவாம்
குத்தப் பழநெல்லும்
கூலியிடச் சம்பாவாம்

எங்கையா வாசல்
காட்டு மொசல் வருமே
கம்மாயி மீன் வருமே
வேட்டைமொசல் வருமே
வெள்ளாத்து மீன் வருமே

கனசனத்தைக் கண்டாக்க
கறியாக்க நல்லமனம்
காட்டு மொசல் அவிச்சு
கம்மாயி மீன் வறுத்து
கறியாக்கி அன்னமிட்டு
கண்ணாடிப் பாய்விரிச்சு
கனசனங்க தன்னோட
கலந்திருக்க நல்லமனம்

வெகுசனத்தைக் கண்டாக்க
விருந்தாக்க நல்லமனம்
வேட்டைமொசல் அவிச்சு
வெள்ளாத்து மீன் வறுத்து
விருந்தாக்கி அன்னமிட்டு
வேடிக்கைப் பாய் விரிச்சு
வெகுசனங்க தன்னோட
வீற்றிருக்க நல்லமனம்

சத்திரங்கள் கூடச்
சமைக்கச் சொணக்கமுண்டு
எங்கையா வாசல்
சமைக்கச் சொணக்கமில்லே
சாதமிட அட்டியில்லே

மடப்பள்ளி கூட
வடிக்கச் சொணக்கமுண்டு
எங்கையா வாசல்
வடிக்கச் சொணக்கமில்லே
வாரியிட அட்டியில்லே

புகழ்மதுரை கூட
பொங்கச் சொணக்கமுண்டு
பொலிஞ்சாண்டார் எல்லையிலே
பொங்கச் சொணக்கமில்லே
பொங்கியிட அட்டியில்லே

என் சீரிட்ட செல்லி
ஆக்கிச் சலிச்சதில்லே அவள்
அடுப்படியும் பாத்ததில்லே
ஆக்கியிட ஆளுவச்சா
பொங்கிச் சலிச்சதில்லே.
புகையடியும் பாத்ததில்லே
பொங்கியிட ஆளுவச்சா

அண்டாவின் நெல்லை
அவிஞ்சாலும் தோண்டாளே
கொப்பரை நெல்லை
கொளஞ்சாலும் தோண்டாளே
முத்தத்து நெல்லை

முருகினாலும் அள்ளாளே
வாசலின் நெல்லை
மழைபேஞ்சாலும் அள்ளாளே

என் சீரிட்ட செல்லி
இந்திரனார் கோட்டையிலே
இருந்தா நடக்கும்பே
சோழவள நாட்டினிலே
சொன்னா நடக்கும்பே

கருணருடை கோட்டையிலே
கண்டார்க்கு வேலை சொல்வே
இந்திரனார் கோட்டையிலே
இருந்தார்க்கு வேலை சொல்வே
பொலிஞ்சாண்டார் கோட்டையிலே
போனார்க்கு வேலை சொல்வே
மதிச்சாண்டார் கோட்டையிலே
வந்தார்க்கு வேலை சொல்வே

பாலுக்கு மாடுமுண்டு
படுக்கைக்குக் கட்டிலுண்டு
சோறுக்கு நெல்லுமுண்டு
சொகத்துக்குக் கட்டிலுண்டு

மகுந்தமுடி ஐயா
வையகத்து ராசாங்கம்
உன்மஞ்சன் அரசாட்சி
நீ மாசமத்தி செல்வாக்கு
போந்தமுடி ஐயா
பூலோகத்து ராசாங்கம்
உன் பிள்ளை அரசாட்சி
நீ சீரிட்ட செல்லி
பெருஞ்சமத்தி செல்வாக்கு

எங்கையா
சவுங்கம் மொதலாளி
தனிக்கப்பல் வியாபாரி
முத்து மொதலாளி
மூணுகப்பல் வியாபாரி

மகுந்த கப்பல் ஓட்டிவந்து
மச்சம் குமிச்சு வச்சா
மகுரவெள்ளம் தேடிவந்தா
பெரிய கப்பல் ஓட்டி வந்து
பொன்னாக் குமிச்சு வச்சா
போதவெள்ளம் தேடிவந்தா

ஐயா அள்ளிவரும் கப்பல்
அரிச்சுவரும் காவேரி
கொண்டு வரும் கப்பல்
கூவி வரும் காவேரி
வாரி வரும் கப்பல்
மகுந்து வரும் காவேரி
தூக்கெடுத்த நாள் மொதலா
தோணியில வியாபாரம்
கணக்கெடுத்த நாள் மொதலா
கப்பலிலே வியாபாரம்
நெகம் மொளச்ச நாள் மொதலா
நித்தம் கொண்டு தலை
தலை நரைச்ச நாள் வரையும்
சத்தியம்தான் கொண்டுதலை

ஏடெடுத்த நாள் மொதலா
எலங்கையிலே வியாபாரி
கணக்கெடுத்த நாள் மொதலா
கப்பலிலே வியாபாரி

காடுசெடி வெட்டி
கருமலைக்குக் கல்லெடுத்து
கஞ்சிமடம் உண்டு பண்ணி
காலப்பசி தீத்த
கருணவார் தேவியில்ல

மகதேவர் கோவிலிலே
மதியத் தளுகைக்கு
மணிச்சீட்டு வச்சிருந்த
மதிச்சமுடி தேவியில்ல

படியளந்து தானமிடும்
பாண்டியர்க்குத் தேவியில்ல
ஆனை கட்டித் தானமிடும்
அருச்சுனவார் தேவியில்ல

கரண்டு லைட்டு எரியும்
கல்கத்தா கப்பல் வரும்
கல்கத்தா கப்பலிலே
கனசனங்க வந்தெறங்கும்
கனசனங்க தன்னோட
ஐயா கருணார் வரும் கப்பலுன்னா

மஞ்சலைட்டு எரியும்
மதராசுக் கப்பல் வரும்
மதராசுக் கப்பலிலே
மாசனங்க வந்தெறங்கும்
மாசனங்க தன்னோட
மஞ்சன் வரும் கப்பலுன்னா

செகப்பு லைட்டு எரியும்
சென்னப்பட்ணக் கப்பல் வரும்
சென்னப்பட்ணக் கப்பலிலே
ஜெகசனங்க வந்தெறங்கும்
ஜெகசனங்க தன்னோட
செம்பன் வரும் கப்பலுன்னா

பச்சை லைட்டு எரியும்
பட்டணம் கப்பல் வரும்
பட்டணக் கப்பலிலே
பல சனங்க வந்தெறங்கும்
பல சனங்க தன்னோட
பாலன் வரும் கப்பலுன்னா

மஞ்சன் வந்து சேரலியே ஒம்
மனசாசை தீரலியே ஐயா
மலர் வளக்க மாட்டலியே

புள்ளை ஒருதரும்
பூமி வந்து சேரலியே ஒம்
பேராசை தீரலியே ஐயா
பூவளக்க மாட்டலியே

அல்லிமொளகு தின்னு
அரிய நோம்பிருந்து
சீதமொளகு தின்னு
தேடிய மஞ்சன் உனக்குத்
தீவளக்க மாட்டலியே
நீ மாதவசாப் பெத்த மஞ்சன்
மலர் வளக்க மாட்டலியே
நீ பெருந்தவசாப் பெத்த மஞ்சன்
பூ வளக்க மாட்டலியே

ஈரல் ஒதுக்கி இருந்திட்ட மஞ்சன்
எரியத் தணல் மூட்டலியே
விலாவை ஒதுக்கி வந்திட்ட மஞ்சன்
மகுரத்தணல் மூட்டலியே
கடுகளவு மஞ்சன்
கருமாதி செய்யலியே
எள்ளளவு மஞ்சன்
எரியத் தணல் மூட்டலியே

சந்தனக் கொள்ளி
தலைநீக்கி வைக்கலியே
மாணிக்கக் கொள்ளி
மயிர்நீக்கி வைக்கலியே
பொண்ணில்லாப் பொண்ணுக்கு
நான் பொண்ணாசை தீத்த தங்கை
நான் போர்விசயன் பொண்ணு
ஒட்டனார் குந்தாணி
ஓரலை உருட்டிவச்சு
உருண்ட மணிச் சம்பாவை
ஓரல் எரம்பக் கொட்டி வச்சு
தச்சனார் பூண்போட்ட
சாதிப்பனை ஒலக்கை
கொல்லனார் பூண்போட்ட
கூந்தல்பனை ஒலக்கை
ஆசாரி பூண் போட்ட
அழகுபனை ஒலக்கை

ஓங்கி வளர்ந்த
ஓலக்கைதனைக் கைப்புடிச்சு
ஓசந்த வெலப்பட்டிலேயும்
உமிப்பறக்கக் குத்தியிட்டேன்
தகுந்த வெலப் பட்டிலேயும்
தவிடணையக் குத்தியிட்டேன்

போர் விசயன் மஞ்சன் உனக்கு
பூ வளத்தான் ஓவியமா
வாள் விசயன் மஞ்சன் உனக்கு
மலர் வளத்தான் ஓவியமா

OOO

நிறைவாழ்வு வாழ்ந்த அப்பத்தாவுக்கு, அப்பத்தாவின் கைவேலைத்திறன், ஓலைக்கூடை முடையும் அழகு, சிக்கனம், எல்லோர்க்கும் உதவும் பண்பு, அசைவ உணவை அருமையாகச் சமைத்து அன்போடு உணவிடும் பாங்கு, செல்விருந்தோம்பி வருவிருந்து பாத்திருக்கும் பண்பு ஆகியவற்றைச் சிறப்பித்து, தனக்கு முன் இறந்த தன் கணவனிடம் அவர் மறைவிற்குப் பின் குடும்பத்தில் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் சொர்க்கத்தில் அழகாய்ச் சொல்லி மகிழ்ந்திடுவாள் என்றும் பேத்தி பாடியது.

மாசமத்தி அப்பத்தா
மண்ணு செழிக்க
மனமோ குளிர
மகுரமக்கள் பெத்து
வாழ்ந்திருந்த ஓவியம்போல்
வருங்காலம் வந்து
வனமறியப் போனமுன்னா

பெருஞ்சமத்தி அப்பத்தா
பூமி செழிக்க
புத்தி குளிர
போதமக்கள் பெத்து
பொலிஞ்சிருந்த ஓவியம்போல்
போத நாள் வாழ்ந்து
பொனமறியப் போனமுன்னா

போதப் பொறந்ததிலே
பொண்கள் இருபேரும்
பொறக்கரியாப் பொண்களில்ல
மகுரப் பொறந்ததிலே
மாதிரண்டு பேரும்
வளக்கரியாப் பொண்களில்ல

பொறந்தையரும் காணாத
புள்ளைரொம்பக் கண்டிருந்தா
போத்தோடிக் காச்சிருந்தா
வளந்தையரும் காணாத
மக்கள் ரொம்பக் கண்டிருந்தா
வாதோடிக் காச்சிருந்தா

வயிரவன் கோவில்ல
மாலையிட்ட பொண்களுக்கு
வாழ்வாக் கொறையுமில்லே
மக்களுன்னா அட்டியில்லே
மஞ்சன் கொறையுமில்லே

காசித் தென்னைமரம்
கமுகடிக்க நல்லமரம்
காந்திமலர்ப் பூப்பூத்துக்
கஸ்தூரிகாய் காச்சுக்
கலந்துமக்க பெத்திருந்தா
கனபகிசி பாத்திருந்தா

திருப்பதித் தென்னை மரம்
தெகுளடிக்க நல்லமரம்
செண்டுமலர்ப் பூப்பூத்து
செந்தூரக்காய் காச்சுச்
செறக்கமக்க பெத்திருந்தா
சேரப்பகிசி பாத்திருந்தா

தென்னை பழுத்துத்

தெருவில் சொரிஞ்சிருந்தா
சீதைமணவாளர் எல்லாம்
தெருவில் வரப்பாத்திருந்தா

வாழை பழுத்து
வளவில் சொரிஞ்சிருந்தா
வாள்விசயன்தேவி எல்லாம்
வளவில் வரப்பாத்திருந்தா

மாசமத்தி அப்பத்தா
மாதுடைய மக்களெல்லாம்
மணம்விரிக்கக் கண்டிருந்தா
வாள்விசயன் மக்களெல்லாம்
மணம்விரிக்கக் கண்டிருந்தா

பொண்களுடைய
புள்ளையெல்லாம்
பூவசைக்கக் கண்டிருந்தா
போர்விசயன் மக்களெல்லாம்
பூவசைக்கக் கண்டிருந்தா

மாலையிட்ட மக்களெல்லாம்
வளத்திருக்கக் கண்டிருந்தா
பூவசைச்ச மக்களெல்லாம்
பெத்திருக்கக் கண்டிருந்தா

பேரனுண்டு பேத்தியுண்டு
பேத்தி மணவாளருண்டு
பேரனுக்குத் தேவியுண்டு

பெருஞ்சமத்தி அப்பத்தா
போர்விசயன் மக்களையும்
பொண்ணுடைய மக்களையும்
புடிச்சு முத்தம் கொண்டிருந்தா
போத்த ஆசை தோணுதுன்னா

வாள்விசயன் மக்களையும்
மாதுடைய மக்களையும்
வாரிமுத்தங் கொண்டிருந்தா
வருந்திவைக்க ஆசையின்னா

சீருள்ள செல்லி அப்பத்தா
காரிழையா வேலை
கல்கத்தா சீவுசட்டி
கடைஞ்சு வரை போட்டாப்போல்
மெல்லிநல்லா வேலை
பம்பாயி சீவுசட்டி
வீசி வரை போட்டாப்போல்
சித்தடியா வேலை
சிங்கப்பூர் சீவுசட்டி
சீவி வரைபோட்டாப்போல்

உத்தமியா கைமுடைச்சல்
ஊசிகொண்டு பொத்தலாம்
பாஞ்சாலி கைமுடைச்சல்
பாசிகொண்டு பொத்தலாம்
சித்தடியா கைமுடைச்சல்
சீகுகொண்டு பொத்தலாம்

பாப்பார வேலை
பாத்தாத் தெரியாது
கண்ணாடி வேலை
கண்டாத் தெரியாது
பாஞ்சாலி வேலை
பாத்தாத் தெரியாது
சித்தடியா வேலை
செய்யத் தெரியாது

மட்டுக்கு மட்டா
வடிச்சுண்ணு பாத்திருப்பா
அளவுக்கு அளவா
ஆக்கியுண்ணு பாத்திருப்பா
சிந்தாமப் பண்டம்
சிதறாமே வச்சிருப்பா
மங்காமப் பண்டம்
வகையோட வச்சிருப்பா

அழிச்சுத் துவைச்சு
ஆக்கியுண்ணு பாத்ததில்லே
அளவுக் களவா

ஆக்கியுண்ணு பாத்தவுக

தருக முருகச்
சமைச்சுண்ணு பாத்ததில்லே
சரிக்குச் சரியா
சமைச்சுண்ணு பாத்தவுக

எல்லார்க்கும் நல்லாவா
இருக்க நெழல்ஆவா
இன்பமுள்ள சொல்லாவா
சந்திரர்க்கும் நல்லாவா
சவுக்கமரத் தோப்பாவா
சொந்தமுள்ள சொல்லாவா
சூரியர்க்கும் நல்லாவா
சோலை நெழல் ஆவா
சொந்தமுள்ள சொல்லாவா
எனத்தாரைக் கண்டாக்க
எலைபோட நல்லமனம்
சனத்தாரைக் கண்டாக்க
சாதமிட நல்லமனம்

வாழைஎலை பரப்பி
வந்தாரைக் கையமத்தி
தென்னைஎலை பரப்பிச்
செல்வாரைக் கையமத்தி
அருமை விருந்தும்பா
ஆடு கொள்ள வேணும்பா
செல்ல விருந்தும்பா
சீனிகொள்ள வேணும்பா

முட்டைக்கு எழுதி
மொயலை வரவழைச்சு
அயிரைக்கு எழுதி
ஆரா வரவழைச்சுக்
கெண்டைக்கு எழுதிக்
கெளுத்தி வரவழைச்சு
முட்டையிடும் பொட்டை
மொதநாக் கவுத்துவச்சு
ஆடும் கோழியும்

அடுப்படியில் கட்டிவைப்பா
சூலாடு குத்துவா
சுருக்காக் கறிசமைப்பா

கோழிக்கொளம்பு வைப்பா
கோழிக்கால் சூப்பிவைப்பா
ஆடு கொளம்புவைப்பா
ஆட்டுக்கால் சூப்பிவைப்பா
கறிக பொரியல் மணக்கும்
காச்சுறஇடம் பூமணக்கும்
பொரியல் கறிக மணக்கும்
பொங்குற எடம் பூமணக்கும்

அன்னஞ் சிறுகவைப்பா
அவுச்சகறி கூடவைப்பா
அரைப்பவுண்டு நெய்வாப்பா
சாதஞ் சிறுகவைப்பா
சமைச்சகறி கூடவைப்பா
அள்ளிக் கறிவைப்பா
அகப்பை கொண்டு நெய்வாப்பா
குத்துக்கறி வைப்பா
குடம்கொண்டு நெய்வாப்பா

மகுந்தவயதாகி ஆயா
வனம்பாக்கப் போனாலும்
மண்ணிக் கெடக்கலியே
வாரமுன்னு சொல்லலியே
மாசேனை காணலியே
மாண்டதுவே அறியலியே
மட்டவயதில் போனாப்போல்
மகுருதே கண்ணீரு

பெரியவயதாகி ஆயா
பொனம் பாக்கப் போனாலும்
பூமிக் கெடக்கலியே
பொழுதொருநாச் செல்லலியே
பெருஞ்சேனை காணலியே
போனதுவே காணலியே
பிஞ்சுவயதில் போனாப் போல்

பெருகுதே கண்ணீரு

செடியின் மேலிருந்த
சிட்டாப் பறந்துவிட்டா
கொம்பின் மேலிருந்த
குயில்போல் பறந்துவிட்டா
மரத்தின் மேலிருந்த
மயில்போல் பறந்துவிட்டா

வடமசைய மணிகுலுங்க
வயிரத்தேர் முத்துதிர
வாழ்ந்திருந்தார் தேவி
வனம்பாக்க வாரான்னு
வனமோ தெறந்திருக்கும்
மல்லிகை முல்லை
மலரோ மலந்திருக்கும்
மந்திரிமார் சூழ்ந்திருப்பார்
மாசேனை வந்திருக்கும்
வடத்தைப் புடிச்சு
மாதை எறக்கிவச்சு அவடம்
வாழும் மக்கள் ஐயா
வார்த்தை என்ன சொல்லுமுன்னா
வாழை பழுக்குதும்பா
வடகாஞ்சி பூக்குதும்பா
வாழைக்குக் கீழ்க்கண்ணு
வச்சுப்பயிர் ஏறுதும்பா
மாங்காய் உருளுதும்பா
வயிரத்தேர் ஓடுதும்பா
வயிரத்தேர்க்கு உள்ளாக
மஞ்சன் தமிழ் பாடுதும்பா
மஞ்சன் தமிழோசை
மகிழ்ந்திருந்து கேட்டனும்பா

தேரசைய மணிகுலுங்கச்
சித்திரத்தேர் முத்துதிர
தெசையுள்ளார் தேவி
தெடல்பாக்க வாரான்னு
தெடலோ தெறந்திருக்கும்
செம்பகம் முல்லை
செடியோ மலந்திருக்கும்
தேவாக்கள் சூழ்ந்திருப்பார்
சேனைதளம் வந்திருக்கும்
தேரைப் புடிச்சுச்
சீதை எறக்கி வச்சு அவடம்
செல்லமக்கள் ஐயா
சேதி என்ன சொல்லுமுன்னா
தென்னை பழுக்குதும்பா
தென்காஞ்சி பூக்குதும்பா
தென்னைக்குக் கீழ்க்கண்ணு
சேத்துப்பயிர் ஏறுதும்பா
தேங்காய் உருளுதும்பா
சித்திரத்தேர் ஓடுதும்பா
சித்திரத்தேர்க்கு உள்ளாகச்
செம்பன்தமிழ் பாடுதும்பா
செம்பன் தமிழோசை
சேந்திருந்து கேட்டனும்பா

ooo

## ஐயா (தந்தையின் தந்தைக்கு)

ஐயா இறந்தபொழுது, ஐயா தனக்குமுன் மாண்டு போன தன் உறவினர்களுடன் சேர்ந்திருக்கப் போய்விட்டார் என்றும், தங்களுக்கு வீட்டில் ஐயாவைப் போல் அனுபவம் மிக்கவர் வேறு யாரும் இல்லையே என்றும், மனவலிமை யும், மதிநுட்பமும், செயல்திறமை யும் மிக்க ஐயா இன்னும் சிலகாலம் தங்களுடன் இருந்திருந்தால் உதவியாக இருக்குமே என்றும், முன்னதாக இறந்த அப்பத்தா, கைலாசத்தில் காத்திருப்பாள் என்றும் அவள் மறைவிற்குப் பின் தான் கண்ட அதிசயங்களை அவளிடம் கூறி ஐயா மகிழ்வார் என்றும் பேத்தி பாடியது.

பெருஞ்சமத்தர் ஐயா
எக்கோடி முக்கோடி
எறந்தவெடம் கண்டமுன்னா
எல்லையத்த நூத்திருவர்
எறந்தவெடம் கண்டமுன்னா

மாசமத்தர் ஐயா
மாகோடி முக்கோடி
மடிஞ்சவெடம் கண்டமுன்னா
மட்டத்த சேனைதளம்
மடிஞ்சவெடம் கண்டமுன்னா

ஆரணிப் பஞ்சவுக
அணஞ்சவெடம் கண்டமுன்னா
சீரணிப் பஞ்சவுக
சேந்தவெடம் கண்டமுன்னா

சீரங்கம் காவேரி
சேந்துகுமிழ் பாஞ்சாப்போல்
நம்ம சேனைதனத்தோடச்
சேந்திருக்கப் போறமுன்னா

மாமாங்கம் காவேரி
வந்துகுமிழ் பாஞ்சாப்போல்
நம்ம மாசேனை தன்னோட
மகிழ்ந்திருக்கப் போறமுன்னா

கொள்ளிடம் காவேரி
கூடிக்குமிழ் பாஞ்சாப்போல்
நம்ம கோடிசனத்தோட
கூடருக்கப் போறமுன்னா

கொம்பில் பழுத்தபழம்
கொள்ளக் கெடைச்சாலும்
நம்மகுலத்தில் பழுத்தபழம்
கோடிநாள் வாழ்ந்தபழம்
கொள்ளக் கெடைக்காதே

மரத்தில் பழுத்தபழம்
வாங்கக் கெடைச்சாலும்
நம்மனையில் பழுத்தபழம்
மகுந்தநாள் வாழ்ந்தபழம்
வாங்கக் கெடைக்காதே

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்த நாவாழ்ந்து
மகுந்த கலியாணம்
மகிழ்ச்சிபண்ணிச் செய்திருந்தா
பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரி நாவாழ்ந்து
பெரிய கலியாணம்
பெருமைபண்ணிச் செய்திருந்தா

அங்கவள நாட்டுக்கு
ஆள்பத்தா தெங்கயிலே
அறிஞ்சுவனம் போனமுன்னா
மனுவள நாட்டுக்கு
மனுப்பத்தா தெங்கயிலே
மனசறிஞ்சும் போனமுன்னா
இன்னுஞ் செலகாலம்
சின்னமக்கள் ஐயா
இருந்தா ஒபகாரம்
மறுத்துச் செலகாலம்
வாழுமக்கள் ஐயா
வாழ்ந்தா ஒபகாரம்

மண்ணாசை பொன்னாசை
மாளமனம் வரலையின்னா
மக்களுட பேராசை
மாளமனம் வரலையின்னா

பொன்னாசை மண்ணாசை
போகமனம் இல்லையின்னா
பொண்களுட பேராசை
போகமனம் இல்லையின்னா

நெஞ்சுரத்தைக் கீழ்ப்போட்டு
நிலத்தில் படுத்தமுன்னா
தந்திரத்தைக் கீழ்ப்போட்டு

தரையில் படுத்தமுன்னா
மனவலுவைக் கீழ்ப்போட்டு
மண்ணில் படுத்தமுன்னா

நெஞ்ச வகுந்தாலும்
நீலங் கலந்திருக்கும்
நீரோட்டம் போலிருக்கும்
மனச வகுத்தாலும்
வயிரம் கலந்திருக்கும்
மையோட்டம் கூட இருக்கும்

உத்தியும் புத்தியும்
ஒருவர் அறிஞ்சதில்லே
உக்கருத்தும் பாவனையும்
ஒக்க இருந்தார் கத்ததில்லே
மனக்கருத்தும் பாவனையும்
மனுசர் அறிஞ்சதில்லே

ஆனை அமடுபட்டா
அஞ்சாதார் குண்டுபட்டா
குதிரை அமடுபட்டா
கூசாதார் குண்டுபட்டா

ஆனைப் பலமுடையார்
அஞ்சாத சொல்லுடையார்
ஆனைப் பலம்போச்சே
அஞ்சாத சொல்போச்சே

குதிரைப் பலமுடையார்
கூசாத சொல்லுடையார்
குதிரைப் பலம்போச்சே
கூசாத சொல்போச்சே

கைலாசநாடு கடவோ
தெறந்திருக்கும்
காந்த விளக்கெரியும்
கனகமல்லி பூத்திருக்கும்
கட்டிமக்கள் அப்பத்தா
காரிழையா காத்திருப்பா

வைகுந்தநாடு வாசல்
தெறந்திருக்கும்
மணிவிளக்கு நின்னெரியும்
மல்லியப்பூப் பூத்திருக்கும்
மாசமத்தி அப்பத்தா
மயிலனையா வந்திருப்பா

சிவலோகநாடு தெருவோ
தெறந்திருக்கும்
செடிவிளக்கு நின்னெரியும்
செண்டுமல்லி பூத்திருக்கும்
செல்லமக்கள் அப்பத்தா
சீதையரும் அங்கிருப்பா

என்னென்ன அதிசயத்தைக்
கண்டுவந்தீர் என்னாக்க
நீ காணாதஅதிசயத்தைக்
கண்டுவந்தேன் என்பாக
நீ பாராத அதிசயத்தைப்
பாத்துவந்தேன் என்பாக

தெசையுள்ளார் எல்லையிலே
தேங்கா உருளுதும்பா
சித்திரத்தேர் ஓடுதும்பா
சித்திரத்தேர்க்குள்ளாக
செம்பனுடைய மஞ்சனும்
சீதையுட குஞ்சலரும்
சேர்ந்து வெளையாடுதும்பா

மாங்கா உருளுதும்பா
வயிரத்தேர் ஓடுதும்பா
வயிரத்தேர்க்குள்ளாக
மாதுடைய மஞ்சனும்
மயிலனையாள் குஞ்சலரும்
மகிழ்ந்து வெளையாடுதும்பா

OOO

## அம்மான்

இருபெண்களை மணந்தும்

மக்கட்பேறில்லாத அம்மான் இறந்த போது ஒரு மகனாகப் பிறந்து, மக்கட்செல்வத்திற்கு ஏங்கி, உறவினர் மக்களை அன்புடன் உறவு கொண்டாடி வாழ்ந்ததையும், துணிவும் செயலாற்றலும் கொண்டவராய், வயல்வளமும் விளைபொருளும் சிறக்க வாழ்ந்ததையும் எண்ணி சகோதரிமகள் பாடியது.

நாளுஞ் சரியாச்சா
தாய்பொறவி ராசா
நடப்பதுக்கும் நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா
பிஞ்சுமக்கள் ஐயா
போவதுக்கும் நாளாச்சா
தேதி சரியாச்சா
செல்வதுக்கும் நாளாச்சா

சீரங்கம் காவேரி
சேந்துகுமிழ் பாஞ்சாப்போல்
நம்மசேனை தளத்தோடச்
சேந்திருக்கப் போறமுன்னா

கொள்ளிடம் காவேரி
கூடிக்குமிழ் பாஞ்சாப்போல்
நம்மகோடி சனத்தோடக்
கூடஇருக்கப் போறமுன்னா

மாமாங்கம் காவேரி
வந்து குமிழ் பாஞ்சாப்போல்
நம்மாசேனை தன்னோட
மகிழ்ந்திருக்கப் போறமுன்னா

மாசமத்தி ஆயா
உத்தமியா பெத்தமுத்து
ஒருமுத்து தனிமுத்து
ஊரும் மதிச்சமுத்து
ஒசத்தியுள்ள நல்லமுத்து

என்சமத்தி ஆயா
சானகையா பெத்தமுத்து
தனிமுத்து ஒருமுத்து
சனங்க மதிச்சமுத்து
சமத்துள்ள நல்லமுத்து

மாலையிட்ட நாமொதலா
மஞ்சன் மொதலாகலையாம்
மறுத்தும் ஒருக்கா
மகுரப் பொறந்தாளை
வாவரசி மாதை
மஞ்சன் கொலமுன்னு
மாலையிட வந்தாக
பூச்சேத்த நாமொதலாப்
புள்ளைமொதல் ஆகைலையாம்
பின்பு மொருக்காப்
போதப் பொறந்தாளைப்
போரழகி மாதைப்
புள்ளக் கொலமுன்னு
பூச்சேக்க வந்தாக

பிஞ்சான மாதும்
பெருஞ்சேனை போலப்
பெத்துமொதல் ஆகலியே
மட்டமுள்ள மாதும்
மாசேனை போல
வளத்துமொதல் ஆகலியே

வளத்தா கொலமும்
மஞ்சன் கொலந்தானே
மாமி கொலமும்
மஞ்சன் கொலந்தானே

பெத்தா கொலமும்
புள்ளைக் கொலந்தானே
பூமாமி கொலமும்
புள்ளைக் கொலந்தானே

பொறந்தையரும் கண்ட

புள்ளை அருமையின்னா
வளப்பெல்லாம் கண்ட
மஞ்சன் அருமையின்னா

வாழும் மக்கள் ஐயா
வளந்தநாக் கேட்டா
மகுந்த சம்சாரம்
மாலையிட்டநாக் கேட்டா
மகுந்த குடும்பமில்ல
வளத்துமொதல் ஆயிருந்தா
மறுத்தும் ஒருக்கா
வாதோடிப் பிஞ்சிறங்கி
மஞ்சனுக்கு மஞ்சன்
வளந்திருக்கும் காலமிப்ப
மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநா வாழ்ந்து
மாளுஞ் சமயம்
மஞ்சன் கொறையும்
மனக்கொறையுந் தீரலியே

மனசைவிட்டு நீங்கலியே
மாளுஞ் சமயம்
மனசிலேயும் தாங்கலில்ல
மட்டமுள்ள மாதுக்கு
வாழுமகன் ஐயாங்க
மனசுதெடமும் இல்லே

பிஞ்சுமக்கள் ஐயா
பொறந்தநாக் கேட்டா
பெரிய சம்சாரம்
பூச்சேத்தநாக் கேட்டா
பெரிய குடும்பமில்ல
பெத்து மொதல் ஆயிருந்தா
பிம்பும் ஒருக்காப்
பூப்பூத்துப் பிஞ்சிறங்கிப்
புள்ளைக்குப் புள்ளை
பொறந்திருக்கும் காலமிப்ப
பொன்னாண்டு மண்ணாண்டு

பெருவாரிநா வாழ்ந்து
போகும் சமயம்
புள்ளைக் கொறையும்
பெருங்கொறையும் தீரலியே
போகும் சமயம்
புத்தியிலும் தாங்கலில்ல
பிஞ்சுமகன் ஐயாங்கப்
புத்திதெடமும் இல்லே

பூலோகத்திப் புள்ளையெல்லாம்
பெத்தபுள்ளை போலயிம்பா
வையகத்திப் புள்ளையெல்லாம்
வளத்தபுள்ளை போலயிம்பா
எட்டவருவார் எங்கமனுசரும்பா
தூரவருவார் சொந்தமனுசரும்பா
அடசிவருவார் நம்மனுசரும்பா

பூலோகத்திப் பெண்களுக்குப்
பூவுஞ் சந்தனமும்
பூட்டயிலே பாத்திருப்பா
புத்தி மகிழ்ந்திருப்பா
வையகத்திப் பொண்களுக்கு
மாலையும் சந்தனமும்
வளையலிலே பாத்திருப்பா
மனசு மகிழ்ந்திருப்பா

வேவை எடுத்தியிருப்பா
வீரியத்தைக் காட்டியிருப்பா
உலுப்பை எடுத்தியிருப்பா
ஓவியத்தைக் காட்டியிருப்பா

குத்தப்பழநெல்லும்
கூலியிடச் சம்பாவும்
விக்கப்பழ நெல்லும்
வெதைபாவச் சம்பாவும்
அள்ளப் பழநெல்லும்
ஆக்கியிடச் சம்பாவும்
மச்சோட நெல்லை
மகுரவில்ல பாத்திருந்தா

சாலோட நெல்லைச்
சரியவில்ல பாத்திருந்தா

பாலூத்திச் சோறுங்கப்
பவளமணிச் சம்பாதான்
நெய்யூத்திச் சோறுங்க
நெறமணியும் சம்பாதான்
தயிரூத்திச் சோறுங்கச்
சருகமணிச் சம்பாதான்

சிட்டு இருந்து கூவும்
செய்யும்பொறகு எரையும்
மயிலிருந்து கூவும்
வயலும்பொறகு எரையும்
குயிலிருந்து கூவும்
கொளமும்பொறகு எரையும்

எரமத்திச் சோறுங்க
எதுத்தாப்போல் கிராமமுண்டு
ஆளமத்திச் சோறுங்க
அடுத்தாப்போல் கிராமமுண்டு

பாளைப் பதனிவரும்
பாளை மிதந்துவரும்
பாளை ஒதுக்கிப்
பங்கெடுத்து உண்ணாலும்
பண்ணையிலே உண்டிருந்தா
பாக்கியத்தை ஆண்டிருந்தா

குடத்துப் பதனி வரும்
கோம்பை மிதந்துவரும்
கோம்பை ஒதுக்கிக்
கூறெடுத்து உண்ணாலும்
குத்தகையா உண்டிருந்தா
கோட்டைமுழு தாண்டிருந்தா

ஆனை முழக்கந்தான்
அதிகாரிகள் கச்சேரிதான்
சேனை முழக்கந்தான்
செகஜனங்கள் கச்சேரிதான்
குதிரை முழக்கந்தான்
கோர்ட்டார் கச்சேரிதான்

ஆராரு கட்டும் வண்டி
அந்திபட்டா அச்சமுண்டு
அருச்சுனவார் கட்டும்வண்டி
அந்திபட்டா அச்சமில்லே

இன்னொருதர் கட்டும்வண்டி
இருட்டுப்பட்டா அச்சமுண்டு
இந்திரனார் கட்டும் வண்டி
இருட்டுப்பட்டா அச்சமில்லே

மத்தொருதர் கட்டும் வண்டி
மதியம்வந்தா அச்சமுண்டு
மகராசா கட்டும் வண்டி
மதியம் வந்தா அச்சமில்லே

மனச வகுந்தா
வயிரம் கலந்திருக்கும்
மையோட்டம் கூடஇருக்கும்
நெஞ்சை வகுந்தா
நீலம் கலந்திருக்கும்
நீரோட்டம் கூட இருக்கும்

உத்தியும் புத்தியும்
ஒருவர் அறிஞ்சதில்லே
உக்கருத்தும் பாவனையும்
ஒருவர் அறிஞ்சதில்லே
தந்திரமும் புத்தியும்
சனங்கள் அறிஞ்சதில்லே
தன்கருத்தும் பாவனையும்
சனங்கள் அறிஞ்சதில்லே

மதசானை ரெண்டேறி
மாலை ரெண்டு சூடி
மாது ரெண்டு கைப்புடிச்சு
மாளும் சமயம்

மஞ்சன் இல்லாக் குத்தம்
மலர்வளக்க மஞ்சனில்லே
வையகத்தி சொல்லாச்சே

போரானை ரெண்டேறிப்
பூவு ரெண்டுசூடிப்
பொண்ணு ரெண்டு கைப்புடிச்சுப்
போகுஞ் சமயம்
புள்ளையில்லாக் குத்தம்
பூவளக்கப் புள்ளையில்லே
பூலோகத்தி சொல்லாச்சே

OOO

## அம்மான் மனைவி

மணம் முடித்த நாள் முதலாய் மங்கலமும் மக்கட்பேறும், செல்வமும் நிறைந்து வா(ழ்)வரசியாக மாண்ட மாமன் மனைவிக்கு, இராசிக்காரியாக வாழ்ந்தவள் என்றும், பொன்னும் மணியும் பொழிந்தவள் என்றும், குறைவற்ற மக்கள் செல்வமும், வயல்வளமும் உடையவள் என்றும் பெருமைகளைச் சொல்லி, மாமன் மகன் இறப்புச் செய்தியை உடனே தனக்குத் தெரிவிக்கவில்லையே என வருந்தி நாத்தனார் மகள் பாடியது.

வாவரசி வாவரசி
எங்க மாமருடை தேவி
மதிப்பான வாவரசி
என்போர் மாமன் தேவி
பெத்துவரும் பெண்களுக்கு
பிரியமுள்ள வாவரசி
வளத்துவரும் பெண்களுக்கு
மதிப்பான வாவரசி

எம்போத்தியிட்ட செல்லி
உன்னைப் பொண்ணழச்சுக்
கூட்டி வந்தா
பொண்ணு வந்த நாள்முதலா
நம்மபூமி பெருகுச்சு

என்சீரிட்ட செல்லி
உன்னை மாலையிட்டுக்
கூட்டி வந்தா
மாதுவந்த நாள்முதலா
நம்ம வாசல் பெருகுச்சு

அடிவைக்கச் செல்வம்
ஆச்சரியம் உண்டாச்சு
கால் வைக்கச் செல்வம்
கனகம் சொரிஞ்சுது

மோதிரக்கால் வச்சுவந்தே
முகூர்த்தம் வச்சநாள்தானே
கால்வச்ச நாள் முதலா
கலியாண நாள்தானே

நீ பொண்ணு வந்த நாள்முதலா
புள்ளைக் குறையுமில்லே
பொய்மானா அட்டியில்லே
பொன்னுமுன்னா தாச்சியில்லே

நீ மாது வந்த நாள்முதலா
மக்கள் கொறையுமில்லே
மாப்பிள்ளைமார் அட்டியில்லே
மச்சமுன்னா தாச்சியில்லே

நீ தொட்டா தொலங்கும்
தோட்டம் பயிர்ஏறும்
வச்சா தொலங்கும்
வாழை பயிர்ஏறும்
இஞ்சி பயிராகும்
எலுமிச்சை தோப்பாகும்
மாவிடிஞ்சி பயிராகும்
மாமரமும் தோப்பாகும்
சேனை பயிராகும்
செவ்விளனி தோப்பாகும்
மஞ்சள் பயிராகும்
மாதுளையும் தோப்பாகும்

மிளகு பயிராகும்
முந்திரியும் தோப்பாகும்
சாதிக்காய் காய்க்கும்
சப்போட்டா பிஞ்சிறங்கும்
சாதிக் களிப்பாக்கு
சரஞ்சரமாக் காச்சிருக்கும்
ஏலங் கிராம்பு
இளங்கொடிக் கால்வெத்திலை
இத்தனையும் பயிராகும்.

தங்கம் மதிச்சகை
தனிவயிரம் பாத்தகண்ணு
மச்சம் மதிச்ச கை
மணிவயிரம் பாத்தகண்ணு
பொன்னு மதிச்சகை
பொடிவயிரம் பாத்தகண்ணு
பவளம் மதிச்சகை
பனிவயிரம் பாத்தகண்ணு
செல்வம் கொழிச்ச கை
சிறுவயிரம் பாத்தகண்ணு

தாய் பொறவி ராசா
பொண்ணை அளவெடுத்து
புதுவயிரம் சேத்திருந்தா
மாதை அளவெடுத்து
வயிரநகை சேத்திருந்தா
மூக்குத்தி மின்னும்
முகத்தின் நிழற்காட்டும்
காதோலை மின்னும்
கன்னத்தின் நிழற்காட்டும்
அட்டிகை மின்னும்
அடிக்கழுத்து சோதிவிடும்

தேங்கனியும் மாங்கனியும்
தெகுட்டாப் பிலாக்கனியும்
மாங்கனியும் தேங்கனியும்
வருக்கைப் பிலாக்கனியும்
என்னம்மான் தேவிநீ
மாது மதிச்சிருந்தே

ராசாக்கள் தின்னாத
நல்கறியும் தின்னிருந்தே
மந்திரிமார் தின்னாத
மான்கறியும் தின்னிருந்தே
தொரைமார்கள் தின்னாத
தொடைக்கறியும் தின்னிருந்தே
கனிவர்க்கம் திங்கும்
கனிவவ்வால் தின்னிருந்தே

கட்டழகி சாப்பாடு
கறிஒருவாய் மீன்ஒருவாய்
மெல்லிநல்லாள் சாப்பாடு
மீன்ஒருவாய் கறிஒருவாய்

தின்னதுவும் உண்ணதுவும்
சீமை வெலை பெறுமே
உண்ணதுவும் தின்னதுவும்
உலகம் வெலை பெறுமே

போரறிய வந்தவுக
நம்ம வாசல்
பொண்ணதிகம் எம்பாக
எம்பொறுமையுள்ள மாமர்
பொண்ணதிகம் இன்னதில்லே
பொண்ணொருதி போலப்
போதக் குடுத்துப்
பூவசைச்சுப் பாத்தாக

வாவறிய வந்தவுக
நம்ம வாசல்
மாததிகம் எம்பாக
மனம்பொறுத்த மாமர்
மாததிகம் இன்னதில்லே
மாதொருதி போல
மகுரக் குடுத்து
மாலையிட்டுப் பாத்தாக

எம் மாமருடை மக்கள்
மக்கள் கலியாணம்
வளவெல்லாம் நாட்டியம்தான்
பொண்கள் கலியாணம்
பூமியெல்லாம் நாட்டியம்தான்
சீதை கலியாணம்
தெருவெல்லாம் நாட்டியம்தான்

எம் பூமாமர் தேவி
புத்திரரும் செல்வமும்
போதக் கொழிச்சிருந்தே
பொய்க்கடியைக் கூடவச்சு
போதக் கொழிச்சிருந்தே

அரசரும் செல்வமும்
அள்ளிக் கொழிச்சிருந்தே
அல்லியரைக் கூடவச்சு
அள்ளிக் கொழிச்சிருந்தே

மகனாரும் செல்வமும்
மகுரக் கொழிச்சிருந்தே
மயிலனையைக் கூடவச்சு
மகுரக் கொழிச்சிருந்தே

புள்ளைக் குறையுமில்லே
பொய்ம்மானா அட்டியில்லே
மக்கள் குறையுமில்லே
மாப்பிள்ளைமார் அட்டியில்லே

நீ அதட்டி ஒருசேதி சொன்னா
அச்சில்லாத் தேரோடும்
உருட்டி ஒருசேதி சொன்னா
உருளையில்லாத் தேரோடும்

ஆங்கோலும் சக்கரமும்
அதட்டி அரசாண்டிருந்தே
செங்கோலும் சக்கரமும்
செலுத்தி அரசாண்டிருந்தே
இடும்பியிலே வாரான்னா

எல்லை கிடுகிடுங்கும்
வாசலிலே வாரான்னா
வளவு திடுக்கிடுமே

ஆத்தங்கரை ஓரம்
எஞ்சமத்தி ஆத்தா
அல்லிமலர்க் கூடாரம்
அடுக்குமல்லிப் பூந்தோட்டம்

வையைக் கரையோரம்
எம்மாமருடை தேவி
மகிழமல்லிக் கூடாரம்
மல்லியப்பூ பூந்தோட்டம்

தீர்த்தக் கரையோரம்
செண்டுமல்லிக் கூடாரம்
செவந்திப்பூ பூந்தோட்டம்

கைலாச நாடெல்லாம்
கண்டாங்கிக் காரிகதான்
சிவலோக நாடெல்லாம்
சித்தாடைக் காரிகதான்
பூலோக நாடெல்லாம்
போரழகிக் கூட்டந்தான்
வைகுந்த நாடெல்லாம்
வாவரசிக் கூட்டம்தான்

அப்பத்தலை மொறைக்கு
என் ஆத்தா ஆனிழையா வாவரசி
இப்ப அடுத்த தலைமொறைக்கு
என்னம்மான் தேவி
ஆரணங்கும் வாவரசி
முந்தித் தலைமொறைக்கு
என் ஆத்தா முடிகுழலாள் வாவரசி
பிந்தித் தலைமொறைக்கு
என் போர்மாமன்தேவி

போரழகி ஆனமுன்னே
அந்தப் போரழகிப் பட்டத்தை

நான் பின்னித் தரிக்கலியே
அந்த வாவரசிப் பட்டத்தை
நான் வாங்கித் தரிக்கலியே

பிஞ்சான தம்பி
நீ போனமுறை சொல்ல
பொறசாதி விட்டாக்க
அவன் பொசல்காரு ஏறி
எங்க வாசல்
பூமிவந்து சொல்ல
பொன்னோ செலவுமில்லே
பொழுது மூணு சென்றபின்பு
நீ போனதுவைச் சொல்லவந்தான்

மட்டமுள்ள தம்பி
நீ மாண்ட முறைசொல்ல
மறுசாதி விட்டாக்க
அவன் மணிக்காரு ஏறி
எங்க வாசல்
வளவில் வந்து சொல்ல
மச்சம் செலவுமில்லே
வாரம் ஒண்ணு சென்றபின்பு
நீ மாண்டதுவைச் சொல்ல வந்தான்

நான் ஆரொருதர் போல
அசத்த எளவு கேக்கவந்தேன்
மத்தொருதர் போல
மறந்த எளவு கேக்க வந்தேன்
பின்னொருதர் போல
போனதுவே கேக்க வந்தேன்.

OOO

**அரண்மனை போன்ற வீட்டில் வாழ்ந்து, சதாபிஷேக விழாக் கண்ட மறு ஆண்டு வா(ழ்)வரசியாக இறந்த அம்மான் மனைவிக்கு நாத்தானர் மகள் பாடியது.**

வாவரசி வாவரசி
மதிப்பான வாவரசி
அடசி வருவார்க்கும்
அதிட்டமுள்ள வாவரசி
எட்ட வருவார்க்கும்
எடுப்பான வாவரசி
காத வருவார்க்கும்
கணிசமுள்ள வாவரசி
போர்மாமன் தேவி
பொட்டோட மையோடப்
பொறந்த கெடியோடப்
பூவோடு தீக்கலக்கப்
புண்ணியங்கள் செய்திருந்தா

மாமருடை தேவி
மையோடப் பொட்டோட
வளந்த கெடியோட
மலரோடு தீக்கலக்க
மாதவங்கள் செய்திருந்தா

ஆனை மூணு ஏறி
அதிட்டமுள்ள ஐயா
மாலை மூணு சூடி
மாதுமூணு கைப்புடிச்சா
மஞ்சன் கலியும்
மனக்கலியும் தீத்தார்க்கு
மட்ட வயசில்
மாமருடை மாதை
மாலையிட்டுப் பாத்திருந்தா
மாலையிட்ட ஓவியம்போல்
மகுரமக்கள் கண்டிருந்தா
மகிழ்ச்சிபண்ணி வாழ்ந்திருந்தா

போரானைமூணு ஏறிப்
பொலிஞ்சாண்டார் ஐயா
பூவுமூணு சூடி
பொண்ணுமூணு கைப்புடிச்சா
புள்ளைகலியும்
பெருங்கலியும் தீத்தார்க்குப்
பிஞ்சு வயசில்

பூமாமர் மாதை
பூச்சேத்துப் பாத்திருந்தா
பூச்சேத்த ஓவியம்போல்
போதமக்கள் கண்டிருந்தா
பெருமைபண்ணி வாழ்ந்திருந்தா

சில்லுன்னு பூக்கும்
சிவதலத்திப் பொண்பொறந்தா
குப்புன்னு பூக்கும்
கோத்திரத்தில் வாழ்ந்திருந்தா

பச்சைக்கொடி படரும்
பாக்கடலில் பொண்பொறந்தா
பச்சை வெலைமதிக்கும்
பாண்டியர்க்கு வாழ்ந்திருந்தா

நீலக்கொடி படரும்
நெலைகடலில் பொண்பிறந்தா
நீலம் கண்பார்க்கும்
நித்தியர்க்குப் பாரியின்னா

மண்ணாண்டா பொன்னாண்டா
மட்டத்தநா வாழ்ந்தா
மகுந்தமணை ஏறி
மகுந்த கலியாணம்
நம்ம மாசேனைகூட்டி
மகிழ்ச்சிபண்ணிச் செய்திருந்தா

மறுத்தும் ஒருக்கா
மாசேனை கூட்டி
மகுந்த கலியாணம்
மகிழ்ச்சி பண்ணிச் செய்திருந்தா
வருசந் திரும்பயிலே
வாவரசி ஆனமுன்னா

பெரியமணை ஏறிப்
பெரிய கலியாணம்
நம்ம பெருஞ்சேனை கூட்டிப்
பெருமை பண்ணிச் செய்திருந்தா
பிம்பும் ஒருக்கா

பெருஞ்சேனை கூட்டிப்
பெரிய கலியாணம்
பெருமைபண்ணிச் செய்திருந்தா
போதந் திரும்பயிலே
போரழகி ஆனமுன்னா

கூப்பிட்டாக் கேளாது
கோட்டைத் தலவாசல்
அழச்சிட்டாக் கேளாது
அடுப்படியும் ஆதாளியும்
சமைச்சால் தெரியாது
சத்திரமும் கோட்டைகளும்
எட்டாள் ஒசரமும்
இந்திரனார் கோட்டையும்
பத்தாள் ஒசரமும்
பாண்டியனார் கோட்டையும்

பெரிய மனையும்
பொன்பதிச்ச கோட்டையும்
பிரியமாத் தோணுதுன்னா
போகவே மாட்டனுன்னா
பேச்சொரைச்சு ஏச்சுவிட்டா

தகுந்த மனையும்
தனம்பதிச்ச கோட்டையும்
தாகமெத்தத் தோணுதுன்னா
சாகவே மாட்டனுன்னா
தாக்க சொல்லி ஏச்சுவிட்டா

மகுந்த மனையும்
மணிபதிச்ச கோட்டையும்
மனசாசை தோணுதுன்னா
மாளவே மாட்டனுன்னா
வார்த்தைசொல்லி ஏச்சுவிட்டா

பெத்த ஒசத்திபோல
புள்ளைமுடி தீத்தமகன்
பூலோகம் பேரோங்கப்
பூவளத்தா ஓவியமா

வளத்த ஒசத்திபோல
மஞ்சன்முடி தீத்தமகன்
வையகம் பேரோங்க
மலர்வளத்தா ஓவியமா

காடு மணமணங்கக்
கண்டாங்கி தீப்பறக்க
செடியே மணமணங்க
சித்தாடை தீப்பறக்க

ஆத்தங்கரை ஓரம்
அனல்வெளிச்சம் ஏதுமுன்னா
ஆசைமக்கள் அப்பத்தா
அருச்சுனவா மாது
அல்லியுட பூவாடை
அனல்பட்டு வேகுதும்பா
அனல்வெளிச்சம் தோணுதும்பா

தீத்தக்கரை ஓரம்
தீவெளிச்சம் ஏதுமுன்னா
செல்லமக்கள் அப்பத்தா
செல்லருடை மாது
சித்தடியா பூவாடை
தீப்பட்டு வேகுதும்பா
தீவெளிச்சம் தோணுதும்பா

OOO

## அம்மான் மகள்

மிகச் சிறப்பாக சீர்வரிசைகள் செய்து மணமுடிக்கப்பெற்று, மணமாகி ஓராண்டு முடிவதற்குள் மாமியார் கொடுமை தாங்காது தற்கொலை செய்து கொண்ட மாமன் மகளுக்கு, அவள் அழகையும், பண்பையும், மென்மையையும் கூறி, வயதான காலத்தில் பெற்றோரைக் கலங்க வைத்து, அம்மன் திருவிழா அன்றா இறக்க வேண்டும் எனக் கேட்டு அத்தை மகள் பாடியது.

சரியோ சரியுமில்லே
பிஞ்சான மாது
சாகுறநாள் இப்பஇல்லே
பொழுதோ சரியுமில்லே
போர்மாமன் மாது
போகுறநாள் இப்பஇல்லே

பெத்தாரும் போன
பொனம்பாக்கப் போனமுன்னா
பொறந்தையெல்லாம் போன
பொனத்தை நெனச்சமுன்னா
வளத்தாரும் போன
வனம்பாக்கப் போனமுன்னா
வளந்தையெல்லாம் போன
வனத்தை நெனச்சமுன்னா
மகுந்த மனையிலே
வருந்துவார் எல்லையிலே
மகுரவெள்ளம் சாமானை
வளவில் பரப்பிவச்சு
வயிரநகை சீர்குடுத்து
மாலையிட்டா ஓவியமா
மாலையிட்ட வருசம்திரும்பாமே
வனத்தை நெனச்சமுன்னே

பெரிய மனையிலே
போத்துவார் எல்லையிலே
போதவெள்ளம் சாமானைப்
பூமிப் பரப்பிவச்சுப்
பெரியநகை சீர்குடுத்துப்
பூவசைச்சா ஓவியமா
பூவசைச்ச போதந்திரும்பாமே
பொனத்தை நெனச்சமுன்னே
மாமி படுத்தினது
மனஞ்சகிக்கக் கூடாட்டா
வளந்தை வந்து சேராயா
மாதாவை நெனக்காம
மன்னரையும் எண்ணாமே
மாசுருக்காத் தானும்

மலர்வளத்துப் போனாயோ

பூமாமி படுத்தினது
பொறுக்க எணங்காட்டா
பொறந்தைவந்து சேராயா
பெத்தாரை நெனைக்காம
பெருமாளை எண்ணாமே
பெருஞ்சுருக்காத் தானும்
பூவளத்துப் போனாயோ

அன்னங்காள் பூங்கிளிகாள்
அழகர் கோபுரத்தின்மேலிருக்கும்
அழகுவச்ச பொன்கிளிகாள்
அழகர்மதுரையிலே அழகான
வீதியிலே
அல்லிவரக் கண்டீகளா?
ஆசைமொழி கேட்டீகளா?

சிண்டுகளா வண்டுகளா
செடிதுளைக்கும் பட்சிகளா
சொக்கர் கோபுரத்தின் மேலிருக்கும்
செகப்பு வச்ச பொன்கிளிகாள்
சின்னமதுரையிலே தென்மதுரை
வீதியிலே
சீதைவரக் கண்டீகளா?
சேதிமொழி கேட்டீகளா?

வண்டுகளா சிண்டுகளா
மரம்துளைக்கும் பட்சிகளா
மீனாட்சிஅம்மன்
மணிமண்டபத்தின்
மேலிருக்கும்
வயிரம் வச்ச பொன்கிளிகாள்
வண்ணமதுரையிலே வடமதுரை
வீதியிலே
மாதுவரக் கண்டீகளா?
வார்த்தைமொழி கேட்டீகளா?

புருவங் கருப்பொழியப்
பிம்பொன்னுங் கருப்பில்லே
மயிரே கருப்பொழிய
மத்ததொண்ணும் கருப்பில்லே

கூவிய சேவலுக்குக்
கொண்டையிலே மச்சமுண்டு
அரிக்கிற நிலாவுக்கும்
அதிலே மச்சமுண்டு

சீரிய நாகத்துக்கும்
செவியிலே கருப்புமுண்டு
ஓடுற தண்ணியிலே
ஒளிவு சுளிவுமுண்டு
நிக்கிற தண்ணியிலே
நெளிவு சுளிவுமுண்டு
குண்டு மணிக்குக்
கொஞ்சம் கருப்புமுண்டு

ஆறுன புத்தி
அமந்த கொணமுள்ளா
தேறுன புத்தி
தெளிந்த கொணமுள்ளா

பைய வழிநடப்பா
பனிபோல வாதெறப்பா
மெல்ல வழிநடப்பா
மெத்தனமா வாதெறப்பா
பைய நடந்தாலும்
பாதம் அசையாது
பனிப்புல்லு தேயாது

பெரிய வயதான
பெத்தாரும் தானும்
புத்தி களைக்கவச்சுப்
போனாச் சுகமும் உண்டோ

மகுந்த வயதான
வளத்தாரும் தானும்
மனசு களைக்கவச்சு

மன்னரையும் மயங்கவச்சு
மாண்டாச் சுகமும் உண்டா

இந்தநா விட்டாக்க
இன்னொருநா இல்லேன்னா
மகுந்தநா விட்டாக்க
மத்தொருநா இல்லேன்னா
பெரியநா விட்டாக்கப்
பிம்பொருநா இல்லேன்னா

ஏழூரும் காத்த
மேலப் பெரியநாயகி
செவ்வாய் நடக்கையிலே
அம்மன் கொலுவிருக்க
அடஞ்சா கைலாசம்
சாமி கொலுவிருக்கச்
சாஞ்சா கைலாசம்
எல்லாரும் போன
எல்லை கிடைக்கலியா
பலபேரும் போன
பாதை கிடைக்கலியா

**திருவிழா நடைபெறுகையில் அன்று இறந்தால், அந்த ஊரில் இறந்தவரின் பிணத்தை எரிக்காமல், ஊரை விட்டு வெகு தொலைவில் சென்று எரிப்பார்கள் என்ற வழக்கம் புலனாகின்றது.**

## சகோதரியின் கணவனுக்கு

**தன் சகோதரியை மங்கலமிழக்கச் செய்து, கைம்மைக் கொடுமைகளுக்கு ஆளாக்கிப் போன சகோதரியின் கணவன் இறந்த பொழுது கொழுந்தியாள் பாடியது.**

பொட்டழிஞ்சா மையழிஞ்சா
எம்பொன்னும் பொறப்பு
பொறக்கயிலே வச்ச
பொட்டை அழிச்சுவிட்டா
பொறந்திட்டு வச்ச
பூவைப் பறிச்செறிஞ்சா

மையழிஞ்சா பொட்டழிஞ்சா
என்கட்டிப் பொறப்பு
வளரயிலே வச்ச
மையை அழிச்சுவிட்டா
வளந்திட்டு வச்ச
மலரைப் பறிச்செறிஞ்சா

பொழிஞ்சாண்டார் எல்லையிலே
பெருவாரிக் காலமா
பிரியமுள்ள மாப்பிள்ளை
மதிச்சாண்டார் எல்லையிலே
மட்டத்த காலமா
மதிப்பான மாப்பிள்ளை
அன்னத்த நாளா
அதிட்டமுள்ள மாப்பிள்ளை

இட்ட தடுக்குக்கு
ஏத்த மணவாளரில்ல
வச்ச தடுக்குக்கு
மாது மணவாளரில்ல
போட்ட தடுக்குக்குப்
பொண்ணு மணவாளரில்ல

தங்கவில்லுத் துப்பாக்கி
சாகவுன்னா நாயமுண்டா
சானகியா மைக்கூந்தல்
தலைவிரிக்க நாயமுண்டா
சாகும் மொறையுமில்லே
சமுத்திரத்துத் துக்கமில்ல
சானகியா மைக்கூந்தல்
தலைவிரிக்க நாயமில்லே

பொன்னுவில்லுத் துப்பாக்கி
போகவுன்னா நாயமுண்டா
பொற்கொடியா மைக்கூந்தல்

பிரிச்சமுக நாயமுண்டா
போகும் மொறையுமில்லே
பொய்யைத் துக்கமில்ல
பொற்கொடியா மைக்கூந்தல்
பிரிச்சமுக நாயமில்லே

வெள்ளிவில்லுத் துப்பாக்கி
விமுகவுன்னா நாயமுண்டா
மெல்லிநல்லாள் மைக்கூந்தல்
விரிச்சமுக நாயமுண்டா
மாளும் மொறையுமில்லே
வையைத் துக்கமில்ல
மெல்லிநல்லாள் மைக்கூந்தல்
விரிச்சமுக நாயமில்லே

பொட்டுக்கும் பட்டுக்கும்
பொருத்தமான பொண்ணுல்ல
பொட்டுக்கும் பட்டுக்கும்
பொழைவரச் சொன்னதென்ன

பட்டுக்கும் பொட்டுக்கும்
பவுரான பொண்ணுல்ல
பட்டுக்கும் பொட்டுக்கும்
பாடுவரச் சொன்னதென்ன

தெருவில் அலங்காரி
தேர்மேல் கண்ணாடி
செகசனத்து ஒய்யாரி
வளவில் அலங்காரி
வாசல்மேல் கண்ணாடி
மாசனத்து ஒய்யாரி
மாதுதடை ஆயிட்டா

சாலைவழி வந்தாலும்
தள்ளிவர வேணுமென்பார்
வீதிவழி வந்தாலும்
வெலகிவர வேணுமென்பார்

கோதி முடிச்சு மல்லியப்பூவச்சு
மளமளன்னு வந்தெறங்கும்
மாது தடை ஆயிட்டா

சீவிமுடிச்சுச் செம்பகப்பூவச்சுச்
சிலுசிலுன்னு வந்தெறங்கும்
சீதை தடை ஆயிட்டா

குத்துவெளக்கு வைக்க இருந்த
கோதை தடை ஆயிட்டா
மணிவெளக்கு வைக்கஇருந்த
மாது தடைஆயிட்டா
நெலைவெளக்கு வைக்க இருந்த
அல்லி தடை ஆயிட்டா
கிலேட்டு வெளக்கு வைக்க இருந்த
சீதை தடை ஆயிட்டா

இந்திரனார் தேவி
எதுப்பட்டுப் போனாக்கச்
சந்திரனார் தேவியெல்லாம்
சகுனத்தடை என்பாக

முத்தளக்க நாழியின்னு
முன்னவே நின்னாளே
பவளமளக்க நாழியின்னு
பக்கம் வந்து நின்னாளே
உப்பளக்க நாழியின்னு
ஒதுங்கிப் போய் நிக்க வச்சா
தவிடளக்க நாழியின்னு
தள்ளிப்போய் நிக்கவச்சா
பதரளக்க நாழியின்னு
பக்கம்போய் நிக்கவச்சா

விதவைகளுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் சித்திரிக்கப்படுகின்றன.

OOO

தீபாவளியன்று இறந்த சகோதரியின் கணவனுக்கு, விலையுயர்ந்த ஆடை அணிகலன்களுடன் மகிழ்ச்சியாக வாழ்ந்த தன் சகோதரியை, மங்கலமிழக்கச் செய்தாரே எனவும்

வா(ழ்)வரசியாக மாளத் தன் சகோதரி தவம் செய்யவில்லை எனவும், கொழுந்தியாள் வருந்திப் பாடியது.

மையழிஞ்சா பொட்டழிஞ்சா
பொன்னும் பொறுப்பு
வளந்தநெறம் பேந்துவிட்டா
மட்ட வயசில்
மாதை வசமழிச்சு
வனம்பாக்கப் போனமுன்னா

பொட்டழிஞ்சா மையழிஞ்சா
பொன்னும் பொறப்பு
பொறந்தநெறம் பேந்துவிட்டா
பிஞ்சு வயசில்
பொண்ணை நெறங்கொலைச்சுப்
பொனம்பாக்கப் போனமுன்னா

வருசம் ஒருக்கா
வருகிற தீவாளி
மகிழ்ச்சியுள்ள நாளுமுன்னு
மனசு நெனச்சிருந்தோம்
மாளறநாள் இப்பவுன்னா

போதம் ஒருக்கா
பெருமையுள்ள தீவாளி
பெருமையுள்ள நாளுமுன்னு
புத்தி நெனச்சிருந்தோம்
போகுறநாள் இப்பவுன்னா

தலையை வகுரயிலே
எங்கையா வாசல்
என்சமத்தி மாதா
தாழம்பூச் சூடயிலே
தலையில் இருந்தெழுத்தைத்
தாயார் அறியலியே

மயித்தை வகுரயிலே
சீரிட்ட செல்லி
மல்லியப்பூச் சூடயிலே
மயித்தில் இருந்தெழுத்தை
மாசமத்தி காணலியே

ஆலைக் கரும்புவெட்டி
ஆல்வீடு ஊஞ்சலிட்டு
ஐத்தை மடிமேலும்
ஐயாக்கள் தோள்மேலும்
அரிதா வளந்தமக
தூருக் கரும்புவெட்டித்
தோள்மேல் ஊஞ்சலிட்டு
சொகுசா வளந்தமக

மாறாப்பைப் பாத்தா
மாதுமொகம் பாத்தா
மனஞ்சகிக்கக் கூடலியே
மகுருதே கண்ணீரு

போர்வையைப் பாத்தா
பொண்ணுமொகம் பாத்தாப்
புத்தி எணங்கலியே
பொங்குதே கண்ணீரு

மண்ணில் விழுகையிலே
மக்களெல்லாம் சின்னமுன்னு
மனசி நெனக்கலியா
மாதவசுப் பொண்ணு
மலர்கொடுக்க மாட்டான்னு
வாங்கவந்தான் தன்னிடத்தில்
வார்த்தைசொல்ல மாட்டலியா

பூமி விழுகையிலே
புள்ளையெல்லாம் சின்னமுன்னு
புத்தி நெனக்கலியா
பெருந்தவசுப் பொண்ணு
பூக்கொடுக்க மாட்டான்னு
பிடிக்க வந்தான் தன்னிடத்தில்
பேச்சொரைக்க மாட்டலியா

ஆரமுங் கொப்பும்
அழகுந் திமுதிமுங்க
அவ்அடிக்கழுத்தைக் கட்டிய
ஆபரணம் ஜோதிமின்னும்
மின்னாரம் மின்னும்
மொகத்தின் நெழக்காட்டும்
மோதிரக்கால் ஜோதிமின்னும்
பின்னாரம் மின்னும்
பொடதி நெழக்காட்டும்

அண்டாவுத் தண்ணியிலே
அல்லி நெழக்காட்டும்
கொப்பரைத் தண்ணியிலே
கோதை நெழக்காட்டும்
மரக்காலுத் தண்ணியிலே
மாது நெழக்காட்டும்

இப்ப ஆகாநகைக்கும்
அருஞ்சிறைக்கும் ஆளானா
இப்பப் போடா நகைக்கும்
போர்வைக்கும் ஆளானா
இப்பவேண்டா நகைக்கும்
வேர்வைக்கும் ஆளானா
பொல்லாப் பொருத்துப்
பொருத்தத் தெரியலியே
இதப்பொருத்தாட்டி வெக்கமில்ல
போகுமட்டும் துக்கமில்ல
வாயைப் பொருத்தி
வளையத் தெரியாதே
இதவளையாட்டி வெக்கமில்ல
வாழுமட்டும் துக்கமில்ல

நாலுகால் ஊணி
நவ்வாக் கொழைபோட்டு
நாழியிலே நெல்லு அள்ளி
கத்திரிக்காய் குத்திவச்சு
ஆச்சாச்சு எம்பாக
ஆபரணம் வாங்கிவைக்கப்
பொழுதாச்சு எம்பாக
பூணாரம் வாங்கிவைக்க
மணியாச்சு என்பாக
மங்கிலியம் வாங்கிவைக்க

சங்கூதிக் கட்டிய
தாலிபறி போகுதும்பா
அரிய துரைகள்எல்லாம்
அள்ளிவச்ச மங்கிலியம்
அஞ்சுஊர் நகரத்தார்
அள்ளிவச்ச மங்கிலியம்
துரைகள் அரைகள் எல்லாம்

தொட்டுவச்ச மங்கிலியம்
தொண்ணூறூர் நகரத்தார்
தொட்டுவச்ச மங்கிலியம்
ஆரொருதர் காணாம
அவுத்துவைக்கச் சம்மதிச்சா
மத்தொருதர் காணாம
வாங்கிவைக்கச் சம்மதிச்சா

அச்சிக நச்சிப்பூ
ஆரணங்கு நற்பொடவை
அலறிவந்து மேவிழுக
என் ஆசைப் பொறப்பு
அநேகதவஞ் செய்யலியே

கொச்சிக நச்சிப்பூ
கோரங்கி நற்பொடவை
கொண்டுவந்து மேவிழுக
என் கட்டிப்பொறப்பு
கோடித்தவம் செய்யலியே

விதவையர் துயரம், விதவையர்க்கு செய்யும் சடங்கு இப்பாடலில் வெளிப்படுகின்றன.

ooo

## சகோதரியின் மகனுக்கு

சுவீகாரப் புத்திரனாக வந்த,

சகோதரியின் மகன், பெருமாள் கோவிலுக்கு வழிபடச் சென்ற போது குளத்தில் தவறி விழுந்து இறந்த போது, இளம் மனைவியைத் தவிக்கவிட்டு இறந்தானே எனப் பெரியம்மா பாடியது.

பொழுதோ சரியுமில்லே
பொறவியுட மஞ்சன்
போறதுக்கு நாளுமில்லே
நாளோ சரியுமில்லே
வளந்தையுட மஞ்சன்
நடப்பதுக்கு நாளுமில்லே

தலையாத் தலமொறையா
தத்துவமா மாமூலா
தத்தெடுத்துப் பாத்தெடத்தே
வழியா வழிமொறையா
வாங்கிவச்சுப் பாத்தெடத்தே

மாசேனைக் குள்ளாக
வாங்கிவச்சுப் பாத்தாக்க
வளத்துமொதல் ஆகலைன்னு
மத்தொருத வாச
வளப்பார் தலக்கெடையை
மச்சம் குடுத்து
வாங்கிவச்சுப் பாத்தாக்க
மஞ்சன்மொதல் ஆவான்னா
மத்தொருத வாச
மஞ்சன்அழச்சு வந்தா

பிதிர்வழிக் குள்ளாகப்
புடிச்சுவச்சுப் பாத்தாக்கப்
பெத்துமொதல் ஆகலைன்னு
பிம்பொருத வாச
பெறுவார் தலக்கெடையைப்
பொன்னைக் குடுத்துப்
புடிச்சுவச்சுப் பாத்தாக்கப்
பெத்துமொதல் ஆவான்னா
பிம்பொருத வாச
புள்ளைஅழச்சு வந்தா

பொன்னும் பொறப்பு
புடிச்சுவந்த மஞ்சனுக்கும்
பிம்பொருத வாசல்
பூவைசைக்கப் போகாமப்
போதமொறை வாங்கிப்
புதுவயிரம் சீர்வாங்கிப்
போர்மாமன் பேத்தியைப்
பொண்ணழச்சுக் கூட்டிவந்தா
அந்தப் பொண்ணை மணங்
கொள்ளாம
பொட்டொசந்த தம்பி
பூமிமணங் கொண்டமுன்னான்
பெருமாள் அனுபோகம்
அறியாத பொய்க்கடியா

வருசப் பொறப்பு
வாங்கிவந்த மஞ்சனுக்கும்
மத்தொருத வாசல்
மாலையிட்டுப் பாராமே
மகுரமொறை வாங்கி
மணிவயிரம் சீர்வாங்கி
மாமருடை பேத்தியை
மாதழச்சுக் கூட்டிவந்தா
அந்தமாதை மணங்கொள்ளாம
வடிவொசந்த தம்பி
மண்ணைமணங்
கொண்டமுன்னான்
மன்னர் அனுபோகம்
அறியாத பொய்க்கடியா

வடிவொசந்த மஞ்சன்
வையை எறங்கி
வனம்பாக்கப் போனமுன்னான்
பொறவியுட மஞ்சன்
பொய்யை எறங்கிப்
பொனம்பாக்கப் போனமுன்னான்

வளந்தையுட மஞ்சன்
மாரளவு தண்ணியிலே
வகைதப்பிப் போனமுன்னான்
கழுத்தளவு தண்ணியிலே
கைதப்பிப் போனமுன்னான்
இடுப்பளவு தண்ணியிலே
எடறியுமே போனமுன்னான்

காடா தலகாணி
கம்மாயா பஞ்சுமெத்தை
செடியா தலகாணி
செய்வரப்பா பஞ்சுமெத்தை
வாய்க்காலா தலகாணி
வயவரப்பா பஞ்சுமெத்தை

வருசக் கருணா
வடிவொசந்த தம்பியோ
மாயனுடை வாசல்
வாரியுங்கப் போகயிலே
வையை எறங்கையிலே
மட்டத்தி மாலைகொண்ட
மாது நெனவோடலியா
மறுத்து மொருக்கா
வளத்தா நெனவோடலியா
மட்டத்து மாது
மாது தெகைச்சமுக
மாண்டாச் சுகமும் உண்டோ

பொன்னா கருணா
பொட்டொசந்த தம்பியோ
பெருமாளுடை வாசல்
புடிச்சுங்கப் போகயிலே
பொய்யை எறங்கையிலே
பிஞ்சிலே மாலைகொண்ட
பொண்ணு நெனவோடலியா
பின்பு மொருக்கா
பெத்தா நெனவோடலியா
பிஞ்சான மாது
புத்தி தெகைச்சமுகப்
போனாச் சுகமும் உண்டோ

ஆறுன்னா ஆறலியே
அவசரத்தே மூட்டியதீ
தீருன்னா தீரலியே
சீக்கிரத்தே மூட்டியதீ.

OOO

பெற்றோர்க்கு முன்மாண்ட தன் சகோதரி மகனுக்கு, மனைவியை மங்கலமிழக்கச் செய்து மாண்டதையும், அவன் கட்டிய வீட்டின் பெருமையையும், அவன் இறுதி ஊர்வலம், சடங்குகள் சிறப்பாக நடந்ததையும் கூறி சித்தி பாடியது.

நாளுஞ் சரியாச்சா
நடப்பதுக்கு நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா
பொறவியுட மஞ்சன்
போறதுக்கு நாளாச்சா

நான்பொறந்த செல்வி
பேருந்தவமோ தானிருந்து
புள்ளை ஒருதனையும்
புலந்திரனைக் கண்டிருந்தா

தவமோ தவமிருந்து
மஞ்சன் ஒருதனையும்
மந்திரியைக் கண்டிருந்தா

பெத்தாரைப் பாவியிங்கப்
பெத்தார்க்கு முந்தியிட்டான்
வளத்தாரைப் பாவியிங்க
வளத்தார்க்கு முந்தியிட்டான்
இந்திரரைப் பெற
என்னதவம் செய்தாளோ
இந்திரர்க்குப் பாலூட்ட
என்னதவம் செய்தாளோ
இந்திரரை என்மகன்ங்க

என்ன தவம் செய்தாளோ
இந்திரரைக் கொள்ளையிட
என்னபொழை செய்தாளோ

சந்திரரைப் பெற
என்னதவம் செய்தாளோ
சந்திரர்க்குப் பாலூட்ட
என்னதவம் செய்தாளோ
சந்திரரை என்மகன்ங்க
தவங்கள்மெத்தச் செய்தாளோ
சந்திரரைக் கொள்ளையிடத்
தனிப்பாவம் செய்தாளோ

தவழயிலே இட்ட
தண்டை சலங்கைகளும்
நடக்கயிலே இட்ட
நச்சிலம்பும் பாடகமும்
தொட்டியிலே இட்ட
சோதிமுத்தும் பாடகமும்
சிந்தியிட்டா சிந்தியிட்டா
மார்க்கண்டன் தேவி
சிறுவயிரம் சிந்திட்டா
காசிக் கமலம்
கனவயிரம் சிந்தியிட்டா
மதுரைக் கமலம்
மணிவயிரம் சிந்தியிட்டா
செஞ்சிக் கமலம்
சிறுவயிரம் சிந்தியிட்டா
ஆக்குந் தலங்களிலே
ஆபரணம் சிந்தியிட்டா
பொங்குந் தலங்களிலே
பூணாரம் சிந்தியிட்டா

பத்துவண்டி மஞ்சளிலே
மார்க்கண்டன் தேவி
பலகை மஞ்ச பாத்தெடுப்பா
எட்டு வண்டி மஞ்சளிலே
எசஞ்சமஞ்ச பாத்தெடுப்பா
அஞ்சுவண்டி மஞ்சளிலே
அரக்கு மஞ்ச பாத்தெடுப்பா

பொழுதோ விடியுமுன்னே
பூவோ மலருமுன்னே
பொற்கோழி கூவுமுன்னே
பூரண சூரியன்
பூத்துதயம் ஆகுமுன்னே
பூலோகத்தி பொண்கனெல்லாம்
பூமி தெளிக்குமுன்னே
பூக்கோலம் போடுமுன்னே
பூசிக் குளிச்சிருவா
பொண்ணு சிலுசிலுன்னு
பூமித் திரிவாளே

மலரோ மலருமுன்னே
மைக்கோழி கூவுமுன்னே
வருண பகவான்
வந்துதயம் ஆகுமுன்னே
வையத்தி பொண்களெல்லாம்
வாசத் தெளிக்குமுன்னே
மாக்கோலம் போடுமுன்னே
மஞ்சக் குளிச்சிருவா
மாது சிலுசிலுன்னு
வளவித் திரிவாளே

சீவி முடிச்சதலை
செண்டுமல்லி வச்சகொண்டை
அள்ளி முடிச்சதலை
அடுக்குமல்லி வச்சகொண்டை
வாரி முடிச்சதலை
மல்லியப்பூ வச்சகொண்டை
கோதி முடிச்சதலை
கொடமல்லி வச்சகொண்டை

மைத்தால் ஒழக்கெண்ணெ
வாரி முடிப்பாளே
செடியால் ஒருமயிரு தம்பி
சிக்குப்பட வச்சிட்டான்

மாதுடுத்துங் கண்டாங்கி
மஞ்சக் கரைக்கோடு
மான்போட்ட முந்தாங்கி
மயிலனையா கண்டாங்கி

சீதையுடுத்துங் கண்டாங்கி
செகப்புக் கரைக்கோடு
சிங்கம்போட்ட முந்தாங்கி
சீதையுட கண்டாங்கி

கோதையுடுத்துங் கண்டாங்கி
கும்பகோணம் கண்டாங்கி
கோடெழச்ச கண்டாங்கி
கோதையுட கண்டாங்கி

கட்டழகி நெத்தியிலே
கஸ்தூரிப் பொட்டிருக்கும்
மயிலனையா நெத்தியிலே
மாணிக்கப் பொட்டிருக்கும்
சித்தடியா நெத்தியிலே
செந்தூரப் பொட்டிருக்கும்

மாவேலை செஞ்சாலும்
மையழிய மாட்டாது
மாறிப் படுத்தாலும்
மையழிய மாட்டாது
மக்களுடை மக்கள்
மடியிற் பொரண்டாலும்
மையழிய மாட்டாது
மக்யாநாக் காலமே
மஞ்சக் குளிக்குமட்டும்
மையழிய மாட்டாது
வருசக் கருணன்
மணிவயிரத் தம்பி
மன்னன் மடிஞ்சதினால்
மையழிஞ்சும் போயிருச்சு

பெருவேலை செஞ்சாலும்
பொட்டழிய மாட்டாது
பொரண்டு படுத்தாலும்
பொட்டழிய மாட்டாது
பொண்களுடைய மக்கள்
பொரண்டு விழுந்தாலும்
பொட்டழிய மாட்டாது
பிம்புநாக் காலமே
பூசிக் குளிக்குமட்டும்
பொட்டழிய மாட்டாது
பொன்னா கருணன்
புதுவயிரத் தம்பி
பெருமா மடிஞ்சதினால்
பொட்டழிஞ்சும் போயிருச்சு

மதிச்சாண்டார் எல்லையிலே
வாழ்ந்திருந்தார் கோட்டையிலே
வயிரங் கலியடிச்ச
மணிவயிரத் தம்பி
வாழ்ந்திருந்தான் சித்திரமா

பொலிஞ்சாண்டார் எல்லையிலே
புண்ணியவார் கோட்டையிலே
பொன்னுங் கலியடிச்ச
புதுவயிரத் தம்பி
பொலிஞ்சிருந்தான் சித்திரமா

மதிச்சாண்டார் எல்லையிலே
வாழ்ந்திருந்தார் கோட்டையிலே
பத்துக்கால் பொற்தூணு
பசும்பொன் மணித்தூணு
பாஞ்சாலன் சேத்தமனை

எட்டுக்கால் பொற்தூணு
இன்ப மணித்தூணு
இந்திரவான் சேத்தமனை

அஞ்சுகால் பொற்தூணு
ஐம்பொன் மணித்தூணு
அருச்சுனவான் சேத்தமனை

கல்லாலே வீடுகட்டிக்
கனத்த மொகப்புவச்சுக்
கண்டா மொகந் தெரியும்
காலுவச்சா முத்துதிரும்
கட்டழகன் சேத்தமனை

பளிங்கால் வீடுகட்டிப்
பலகை மொகப்புவச்சு
பாத்தா மொகந்தெரியும்
பாதம்வச்சா முத்துதிரும்
பாஞ்சாலன் சேத்தமனை

வளவிலேயும் வீத்திருந்தா
வாழமரக்காத்து வரும்
மல்லியப்பூ மணக்கும்
தெருவோரம் வீத்திருந்தா
தென்னைமரக் காத்துவரும்
செம்பகப்பூ மணக்கும்
சாலையிலே வீத்திருந்தா
சவுக்கமரக் காத்துவரும்
சம்பங்கிப்பூ மணக்கும்

மதிச்சாண்டார் எல்லையிலே
வாழ்ந்திருந்தார் கோட்டையிலே
வயிரங் கலியடிச்ச
மணிவயிரத் தம்பி
வருசக் கருணனெல்லாம்
மஞ்சன் பெரிசானாக
மதிச்சாண்டார் எல்லையெல்லாம்
மாதழைச்சுக் கூட்டி வந்தான்
மாது கனதிக்கெல்லாம்
மகுரக் குடுத்து
வருந்துவார் எல்லையிலே
மலர்சேத்துக் கூட்டிவிட்டான்
பொன்னுங் கலியடிச்ச
புதுவயிரத் தம்பி
பொன்னா கருணனெல்லாம்
புள்ளை பெரிசானாக
பொலிஞ்சாண்டார்
எல்லையெல்லாம்
பொண்ணழைச்சுக் கட்டிவந்தான்
பொண்ணு கனதிக்கெல்லாம்
போதக் குடுத்து
போத்துவார் எல்லையிலே
பூச்சேத்துக் கூட்டிவிட்டான்

மலர்சேத்த மக்களெல்லாம்
வளத்துவரக் கண்டிருந்தான்
மணிக்காரும் வச்சிருந்தான்
வையகம் பேரோங்க
வாழ்ந்திருந்தான் சித்திரமா

பூச்சேத்த மக்களெல்லாம்
பெத்துவரக் கண்டிருந்தான்
பெசல்காரும் வச்சிருந்தான்
பூலோகம் பேரோங்கப்
பொலிஞ்சிருந்தான் சித்திரமா

மதிச்சாண்டார் எல்லையிலே
மாது கனதியெல்லாம்
மார்க்கண்டன் தேவி எல்லாம்
மாசேனை அத்தனையும்
வையை தெரட்டி வந்தா
வாசல் நெறையவச்சா
பொலிஞ்சாண்டார் எல்லையிலே
பொண்ணு கனதியெல்லாம்
புலந்திரனார் தேவி எல்லாம்
பெருஞ்சேனை அத்தனையும்
பொய்யை தெரட்டி வந்தா
பூமி நெறையவச்சா

மகுந்த மகளும்
மச்சைப் பிரிச்சுவந்தா
மணிவயிரத் தங்கச்சி
ஒட்டனார் பண்ணிய
ஒரலை நிமித்துவச்சு

தச்சனார் பூண்போட்ட
சாதிப் பனைஓலக்கை
சாத்தி நிறுத்தி வச்சு
உருண்டை மணிச்சம்பாவை
ஒரல் எரம்பக் கொட்டிவச்சுச்

சித்தடியா முத்தொலக்கை
குத்தியிட்டா சித்திரமா
சின்னச் சிறுசுளகு
கொழிச்சாளே சித்திரமா

மயிலனையா முத்தொலக்கை
குத்தியிட்டா சித்திரமா
வண்ணச் சிறுசுளகு
கொழிச்சாளே சித்திரமா

ஒசந்தவெலைப் பட்டிலே
உமிப் பறக்க குத்தியிட்டா
தகுந்தவெலைப் பட்டிலே
தவிடு அணையக் குத்தியிட்டா
அரிசி ஒரு பொறமா
அழகுபண்ணிக் குத்தியிட்டா
தவிடு ஒரு பொறமாச்
சமதைபண்ணிக் குத்தியிட்டா

மதிச்சாண்டார் எல்லையிலே
வாழந்திருந்தார் கோட்டையிலே
வருசக் கருணனை
மணிரதத்தே தூக்கிவச்சு
நாட்டார் நகரத்தார்
முன்ன விட்டு
ஊரார் ஒறமுறையார்
உலகத்தார் முன்னவிட்டு
தேரைப் புடியுமுன்னா
தென்கோடி சாயாமே
தேர்புடிச்ச பேர்களுக்கும்
செவந்திப்பூச் செண்டெறிஞ்சா
வடத்தைப் புடியுமுன்னா
வடகோடி சாயாமே
வடம்புடிச்ச பேர்களுக்கும்
மல்லியப்பூச் செண்டெறிஞ்சா

பாதையிலே போற
பச்சைரதம் ஆருமுன்னா
பலநாள் அரசாண்ட
பாண்டியரைப் பெத்திருந்தார்
பச்சைரதம் போகுதுன்னா

சாலையிலே போற
தங்கரதம் ஆருமுன்னா
சரியா அரசாண்ட
சமத்தரெல்லாம் பெத்திருந்தார்
தங்கரதம் போகுதுன்னா

வீதியிலே போற
வெள்ளிரதம் ஆருமுன்னா
வெகுநாள் அரசாண்ட
வெசயரெல்லாம் பெத்திருந்தார்
வெள்ளிரதம் போகுதுன்னா

இடுகாடு தானிறக்கி
இனியபசு தானம்பண்ணி
சுடுகாடு தானிறக்கிச்
செவலைப்பசு தானம் பண்ணி

சுத்தி வலமும் வந்து
சூரியனைத் தெண்டனிட்டு
பக்கம் வலமும் வந்து
பகவானைத் தெண்டனிட்டுக்
கட்டை வலமும் வந்து
காமாட்டில் போட்டு ஒடைச்சு

தங்கமுத்துக் கையாலே
தம்பிமார் தகப்பனுக்குத்
தணல்வளத்தா சித்திரமா
வயிரமுத்துக் கையாலே
வளத்தாரை நோக்கி
மலர்வளத்தா சித்திரமா

ஆத்தங் கரைகளிலே
அனல்வெளிச்சம் ஆருதுன்னா
அல்லி அரிசிகொண்டு
அரிராமர் கொள்ளி கொண்டு
ஆண்டிருந்தார் பத்தி
அனல்கெடந்து வேகுதுன்னா

தீத்தக் கரைகளிலே
தீ வெளிச்சம் ஏதுமுன்னா
சீதை அரிசிகொண்டு
சீராமர் கொள்ளிகொண்டு
தெசையுள்ளார் பத்தி
தீக்கெடந்து வேகுதுன்னா

அங்கத்து எலும்பெடுத்து
லிங்கத்துப் பூசைபண்ணி
அலைகடலில் சேக்கவுன்னு
அருச்சுனரைப் பெத்திருந்தா

பாக்கடலில் சேக்கவுன்னு
பாண்டியரைப் பெத்திருந்தா
காசியிலே சேக்கவுன்னு
கருணரெல்லாம் பெத்திருந்தா

எள்ளுந் தண்ணியும்
எரைக்க வுன்னு
இந்திரரைப் பெத்திருந்தா

திங்கத் தெவசம்
கொடுக்க வுன்னு
செல்வரையும் பெத்திருந்தா

நகரத்தார் மகளிர் அணியும் விலையுயர்ந்த ஆடை, அணிகலன்கள் மகளிரின் ஒப்பனை, வீட்டமைப்பு சிறப்பு ஆகியவை இடம் பெற்றுள்ளன. இறுதி ஊர்வலம், இறப்பை ஒட்டிய சடங்குகள் திவசம் வரை விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

ΟΟΟ

## சகோதரி மகளுக்கு

திருமணமாகுமுன், வழிபடச் சென்ற தலத்தில் பெற்றோரும் காணாது திடீரென்று கண் மறைந்த சகோதரி மகளுக்குச் சித்தி பாடியது.

சுருக்காய் இருந்ததா
சுந்தரத்தேர் ஏறினதும்
செகப்புரதம் ஓடினதும்
சோதிநதி கண்டதும்

கடுகாய் இருந்ததா
கற்பூரத்தேர் ஏறினதும்
கடசல்ரதம் ஓடினதும்
காசி நதி கண்டதும்

வெரசாய் இருந்ததா
வெங்கலத்தேர் ஏறினதும்
வெள்ளிரதம் ஓடினதும்
வில்வநதி கண்டதும்

கொம்பின் மேலிருந்த
குயில்போல் பறந்துவிட்டா
செடியின் மேலிருந்த
சிட்டாப் பறந்துவிட்டா
மரத்தில் மேலிருந்த
மயில்போல் பறந்துவிட்டா
கடுகு உருண்ட நேரமில்ல
காலன்வந்து சூழ்ந்ததின்னா
மொளகுஉருண்ட நேரமில்ல
மோகம் வந்து சூழ்ந்ததின்னா
எள்ளுருண்ட நேரமில்ல
எமன்வந்து சூழ்ந்ததின்னா

போதப் பொறந்தெடுத்தே
பின்னிமக்கள் கண்டெடுத்தே
பொண்ணு கடைசாரிக்குப்
புதுவயிரஞ் சேத்து வந்தா

பூவசைச்சுப் பாக்கவுன்னா
புதுவயிரஞ் சீர்குடுத்துப்
போதமொறை குடுத்துப்
பூவசைச்சுப் பாக்கலியே
பெரியதலம் வந்தமக
பெத்தார் அறியாமப்
போகநாக் கேட்டமுன்னா
மகுரப்பொறந் தெடத்தே
மாத்திமக்க கண்டெடுத்தே
மாது கடைசாரிக்கு
மணிவயிரஞ் சேத்துவந்தா
மாலையிட்டுப் பாப்பமுன்னா
மணிவயிரஞ் சீர்குடுத்து
மகுரமொறை குடுத்து
மாலையிட்டுப் பாக்கலியே
மகுந்ததலம் வந்தமக
வளத்தார் அறியாமே
மாளநாக் கேட்டமுன்னா

மகுரவெள்ளஞ் சேத்ததுவே
வளவில் பரப்பலியே
மாசேனை கூட்டலியே
வையகத்துக் காட்டலியே
மட்டமுள்ள மங்கை
மாலைமணங் கொள்ளாம
மண்ணைமணங் கொண்டமுன்னா
போதவெள்ளம் சேத்ததுவே
பூமி பரப்பலியே
பிதிர்வழி கூட்டலியே
பூலோகத்துக் காட்டலியே
பிஞ்சான மங்கை
பூவைமணங் கொள்ளாம
பூமிமணம் கொண்டமுன்னா

OOO

## சகோதரியின் மருமகனுக்கு

சகோதரியின் மகளை மங்கலமிழக்கும்படி மாண்டு போன சகோதரியின் மருமகனுக்கு, அவன் மனைவி கணவன் இருக்கும்போது அணிந்து மகிழ்ந்த ஆடை, அணிகலன் முதலியவற்றை அவன் மறைவினால் இழந்து, கணவன் பிரிவால் சோர்ந்து போனாளே என்று பெரியமாமியார் பாடியது.

பொட்டழிஞ்சா மையழிஞ்சா
என்பொறப்பொடைய மாது
பொண்ணோ தலகொலஞ்சா
மையழிஞ்சா பொட்டழிஞ்சா
என்வளப்புடைய மாது
மாதோ தலகொலஞ்சா

மட்ட வயசில்
மாதை வசமழிச்சு
வனம்பாக்கப் போனமுன்னா
பிஞ்சு வயசில்
பொண்ணை நிறங்கொலைச்சுப்
பொனம்பாக்கப் போனமுன்னா

மாறாப்பைப் பாத்தா
மாது மொகம்பாத்தா
மனஞ்சகிக்கக் கூடலியே
மகுருதே கண்ணீரு
போர்வையைப் பாத்தா
பொண்ணு மொகம்பாத்தா
புத்தி சகிக்கலியே
பொங்குதே கண்ணீரு

மகராசா மக்களுக்கு
வந்தவிதி போகலியே
தருமவான் மக்களுக்குத்
தலைவிதி போகலியே

பங்குன்னு சொல்லிப்
பகுந்தான் ஒடையாளி
கூறுன்னு சொல்லிக்
குறிச்சான் ஒடையாளி

மச்சம் பிரிச்சாப்போல்
வளந்ததிலே பேர்பாதி
மையழியக் காத்திருந்தா
மாது இருபேரும்
மையழிஞ்சு போனமுன்னா

பொன்னப் பிரிச்சாப்போல்
பொறந்ததிலே பேர்பாதி
பொட்டழியக் காத்திருந்தா
பொண்ணு இருபேரும்
பொட்டழிஞ்சு போனமுன்னா

நேரே வகுப்பெடுப்பா
நெருஞ்சிக்காய் பொட்டிடுவா
சைடு வகுப்பெடுப்பா
சந்தனப் பொட்டிடுவா
கோண வகுப்பெடுப்பா
குங்குமப் பொட்டிடுவா
பக்கம் வகுப்பெடுப்பா
பகளம்போல் பொட்டிடுவா

சீவாம இருந்தாலும்
சிலும்பாது ஒருமயிரு
கோதாம இருந்தாலும்
கொலையாது ஒருமுடியும்

கொண்டையில் மேல்வச்ச
குஞ்சம் பறந்தசையும்
மயித்தின் மேல்சூடிய
மாலை துவண்டாடும்

பட்டுக் கலகலங்கும்
பாடகக்கால் சோதிமின்னும்
பட்டை உரியவச்சா
பெரும்பணுதி மாத்தவச்சா

சீலை கலகலங்கும்
சிறுபணுதி சோதிமின்னும்
சீலை உரியவச்சா
சிறுபணுதி மாத்தவச்சா

ஆடை பளபளங்கும்
ஆபரணம் சோதிமின்னும்
ஆடை உரியவச்சா
ஆபரணம் மாத்தவச்சா

சீதை தலைகொலஞ்சா
சித்தடியா பட்டுரிஞ்சா
அல்லி தலைகொலஞ்சா
ஆரணங்கு பட்டுரிஞ்சா
கோதை தலைகொலஞ்சா
கொம்பனையா பட்டுரிஞ்சா

காப்புக் கலகலங்கும்
காதோலை சோதிமின்னும்
கன்னத்து நெழக்காட்டும்
மூக்குத்தி மின்னும்
மொகத்து நெழக்காட்டும்
மின்னாரம் மின்னும்
மோதிரக்கால் சோதிமின்னும்
பின்னாரம் மின்னும்
பொடதி நெழக்காட்டும்

சிந்தியிட்டா சிந்தியிட்டா
சீமைக் கமலம்
சிறுவயிரஞ் சிந்தியிட்டா
நாட்டுக் கமலம்
நல்வயிரஞ் சிந்தியிட்டா
ஊர்க் கமலம்
உள்வயிரஞ் சிந்தியிட்டா
செஞ்சிக் கமலம்
சிறுவயிரஞ் சிந்தியிட்டா

ஆக்குந் தலங்களிலே
ஆபரணம் சிந்தியிட்டா
பொங்குந் தலங்களிலே
பொன்னாரஞ் சிந்தியிட்டா

வடிக்கும் தலங்களிலே
மங்கிலியஞ் சிந்தியிட்டா

ஆபரணம் சிந்துவதை
அள்ளவசம் அத்துவிட்டா
அள்ளிக் கோத்தாலும்
அணையாக் கழுத்தில்ல

பூணாரஞ் சிந்துனதைப்
பொறக்கவசம் அத்துவிட்டா
பொறக்கிக் கோத்தாலும்
பூட்டாக் கழுத்தில்ல

கத்திரிக்கா பச்சைநெறம்
கருணர்கைப் பூமாலை
கானலுக்குச் சோம்பாதா
கருணருக்குச் சோம்பியிட்டா

வெள்ளரிக்காய் பச்சைநெறம்
வீமர்கைப் பூமாலை
வேனலுக்குச் சோம்பாதா
வீமருக்குச் சோம்பியிட்டா

 OOO

## அண்ணன் மகளுக்கு

**நீண்ட நாட்கள் நோய்வாய்ப்பட்டுப் பின்னர் இறந்த அண்ணன் மகளுக்கு, தன்னிடத்தில் அவள் கொண்ட அன்பு, அவள் கேட்டதையெல்லாம் அவள் மக்கள் கொடுத்தது, நோய் வந்த போது அவளை எல்லோரும் பேணியது, அவள் பேரக் குழந்தைகளைக் கொஞ்சி மகிழ்ந்தது முதலியவற்றைக் கூறி அத்தை பாடியது.**

நாளுஞ் சரியாச்சா
நம்அண்ணன் மாது
நடப்பதுக்கு நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா
பொறவியுட பொண்ணு
போவதுக்கு நாளாச்சா

கடுசா இருந்துதோ
கற்பகத்தேர் ஏறினதும்
காஞ்சிபுர நன்னாடு
கானமயில் ஆடுனதும்

வெரசா இருந்துதோ
வெங்கலத்தேர் ஏறினதும்
வீமபுர நன்னாடு
வெற்றிமயில் ஆடுனதும்

சுருக்கா இருந்துதோ
சுந்தரத்தேர் ஏறினதும்
சோழபுர நன்னாடு
தோகைமயில் ஆடுனதும்

ஆளு மிதிச்ச
அடிமிதிச்சு நாளாச்சு
சனங்க மிதிச்ச
தரைமிதிச்சு நாளாச்சு
மனுச மிதிச்ச
மண்மிதிச்சு நாளாச்சு
மாமாங்கம் ஒண்ணாச்சு

மண்ணின் மேல்பட்ட
மருக்கடியோ தீந்தமுன்னா
பூமியின் மேல்பட்ட
பொல்லாங்கும் தீந்தமுன்னா

பூலோகத்தி சொல்லுக்குப்
பொறவியுட பொண்ணும்பேன்
புத்திக்கும் தொண்டைக்கும்
பொறந்தயரைப் போலவும்பேன்

வையகத்தி சொல்லுக்கு
வளந்தையுட மாதும்பேன்
மனசுக்கும் தொண்டைக்கும்
வளந்தயரைப் போலவும் பேன்

நான்பொண்ணு வந்து சேந்தாக்கப்
பொறவியுட மாது
நான்பொண்ணிடத்தே சொல்லப்
பேச்சுமெத்த வச்சிருப்பா

நான்மாது வந்து சேந்தாக்க
வளந்தையுட மாது
நான்மாதிடத்தே சொல்ல
வார்த்தைமெத்த வச்சிருப்பா

கைப்போகங் கொண்டு
காணவந்து நின்னிருப்பேன்
மடிப்போகங் கொண்டு
பாக்கவந்து நின்னிருப்பேன்

நீபிஞ்சான மக்களுக்குக்
கட்டில் மேலிருந்து
காவாத்தாப் போதுமுன்னோம்
நீமட்டமுள்ள மக்களுக்கு
மெத்தை மேலிருந்து
மேப்பாத்தாப் போதுமுன்னோம்

பட்சி பறக்குதுன்னா
தேடிய மக்கள்எல்லாம்
பாத்துப் புடிச்சுவந்தா
இந்தாப் பறக்குதுன்னா
எட்டிப் புடிச்சுவந்தா
கொம்பிலே பட்சியின்னா
குண்டுவச்சு எய்துவந்தா
மரத்திலே பட்சியின்னா
வாணம் வச்சு எய்து வந்தா

கட்டிலுண்டு மெத்தையுண்டு
கால்பாக்கத் தம்பியுண்டு
காலமுக்கத் தாதி உண்டு
மெத்தைஉண்டு கட்டிலுண்டு
மேப்பாக்கத் தம்பி உண்டு
மேலமுக்கத் தாதி உண்டு

பொறசாதிப் பொன்னம்மா
ரவ்வா முழிச்சது
ராஜ்ஜியமும் கொள்ளாது
பகலா முழிச்சது
பட்டணமும் கொள்ளாது

காணலாம் காட்சிகளைக்
கட்டிமகன் வாசல் எல்லாம்
கண்கள்மலர் சொரிய
பாக்கலாம் காட்சிகளைப்
பாங்கியுடை வாசல் எல்லாம்
பாவைமலர் சொரிய

மக்கள் பகிசிரொம்ப
வாள்விசயன் காட்சிமெத்த
பொண்கள் பகிசிரொம்ப
போர்விசயன் காட்சிமெத்த

சீரங்கம் காவேரி
சேந்துகுமிழ் பாஞ்சாப்போல்
சீதையுட மக்களெல்லாம்
சேத்து முத்தம் கொண்டிருந்தா

கொள்ளிடம் காவேரி
கூடிக்குமிழ் பாஞ்சாப்போல்
கோதையுட மக்களெல்லாம்
கூட்டிமுத்தம் கொண்டிருந்தா

மாயவரம் காவேரி
வந்து குமிழ் பாஞ்சாப் போல்
வாள்விசயன் மக்களெல்லாம்
வாரி முத்தம் கொண்டிருந்தா

பொண்டுகளை நீக்கிப்
பெருந்தவசா வந்து
புள்ளைமுடி தீத்ததம்பி
புள்ளை ஒருவனும்
பூவளத்தான் ஓவியமா

மாதுகளை நீக்கி

மாதவசா வந்து
மஞ்சன்முடி தீத்தமகன்
மஞ்சன் ஒருவனும்
மலர்வளத்தான் ஓவியமா

○○○

## கணவனுக்கு

திருமணமாகிச் சில நாட்களில் இறந்துபோன கணவனுக்கு, தாயும், தந்தையும் பிற உறவுகளும் இல்லாத மனைவி பாடியது.

சரியோ சரியுமில்லே
என் தங்கமுடி தீயணைய
பொழுதோ சரியுமில்லே
என்பொன்னுமுடி தீயணைய
நாளோ சரியுமில்லே
என்மதிசச்முடி தீயணைய

சிதம்பரத்துத் தட்டான்
சீர்காழி ஆசாரி
பட்டரையைக் கிட்டவச்சுப்
பண்ணும் சிறுதாலி
தாலி பொருத்தமில்லே
தட்டான்கை ராசியில்லே
சேலை பொருத்தமில்லே
சேணியன்கை ராசியில்லே
மாலை பொருத்தமில்லே
வயிராவிகை ராசியில்லே

முகூர்த்தக்கால் நட்டஎடம்
மோடு மறையவில்லே
பணியாரம் சுட்ட சட்டி
பாதிமணம் போகவில்லே

கட்டியசேலை இன்னும்
கசங்கி மடியவில்லே
வச்ச பூ இன்னும்
வாசம் குறையவில்லே
மஞ்சள் கலையவில்லே
மடிப்பு குலையவில்லே.

என்ன வலுவால
எறக்க நெனச்சாக.
மன்னர் வலுவுமில்லே
மகுந்த பணமுமில்லே
மஞ்சன் துணையுமில்லே
வலுச்சொல்ல ஆளுமில்லே

பெருமாள் வலுவுமில்லே
பெரிய பணமுமில்லே
டள்ளை துணையுமில்லே
பெலஞ்சொல்ல ஆளுமில்லே

பொண்ணு பொரண்டழுகப்
பூமி கெடையாதே
மாது பொண்டழுக
மண்ணுங் கெடையாதே

மண்ணை மரங்காக்கும்
மரத்தை எலைகாக்கும்
மாதைச் சிறைகாக்க
வளத்தார் கெடையாதே
பொண்ணைச் சிறைகாக்கப்
பெத்தார் கெடையாதே

வாழ்ந்திருந்தார் தேவியெல்லாம்
மறுஊரு போகவுன்னு
புலந்திரனார் தேவியெல்லாம்
பொறவூரு போகவுன்னு
பொறப்பட்டுப் போனாக்க
இந்திரனார் தேவிநான்
எதுப்பட்டு வந்தாக்க
சந்திரனார் தேவி எல்லாம்
சகுனத்தடை என்பாக

○○○

திருமணமாகி ஓராண்டு கழியுமுன்னே இறந்துபோன

கணவனுக்கு, கைம்மைக் கொடுமைகளைத் தாங்கி எப்படிக் காலம் கழிப்பது என்றும் தெய்வங்களை நொந்தும், தங்களை வாழவிடாமல் செய்த மாமியாரைத் திட்டியும் மனைவி பாடியது.

தேதியில்ல போகுது
செல்லமொகம் பாராமே
நாளுல்ல போகுது
நல்லமொகம் பாராமே
பொழுதில்ல போகுது
பொன்னுமொகம் பாராமே

வெரலை ஒடிச்சுவச்சா
வீட்டிடத்தைச் சுத்தவச்சா
காலை ஒடிச்சுவச்சா
கட்டிடத்தைச் சுத்தவச்சா

அரைவீசை நேரம்
அரண்மனையில் தங்காளை
மாகாணி நேரம்
வளவுதறி கொள்ளாளை

தெருக்கள் தெருக்களெல்லாம்
திரிஞ்சுவந்த சித்தடியை
தேடிப் பிடிச்சு
சிறைகாக்கச் சொல்லியிட்டா

அப்பமுன்ன போலஇல்லே
இதுஆடிவரும் காலம் இல்லே
பண்டமுன்ன போலஇல்லே
இது பாடிவரும் காலம்இல்ல

பொன்வெளையும் பூமியில்ல
பொறுத்திருக்கச் சொன்னதென்ன
பவுன்வெளையும் பூமியில்ல
பாத்திருக்கச் சொன்னதென்ன

காப்புக் கலகலங்கக்
கனவயிரம் சோதிமின்ன
மூக்குத்தி மினுமினுங்க
மோதிரக்கால் சோதிமின்ன
பட்டுக் கலகலங்கப்
பாடகக்கால் சோதிமின்ன
பாக்கடலில் வந்த
பாடகக்கால் தேயலியே
முக்கடலில் வந்த
மோதிரக்கால் தேயலியே

திங்கள் கழிக்கலியே
தீபாவளி போகலியே
ஆடி கழிக்கலியே
அதிகநாள் போகலியே
பொங்கல் கழிக்கலியே
பிள்ளையாம்பி போகலியே
வருசங் கழிக்கலியே
மகுந்தநாள் போகலியே
பொழுது கழிக்கலியே
பெரியநாள் போகலியே
கட்டிக் கழிக்காமல்
காலங்கழிக்க இருக்கேன்
போட்டுக் கழிக்காமப்
பொழுதுகழிக்க இருக்கேன்

ஆகாப் பொழுதை
அனுப்பிவிட்டாப் போகலியே
பொல்லாப் பொழுதைப்
புடிச்சுவிட்டாப் போகலியே
மாயாப் பொழுதை
மறிச்சுவிட்டாப் போகலியே

எண்ணமுள்ள வாழ்விலே
இருந்தான் சனிபகவான்
மதிப்பான வாழ்விலே
வந்தான் சனிபகவான்

வாழ்வறிஞ்சு வாழயிலே
வந்தான் சனிபகவான்

போர்அறிஞ்சு வாழயிலே
போட்டான் சனிபகவான்

மனம்போல் வாழயிலே
வந்தான் சனிபகவான்
புத்திபோல வாழயிலே
போட்டான் சனிபகவான்

பொறுப்பம் பொறுப்பமுன்னு
புண்படச் சுட்டுவிட்டா
இன்னம் பொறுப்பமுன்னு
எடம்படச் சுட்டுவிட்டா
என்ன வலுவாலே
எறக்க நினச்சாக

எள்ளளவு புண்ணுமுன்னா
எண்ணையிட்டா ஆறுமுன்னா
இடுப்பளவு சுட்டபுண்ணு
எண்ணையிட்டா ஆறலியே

கடுகளவு புண்ணுமுன்னா
களிம்பிட்டா ஆறுமுன்னா
கழுத்தளவு சுட்டபுண்ணு
களிம்பிட்டா ஆறலியே

மாயவனூர் சூடாச்சு
மண்டையுள்ள புண்ணாச்சு
மாளும் அறுதி
மருந்திட்டா ஆறாதே

கடவுளுடை சூடாச்சு
கழுத்தளவு புண்ணாச்சு
கைலாசம் சேருமட்டும்
களிம்பிட்டா ஆறாதே

ஈசனுடை சூடாச்சு
இடுப்பளவு புண்ணாச்சு
எறக்கும் அறுதி
எண்ணையிட்டால் ஆறாதே

பொறுத்த பொறுமை எல்லாம்
பூமுடிக்குச் சேதமில்லே
மாது பொறுமையெல்லாம்
மலர்முடிக்குச் சேதமில்லே

ஆகாது ஆகாது
அருமைமகன் தேவி
அவனாத்தம் ஆகாது
மல்லியப்பூ வாசம்
வளவோரம் ஆகாது
செம்பகப்பூ வாசம்
தெருவோரம் ஆகாது

சேந்திருக்கத் தாலிகட்டல்
செகத்திலே உள்ளமொறை
வாழ்ந்திருக்கத் தாலிகட்டல்
வையகத்தில் உள்ளமொறை

புத்திலே பாம்பிருக்கும்
பூதலத்தில் உள்ளமொறை
மனையிலே பாம்பிருந்து
எங்களைவாழவிட ஒட்டலியே

காட்டிலே பாம்பிருந்து
கடிச்சுதுன்னு கேட்டிருக்கோம்
வீட்டிலே பாம்பிருந்து
வெடுக்குன்னு கடிச்சுது
படியிலே பாம்பிருந்து
படக்குன்னு கடிச்சுது

பொங்கலிட்டு வேற வைக்கப்
பிரியமில்ல என்னாக
பூணாரம் வாங்கிவைக்கப்
பிரியம்மெத்தத் தோணுதுன்னா

சங்கூதி வேறவைக்கத்
தாகமெத்தத் தோணலன்னா
தாலி கழட்டிவைக்கத்
தாகமெத்தத் தோணுதுன்னா

கோண மரத்திலேயும்
கொரங்கிலேயும் பொண்ண வச்சா
கோணலும் கோணிக்
கொரங்கும் புடுங்கிருச்சு

மின்ன மரத்திலேயும்
முசிறிலேயும் பொண்ணவச்சா
மின்னலும் மின்னுதே
முசுறும் புடுங்குதே

பின்ன மரத்திலேயும் பேயிலயும்
பொண்ணவச்சா
பின்னலும் பின்னுதே
பேயும் புடுங்குதே

OOO

**பிள்ளைப் பேறு ஏதும் இல்லாத இளம் மனைவி, கணவன் இறந்தபோது, வாழ்நாளைக் கணவன் துணையின்றிக் கழிப்பது எப்படி என புலம்பிப் பாடியது.**

பொட்டழிஞ்சேன் மையழிஞ்சேன்
பிஞ்சான மாது
பொண்ணோ தலகொலஞ்சேன்
மையழிஞ்சேன் பொட்டழிஞ்சேன்
மட்டமுள்ள மாது
மாதோ தலகொலஞ்சேன்

பெத்தாருந் தானும்
பெரிய மனையிலே
போத்துவார் எல்லையிலே
போதவெள்ளம் சீர்குடுத்துப்
பெரியநகை சீர்குடுத்துப்
பூவசைச்சா ஓவியமா
பூவசைச்ச ஓவியம்போல்
பொழிஞ்சு மிருக்கலியே

வளத்தாருந் தானும்
மகுந்த மனையிலே
வருந்துவார் எல்லையிலே
மகுரவெள்ளம் சீர்குடுத்து
வயிரநகை சீர்குடுத்து
மலரசைச்சா ஓவியமா
மலரசைச்ச ஓவியம்போல்
மகிழ்ந்து மிருக்கலியே

பெருமாளும் தேவியும்
பொங்கி உண்டு பாத்ததுதான்
புத்திரனைக் காணவில்லே
புடிச்சுமுத்தம் கொள்ளவில்லே

மன்னரும் தேவியும்
வடிச்சுண்ணு பாத்ததுதான்
மஞ்சனைக் காணவில்லே
வாரிமுத்தம் கொள்ளவில்லே

பூமிப் பொரண்டழுதேன்
புழுவாத் துடிச்சழுதேன்
பிள்ளையில்லா வாழ்வு
பேய்வாழ்வு என்று சொன்னேன்
புடிக்க வந்தான் கேக்கலியே

மண்ணிப் பொரண்டழுதேன்
மயங்கித் தவிச்சழுதேன்
மஞ்சனிலா வாழ்வு
மாயவாழ்வு என்று சொன்னேன்
வாங்கவந்தான் கேக்கலியே

ஆயிரநாள் வாழ்ந்தாலும்
ஆள்வாழ்ந்தாப் போல இல்லே
எத்தனைநாள் வாழ்ந்தாலும்
ஏமாந்தாப் போலஇல்லே

புள்ளையொண்ணு இல்லாது
பெருமையொண்ணுந் தோணலியே
மஞ்சனொண்ணு இல்லாது
மகிழ்ச்சியொண்ணுந் தோணலியே

வாழ்ந்தநெறந் தெரிய
மகிழ்ச்சியொண்ணுந் தோணலியே

பொறந்தநெறந் தெரியப்
பெருமையொண்ணுந் தோணலியே

பிஞ்சுமக்கள் அப்பசியின்னு
சொல்லப்பின்பு வலுத்தோணலியே
மதலைமக்கள் அப்பச்சியின்னு
சொல்லமறுத்து வலுத்தோணலியே
வயிரநகை சாத்த
மயிலனையா இல்லியே
பூட்டுநகை பூட்ட
பொய்க்கடியா இல்லியே
சாத்துநகை சாத்தச்
சானகையும் இல்லியே

எம்பெருமா நெனப்புவந்தா
பொறவீட போகுமொரு
பொண்ணும் இருந்தாக்கப்
பொட்டிடுவேன் மையிடுவேன்
பொண்ணு மொகம்பாப்பேன்
பொழுதைக் கழிச்சிடுவேன்
பொண்ணை நெனச்சாக்க
எம்பெருமா நெனப்புவந்தா
பூமிஒரு சோமாத்தி

எம்மன்னர் நெனப்பு வந்தா
மறுவீடு போகுமொரு
மாதும் இருந்தாக்க
மையிடுவேன் பொட்டிடுவேன்
மாது மொகம் பாப்பேன்
வருசம் கழிச்சிடுவேன்
மாதை நெனச்சாக்க
எம்மன்னர் நெனப்புவந்தா
மண்ணும் ஒரு சோமாத்தி

திங்கக் கிழமை
சென்னுசென்னு போகுதே
தேதி செலவாகுதே
தேட்டமுள்ள மன்னர்
திருமொகத்தைக் காணாமே

*பொங்குதே கண்ணீரு*

சேதிமொழி கேளாம

வாரக் கிழமை
வந்து வந்து போகுதே
மாதஞ் செலவாகுதே
வருந்திய மன்னர்
மதிமொகத்தைக் காணாமே
வார்த்தைமொழி கேளாம

○○○

சீரும் சிறப்புமாக வாழ்ந்த தன்னைக் கைம்மைத் துன்பத்தால் சீரழித்து இறந்து போன கணவனுக்கு மனைவி பாடியது.

மையழிஞ்சேன் பொட்டழிஞ்சேன்
மாதோ தலகொலஞ்சேன்
பொட்டழிஞ்சேன் மையழிஞ்சேன்
பொண்ணோ, தலகொலஞ்சேன்

தெருவில் திரிஞ்சாலும்
செறப்பாத் திரிஞ்சுவந்தேன்
செறப்பைக் கெடுத்துச்
செயலைக் கொலச்சுச்
சேர நெனச்சவுக
வளவில் திரிஞ்சாலும்
மதிப்பாத் திரிஞ்சுவந்தேன்
மதிப்பைக் கெடுத்து
வாழ்வைக் கொலச்சு
மாள நெனச்சவுக

கட்டழகி நெத்தியிலே
கஸ்தூரிப் பொட்டிருக்கும்
காரிழையா கொண்டையிலே
கதம்ப மலரிருக்கும்

உத்தமியா நெத்தியிலே
உருண்டைமணிப் பொட்டிருக்கும்
ஊர்வசியா கொண்டையிலே
ஊதா மலரிருக்கும்

தேன்மொழியாள் நெத்தியிலே
செந்தூரப் பொட்டிருக்கும்
சித்தடியா கொண்டையிலே
செண்டுமல்லிப் பூவிருக்கும்

வெள்ளை உடுத்தி
வீத்திருக்க வச்சீக
கச்சை உடுத்திக்
காத்திருக்க வச்சீக
பொல்லா மொறைக்குப்
பொறந்த தறியலியே
மாய மொறைக்கு
வளந்த தறியலியே

பட்டும் பொருந்துமே
பாங்கியர்க்கு ஏத்திருக்கும்
பொட்டும் பொருந்துமே
பொற்கொடிக்கு ஏத்திருக்கும்
பொறக்கயிலே வச்ச
பொட்டை அழிச்சவுக.
பொறந்திட்டு வச்சு
பூவைப் பறிச்சவுக
வளரயிலே வச்ச
மையை அழிச்சவுக
வளந்திட்டு வச்ச
மலரைப் பறிச்சவுக

மடமடன்னு வந்திறங்கும்
மாதுதடை ஆயிட்டேன்
குமுகுமுன்னு வந்திறங்கும்
கோதைதடை ஆயிட்டேன்
சிலுசிலுன்னு வந்திறங்கும்
சீதைதடை ஆயிட்டேன்

OOO

விலையுயர்ந்த பட்டாடைகளையும், அணிகலன் களையும் விரும்பி அணிகின்ற தன்னை, கைம்மைக் கொடுமைகளுக்கு ஆட்படுத்தி மறைந்த கணவனுக்கு மனைவி வருந்திப் பாடியது.

கள்ளர்மலை யோரம்
கழுகுமலைச் சாரலிலே
கந்தர் இருக்குமிடம்
கமலகன்னி தூங்குமிடம்
கட்டி மக்கள் ஐயா
காசிநதி கண்டீகளா?

பச்சைமலை யோரம்
பவளமலைச் சாரலிலே
பரமன் இருக்குமிடம்
பார்வதியார் தங்குமிடம்
பிஞ்சு மக்கள் ஐயா
பரமலோகம் கண்டீகளா?

கொச்சிமலை யோரம்
குடகுமலைச் சாரலிலே
குமரன் இருக்குமிடம்
குடமல்லி பூக்குமிடம்
கொஞ்சுமக்கள் ஐயா
குமரநதி கண்டீகளா?

செண்டிமலை யோரம்
செவந்திமலர் பூக்குமிடம்
செண்டாடும் கானலிலே
சீராமர் தங்குமிடம்
செல்லமக்கள் ஐயா
தில்லைநதி கண்டீகளா?

தெக்கத்தி கள்ளன்வந்தான்
தென்னாட்டுத் தூதன் வந்தான்
தெருவுக்கெதிரவந்தான்
செம்புகப்பூ ஆரமிட்டான்
செகப்புரதம் கொண்டு வந்தான்
செல்வர் அழைக்க வந்தான்
சித்தடியா நூல்வாங்கிச்
செகப்புரதம் ஒட்டிட்டான்

வடக்கத்திக் கள்ளன்வந்தான்
வடநாட்டுத் தூதன் வந்தான்
வளவுக்கு எதிரே
வயிரரதம் கொண்டு வந்தான்
மல்லியப்பூ ஆரமிட்டான்
மந்திரியைக் கூட்ட வந்தான்
மயிலனையா நூல் வாங்கி
வயிரரதம் ஒட்டிட்டான்

சீலைநூல் அந்தாச்
சேத்துப் பொருதலாம்
பட்டுநூல் அந்தாப்
பாத்துப் பொருதலாம்
தாலிநூல் அந்ததுவைச்
சரிபண்ண மாட்டலியே
மாலைநூல் அந்ததுவை
வழிபண்ண மாட்டலியே

காப்புத் திருகாணி
கல்லெழச்ச ரோடானி
காப்புக் கழலுமுன்னு
கனவிலேயும் தட்டவில்லே

சுத்துத் திருகாணி
செகப்புவச்ச ரோடானி
செகப்புக் கழலுமுன்னு
சொப்பனத்திக் காட்டவில்லே

தட்டான் கழட்டாத
சன்னபின்னல் ரோடானி
தங்கம் வயிரம் வச்ச
சரிபண்ணும் ரோடானி
தானாக் கழண்டு
தரையில் விழுந்ததென்ன
அதுவாக் கழண்டு
அவசரமாப் போனதென்ன

மதுராசுத் தங்கம்
வாங்கித் துவாரமிட்டு

சிங்கப்பூர்த் தங்கம்
சீவித் துவாரமிட்டு
ரெங்கோன் தங்கம்
நெறுத்துத் துவாரமிட்டு
சுத்தி வயிரம் வச்சு
செகப்புநடுவே சோதி மின்னும்
பக்கம் வயிரம்வச்சு
பச்சைநடுவே சோதிமின்னும்

என்ன இருந்து என்னபண்ண
ஏலாத நேரமில்ல
பொன்இருந்து என்ன பண்ண
பூட்டாத நேரமில்ல
புதுவயிரம் தானிருந்தும்
பூட்டாக் கழுத்தில்ல
மணிவயிரம் தானிருந்தும்
வளையாக் கழுத்தில்ல
பொன்வெளையும் பூமி
பொறுத்திருக்கச் சொன்னதென்ன
பவுன்வெளையும் பூமி
பாத்திருக்கச் சொன்னதென்ன

வெள்ளி முளையடிச்சு
மெல்லிய நல்பாவோடி
வெதத்திலொரு நூலெடுத்து
வெலைபோட்டு நெய்ததெல்லாம்
மெல்லிநல்லா பூவாடை

தங்கமுளையடிச்சுத்
தானா நூல்பாவோடி
தரத்திலொரு நூலோடித்
தறிபோட்டு நெய்ததெல்லாம்
சானகியா பூவாடை

புடிச்சாப் புடியடங்கும்
பொய்க்கடியா பூவாடை ஒரு
பெருவெரலுக்குள்ளடங்கும்
பொய்க்கடியா பூவாடை

மடிச்சா மடிப்பொடுங்கும்
மயிலனையா பூவாடை ஒரு
மணிவெரலுக் குள்ளடங்கும்
மயிலனையா பூவாடை

ஆறுமொழம் நூறுபணம்
ஆனைபுரம் கண்டாங்கி
அரக்குவச்ச முந்தாங்கி
ஆசைமக்கள் வாசல் எல்லாம்
ஆலாத்தி வேளையிலே
ஆகாத முந்தாங்கி

கொஞ்சமொழம் கோடிப் பணம்
கொருநாட்டுக் கண்டாங்கி
குஞ்சம் வச்ச முந்தாங்கி
கோப்பான வேளையிலே
கூடாத முந்தாங்கி

வாழ்ந்திருந்தார் தேவியெல்லாம்
மறுவூரு போகவுன்னு
புலந்திரனார் தேவியெல்லாம்
பொறஊரு போகவுன்னு
பொறப்பட்டுப் போனாக்க

இந்திரனார் தேவிநான்
எதிர்ப்பட்டு வந்தாக்க
சந்திரனார் தேவி எல்லாம்
சகுனத்தடை என்பாக

கூப்பிட்ட வாசல் எல்லாம்
கோலமிடும் கொம்பனையா
பாரிச்ச வாசல்எல்லாம்
பானைவைக்கும் பாஞ்சாலி

ஆயிரம் பானை
அலைமோதிப் பொங்கயிலே
கண்ணகியா பானைக்குக்
கண்ணேறு வந்ததென்ன
நாயகியா பானைக்கு
நாவேறு வந்ததென்ன
காந்தாரி பொங்கலுக்குக்
கண்ணேறு வந்ததென்ன

மகளிர் அணியும் விலையுயர்ந்த அணிகலன்கள், அவற்றின் வேலைப்பாடு, பல நாடுகளிலிருந்து வந்த தங்கத்தால் செய்த அணிகலன்கள், விலை உயர்ந்த பட்டாடைகளின் வேலைப்பாடு மென்மை ஆகியவை பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

OOO

அழகான, அன்பான கணவன் இறந்தபோது, தான் மங்கலம் இழந்தமை குறித்து வருந்தி மனைவி பாடியது.

மதராசுத் துப்பட்டா
மந்திரிக்கு ஏத்திருக்கும்
வடமதுரைச் சந்தனம்
மன்னருக்கு ஏத்திருக்கும்
மதுரை மல்லியப்பூ
மாதுக்கு எசைஞ்சிருக்கும்
புதுக்கோட்டைத் துப்பட்டா
புண்ணியர்க்கு ஏத்திருக்கும்
புகழ் மதுரைச் சந்தனம்
பாண்டியர்க்கு ஏத்திருக்கும்
பூங்குடி மல்லியப்பூ
பொண்ணுக்கு எசைஞ்சிருக்கும்

தேவகோட்டைத் துப்பட்டா
செல்வர்க்கு ஏத்திருக்கும்
திருப்பூர்ச் சந்தனம்
செல்வர்க்கு ஏத்திருக்கும்
தென்மதுரை மல்லியப்பூ
சீதைக்கு எசைஞ்சிருக்கும்

பெருமா மடிஞ்சதினால்
பொட்டகத்திப் பட்டும்

பொண்ணுக்கு எணங்காதே
புதுவயிரம் தானும்
பொண்ணுக்கு எசையாதே
பூத்த மலர் தானும்
பொண்ணுக்கு ஏலாதே
பொடிக் கலந்த பொட்டும்
பொண்ணுக்கும் ஏற்காதே

மன்னர் மடிஞ்சதினால்
மரப்பொட்டிப் பட்டும்
மாதுக்கு எணங்காதே
மணிவயிரம் தானும்
மாதுக்கு எசையாதே
மலர்ந்த மலர்தானும்
மாதுக்கு ஏலாதே
மைக்கலந்த பொட்டும்
மாதுக்கு ஏற்காதே

நல்லபிலா மரந்தான்
நார்த்தம்பூ மரந்தான்
நல்லபிலாக் கொம்பொடிஞ்சா
நார்த்தையும் பூவுதுந்தேன்

நடராசன் சீமையிலே
நானிருக்க மாட்டமுன்னு
நமராசன் சீமைக்கு
நடந்தோடிப் போய்விட்டா

இனிராசன் சீமையிலே
இங்கிருக்க மாட்டமுன்னு
எமராசன் சீமைக்கு
எழுந்தோடிப் போய்விட்டா

ஆடை ஒதவாதே
ஆபரணம் சேராதே
சீலை ஒதவாதே
சிறுபணுதி சேராதே
புடவை ஒதவாதே
புதுவயிரம் சேராதே
பட்டும் ஒதவாதே
பணுதிகளும் சேராதே

போரழகி சீலையின்னு
போதப் பொறந்தவுக
புடிச்சுவந்து போடாமே
பொட்டழிஞ்சா சீலையின்னு
புடிச்சுவந்து போட
பெருமாளே சம்மதமா

வாவரசி சீலையின்னு
வரிசை பொறந்தவுக
வாங்கிவந்து போடாமே
மையழிஞ்சா சீலையின்னு
வாங்கிவந்து போட
மாயவரே சம்மதமா
சம்மதமா சம்மதமா
சாமிக்கே சம்மதமா

OOO

**அன்பும், பண்பும், கலகலப்பும், ஆரவாரமும் உடைய கணவன் இறந்தபோது, தன் மக்கள் சிறியராக இருக்க தான் தனியே அவர்களை வளர்த்து ஆளாக்குவது எப்படி என இளம் மனைவி வருந்திப் பாடியது.**

கண்ணோ துடிக்குதே
கடைக்கண்ணோ தேடுதே
கடைக்கண்ணுக் குள்ளாகக்
கானமயில் ஆடுதே
கானமயிலுக் குள்ளாகக்
கட்டிமக்கள் அப்பச்சி
காணுறாப் போலிருக்கே
புருவந் துடிக்குதே
பின்கண்ணோ தேடுதே
பின்கண்ணுக் குள்ளாகப்
புள்ளிமயில் ஆடுதே
புள்ளிமயிலுக் குள்ளாகப்

பிஞ்சுமக்கள் அப்பச்சி
பேசுறாப் போலிருக்கே

செல்லச் சிநேகிதங்கள்
சேதிக்குத் தேடுது
வருசக் கெளையெல்லாம்
வந்திருக்கத் தேடுது

அநேகச் சனமும்
ஒங்க அருமைக்கு அழுதது
கோடிச் சனமும்
ஒங்க கொணத்துக்கு அழுதது

எப்பொறப்பில் காணுவேன் இந்த
செப்பமுள்ள சீர்வடிவை
அனந்தலில் கண்டாலும்
என்னாசை தெளியாது
அன்னமிடப் போறதில்லே
சொப்பனத்தில் கண்டாலும்
என்சோட்டை தெளியாது
நான் சோறிடவும் போறதில்லே

பண்ணை பெரிசுல்ல
பாத்தணைப்பான் சின்னமுல்ல
குடும்பம் பெரிசுல்ல
கொண்டணைப்பான் சின்னமில்ல

சுண்டு வெரலாலே
நீங்க சுழட்டிய பம்பரத்தை
பத்து வெரலாலே
பாத்து அணைக்க மாட்டானே
பாலகனும் சின்னமில்லே

பந்தடிக்கும் தம்பியைப்
பண்ணைக் கதிகாரியின்னா
வெளையாடும் தம்பியை
வீட்டுக் கதிகாரியின்னா
குண்டடிக்கும் தம்பியைக்
குடும்பத்துக் கதிகாரியின்னா

காசடிக்கும் தம்பியைக்
காணிக் கதிகாரியின்னா

ஆடுஇழுகாப் பாரத்தை
அள்ளித் தலையில் வச்சா
மாடுஇழுகாப் பாரத்தை
வாரித் தலையில்வச்சா
கன்னுஇழுகாப் பாரத்தைக்
கட்டித் தலையில்வச்சா

சிறியான் தலையில்
சேத்துவச்சுக் கண்ணசந்தா
அறியான் தலையில்
அள்ளிவச்சக் கண்ணசந்தா

அரக்கீரை தண்டாக்கி
ஆளோட சேப்பமோ
முழுக்கீரை தண்டாக்கி
முழுப்புள்ளி ஆக்குவதெப்போ

மன்னரொலை எறக்கி
மக்களொலை வச்சமுன்னா
பெருமாளொலை எறக்கிப்
புள்ளையொலை வச்சமுன்னா

இந்தமன்னர் பாரியிங்க
என்னதவம் செய்திருந்தேன்
இப்பவந்த தீவினைக்கு
என்னபொழை செய்துவிட்டேன்

வாச்சமன்னர் பாரியிங்க
என்னமாதவத்தைச் செய்திருந்தேன்
மறுத்துவந்து தீவினைக்கு
என்னமாபொழையச் செய்து
விட்டேன்

மக்கள் பதம் பாத்ததுதான்
மறுத்துப்பதம் பாக்கலியே
ஈனப்பதம் பாத்ததுதான்

இருந்துபதம் பாக்கலியே

சம்மதியேன் சம்மதியேன்
சத்தவிடச் சம்மதியேன்
இத்திவிடச் சம்மதியேன்
இப்ப எறக்கவில்ல சம்மதிச்சேன்
கொஞ்சம்விடச் சம்மதியேன்
இப்பக்குடுக்கவில்ல சம்மதிச்சேன்

தங்கமக்கள் அப்பச்சி
சமுத்திரத்துத் தண்ணியிலே
சக்கரத்தை விட்டெறிஞ்சா
சக்கரமும் கண்டெடுக்கத்
தம்பியெல்லாம் சின்னமுல்ல

பிஞ்சுமக்கள் அப்பச்சி
பொய்யைத் தண்ணியிலே
பூச்சரத்தை விட்டெறிஞ்சா
பூச்சரத்தைப் பாத்தெடுக்கப்
புள்ளையெல்லாம் சின்னமுல்ல

வாழும் மக்கள் அப்பச்சி
வையைத் தண்ணியிலே
மணிச்சரத்தை விட்டெறிஞ்சா
மணிச்சரத்தை கண்டெடுக்க
மக்களெல்லாம் சின்னமுல்ல

பெருமாளுந் தேவியும்
பொன்னா கருணனுக்குப்
புள்ளைமுடி தீத்தானுக்குப்
பூச்சேத்துப் பாக்கலியே
போர்விசயன் தேவியின்னு
பூமிவரக் காணலியே
பெண்ணழச்சுக் கூட்டலியே
பெருஞ்சடங்கு செய்யலியே
பெண்ணாசை தீரலியே

மன்னருந் தேவியும்
வருசக் கருணனுக்கு
மஞ்சமுடி தீத்தானுக்கு
மலர்சேத்துப் பாக்கலியே
வாள்விசயன் தேவியின்னு
வளவிவரக் காணலியே
மாதழச்சுக் கூட்டலியே
மணச்சடங்கும் செய்யலியே
மனசாசை தீரலியே

அடிச்சு முழக்கி நம்மதம்பியை
ஆனையின் மேல்வச்சாலும்
ஆனைப் பொறகாலே
ஆயிரம்பேர் போனாலும்
ஆனைக்கதிகாரி
ஆர்காணோம் என்பாக
ஆனைக்கதிகாரி
அமடுபட்டார் என்பாக

கொட்டிமுழக்கி நம்மதம்பியைக்
குதிரையின் மேல்வச்சாலும்
குதிரைப் பொறகாலே
கோடிப்பேர் போனாலும்
குதிரைக்கதிகாரி
ஆர்காணோம் என்பாக
குதிரைக்கதிகாரி
குண்டுபட்டார் என்பாக
பாச்சைக் கயிறாடிப்
பாண்டிபுரம் சூதாடிப்
பாண்டிபுரத் திலேயும்
பதினெட்டு ஆளுவிட்டான்
பதினெட்டு ஆளிலேயும்
பதட்டமுள்ள ஆளுவிட்டான்
பாலமக்களப் பச்சியைப்
பதைக்க உயிர்வாங்கிவிட்டான்
பாங்கி இளங்குயிலா
பட்டுரியப் பாத்திருந்தான்

சூச்சைக் கவுறாடிச்
சோழவரம் சூதாடிச்

சோழவரத் திலேயும்
தொண்ணூறு ஆளுவிட்டான்
தொண்ணூறு ஆளிலேயும்
துடியான ஆளு விட்டான்
சோக்கான மன்னரை
துடிக்க உயிர்வாங்கிவிட்டான்
தோகை இளங்கொடியா
துகில் உரியப் பாத்திருந்தான்

நாளைவருங் காரியத்தை
நாவால் மதிச்சவுக
மறுத்துவருங் காரியத்தை
மனசால் மதிச்சவுக

நெனச்சதொரு காரியத்தை
நெறவேத்திப் பாத்திருப்பா
வச்சதொரு காரியத்தை
மகிழ்ச்சிபண்ணிப் பாத்திருப்பா
குறிச்சதொரு காரியத்தைக்
கோரிச்சு வச்சிருப்பா

நேமிச்சு வச்சதுவை
நெலைநிறுத்திப் பாக்கலியே
நெனைச்சதொரு காரியத்தை
நெறவேத்திப் பாக்கலியே
கோரிச்சு வச்சதுவைக்
குடிஊதிப் பாக்கலியே
கோரிச்ச காரியத்தைக்
கொடியேத்திப் பாக்கலியே

மதிச்சாண்டார் எல்லையிலே
வண்ணமணிக் கோட்டையிலே
ஆனை முழக்கந்தான்
அதிகாரிகள் கச்சேரிதான்
சேனை முழக்கந்தான்
செகஜனங்கள் கச்சேரிதான்
குதிரை முழக்கந்தான்
கோர்ட்டார் கச்சேரிதான்

ஊரிலே ஒருதர்
ஒருதர் பகையுமில்லே
நாட்டிலே ஒருதர்
நம்ம பகையுமில்லே
தெருவிலே ஒருதர்
சேரப் பகையுமில்லே
வளவிலே ஒருதர்
மனிச பகையுமில்லே

கட்டிமக்கள் அப்பச்சி
ஊரோரம் வந்தாலும்
உருண்டைமணிச் சத்தமுல்ல
தெருவோரம் வந்தாலும்
சேகண்டிச் சத்தமுல்ல
வளவோரம் வந்தாலும்
வயிரமணிச் சத்தமுல்ல

உள்ளங்கால் சக்கரம்
ஊரெல்லாம் சுத்திவரும்
நடுக்கால் சக்கரம்
நாடெல்லாம் சுத்திவரும்
பாதக்கால் சக்கரம்
பட்டணமெல்லாம் சுத்திவரும்

கட்டிமக்கள் அப்பச்சி
கையாலே தொட்டா
கனவேலை ஒப்பேறும்
கண்பாத்துச் சேதிசொன்னாக்
கனகாரியம் ஒப்பேறும்
கையாலே தொடாம
கனவேலை தத்தளிப்பு
கண்பாத்துச் சொல்லாம
கனகாரியம் தத்தளிப்பு

வாழுமக்கள் அப்பச்சி
வெரலாலே தொட்டா
வெகுவேலை ஒப்பேறும்
வீத்திருந்து சேதிசொன்னா

வெகுகாரியம் ஒப்பேறும்
வெரலாலே தொடாம
வெகுவேலை தத்தளிப்பு
வீத்திருந்து சேதி சொல்லாம
வெகுவேலை தத்தளிப்பு

○○○

மங்கலப் பொருட்கள் மீது ஆசையும், ஒப்பனையில் ஆர்வமும், ஆடை அணிகலன் மீது பெருவிருப்பும் உடைய மனைவி, கணவன் இறந்த போது, மக்கள் சிறியராக இருக்க மாள மனம் வந்ததெப்படி என வருந்திப் பாடியது.

பொழுதோ சரியுமில்லே
பிஞ்சுமக்கள் அப்பச்சி
போகுறநா இப்பவில்லே
சரியோ சரியுமில்லே
தங்கமக்கள் அப்பச்சி
சாகுறநா இப்பவில்லே
நாளுஞ் சரியில்லே
நடக்குறநா இப்பவில்லே

மண்ணில் விழுகையில்
மக்கள் எல்லாம் சின்னமுன்னு
மனசி நெனக்கலியா
மாதவசுப் பொண்ணு
மலர்கொடுக்க மாட்டான்னு
வாங்கவந்தான் தன்னிடத்தில்
வார்த்தைசொல்ல மாட்டலியா

பூமி விழுகையில்
புள்ளையெல்லாம் சின்னமுன்னு
புத்தி நெனக்கலியா
பெருந்தவசுப் பொண்ணு
பூக் கொடுக்க மாட்டான்னு
புடிக்கவந்தான் தன்னிடத்தில்
பேச்சொரைக்க மாட்டலையா

மாதா இருபேரும்
மாது மொகம்பாத்து
மனமோ தவிச்சழுக
மாது நெறம் பேத்து
வனம்பாக்கப் போனீகளே
என் பெத்தா இருபேரும்
பொண்ணு மொகம்பாத்துப்
புத்தி தவிச்சழுகப்
பொண்ணு நெறம்பேத்து
பொனம்பாக்கப் போனீகளே

நேரே வகுப்பெடுப்பேன்
நெருஞ் சிக்காய் பொட்டு
வைப்பேன்
நேரே வகுப்பழிஞ்சேன்
நெருஞ்சிக்காய் பொட்டழிஞ்சேன்

கோண வகுப்பெடுப்பேன்
குங்குமப் பொட்டுவைப்பேன்
கோண வகுப்பழிஞ்சேன்
குங்குமப் பொட்டழிஞ்சேன்

பக்கம் வகுப்பெடுப்பேன்
பவளம்போல் பொட்டு வைப்பேன்
பக்கம் வகுப்பழிஞ்சேன்
பவளம்போல் பொட்டழிஞ்சேன்

சைடு வகுப்பெடுப்பேன்
சந்தனப் பொட்டு வைப்பேன்
சைடு வகுப்பழிஞ்சேன்
சந்தனப் பொட்டழிஞ்சேன்

ஊசி வகுப்பெடுப்பேன்
ஒய்யாரப் பொட்டு வைப்பேன்
ஊசி வகுப்பழிஞ்சேன்
ஒய்யாரப் பொட்டழிஞ்சேன்

சீவி வகுப்பெடுப்பேன்
சிங்காரப் பொட்டு வைப்பேன்

சீவு வகுப்பழிஞ்சேன்
சிங்காரப் பொட்டழிஞ்சேன்
கருது வகுப்பெடுப்பேன்
கண்ணாடிப் பொட்டு வைப்பேன்
கருது வகுப்பழிஞ்சேன்
கண்ணாடிப் பொட்டழிஞ்சேன்

தென்சரணி கொள்ளாது
செவ்வந்திப்பூ சிந்தியிட்டேன்
வடசரணி கொள்ளாது
மல்லியப்பூ சிந்தியிட்டேன்

கோயிலுக்குப் போனாலும்
கொண்டைப்பூ தேவையிம்பேன்
சன்னதிக்குப் போனாலும்
சரமல்லி தேவையிம்பேன்
சாமி அணைஞ்சகை
சந்தனங்கள் தொட்டகை
கோயில் அணைஞ்சகை
குங்குமங்கள் தொட்டகை

இனிகோயிலுக்குப் போனாலும்
கொத்தவர் இழந்தாளுக்குக்
கொடைமல்லி தேவையில்லே
இனி சன்னதிக்குப் போனாலும்
தருமர் இழந்தாளுக்குச்
சரமல்லி தேவையில்லே

கோட்டைக் குள்ளாகக்
கொடைமல்லி வித்தாலும்
கொத்தவரைத் தோத்தாளுக்குக்
கூப்பிடவே ஏலாது

மாளிகைக் குள்ளாக
மல்லியப்பூ வித்தாலும்
மன்னர் இழந்தாளுக்கு
வாங்கவுங்க ஆசையில்ல

ஆடை கொடியிலதான்
ஆபரணம் பொட்டியில
நான் ஆபரணம் பூண்டிருந்த
அழகான பொண்ணு
அல்லிஒரு மூலையிலே
சீலை கொடியிலதான்
சிறுபணுதி பொட்டியிலே
சிறுபணுதி பூண்டிருந்த
செயலான பொண்ணு
சீதை ஒரு மூலையிலே

நல்லி கடைதொறந்து
நயமான பட்டெடுப்பேன்
நாகு கடைதொறந்து
நல்லமடிப் பட்டெடுப்பேன்
மாம்பலத்து வீதியிலே
மகுந்தவெலைப் பட்டெடுப்பேன்

கோதையுட கண்டாங்கி
கொஞ்சாக் கலகலங்கும்
அல்லியுட கண்டாங்கி
அடுத்தாக் கலகலங்கும்
சீதையுட கண்டாங்கி
சிலுசிலுங்கும் முந்தாங்கி

கடைகால் தெரியாத
நான்பொறந்த சாமிமார்
கண்டாங்கி வாங்கலியே
மொழங்கால் தெரியாத
எனைப்பெத்த ஐயாக்க
முத்துவனம் வாங்கலியே
முத்து வனமுன்னு
முறியில் எழுதலியா
பட்டு வனமுன்னு
பணத்தில் எழுதலியா

பொறக்கையிலே இட்ட
பொன்னும் சிலம்புகளும்
கட்டத்தலத்திலே எனக்குக்

கண்டெடுக்க மாட்டலியே
பாத சலங்கைகளைப்
பாத்தெடுக்க மாட்டலியே

ㅇㅇㅇ

ஆண்மக்கள் பிறந்து இறந்து போய்விட, பெண் மக்கள் மட்டுமே உள்ள நிலையில், கணவன் இறந்த போது கொள்ளியிட மகன் இல்லையே எனவும், பெண் மக்களுக்கு இனி முறைகள் யார் செய்வர் எனவும் மனைவி வருந்திப் பாடியது.

நாளில்ல போகுது
நல்லமொகங் காணாமே
பொழுதில்ல போகுது
பிஞ்சுமக்கள் அப்பச்சி
பொன்னுமொகங் காணாமே
தேதியில்ல போகுது
செல்ல மக்கள் அப்பச்சி
திருமொகத்தைக் காணாமே

பொட்டழிஞ்சேன் மையழிஞ்சேன்
பெருந்தவசு மாது
பொன்னோ தலகொலஞ்சேன்
பொறந்தநெறம் பேந்தமுன்னேன்

மையழிஞ்சேன் பொட்டழிஞ்சேன்
மாதவசு மாது
மாதோ தலகொலஞ்சேன்
வளந்தநெறம் பேந்தமுன்னேன்

கலியாணப் பொண்ணுக்குக்
கவலை பழக்கிவச்சா
சோபனப் பொண்ணுக்குத்
துயரம் பழக்கிவச்சா
மங்களப் பொண்ணுக்கு
வருத்தம் பழக்கிவச்சா

தங்கம் கெடந்தெடத்தே
தணக் கெடந்துமின்னலியே
பொன்னோ கெடந்தெடத்தே
பொடிக் கெடந்துமின்னலியே
மச்சம் கெடந்தெடத்தே
மருக் கெடந்துமின்னலியே

எள்ளளவும் இல்லாமே
எல்லை மயங்குது
கடுகளவும் இல்லாமே
காணி மயங்குது
மாகாணி இல்லாமே
மண்ணோ மயங்குது

கருணன் தலைவிரிச்சா
கட்டடமும் கொள்ளாது
கட்டிமகன் கொள்ளியிட்டா
கனசனமும் சொல்லாது

வீமன் தலைவிரிச்சா
வீதியிடம் கொள்ளாது
வீமனிட்ட கொள்ளியின்னா
வெகுசனமும் சொல்லாது

எள்ளளவுதீ வேண்டாம்
இன்பமுள்ள ராஜேந்திரன்
ஏறிட்டா வெந்திடுவா
கடுகளவு தீ வேண்டாம்
கருத்தான தம்பி
கண்டிட்டா வெந்திடுவா
பணமளவுதீ வேண்டாம்
பவுரான தம்பி
பாத்திட்டா வெந்திடுவா

போரானை ரெண்டேறி
பூவு ரெண்டு சூடி
பொண்ணு ரெண்டு கைப்புடிச்சுப்
பொன்னாளுந் தம்பி
புள்ளை மூணு கண்டிருந்து
போத்தா வளத்திருந்து
பெருந்தவசுத் தம்பி

பிஞ்சுமக்கள் அப்பச்சி
போகும் சமயம்
பூவளக்க ஏலவில்லே
பொங்குது ஒருகோடி

மதசானை ரெண்டேறி
மாலை ரெண்டுசூடி
மனைவி ரெண்டுகைப்புடிச்சு
மண்ணாளுந் தம்பி
மஞ்சன் மூணுகண்டிருந்து
வாதா வளத்திருந்து
மதுரைச் சீமையிலே
வாசிக்க வச்சிருந்து
மகுரமக்கள் அப்பச்சி
மாளுஞ் சமயம்
மலர்வளக்க ஏலவில்லே
மகுருது ஒருகோடி

பவன்போல மக்களெல்லாம்
பக்கம்வச்சுப் பாத்திருந்தோம்
சுயம்போல மக்களெல்லாம்
சுத்திவச்சுப் பாத்திருந்தோம்
எடுப்பான மக்களெல்லாம்
எதிரேவச்சுப் பாத்திருந்தோம்
எடுக்கி முத்தங் கொண்டிருந்தோம்
அழகான மக்களெல்லாம்
அருகேவச்சுப் பாத்திருந்தோம்
அணைச்சுமுத்தங்
கொண்டிருந்தோம்

சாகயிலே காட்டாத
தம்பிரொம்பக் கண்டிருந்தோம்
மாளயிலே காட்டாத
மஞ்சன்ரொம்பக் கண்டிருந்தோம்
போகயில காட்டாத
புள்ளைரொம்பக் கண்டிருந்தோம்

போதமக்கள் கண்டிருந்தும்
பின்னிமஞ்சன் பெத்திருந்தும்
பொன்னாளுந் தம்பியெல்லாம்
பொனத்தை எரப்பியிட்டு
பெருஞ்சமத்துப் பொண்ணு
பொண்ணுகளை மிச்சமுன்னேன்
பெருத்திருந்த பொண்களுக்குப்
பெரிய நதிகளிலே
பொன்னைக் கொழிச்செடத்தே
பொரபலமா வாழ்ந்தெடத்தே
பெஷல் காரு வச்செடத்தே
புதுவயிரம் பூண்டெடத்தே
பொண்ணை வைக்கவேணுமுன்னா
பிஞ்சான தங்கையர்க்குப்
பூச்சேத்துப் பாக்குமட்டும்
பொறப்பில்லாச் சீமையில
பெத்தார் இருக்கலியே
பேனா எழுத்துப் போடுமட்டும்
பெருமையாத் தோணலியே

மகுர மக்கள் கண்டிருந்தும்
மாத்தி மஞ்சன் பெத்திருந்தும்
மண்ணாளுந்தம்பி எல்லாம்
வனத்தை எரப்பியிட்டு
மாசமத்துப் பொண்ணு
மாதுகளை மிச்சமுன்னேன்
மகுந்த மகளெல்லாம்
மகுந்த நதிகளிலே
மச்சங் கொழிச்செடத்தே
மதிப்பதிகம் உள்ளெடத்தே
மணிக்காரு வச்செடத்தே
மணிவயிரம் பூண்டெடத்தே
மகொடுக்க வேணுமுன்னா
மட்டமுள்ள தங்கையர்க்கும்
மாலையிட்டுப் பாக்கு மட்டும்
வளப்பில்லாச் சீமையிலே
வளத்தார் இருக்கலியே
மையெழுத்தைப் போடுமட்டும்
மதிப்புக்கு இருக்கலியே

பெரிய மகளும்
புள்ளை வந்து சேரலுன்னா
புத்தியிலே தாங்கலுன்னா
பூமாமி கண்ணோட
புள்ளை அழைக்கலுன்னா எங்க
பொண்ணு மணவாளர்
பெத்தாரும் போனபின்பு
பொறவியோட தம்பி
பெரிய மகனைப்
புதுவயிர மஞ்சனைப்
புடிச்சுவச்சுப் பாத்தேனுன்னா
எங்கபிஞ்சுமக்கள் அப்பச்சி
பொறப்பில்லாச் சீமையிலே
பூமாமர் மொறையும்
பெரியமொறையுஞ் செய்திருந்தா
பெரும்பகிசி பாத்திருந்தா

பெருமைச்சோறு உண்டிருந்தா
பூமாமிபேரு கொண்ட
புதுவயிரப் பொண்ணைப்
புடிச்சு முத்தம் கொண்டிருந்தா
பெருமைதான் என்னுருந்தோம்

பிஞ்சான தங்கையெல்லாம்
பெத்துவரக் கண்டிருந்தா
புகழ்மதுரை மீனா
புதுவயிரப் பொண்ணு
பெருந்தவசு மாது
போதமக்கள் கண்டிருந்தா
பின்னிமஞ்சன் பெத்திருந்தா

எங்கபொறவியோட தேவி
பொண்ணு தனியாள்
போத்திவளத்த பொண்ணு
பொண்ணு ருதுவாகயில
பூமாமரில்லாச் சீமையில
பெத்தா இருபேரும்
பெரிய வெலைப் பட்டுடுத்திப்

புகழ்மதுரை மீனா
பொண்ணுடைய வாசல்
பூமிபோக ஏலாதே
மகுந்த மகளும்
மஞ்சன்வந்து சேரலுன்னா
மனசிலேயும் தாங்கலுன்னா
மாமியுட கண்ணோட
மஞ்சன் அழைக்கலுன்னா எங்க
மாது மணவாளர்
வளத்தாரும் போனபின்பு
வளப்போட மஞ்சன்
மகுந்த மகனை
மணிவயிர மஞ்சனை
வாங்கிவச்சுப் பாத்தேனுன்னா
எங்கமகுரமக்கள் அப்பச்சி
வளப்பில்லாச் சீமையிலே
மாமன் மொறையும்
மதிப்பதிகம் செய்திருந்தா
மகிழ்ச்சிச்சோறு உண்டிருந்தா
மாமியுடபேரு கொண்ட
மணிவயிரப் பொண்ணை
வாரிமுத்தம் கொண்டிருந்தா
மகிழ்ச்சிதான் என்னிருந்தோம்

மட்டமுள்ள தங்கையெல்லாம்
வளத்துவரக் கண்டிருந்தா
மதுரை மீனா
மணிவயிரப் பொண்ணு
மாதவசு மாது
மகுரமக்கள் கண்டிருந்தா
மாத்திமஞ்சன் பெத்திருந்தா

எங்கவளப்புடைய தேவி
மாது தனியாள்
வருந்திவளத்த பொண்ணு
மாது பெரிசாயிட்டா
மாமரில்லாச் சீமையில
வளத்தார் இருபோரும்

மகுரவெலைப் பட்டுடுத்தி
மதுரை மீனா
மாதுடைய வாசல்
வளவிபோக ஏலாதே

ஊரார்க்கு ஆள்வளைய
ஒருச்சாமம் செல்லுதே
நாடார்க்கு ஆள்வளைய
நடுச்சாமம் செல்லுதே

பொலிஞ்சிருந்த ஐயா
புண்ணியவார் மக்களுக்கும்
பிஞ்சுமக்கள் ஐத்தையர்க்கும்
போரழகி மாதுக்கும்
பெரியமொறை செய்து வந்தோம்
பிஞ்சான தங்கையர்க்குப்
பொறப்பில்லாச் சீமையிலே
பெத்தா இருக்கலியே
பெருமையாத் தோணலியே
பெலன்சொல்ல மாட்டலியே

மதிச்சாண்டார் ஐயா
மகராசா மக்களுக்கும்
மகுரமக்கள் ஐத்தையர்க்கும்
வாவரசி மாதுக்கும்
மகுந்தமொறை செய்து வந்தோம்
மட்டமுள்ள தங்கையர்க்கு
வளப்பில்லாச் சீமையிலே
வளத்தார் இருக்கலியே
மதிப்பாத் தோணலியே
வலுச்சொல்ல மாட்டலியே

பொலிஞ்சாண்டார் ஐயா
புண்ணியவார் கட்டிய
பெரியமனை யாளப்
புள்ளைஒத்தன் மிஞ்சலியே
பெலனாத் தெரியலியே
மதிச்சாண்டார் ஐயா
மகராஜா கட்டிய
மகுந்தமனை ஆள
மஞ்சன் ஒத்தன் மிஞ்சலியே
வலுவாத் தெரியலியே

OOO

தன் பிறந்த வீட்டிலும், தன் வீட்டிலும் தான் செய்ய வேண்டிய மங்கலச் சடங்குகள் நிறைய இருக்கும்போது மகனின் திருமணத்தைக் காணாமல் கண்மறைந்த கணவனுக்கு மனைவி வருந்திப் பாடியது.

நித்தங் கலியாணம்
நெல்லியெலைத் தோரணந்தான்
மாதங் கலியாணம்
மாவெலையுந் தோரணந்தான்
காவணக்கால் காவணக்கால்
கலியாணக் காவணக்கால்
பாடுவான் வந்து
பணம் பறிக்கும் காவணக்கால்
வித்துவான் வந்து
வெளையாடும் காவணக்கால்
பட்டணத்துப் பொண்களெல்லாம்
பறையடிக்கும் காவணக்கால்
கும்பகோணப் பொண்களெல்லாம்
கூத்தாடும் காவணக்கால்
கைநீட்டிப் பொன்வாங்கக்
கருணரில்லாக் காவணக்கால்
விரல்நீட்டிப் பொன்வாங்க
வீமரில்லாக் காவணக்கால்

ஆனையின்மேல் வார
அதிசயத்தைப் பாக்கலியே
குதிரையின்மேல் வார
கொந்தளிப்பைப் பாக்கலியே
சிறுமாரும் சந்தனமும்
சேத்துமுத்தங் கொள்ளலியே

மாலையும் சந்தனமும்
வாரிமுத்தங் கொள்ளலியே
இந்திரர்க்கு வார
எலஞ்சியத்தைப் பாக்கலியே
பாண்டியர்க்கு வார
பாக்குடத்தைப் பாக்கலியே

புள்ளையுட சீதனத்தைப்
பூட்டி மதிக்கலியே
மஞ்சனோட சீதனத்தை
வாங்கி மதிக்கலியே
அடிச்சு முழக்கி
அருமைக் கருணை
ஆனையின்மேல் தூக்கிவச்சா
ஆனைக்கு அதிகாரி
யார்காணோம் என்பாக
ஆனைக்கு அதிகாரி
அமடுபட்டார் என்பாக.

கொட்டி முழக்கிக்
கொத்தா குழலனைக்
குதிரையின்மேல் தூக்கிவச்சா
குதிரைக்கு அதிகாரி
யார்காணோம் என்பாக
குதிரைக்கு அதிகாரி
குண்டுபட்டார் என்பாக

அண்ணன்மார் தங்கைநான்
அதிக மொறைக்காரி
தம்பிமார் ஆச்சிநான்
சடங்கு மொறைக்காரி

ஆத்து மணலை
அள்ளத் தொலைஞ்சாலும்
அல்லி சடங்கு
அள்ளத் தொலையாது
வைய மணலை
வாரத் தொலைஞ்சாலும்
மாது சடங்கு
வாரத் தொலையாது
கொழுந்து மணலைக்
கொட்டத் தொலைஞ்சாலும்
கோதை சடங்கு
கொட்டத் தொலையாது

கட்டைமணை போடலியே
காரிழையைக் கூட்டலியே
சின்னமணை போட்லியே
சித்தடியைக் கூட்டலியே
சிலம்பறியப் போகலியே

தீட்டாத அரிசிவச்சா
திருப்பூட்டாத் தம்பிவச்சா
குத்தாத அரிசி வச்சா
குடியழையா மஞ்சன் வச்சா
நளுக்காத அரிசிவச்சா
நாள்குறியாத் தம்பிவச்சா

புள்ளைக் கலியும்
பொன்கலியும் தீத்தமக
போரைப் பிரிச்சிட்டா
பொன்னரிசி குத்தியிட்டா
போந்தமுடி ஐயாவுக்கு
பிம்புபொறந்த மாது
பின்னப்பாய் சுத்திப்
பூவடியின் மேலவச்சா
நம்பொண்ணுடைய மக்களும்
போர்விசயன் மக்களும்
பிதிர்வழி யத்தனையும்
ஓங்கபூவடியைச் சுத்தியிட்டா
நம்மபொண்ணா கருணன்
புள்ளைமுடி தீத்தமகன்
பூலோகம் பேர் ஓங்க
பூவளத்தான் ஓவியமா

மாது கலியும்
மனக்கலியும் தீத்தமக

வையையிலே வாழ்ந்தமக
மதிச்சமுடி ஐயாவுக்கு
மனம்பொறுத்த ஐயாவுக்கு
மச்சைப் பிரிச்சிட்டா
வாய்க்கரிசி குத்தியிட்டா
மறுத்திருந்த மாது
வண்ணப்பாய் சுத்தி
மலரடியின் மேலவச்சா
மகுரப் பொறந்த மக்களும்
மாதுடைய மக்களும்
வாள்விசயன் மக்களும்
நம்மமாசேனை அத்தனையும்
ஒங்கமலரடியைச் சுத்திவந்தா
மஞ்சமுடி தீத்தமகன்
வையகம் பேரோங்க
மலர்வளத்தான் ஓவியமா
புள்ளைமுடி தீத்தமகன்
பூலோகம் பேரோங்கப்
பூவளத்தான் ஓவியமா
பெத்த ஒசத்திபோல
போர் பெத்தா ஓவியமா
வளத்த ஒசத்திபோல
வரிசைபெத்தா ஓவியமா

OOO

**தன் தாய் மாமனை மணந்து மகிழ்ச்சியுடன் மக்கள் பெற்றுக் குறைவின்றியும், கணவருக்குப் பணிவிடை செய்தும் இருந்தவள், தன் கணவன் இறந்தபோது மஞ்சளையும், மங்கல நாணையும் இழந்தமைக்கு வருந்திப் பாடியது.**

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநா வாழ்ந்து
மனம்போல வாழ்ந்திருந்து
மன்னவர்க்கு முன்போக
மாதவங்கள் செய்யலியே

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநா வாழ்ந்து
புத்திபோல வாழ்ந்திருந்து
புண்ணியர்க்கு முன்போகப்
பெருந்தவங்கள் செய்யலியே

அன்னத்தே நாளயிலே
பெருஞ்சமத்தி ஆயா
போர்மாமன் மஞ்சருக்குப்
பூவசைச்சா ஓவியமா
பூவசைச்ச ஓவியம்போல்
போதமக்கள் கண்டிருந்தோம்
பெருமைபண்ணி
வாழ்ந்திருந்தோம்

மாசமத்தி ஆயா
மாமருடை மஞ்சருக்கு
மலரசைச்சா ஓவியமா
மலரசைச்ச ஓவியம்போல்
மகுரமக்கள் கண்டிருந்தோம்
மகிழ்சிபண்ணி வாழ்ந்திருந்தோம்

மானும் மரகதமும்
மலர்ச்செண்டும் பம்பரமும்
மல்லிமலர் ரோசாவும்
வயிரமும் ரத்தினமும்
மக்கள் இருவகையும்
மாத்தி மக்கள் கண்டு
வாழ்ந்திருந்தோம் ஓவியமா

புலியும் புலிமானும்
பூச்செண்டும் பம்பரமும்
பிச்சிமலர் ரோசாவும்
புதுவயிர ரத்தினமும்
புத்திரரும் பொய்க்கடியும்
புள்ளை இருவகையும்
பெத்திருந்தோம் ஓவியமா

குன்னக்குடி போலக்
கொடியோடிக் காச்சிருந்தேன்

வையாபுரி போல
வாதோடிக் காச்சிருந்தேன்

சட்டையின்மேல் சட்டையிட்டா
ஜட்ஜ்மார் போலிருக்கும்
தோள்மேல் சட்டையிட்டாத்
துரைமார் போலிருக்கும்
மார்மேல் சட்டையிட்டா
வக்கீல்மார் போலிருக்கும்

ஆரைச் சரியிடலாம்
ஆராரை ஒப்பிடலாம்
வெள்ளி சரியிடலாம்
விடிமீனை ஒப்பிடலாம்
தங்கம் சரியிடலாம்
ஜட்ஜ்மார் ஒப்பிடலாம்
வயிரம் சரியிடலாம்
வக்கீல்மார் ஒப்பிடலாம்

அலைகடலில் பள்ளிகொண்ட
அச்சுதரை ஒப்பிடலாம்
நெலைகடலில் பள்ளிகொண்ட
பரமனை ஒப்பிடலாம்

நகுல சகாதேவர்
நால்வரையும் ஒப்பிடலாம்
ஆரணங்கு மாலைகொண்ட
அரிராமர் ஒப்பிடலாம்
பவளக்கொடி மன்னர்
அர்ச்சுனரை ஒப்பிடலாம்
ருக்மணி மன்னர்
கிருஷ்ணரை ஒப்பிடலாம்

வீதியிலே போனாலும்
வெள்ளிரதம் போலயில்ல
வெள்ளி ரதத்திலேயும்
வேல்வந்தாப் போலயில்ல

சாலையிலே போனாலும்
தங்கரதம் போலயில்ல
தங்க ரதத்திலேயும்
சாமிவந்தாப் போலயில்ல

வெள்ளிக் கொடைபுடிச்சு
வீதியிலே போனாக்க
வீதியிலே உள்ளசனம்
வேதியரா என்பாக

பச்சைக் கொடைபுடிச்சுப்
பாதையிலே போனாக்க
பாதையிலே கண்டசனம்
பாண்டியரா என்பாக

வெள்ளைநூல் இல்லாத
வேதிப் பிராமணரே
தானாநூல் இல்லாத
சாதிப் பிராமணரே

பொன்னுந் திருமேனியிலே
பிஞ்சுமக்கள் ஐயாவுக்குப்
பிணிவந்து சேந்ததில்லே

செல்லத்திரு மேனியிலே
சின்னமக்கள் ஐயாவுக்குச்
சீக்குவந்து சேந்ததில்லே

வருசத்திரு மேனியிலே
வாழுமக்கள் ஐயாவுக்கு
விசாதிவந்து சேந்ததில்லே

அரிக்கிற நிலாவிலே
அழுக்கோ இருந்தாலும்
ஆசை மக்கள் ஐயா
அரியதொரு மேனியிலே
அழுக்கோ இருந்ததில்லே

சூடிய பூவிலே
தூசி இருந்தாலும்
செல்லமக்கள் ஐயா
தூயதொரு மேனியிலே

தூசிபடப் பாத்ததில்லே

ஊரும் மதிச்சமன்னர்
உத்யோகஸ்தர் மதிச்சமன்னர்
நாடும் மதிச்சமன்னர்
நகரத்தா மதிச்சமன்னர்
சீமை மதிச்சமன்னர்
செகசனங்க மதிச்சமன்னர்

கருணர் வெளிப்பாட்டாக்கக்
கட்டுச்சோறு தேவையில்லே
கருணருடை காருகண்டா
காபிவைப்பார் எத்தனையோ

வீமர் வெளிப்பட்டாக்க
வெலையரிசி தேவையில்லே
வீமருடை காருகண்டா
விருந்துவைப்பார் எத்தனையோ

சோழர் வெளிப்பட்டாக்க
சோறுகட்டத் தேவையில்லே
சோழருடை காருகண்டா
சோறிடுவார் எத்தனையோ

சித்திரச் செல்லாயி
தெருவிவரும் வேளையிலே
சின்னமக்கள் ஐயா
சேந்திருந்தா திட்டிவரும்

மாயாண்டி எல்லை
வாரியிடும் வேளையிலே
வாழுமக்கள் ஐயா
வந்திருந்தா திட்டிவரும்

வெள்ளிக்கிழமை
மேலான நாள்போச்சு
செவ்வாய்க்கிழமை
சிரத்தையுள்ள நாள்போச்சு
விடிஞ்சா எந்திரிச்சா
வீமருடை பணிவிடைதான்

பொழுது விடிஞ்சா
பெருமாள் பணிவிடைதான்
காலமே எந்திரிச்சா
கருணர் பணிவிடைதான்

பூமாம மஞ்சருக்கு நான்
பொறசாதி வையாமே
பூப்போல சோறும்
புஷ்பம் போல வெஞ்சனமும்
பொங்கச் சலிச்சதில்லே

மாமருடை மஞ்சருக்கு நான்
மறுசாதி வையாமே
மைப்போல சோறும்
மலர்போல வெஞ்சனமும்
வடிக்கச் சலிச்சதில்லே

ஒருகூடை மஞ்சளிலே
உறுதிமஞ்சள் பாத்தெடுப்பேன்
அரைக்கூடை மஞ்சளிலே
அழுத்தமஞ்சள் பாத்தெடுப்பேன்
ஊரணியைக் கண்டாக்க
உருண்டை மஞ்சள்
பாத்தெடுப்பேன்
பள்ளத்தைக் கண்டாக்கக்
கனத்தமஞ்சள் பாத்தெடுப்பேன்

பச்சை மஞ்சள் வெட்டிப்
பலகை மஞ்சள் நாருரிச்சுப்
பாங்கி குளிக்குந்தொறை
பாசிபடர்ந்த தென்ன

கொச்சிமஞ்சள் வெட்டிக்
கிழங்குமஞ்சள் நாருரிச்சுக்
கோதை குளிக்குத்தொறை
கோரை படந்ததென்ன

ஆராரு வந்தாலும்
அவுக்காத மங்கிலியம்

கள்ளர்படை வந்தாலும்
கழத்தாத மங்கிலியம்
மறவர்படை வந்தாலும்
வாங்காத மங்கிலியம்

எமர்படை வந்து
எழையைப் பெருக்கிவிட்டான்
தூதர்படை வந்து
தும்பைத் தெரிச்சுவிட்டான்

OOO

ஒருநாளும் கணவனை விட்டுப் பிரிந்தறியா மனைவி, அழகும், செல்வமும், வீரமும் உடைய கணவருடன் மண்ணுள்ள காலம் வாழ்ந்தாலும் சலியாது எனக் கணவன் இறந்தபோது வருந்திப் பாடியது.

வந்துதோ காலம்
மறைஞ்சுதோ இவ்வுலகம்
மகிழ்ந்துதோ வானுலகம்
வயிரமுடி தீவாங்க
சென்னுதோ காலம்
செழிச்சுதோ இவ்வுலகம்
செறந்துதோ வானுலகம்
செல்லமுடி தீவாங்க

மண்ணிப் பொறந்தவுக
மாளுறதே நிச்சயந்தான்
மாளாம இருக்க
வரம்பெற்றார் யாருமில்லே

தரணிப் பொறந்தவுக
சாகுறதே நிச்சயந்தான்
சாகாம இருக்கத்
தவம்பெற்றார் யாருமில்லே

பூமிப் பொறந்தவுக
போறதுவே நிச்சயந்தான்
போகாம இருக்கப்
புகழ்பெற்றார் யாருமில்லே

இந்திரரை நொந்தழுதா
எழுத்துவிதி எம்பாக
சூரியரை நொந்தழுதா
சுளிச்சவிதி எம்பாக
சந்திரரை நொந்தழுதா
தலைவிதி எம்பாக

உயிருமது ஒண்ணு
உடல்தான் வேறே
சிந்தையது ஒண்ணு
திரேகமது வேறே
ஆவியது ஒண்ணு
ஆளுமது வேறே

உயிரைப் பிரிச்சாயே
ஒடல்தனி ஆக்கியிட்டே
சிந்தை பிரிச்சாயே
திரேகந்தனி ஆக்கியிட்டே
ஆவி பிரிச்சாயே
ஆளத்தனி ஆக்கியிட்டே

விட்டுப் பிரியா
வேத்தூருத் தங்கமே
நித்தம் பிரிய
நெஞ்சந் துணிஞ்சமுன்னா

அடுத்துப் பிரியா
அசலூர்த் தங்கமே
அநேகநாப் பிரிய
அடியெடுத்து வச்சமுன்னா

ஆராரு இருந்தாலும்
ஆனைகட்டி வாழ்ந்தாலும்
ஆறுதல் மெத்தச் சொன்னாலும்
அல்லி முடிக்கும்
அரும்புவெலை காணாது
அருச்சுனரிடம் பேசும்
ஆவல் தெளியாது

போரானை கட்டிப்
பிரியமுடன் வாழ்ந்தாலும்
பெருஞ்சேனை அத்தனையும்
போத்தியிட்டு நின்னாலும்
பொண்ணு முடிக்கும்
பூவுவெலை காணாது
பெருமாளிடம் பேசும்
பேச்சுவெலை காணாது

சட்டிப் பாக்குஞ்
சலியாப் பெருமாளும்
பொட்டிப் பாக்கும்
பிரியாப் பெருமாளும்
மன்னவருந் தேவியும்
வாசவழி வந்தாக்க
மரத்தி லிருக்கும்
மயிலெறங்கித் தெண்டனிடும்
கொத்தவருந் தேவியுங்
கூடிவழி நடந்தாக்கக்
கொம்பி லிருக்கும்
குயிலெறங்கித் தெண்டனிடும்

மன்னவருந் தேவியும்
எங்கஜயா வாசல்
மனைக்கிருந்த நாமொதலா
மன்னரை விட்டு
மாது பிரிஞ்சதில்லே
கொத்தவருந் தேவியும்
எங்கஜயா வாசல்
கொலுவிருந்த நாமொதலா
கொத்தவரை விட்டுக்
கோதை பிரிஞ்சதில்லே

பல்லழகுந் தன் செகப்பும்
பவளம் கொருத்தாப்போல்
தன்னழகுந்த தன்செகப்புந்
தங்கமின்னல் இட்டாப்போல்

ஆரணங்கு வாழ்ந்தமன்னர்
அழகில் அதிகமில்ல
அன்பில் ஒசத்தியில்ல
அதிகச் சமத்துமில்ல
மயிலனையா வாழ்ந்தமன்னர்
வடிவில் அதிகமில்ல
மாசமத்து மெத்தவில்ல

பட்டணத்து ராசா
படைபோவார் என்னறியேன்
பாஞ்சாலி மங்கிலியம்
பழுதுபடும் என்னறியேன்

கோத்திரத்து ராசா
குடிபோவார் என்னறியேன்
கொம்பனையா மங்கிலியம்
கோரைபடும் என்னறியேன்

தள்ளியிரு எங்காத
தருமரையும் தப்பவிட்டேன்
வெலகியிரு எங்காத
வீமரையும் தப்பவிட்டேன்
அடசியிரு எங்காத
அர்ச்சுனரைத் தப்பவிட்டேன்

சாமியும் அம்மனும்
தள்ளி இருந்தாலும்
தருமருந் தேவியும்
தள்ளி இருந்ததில்லே

அம்மனுஞ் சாமியும்
அடசி இருந்தாலும்
அருச்சுனருந் தேவியும்
அடசி இருந்ததில்லே

ஆடை ஒருவேசம்
அழகுள்ளா இவ்வேசம்
சேலை ஒருவேசம்
செறப்புள்ளா இவ்வேசம்

கூட்டத்தைக் கூட்டிவச்சு
கோடிபெத்தார் மஞ்சனைக்
கூட்டிவரச் சொன்னாக்க
ஐயா குத்தங்கள்
கூட்டத்துக்குள்ளே சொன்னதில்லே
கொடும்பாவி இன்னதில்லே

அம்பலத்தைக் கூட்டிவச்சு
ஆண்டிருந்தார் மஞ்சனை
அழைச்சுவரச் சொன்னாக்க
அருமை மக்கள் ஐயா
அநியாயம் சொன்னதில்லே
அரும்பாவி இன்னதில்லே

தங்க மிதியடிதான்
தரிச்சவிடம் கச்சேரிதான்
பொன்னு மிதியடிதான்
போனவிடம் கச்சேரிதான்
வெள்ளி மிதியடிதான்
வீத்திருந்தவிடம் கச்சேரிதான்
விரிச்ச சமுக்காளம்
விடியுமட்டும் கச்சேரிதான்
போட்ட சமுக்காளம்
பொழுதுமட்டும் கச்சேரிதான்
தங்கவில்லும் அம்பலமும்
தள்ளாத சேவுகமும்
தர்வான்கள் காவலுண்டு

வெள்ளிவில்லும் அம்பலமும்
வெலகாத சேவுகமும்
வெம்பாயி காவலுண்டு

பொன்னுவில்லும் அம்பலமும்
பெசகாத சேவுகமும்
போகிகளும் காவலுண்டு

ஆறா வழக்குக்கும்
ஆண்டிருந்தார் எல்லை
ஆளுவந்து நிக்கும்

தீரா வழக்குக்கும்
தெசையுள்ளார் எல்லை
சீட்டு வந்து நிக்கும்

மாறா வழக்குக்கும்
வாழ்ந்திருந்தார் எல்லை
வண்டிவந்து நிக்கும்

கருணர் வழக்குரைச்சாக்
கவுருருவி விட்டாப்போல்
செல்வர் வழக்குரைச்சாத்
தேங்காய் ஒடைச்சாப்போல்
அருச்சுனவா வழக்குரைச்சா
அம்புருவி விட்டாப்போல்

நாட்டிலொரு நல்லநா வந்தாக்க
நாட்டியங்கள் பெத்துவர
நடுச்சாமஞ் செல்லுமே
ஊரிலொரு ஒசந்த நாவந்தாக்க
ஊர்ஜிதங்கள் பெத்துவர
ஒருச்சாமம் செல்லுமே

அடிவைக்கச் செல்வம்
அள்ளிச் சொரிஞ்சுதே
கால்வைக்கச் செல்வம்
கனகம் சொரிஞ்சுதே
மெத்த மெத்தச் செல்வம்
மேன்மேலும் உண்டாச்சு

ஆனைப் பலமுடையார்
அஞ்சாத நாவுடையார்
குதிரைப் பலமுடையார்
கூசாத நாவுடையார்

ஆனைமேல் வாரவனும்
அஞ்சுவான் வாதெறக்க
ஆனைவிட்டுக் கீழெறங்கி
ஐயா சரணமுன்னு
அடிபணிவான் வாதெறக்க

பொங்குதே கண்ணீரு

குதிரைமேல் வாரவனும்
கூசுவான் வாதெறக்கக்
குதிரைவிட்டுக் கீழெறங்கிக்
கோடி சரணமுன்னு
கும்புடுவான் வாதெறக்க

கல்லுமேல் நின்னு
கணக்கனுக்குச் சேதி சொன்னாக்
கல்லும் கிடுகிடுங்கும்
கணக்கன் திடுக்கிடுவான்

மண்ணுமேல் நின்னு
மறவனுக்குச் சேதிசொன்னா
மண்ணும் கிடுகிடுங்கும்
மறவன் திடுக்கிடுவான்

பூமிமேல் நின்னு
புலவனுக்குச் சேதி சொன்னா
பூமி கிடுகிடுங்கும்
புலவன் திடுக்கிடுவான்

உள்ளநாள் உள்ளமட்டும்
ஊழிகடல் உள்ளமட்டும்
புள்ளையார் கோவில்
பொரகாரம் உள்ளமட்டும்
ஐயனார் கோவில்
அடிவாரம் உள்ளமட்டும்
சுவாமி யிருக்கும்
சன்னதிகள் உள்ளமட்டும்
அம்மன் இருக்கும்
அடிவாரம் உள்ளமட்டும்
தென்மதுரை மீனாள்
திருப்பணிகள் உள்ளமட்டும்
வடமதுரைச் சொக்கர்
வாசப்படி உள்ளமட்டும்
கைலாச நாதர்
கதவடி உள்ளமட்டும்
காசி விசுவேசர்
கைவிளக்கு உள்ளமட்டும்
சாலாச்சி அம்மன்
சன்னதிகள் உள்ளமட்டும்
நித்திய கல்யாணி
நிலையடிகள் உள்ளமட்டும்
தில்லை நடராசர்
திருப்பணிகள் உள்ளமட்டும்
சீறி அலைஎறியும்
சேங்கைக்கரை உள்ளமட்டும்
அலறி அலைமோதும்
அலைகடல் உள்ளமட்டும்

மண்ணுள்ள காலம்
வாழ்ந்தாச் சலியாதே
பொண்ணுள்ள காலம்
பூண்டாச் சலியாதே

நகரத்தார் திருப்பணி செய்த தலங்கள் பற்றிய குறிப்புகள் இடம் பெற்றுள்ளன.

○○○

குறையேதும் இன்றிக் கணவனுடன் மகிழ்ந்து வாழ்ந்த மனைவி திடீரென்று கணவன் இறந்தபோது தன் மூத்த மகள் விதவையானதால் தந்தைக்கு இறப்புச் சடங்குகளைச் செய்ய இயலாமற்போனதே என வருந்திப் பாடியது.

ஆடினா தீத்தம்
அடஞ்சா கைலாசம்
காசி நதியாடிக்
கைலாசம் சேந்தவுக
மணிகர்ணை ஆடி
மாதீத்தம் ஆடி
வைகுந்தம் சேந்தவுக

அண்ணா மலைநாடு
அல்லி பொறக்கயிலே
அம்மானார் பூநாடு

அரசர் வளரயிலே
திருப்பாக் கடலிலே
சீதை பொறக்கயிலே
திருவண்ணா மலையிலே
செல்வர் வளரயிலே

இருவருக்கும் மாலை
எடுத்துக் குடுக்கயிலே
வைகாசி மாத்தயிலே
வளரும்பொறை பாத்து
நல்லநாள் பாத்து
நாள்முளுத்தம் தேதிபாத்து

தாழையிலே பூவெடுத்து
வாழையிலே நார்உரிச்சுக்
கொண்டையிலே பூச்சூடிக்
கோவிலுக்கு வேணுமுன்னு

கூட்டிவந்த நாமொதலா
அரண்மனைக்கு வேணுமுன்னு
அழச்சுவந்த நாமொதலா
கொத்தவருந் தேவியும்
கொலுவிருந்த நாமொதலாச்
செல்வருக்கும் தேவிக்கும்
திருப்பூட்டிய நாமொதலா
கருணருந் தேவியுங்
கைப்புடிச்ச நாமொதலா

அள்ளப் பொழங்க
அவதி கெடையாதே
சிந்தப் பொழங்கச்
செரமங் கெடையாதே
கொட்டப் பொழங்கக்
கொறச்சல் கெடையாதே
வாரப் பொழங்க
வருத்தங் கெடையாதே

வாவரசி கோட்டையிலே
வாழ்ந்திருந்தார் எல்லையிலே

ஆடி தவக்கமில்லே
அதிகநா வாட்டமில்லே
திங்கத் தவக்கமில்லே
செறந்தநா வாட்டமில்லே
வாழ்வாக் கொறையுமில்லே
மக்களுன்னா அட்டியில்லே
மச்சங்கொறையுமில்லே
போரழகி கோட்டையிலே
பொலிஞ்சிருந்தார் எல்லையிலே
போராக் கொறையுமில்லே
புள்ளையின்னா அட்டியில்லே
பொன்னுங் கொறையுமில்லே

கலியும் கலிமானும்
கலந்து வெளையாண்டாப்போல்
புலியும் புலிமானும்
பின்னி வெளையாண்டாப்போல்
மானும் கலையும்
மருகி வெளையாண்டாப்போல்
சாரையும் சர்ப்பமும்
சருகி வெளையாண்டாப்போல்
நீர்ப்பாம்பும் குட்டியும்
நெளிந்து வெளையாண்டாப்போல்
கந்தருடை வள்ளியம்மை
கைகலந்த பாவனைபோல்
வீமருடை வள்ளியம்மை
வெரல்கலந்த பாவனைபோல்
தேனும் தெனைமாவும்
சேத்துப் பெனைஞ்சாப்போல்
செந்தில் வடிவேலவருக்கு
தெய்வானை வாச்சப் போல்
பாலும் பழமும்
பகுந்து கொடுத்தாப்போல்
மன்னருந் தேவியும்
மனம்போல வாழ்ந்திருந்தோம்
பெருமாளும் தேவியும்
புத்திபோல வாழ்ந்திருந்தோம்
புத்திரரும் செல்வமும்

போதக் கொழிச்சிருந்தோம்
மதராசு ஆளும்
மகனாரைக் கண்டிருந்தோம்
கும்பகோணம் ஆளும்
கொழந்தையைப் பெத்திருந்தோம்

கடுகுருண்ட நேரமில்ல
காலன் வந்து சேந்ததுன்னா
மொளகுருண்ட நேரமில்ல
மோகம் வந்து சேந்ததுன்னா
எள்ளுருண்ட நேரமில்ல
எமன்வந்து சேந்ததுன்னா

மாசமத்து ஐயா
மண்ணிக் கெடக்கலியே
வாரமுன்னு சொல்லலியே
வருசந்தொகை ஆகலியே
மகுரப்பொறந்த மக்களறியலியே
மஞ்சன்முடி தீத்தமகன்
மடியில் போடலியே
வார்த்தைமொழி கேக்கலியே
மாண்டது அறியலியே
மாண்ட மொகத்தை
மதிமொகத்தைப் பாத்தழுதான்

பெருஞ்சமத்து ஐயா
பூமிக் கெடக்கலியே
போரமுன்னு சொல்லலியே
பொழுதுதொகை ஆகலியே
போதப்பொறந்த
பொண்களறியலியே
புள்ளமுடி தீத்தமகன்
பெருந்தொடையில் போடலியே
பேச்சுமொழி கேக்கலியே
போனது அறியலியே
போன மொகத்தைப்
பொன்மொகத்தைப் பாத்தழுதான்

வளத்தாரும் போகயிலே
மகுந்த மகளும்
மையழிஞ்ச மாது
வையை திரட்டலியே
மச்சைப் பிரிக்கலியே
மணியரிசி குத்தலியே
வந்தாரை விசாரிச்சு
வளவுதிரிஞ்சு வந்தா
மாண்டமொறை சொல்லிவந்தா
மறுத்திருந்த மக்கள்
வையை திரட்டிவந்தா
மச்சைப் பிரிச்சுவந்தா
மணியரிசி குத்திவந்தா
வண்ணப்பாய் சுத்தியிட்டா
மாளவழி காட்டியிட்டா
மகுந்த மகனும்
வையகம் பேரோங்க
மலர்வளத்தான் ஓவியமா

பெத்தாரும் போகயிலே
பெரிய மகளும்
பொட்டழிஞ்ச மாது
பொய்யை திரட்டலியே
போரைப் பிரிக்கலியே
பொன்னரிசி குத்தலியே
பெருஞ்சேனை விசாரிச்சுப்
போனமொறை சொல்லிவந்தா
பிம்பிருந்த மக்கள்
பொய்யை திரட்டிவந்தா
போரைப் பிரிச்சுவந்தா
பொன்னரிசி குத்திவந்தா
பின்னப்பாய் சுத்தியிட்டா
போகவழி காட்டியிட்டா
பெரிய மகனும்
பூலோகம் நல்லாங்கப்
பூவளத்தான் ஓவியமா

OOO

கணவனும் மனைவியும் பேரன்

பேத்திகளைக் கொஞ்சி மகிழ்ந்து வளர்த்திருந்தும் அவர்கள் திருமணத்திற்கு, கணவன் இறந்ததால் சேர்ந்து போக இயலாது என்றும், யார் இருந்தாலும் எத்தனை செல்வமிருந்தாலும் கணவனுக்கு இணையில்லை என்றும் வயதான காலத்தில் தான் வா(ழ்)வரசியாக மாளத் தவங்கள் செய்யவில்லையே என்றும் கணவன் இறப்புக்கு வயதான மனைவி வருந்திப் பாடியது.

வாவரசி வாவரசி
எங்கமாசேனை அத்தனையும்
மக்க பறக்க வச்சு
வாவரசி யானவுக
எங்கபெருஞ்சேனை அத்தனையும்
புள்ளபறக்க வச்சுப்
போரழகி யானவுக

வளத்தாரைப் போல
வாவரசி ஆகலியே
பெத்தாரைப் போல
போரழகி ஆகலியே

மன்னர் எழந்திருக்க
மாபொழைகள் செய்திருந்தேன்
பெருமாள் எழந்திருக்க
பெரும்பொழைகள் செய்திருந்தேன்

கருணர் சமத்தைக் காணமுடியாது
வீமர்சமத்தை வெல்லமுடியாது
உங்கசெல்லக் கெடையைத்
தெருவார் அறியலியே
சேனைதளம் பாக்கலியே
செத்ததுவே அறியலியே

ஒங்கவருசக் கெடையை
வளவார் அறியலியே
மாசேனை பாக்கலியே
மாண்டதுவே அறியலியே

கள்ளச் சுருட்டோலை
கனசமத்துமுள்ள ஐயா
கையிலயா வச்சிருந்தா
மாயச் சுருட்டோலை
மாசமத்துக்காரர் ஐயா
மடியிலயா வச்சிருந்தா

மட்டமுள்ள தம்பி
ஆனைரெண்டு கட்டி
அதிட்டமுடன் வாழ்ந்தாலும்
பிஞ்சான தம்பிய
போரானை ரெண்டு கட்டிப்
பிரபலமா வாழ்ந்தாலும்
மதிப்பான தம்பிய
மதசானைரெண்டு கட்டி
மகிழ்ச்சியுடன் வாழ்ந்தாலும்
பெருமாள் எடுத்தொரைக்கும்
பேச்சு வரமாட்டாதே
பொண்ணு முடிக்கும்
பூவெலையும் காணாதே
மன்னர் எடுத்தொரைக்கும்
வார்த்தைவர மாட்டாதே
மாது முடிக்கும்
மலர்வெலையும் காணாதே

மாளுமறுதி மட்டமுள்ள மக்க
வார்த்தைக் குரிமையா
மனசுக் கெசஞ்சாம்பா
போகுமறுதி பிஞ்சானமக்க
பேச்சுக் குரிமையா
புத்திக் கெசஞ்சாம்பா

மாசேனை வாசல்எல்லாம்
மாலை யிடும்நேரம்
மன்னருந் தேவியும்

மணிக்கா ரெடுத்து
மட்டமுள்ள மக்கள் அழைச்சு
வாள்விசயன் தேவிகளை
மாதை அழைச்சு
மடிப்பொசந்த பட்டுடுத்தி
மணிவயிரம் மேச்சாத்தி
மலர்ந்த புஷ்பம் மேலவச்சு
மாலையிடும் வாசல்
வளவிபோய்ச் சேந்தாக்க
மதிப்பதிகம் தோணுமே

பெருஞ்சேனை வாசல்எல்லாம்
பூச்சேக்கும் நேரம்
பெருமாளுந் தேவியும்
பெஷல் காரெடுத்து
பிஞ்சானமக்கள் அழைச்சு
போர்விசயன் தேவிகளைப்
பொண்ண அழைச்சுப்
புடிஒசந்த பட்டுடுத்திப்
புதுவயிரம் மேச்சாத்திப்
பூத்தபுஷ்பம் மேலவச்சு
பூச்சேக்கும் வாசல்
பூமிபோய்ச் சேந்தாக்கப்
பெருமை அதிகம் தோணுமே

கண்ணால் மதிச்ச
கலியாணம் எத்தனையோ
கையாலே வேலைஏவ
கனவேலை மெத்த இருக்கே

மனசால் மதிச்ச
மங்களங்கள் எத்தனையோ
வாயால் வேலைஏவ
மங்களங்கள் ரொம்ப இருக்கே
மக்களுடைய வாசல்எல்லாம்
மனசால் மதிக்க
மங்களங்க ரொம்ப இருக்கே

நம்மபோர்விசயன் வாசல்
பொண்ணோ சமஞ்சிருக்கு
பூத்தமலர் கிட்டஇருக்கு
பூவசைச்சுப் பாக்கலியே
பொண்ணுக்கு எசஞ்ச
பொன்மானாத் தேடலியே
பொண்ணுடைய வாசல்நான்
புடிஒசந்த பட்டுடுத்தி
பெருமாளும் தேவியும்
பொண்ணழைக்கப் போகலியே
ஓங்கபேராசை தீரலியே
பொண்ணுடைய வாசல்
பெருமைச்சோறு உங்கலியே

நம்ம மாதுடைய வாசல்
வருந்தியமக்கள் பெரிசானாக
மகுரப் படிக்கவிட்டு
மாலையிட்டுப் பாப்பமுன்னு
மாதுடைய வாசல்நான்
மடிப்பொசந்த பட்டுடுத்தி
மன்னரும் தேவியும்
மாதழைச்சுப் போகலியே

ஓங்கமனசாசை தீரலியே
மாதுடைய வாசல்
மகிழ்ச்சிச்சோறு உங்கலியே
மகனார்க்கு வாரதுக்கு
மரப்பொட்டி சேத்துவச்சா
மகனாரும் சீதனமும்
வாங்கி மதிக்கலியே
மரப்பொட்டி சீதனத்தை
வாங்கி மதிக்கலியே
மரப்பொட்டிக்கு உள்ளாக
வாங்கிவச்சுப் பாக்கலியே
ஓங்கமனசாசை தீரலியே

போர்விசயன் வாசல்
பூவசைச்சுப் பாக்கவுன்னு
பொட்டகங்கள் வாங்கிவச்சா

போர்விசயன் சீதனத்தைப்
பொட்டகத்துக்கு உள்ளே
பூட்டி மதிக்கலியே
ஓங்கபேராசை தீரலியே

கட்டி மகனும்
கட்டைப் பனையோலை
வெட்டிக் கடைநறுக்கி
ஈக்கி நறுக்கி
இருபொறமாத் தாளொதுக்கி
மங்கல ஓலையின்னு
மஞ்சத்தணல் பரப்பி
கலியாண ஓலைன்னு
கட்டிமகன் வாசல்
கையெழுத்தைப் போடலியே நீங்க
கனசமத்தர் காணலியே
மங்கள ஓலையின்னு
மையெழுத்தைப் போடலியே நீங்க
மாசமத்தர் காணலியே
கட்டி மகனும்
கொலுமேளம் கையமத்திக்
குறிக்கலியே கையெழுத்து
நாதசுரம் கையமத்தி
நாட்டலியே கையெழுத்து

பூலோகத்தி சொல்லுக்கு
நம்மதேடிய மக்கள்
பெத்தார் இருந்தாலும் ஐயா
போத்தினார் காணலியே
பெருஞ்சமத்தர் காணலியே

வையகத்தி சொல்லுக்கு
மகுரப் பொறந்த
மக்கள் இருந்தாலும் ஐயா
வருந்தினார் காணலியே
மாசமத்தர் காணலியே

அடிச்சு முழக்கி நம்ம
அருமைமகன் மஞ்சனெல்லாம்

பொங்குதே கண்ணீரு

ஆனையின்மேல் தூக்கிவச்சா
ஆனைக்கு அதிகாரி
ஆர்காணோம் என்னாக்க
நம்ம அருமைக் கருணரெல்லாம்
ஐயா
அதிட்டமுள்ளார் இல்லையிம்பான்

கொட்டி முழக்கிக்
கொத்தார் குழலானைக்
குதிரையின்மேல் தூக்கி வச்சா
குதிரைக்கு அதிகாரி
ஆர்காணோம் என்னாக்க ஐயா
கொணமுள்ளார் இல்லையிம்பான்
நம்ம இந்திரர்க்கு வார
எலஞ்சியத்தைப் பாக்கலியே
நம்மபாண்டியர்க்கு வார
பாக்குடத்தைப் பாக்கலியே

தங்க விளக்கெரிய
நம்மதங்கமகன் வாசலெல்லாம்
தம்பி தமிழ்பாடிவர
தம்பி தமிழோசை
சங்கிலிப் பின்னலிலே
சாஞ்சிருந்து கேட்டிருந்தோம்

வெள்ளி விளக்கெரிய
நம்ம வாள்விசயன் வாசலெல்லாம்
வீமன் தமிழ்பாடிவர
வீமன் தமிழோசை
வெளையாட்டுப் பின்னலிலே
வீத்திருந்து கேட்டிருந்தோம்

பொன்னு விளக்கெரிய
நம்மபோர்விசயன் வாசலெல்லாம்
பிள்ளைத் தமிழ்பாடிவர
பிள்ளைத் தமிழோசை
பின்னலிட்ட ஊஞ்சலிலே
பிம்பிருந்து கேட்டிருந்தோம்

குத்து விளக்கெரிய
நம்ம கருணருடைய வாசலெல்லாம்
குழந்தைதமிழ் பாடிவர
குழந்தை தமிழ் ஓசை
கோலாட்டப் பின்னலிலே
குறிச்சிருந்து கேட்டிருந்தோம்

காலமறிஞ்சு கடன்குடுத்த ராசாவே
நேரமறிஞ்சு நெல்அளந்த ராசாவே
எட்டேர் உழுதுவர
எலம்பள்ளி நட்டுவரப்
பத்தேர் உழுதுவரப்
பாப்பள்ளி நட்டுவர
அஞ்சேர் உழுதுவர
அழகுபள்ளி நட்டுவர

வட்டச் சுளகுவரும்
வண்டியிலே நெல்லுவரும்
வரிக்கருடஞ் சம்பாவரும்

ஒட்டுச் சுளகுவரும்
ஒருவண்டி நெல்வரும்
ஒசந்தமணிச் சம்பாவரும்

கம்பத்துத்தேன் வருமே
கம்மாயிமீன் வருமே
கம்மாயிமீனை ஐயா
காசாக்கிப் பாத்ததில்லே
கரியாக்க நல்லமனம்

வெள்ளாத்துமீன் வருமே
வெள்ளாத்துமீனை ஐயா
வெலயாக்கிப் பாத்ததில்லே
விருந்தாக்க நல்லமனம்
கனசனத்தைக் கண்டாக்க
கரியாக்க நல்லமனம்
வெகுசனத்தைக் கண்டாக்க
விருந்தாக்க நல்லமனம்
கனசனத்தைக் கண்டாக்கக்
கரியாக்க நல்லமனம்
கரிசமைச்சுக் கூட்டி உண்டு
கலந்திருக்க நல்லமனம்

வெகுசனத்தைக் கண்டாக்க
விருந்தாக்க நல்லமனம்
விருந்தாக்கிக் கூட்டி உண்டு
வீத்திருக்க நல்லமனம்

இனத்தாரைக் கண்டாக்க
எலைபோட நல்லமனம்
சனத்தாரைக் கண்டாக்கச்
சாதமிட நல்லமனம்
அன்னக் களஞ்சியந்தான்
அமுதிடும் சந்திரந்தான்
பாலுக் களஞ்சியந்தான்
பழனிமலைச் சத்திரந்தான்
சோத்துக் களஞ்சியந்தான்
சொக்கருடை சத்திரந்தான்

அருமை விருந்தும்பா
ஆடுகொள்ள வேணும்பா
செல்ல விருந்தும்பா
சீனிகொள்ள வேணும்பா

எல்லார்க்கும் நல்லாவா
இருக்க நெழலாவா
இன்பமுள்ள சொல்லாவா
சந்திரர்க்கும் நல்லாவா
சவுக்கமரத் தோப்பாவா
சாந்தமுள்ள சொல்லாவா
சூரியர்க்கும் நல்லாவா
சோலை நெழலாவா
சொந்தமுள்ள சொல்லாவா
ஒசந்தமரம் கம்பொதுக்கி
ஒண்டவந்த பேர்கள் ரொம்ப
ஒண்டவந்த பேர்களுக்கும்
ஒதவிசெஞ்சா எங்கொளிஞ்சா

தழஞ்சமரம் கம்பொதுக்கித்
தங்கவந்த பேர்கள் ரொம்ப
தங்கவந்த பேர்களுக்கும்
தருமமிட்டா எங்கொளிஞ்சா

அடந்தமரம் கம்பொதுக்கி
அணையவந்த பேர்கள்ரொம்ப
அணையவந்த பேர்களுக்கும்
அள்ளியிட்டா எங்கொளிஞ்சா

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநாள் வாழ்ந்தும்
மகுந்த கலியாணம்
மகிழ்ச்சி பண்ணிச் செய்திருந்தும்
வடிவொசந்தார் முன்போக
மாதவங்கள் செய்யலியே

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநாள் வாழ்ந்தும்
பெரிய கலியாணம்
பெருமை பண்ணிச் செய்திருந்தும்
பொட்டொசந்தார் முன்போக
பெருந்தவங்கள் செய்யலியே

OOO

கல்வியறிவும், கடவுள் பக்தியும் நிறைந்த கணவன், மக்களும், மனைவியும் அறியாமல் திடீரென்று இறந்துவிட, கைம்மைக் கொடுமைகளைத் தன்னால் தாங்க இயலாதே என மனைவி வருந்திப் பாடியது.

நாளில்ல போகுது
நல்லமொகங் காணாமே
பொழுதில்ல போகுது
பொன்னுமொகங் காணாமே

ஒங்கசெல்லக் கெடையைத்
தெருவார் அறியலியே
சேனைதளம் பாக்கலியே
சீதை அறியலியே

ஒங்கவருசக் கெடையை
வளவார் அறியலியே
மாசேனை பாக்கலியே
மனைவி அறியலியே

பொல்லா வருதுன்னு
பேச்சொரைச்சு மாளலியே
வகையா வருதுன்னு
வார்த்தைசொல்லி மாளலியே

மன்னர் சொணங்குனதை
மனைவி அறியலியே
மாதவசாக் கண்ட
மக்களெல்லாம் காணலியே
வாள்விசயன் மக்கள்
மக்களெல்லாம் பாக்கலியே

பெருமா சொணங்குனதைப்
பொண்டி அறியலியே
பெருந்தவசாக் கண்ட
புள்ளையெல்லாம் காணலியே
போர்விசயன் மக்கள்
புள்ளையெல்லாம் பாக்கலியே

என்கருணர் சொழண்டது
கடுகுஉருண்ட நேரமில்லே
என்மன்னர் சொழண்டது
மொளகுஉருண்ட நேரமில்லே
என்பெருமா சொழண்டுது
பொன்உருண்ட நேரமில்லே

செல்லப் பெருமாள்
சேந்ததுவே காணலியே
வருசப் பெருமாள்
மாண்டதுவே காணலியே

நாக்கும் சரசுவதி
நடுநாக்கும் வேதாந்தம்

பொங்குதே கண்ணீரு

உள்ளம் சரசுவதி
உள்ளதெல்லாம் வேதாந்தம்
பல்லும் சரசுவதி
படிச்சதெல்லாம் வேதாந்தம்

சாமியின்னு சொன்னா
சதமா நெனச்சவுக
அம்மன்னு சொன்னா
அழுத்தமாக் கையெடுப்பா

திருப்பாக் கடலிலே
சீதை பொறந்ததும்
திருவண்ணா மலையிலே
செல்வர் பொறந்ததும்

இருவருக்கும் மாலை
மீனாட்சி யம்மன்
எடுத்துக் குடுக்கயிலே
திராசு புடிக்கயிலே
செரியாப் புடிச்சுவந்தேன்
நாழி புடிக்கயிலே
நயமாப் புடிச்சுவந்தேன்

புத்திரரும் செல்வமும்
போத மதிச்சிருந்தேன்
மகனாரும் செல்வாக்கும்
மகுர மதிச்சிருந்தேன்

வாள்விசயன் வாசலெல்லாம்
மாது சமைஞ்சிருக்கு
மலரோ மலந்திருக்கு
மாலையிடும் நேரமில்ல
மந்திரியும் காணலியே

போர்விசயன் வாசலெல்லாம்
பொண்ணோ சமைஞ்சிருக்கு
பூவோ மலந்திருக்கு
பூச்சேக்கும் நேரமில்ல
பொரதானியும் காணலியே

காலப் பகிசியில்ல
கண்குளுந்த வேளயில்ல
நேரப் பகிசியில்ல
நெமைகுளுந்த வேளயில்ல

இந்தமாயவிதி தீவினைக்கு
நான்வாவரசிப் பொண்ணு
மாதிருக்க மாட்டமுன்னேன்
வந்தவிதி போகலியே
வாங்கவந்தான் கேக்கலியே

இந்தப் பொல்லாவிதி தீவினைக்கு
நான்போரழகிப் பொண்ணு
பொண்ணிருக்க மாட்டமுன்னேன்
போட்டவிதி போகலியே
புடிக்கவந்தான் கேக்கலியே

ஆடை கொடியிலதான்
ஆபரணம் பொட்டியிலே
அல்லி ஒருமுலையிலே
சீலை கொடியிலதான்
சிறுபணுதி பொட்டியிலே
சீதை ஒரு முலையிலே

ஓசை கழட்டியிட்டாளன்
ஒப்பினையை மாத்திட்டா
சத்தம் கழட்டிட்டாளன்
சவரணையை மாத்திட்டா

குளிச்சு முழுகிவந்தா
கூடவரும் சீதேவி
முழுகிக் குளிச்சுவந்தா
முன்னேவரும் சீதேவி
சீதேவிப் பட்டத்தைத்
திருப்பி வச்சமுன்னாக

மகுந்தநகை ஆபரணம்
மாதுக்கு ஏலாது
பெரியநகை ஆபரணம்

பொண்ணுக்கு ஏலாது

கலியாணப் பொண்ணைக்
கரிக்கோலம் ஆக்கிவச்சா
மங்களப் பொண்ணை
வசமழிச்சுப் பாத்துவிட்டா

சீலைகரி வேசம் நான்
செறப்புள்ளா இவ்வேசம்
ஆடைகரி வேசம்நான்
ஆனிழையா இவ்வேசம்

சிந்தியிட்டேன் சிந்தியிட்டேன்
சீமைக்கமலம் சிறுவயிரம்
சிந்தியிட்டேன்
நாட்டுக்கமலம் நல்வயிரம்
சிந்தியிட்டேன்
காசிக் கமலம்
கனவயிரம் சிந்தியிட்டேன்
பூடிக் கமலம்
புதுவயிரம் சிந்தியிட்டேன்

அட்டியல் மின்னுமே
அடிக்கழுத்தே சாத்திய
ஆபரணம் சோதிவிடும்
காதோலை மின்னும்
கனவளைவி சோதிவிடும்
மூக்குத்தி மின்னும்
முழுவயிரம் சோதிவிடும்

ஆபரணம் சிந்தினதை
அள்ளிக் கொருத்தாலும்
அணையக் கழுத்தில்லே
பூணாரம் சிந்தினதைப்
பொறக்கிக் கொருத்தாலும்
பூட்டக் கழுத்தில்லே

ஆகா நகைக்கும்
அருஞ்சிறைக்கும் ஆளானேன்
போடா நகைக்கும்
பெருஞ்சிறைக்கும் ஆளானேன்

நகரத்தார் மகளிர் அணியும் பல்வகை அணிகலன்கள் பற்றிய செய்திகள், கைம்மைக் கொடுமை கள் இப்பாடலில் வெளிப்படு கின்றன.

○○○

தொழில் நிமித்தம் வாழ்ந்த ஊரில் இறவாது, சொந்த ஊருக்கு வந்து இறந்த கணவனுக்கு, தன் ஒரே மகனின் மகள் திருமணத்தைக் காணாது கண்மறைந்தாரே எனவும், தன்னைக் கைம்மைக் கொடுமைகளுக்கு ஆளாக்கி விட்டாரே எனவும் வயதான மனைவி வருந்திப் பாடியது.

தாயார் திருவகுத்தில்
சமிச்சநாள் செல்லாச்சா
தவமுனிவர் தன்னிடத்தில்
தவம் வாங்கிவந்த
தவணை சரியாச்சா

மாதா திருவகுத்தில்
வளந்தநாள் செல்லாச்சா
மாமுனிவர் தன்னிடத்தில்
வரம் வாங்கிவந்த
வருசங் கணக்காச்சா

மண்ணாசை பொன்னாசை
மாளமனம் வல்லையின்னீர்
மட்டத்தி மாலைகொண்ட
மாதுடைய தன்னாசை
மாளவில்ல மாட்டமுன்னீர்
மஞ்சன் ஒருவன்
மார்க்கண்டன் தன்னாசை
மார்க்கண்டன் மக்கள்
மக்களொட தன்னாசை
மாளவே மாட்டமுன்னு

வார்த்தைசொல்லி ஏச்சுவிட்டீர்

பொன்னாசை மண்ணாசை
போகமனம் வல்லையின்னீர்
பிஞ்சிலே மாலைகொண்ட
பொண்ணுடைய தன்னாசை
போகவில்ல மாட்டமுன்னீர்

புள்ளை ஒருவன்
புலந்திரன் தன்னாசை
புலந்திரன் மக்கள்
புள்ளையொட தன்னாசை
போகவே மாட்டமுன்னு
பேச்சொரைச்சு ஏச்சுவிட்டீர்

நம்மவமிசத்தார் போல
மஞ்சனுக்கு வேண்டாமே
வையை கடக்காமே
மறுநாடு போகாமே
பர்மாவும் கெட்டொடனே
வடக்கூரு எல்லையிலே
மனைவி அருகவச்சு
மார்க்கண்டன் மக்கள்
மக்களெல்லாம் கிட்டவச்சு
மஞ்சன் ஒருதனுக்கு
மகுரவெள்ளம் சேத்துவந்தீர்
மச்சம் திரட்டிவந்தீர்

நம்மபிதிர்வழி போலப்
புலந்திரனுக்கு வேண்டாமே
பொய்யை கடக்காமே
பொறநாடு போகாமே
பர்மாவும் கெட்டொடனே
பொன்னி வளநாட்டில்
பொண்டி அருகே வச்சுப்
புலந்திரன் மக்கள்
புள்ளையெல்லாம் கிட்டவச்சுப்
புள்ளை ஒருதனுக்குப்
போதவெள்ளம் சேத்துவந்தீர்
பொன்னைத் திரட்டிவந்தீர்

புள்ளை பதினாறு
பெறுவதுக்கு ஒப்பாகப்
பொன்விட்டு மாத்துரைக்கும்
புலந்திரனைப் பெத்திருந்தோம்
மஞ்சன் பதினாறு
வளப்பதுக்கு ஒப்பாக
மச்சம்வச்சு மாத்துரைக்கும்
மந்திரியைப் பெத்திருந்தோம்
மனம்பொருந்த வாழ்ந்திருந்தோம்

போத்திய பேரனுக்குநம்ம
புலந்திரன் மஞ்சனுக்குப்
பொண்ணழைக்க ஆசையின்னீர்
நம்மபுலந்திரன் பொண்ணுக்கு
ஒங்க பெத்தாரும் பேருவச்ச
பொண்ணு சிவகாமிக்குப்
பொன்னை அளவெடுத்தீர்
புதுவயிரம் சேத்துவந்தீர்
போதவெள்ளம் சாமானும்
பொன்னி வளஉண்டியலும்
பொண்ணுக்குச் சீர்குடுத்து
பொண்ணுக்கு எசஞ்ச
பொன்மானைப் பாத்துப்
பூச்சேக்க வேணுமின்னு
பேராசை கொண்டீரே
ஒங்கபேராசை போலப்
புலந்திரன் பொண்ணுக்குப்
பொன்மானைத் தேடலியே
பூச்சேத்துப் பாக்கலியே

வருந்திய பேரனுக்குநம்ம
மார்க்கண்டன் மஞ்சனுக்கு
மாதழைக்க ஆசையின்னீர்
நம்ம மார்க்கண்டன் பொண்ணுக்கு
ஒங்கவளத்தாரும் பேருவச்ச
மாது சிவகாமிக்கு

மச்சம் அளவெடுத்தீர்
மணிவயிரம் சேத்துவந்தீர்
மகுரவெள்ளம் சாமானும்
தஞ்சை வளஉண்டியலும்
மாதுக்குச் சீர்குடுத்து
மாதுக்கு எசஞ்ச
மாப்பிள்ளையைப் பாத்து
மலர்சேக்க வேணுமின்னு
மனசாசை கொண்டீரே
ஓங்கமனசாசை போல
மார்க்கண்டன் பொண்ணுக்கு
மாப்பிள்ளையைத் தேடலியே
மலர்சேத்துப் பாக்கலியே

நீங்க பொட்டொசந்தார் சேத்த
போதவெள்ளம் சாமானை
நம்மபொன்னா கருணன்
நம்மபொய்க்கடிக்குச் சீர்குடுத்துப்
பூச்சேக்கும் வேளையிலே
பொய்க்கடியா வாசல்நான்
பெருமையாப் போவதில்லே நீங்க
பொட்டொசந்தார் பாப்பதில்லே

நான் அதிட்டமுள்ள கையாலே
ஆலாத்தி சுத்தலியே
துலக்கமுள்ள கையாலே
துருநூறு பூசலியே

நீங்கவடி வொசந்தார் சேத்த
மகுரவெள்ளம் சாமானை
நம்ம வருசக் கருணன்
நம்ம மயிலனைக்குச் சீர்குடுத்து
மலர்சேக்கும் வேளையிலே
மயிலனையா வாசல்நான்
மகிழ்ச்சியாப் போவதில்லே நீங்க
வடிவொசந்தார் பாப்பதில்லே

பொன்னி வளநாட்டான்
ஒங்க பொரசனத்தைக்
கொண்டுவர புத்திதுணியான்னு
போகச் சமத்தாகிநம்ம
போரழகி கோட்டை வந்தீர்

தஞ்சை வளநாட்டில்
உங்கசரீரம் விடமாட்டான்னு
மாளச் சமத்தாகிநம்ம
வாவரசிகோட்டை வந்தீர்
மணிக்கா ரெடுத்து நம்ம
வளவி வந்து சேரயிலே
வளவில் எறங்கயிலே
மாயச் சுருளோலை
மடியிலயா வச்சிருந்தீர்

பெசக்கா ரெடுத்து நம்ம
பூமி வந்து சேரயிலே
பூமி எறங்கயிலே
கள்ளச் சுருட்டோலை
கையிலயா வச்சிருந்தீர்

வைகுந்தத் தூதன் வந்தான்
வயிரரதம் கொண்டுவந்தான்
வளவுக்கெதிர வச்சான்
வயிர ரதங் கண்டொடனே
வருந்திய பேரனுக்கு
மாதழைப்ப தெண்ணாம
வைகுந்தம் போறமுன்னு
மலர்ப்பாதம் சேந்தமுன்னீர்

காலன்வந்தான் தூதன் வந்தான்
கடசரதம் கொண்டு வந்தான்
கடவுக்கெதிரே வச்சான்
கடசரதம் கண்டொடனே
காட்சிகளைப் பாராமே
கைலாசம் போறமுன்னு
கட்டிமன்னர் ஏறிவிட்டீர்

தூதன்வந்தான் காலன்வந்தான்
சொகப்புரதம் கொண்டுவந்தான்

தெருவுக்கெதிரே வச்சான்
சொகப்புரதங் கண்டொடனே
சொர்க்கலோகம் போறமுன்னு
சுருக்காக ஏறிவிட்டீர்

அன்னத்த நாளயிலே
எங்கபெத்தா பிதாக்க
பூச்சேத்துப் பாக்கயிலே
பொட்டுவண்டி கட்டலியாம்
பெசக்காரு எடுக்கலியாம்
பொன்மானைத் தேடலியாம்
மாட்டுவண்டி கட்டலியாம்
மணிக்காரு எடுக்கலியாம்
மாப்பிள்ளையைத் தேடலியாம்

எட்டி எட்டிப் பாக்க
எதுத்த தலைவாசலுன்னு
கூப்பிட்டுப் பாக்கக்
கோட்டைத் தலைவாசலுன்னு
அண்ணாந்து பாக்க
அடுத்ததலை வாசல்

மறுவூரு போகாம
மறுவளவு வச்சமக
பொறவூரு போகாம
பொறவளவு வச்சமக
தூரத்தே வையாமே
தோளருகே வச்சமக
காதத்தே வையாமே
கண்ணருகே வச்சமக

வாவரசி புத்திரரை
வடிவழகாத் தோணுதுன்னு
மாலையிட வேணுமுன்னார்
மகுரவெள்ளம் சீர்குடுத்து
மாலையிட்டுப் பாத்தாக
போரழகி புத்திரரைப்
பொன்னா கருணரைப்
பூச்சேக்க வேணுமுன்னார்
போதவெள்ளம் சீர்குடுத்துப்
பூச்சேத்துப் பாத்தாக

என்தங்கமுடி ஐயா
தள்ளியிரு எங்காத
தனஞ்சயருக்குப் பொண்கொடுத்தா
என்வயிரமுடி ஐயா
வெலகியிரு எங்காத
வீமருக்குப் பொண்கொடுத்தா
என்அதிட்டமுள்ள ஐயா
அடசியிரு எங்காத
அருச்சுனர்க்குப் பொண்கொடுத்தா

நான்காட்சியுள்ளா கட்டுறது
காஞ்சிபுரம் பட்டாடை
நான்பகிசியுள்ளா கட்டுறது
பட்டணம் பட்டாடை
நான்ஆரணங்கு கட்டுறது
ஆரணிப் பட்டாடை
நான் சாதாவாக் கட்டுறது
சாரதிநூல் சேலை

அமயம் சமயமுன்னாநான்
அழுக்குடுத்த மாட்டேனே
சமயம் அமையமுன்னாநான்
வெள்ளையுடுத்த மாட்டேனே

வெள்ளி மொளையடிச்சு
மெல்லியநூல் பாவோடும்
வெதத்திலொரு பூவாடைநம்ம
வீடுவர அட்டியில்லே
வெலகி மொளையடிச்சு
வெள்ளைநூல் பாவோடி
வெலகாரன் நெய்ததுணி நம்ம
வீடுவரச் சொல்லிவிட்டீர்

தங்க மொளையடிச்சுச்
சரிகைநூல் பாவோடும்

தரத்திலொரு பூவாடைநம்ம
தரணிவர அட்டியில்லே
தள்ளி மொளையடிச்சு
தனியேநூல் பாவோடி
தறிகாரன் நெய்ததுணி நம்ம
தரணிவரச் சொல்லிவிட்டீர்

உள்ளே ஒருவரிசை
உருண்டை ரசக்குண்டு கட்டி
பக்கம் ஒருவரிசை
பச்சைரசக் குண்டுகட்டி
சுத்தி ஒருவரிசை
சொகப்புரசக் குண்டு கட்டி

நாட்டார் நகரத்தார்
நால்வகையார் சூழ்ந்துவர
நம்மவடக்கூருச் சீமை
வடக்கூரு நாட்டார்
மனுசரெல்லாம் வந்திருக்க
தஞ்சை வளநாட்டார்
சனமெல்லாம் வந்திருக்க
பொன்னிவள நாட்டார்
பெருஞ்சனங்கள் வந்திருக்க

நம்மதம்பி புலந்திரனும்
தேரைப் புடியுமின்னான்
தென்கோடி சாயாமே
வடத்தைப் புடியுமின்னான்
வடகோடி சாயாமே

சுடுகாடு தேரெறக்கிச்
செவலைப் பசுதானமிட்டுக்
கட்டத்தலம் போயெறக்கிக்
காமாட்டில் போட்டுடைச்சு

மஞ்சன் ஒருதனும்
மாணிக்கக் கொள்ளிதம்பி
மயிர்நீக்கி வச்சுவந்தான்
சந்தனக் கொள்ளி
தலைநீக்கி வச்சுவந்தான்

நம்மபுள்ளை ஒருதனும்
பொன் தேடியதைப் பாத்து
புத்தி கலங்கியிட்டான்
நம்மபொன்னா கருணனுக்குப்
பெலனா எடுத்தொரைச்சேன்

நம்மசெம்பன் ஒருதனும்
ஐயா சேத்தது வைப்பாத்து
சிந்தை கலங்கியிட்டான்
நம்மமஞ்சன் ஒருவனுக்கு
வலுவா எடுத்தொரைச்சேன்

நகரத்தார் பெண்ணுக்குத் திருமணத்தில் செய்யும் சீர்வரிசை, மகளிர் அணியும் ஆடைகள், இறுதி ஊர்வல ஏற்பாடுகள், பசுதானமிடல் மகன் கொள்ளியிடல் முதலிய செய்திகள் வெளிப்படுகின்றன.

○○○

அழகும், அன்பும், மக்கட்பாசமும் நிறைந்த கணவன் இறந்தபோது, தன் திருமணம் நடைபெற்றது முதல் தான் அடைந்த சிறப்பு, மகிழ்ச்சி, மக்கட்பேறு மற்றும் கணவனின் பெருமைகளைச் சொல்லி இனி கணவனைப் பிரிந்து தனிமைத் துன்பத்தையும், கைம்மைக் கொடுமைகளையும் ஏற்று வாழ்வது எப்படி என வயதான மனைவி வருந்திப் பாடியது.

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநாள் வாழ்ந்து
வடிவெசாந்தார் முன்போக
மாதவத்தைச் செய்யலியே

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநாள் வாழ்ந்து

பொட்டொசந்தார் முன்போகப்
புண்ணியத்தைச் செய்யலியே

பொறந்த ஒசத்திபோல நான்
போரழகி ஆகலியே
வளந்த ஒசத்திபோல நான்
வாவரசி ஆகலியே

அஞ்சுவருசம் எனக்கு
அறியாத நாளையிலே
மஞ்சட்டி மம்பானை
வச்சு வெளையாடயிலே
என்ஐயா நாட்டமுள்ளார் கோட்டை
மண்சோறும் மண்கறியும்
ஆக்கி வெளையாடயிலே

எட்டுவருசந்தான் ஐத்தை
வாவரசி புத்திரர்தான்
ஏடு படிக்கையிலே
பத்து வருசந்தான்
பள்ளி படிக்கையிலே
பவன்போலத் தோணுதுன்னு
என்நாட்டமுள்ள ஐயா
பாரிச்சார் ஓவியமா
விரும்பிக் கரும்புநட்ட
என்வயிரமுடி ஐயா
வேணுமுன்னு மாலையிட்டா
தாகமுன்னு பொண்ணெடுத்த
என்ஐத்தை சமத்தியரும்
வாவரசி இங்குஇல்லை

மாலையிட்ட ஓவியம்போல்
மகுரமக்கள் கண்டிருக்கேன்
மாத்திமக்கள் பெத்திருக்கேன்
மணிபோலக் காச்சேனே
என்ஐயாமகிழமுடி இல்லையின்னு
மனசில் கவலை கொண்டேன்

வமுசத்தார் அத்தனையும்
வாவரசிக் கூட்டமில்ல
வைகுந்த நாடெல்லாம்
மலந்தமலர்த் தோட்டமில்ல

என்பிதிர்வழி அத்தனையும்
போரழகிக் கூட்டமில்ல
பூலோக நாடெல்லாம்
பூத்தமலர்த் தோட்டமில்ல

இந்தப் போரழகி எல்லையிலே
நம்மபொண்ணாசை தீத்தமக
பொண்ணு விதவையில்ல
நம்மாதாசை தீத்தமக
மாது விதவையில்ல

பொண்ணு சிறையோட
பெத்தா சிறைகூடவச்சா
மாது சிறையோட
வளத்தா சிறைகூடச்சா

ஆளுக்கு மோசமில்லே
நான்ஆகாத பொண்ணாச்சே
உருப்படிக்கு மோசமில்லே
நான்ஒதவாத பொண்ணாச்சே
நம்மகோடி சனத்திலே நான்
வாழ்வெழந்த பொண்ணு
கூடிஇருக்க ஆகாதே
நம்ம மகுரச் சனத்திலேநான்
மன்னரெழந்த பொண்ணு
வந்திருக்க ஆகாதே

நிலையில்லாத் தண்ணியிலே
நின்றுஅலையும் கோரையைப்
போல்
மன்னரெழந்து எனக்கு
மனமோ தெகைக்குது
வேருமெத்த ஒடியும்
விருட்சமுள்ள பூமரத்தே
சல்லிவேர் அந்தாத்

தழை உதிரும் பாவனைபோல்
தருமர் எழந்து எனக்குத்
தவிக்குதே எம்மனசு

வடிவழகைச் சொன்னா
வாழுமக்கள் ஐயாவுக்கு
எனக்குமறுத்தொருநாள் வேணுமே
சாயல்லே பாத்தாக்க
வாழுமக்கள் ஐயா
சரவிளக்கு ஓவியம்போல்
மேனிச்செகப்பு
மெருகிட்ட மாதிரி போல்
வெகுசனத்தே வீத்திருக்கும்
மேசை லைட்டதுபோல்
கனசனத்தே வீத்திருக்கும்
கேஸ் லைட்டதுபோல்

என்நாட்டமுள்ள ஐயா
திக்கு விசயம்
செய்யத் தெடமுடையார்
அட்டாவதானம் பண்ண
அதிட்டம் உள்ளார்
மானத்து வில்லை
வளைக்க வலுவுடையார்
மணலைக் கயிறாய்த்
திரிக்கச் சமத்துடையார்

ஆருக்கும் அஞ்சாரே
என்மகிழமுடி ஐயா
அரங்கற்கும் அஞ்சாரே
சேருக்கும் அஞ்சாத
திருநீல கண்டரில்ல

காட்டை வளைச்சு
நாட்டமுள்ள ஐயா
கடுசாக ஊர்சேத்து
சித்தூரும் அம்பலமும்
செலுத்தி அரசாண்ட ஐயா

கொஞ்சஊரும் அம்பலமும்
குமுகமடிச்ச ஐயா
பேரூரும் அம்பலமும்
பிரபலமா ஆண்ட ஐயா
கவல்எடுத்து ஊராக்கிக்
காட்சியுடன் வாழ்ந்த ஐயா

பொண்கள்மொகம் கோணாமெ
போதவெள்ளம் தந்த ஐயா
மக்கள்மொகம் கோணாமே
மகுரவெள்ளம் தந்த ஐயா

ஊரு மொறைக்கு
ஒசந்தமொறை தந்த ஐயா
நாட்டு மொறைக்கு
நல்லமொறை தந்த ஐயா
சீமை மொறைக்குச்
செறந்தமொறை தந்த ஐயா

மன்னர் விசுவாசம்
மாது மனநேசம்
மலந்தமலர் வாசனைபோல்
பெருமாள் விசுவாசம்
நான்பொண்ணு மனநேசம்
பிச்சிமல்லி வாசனைபோல்
செல்வர் விசுவாசம்
சீதை மனநேசம்
செண்டிமல்லி வாசனைபோல்
இருவர் விசுவாசம்
இப்ப எழவா முடிஞ்சுதே
என்னை ஏங்கி அழச்
சொல்லியிட்டா

சேருங்களரியிலே நான்
சேதிக்கு நல்ல ஆளு
கூடும்களரியிலே நான்
கோப்புக்கு நல்லஆளு
வமிசத்தார் அத்தனையும்

நாழிக்கு ஒலைவச்சாலும்
என்னை ராசியுள்ள பொண்ணும்பா
நான்நடுவே இருக்கவேணும்பா
குருணிக்கு ஒலைவச்சாலும்
என்னைக்கூட வரவேணும்பா

கலியாண வாசலுக்கு நான்
கைவிளக்கா நின்னவதான்
மங்களவாசலுக்கு நான்
மணிவிளக்கா நின்னவதான்

பவனளக்கும் நாழியின்னு
பக்கம்வந்து நின்னவளை
உப்பளக்கும் நாழியின்னு
ஒதுங்கிப் போய் நிக்கவச்சா

முத்தளக்கும் நாழியின்னு
முன்னேவந்து நின்னவளை
தவிடளக்கும் நாழியின்னு
தள்ளிப்போய் நிக்கவச்சா

புடிச்சாப் புடியடங்கும்
பொண்ணுடுத்தும் கண்டாங்கி
பெருவெரலுக்குள் அடங்கும்
பொய்க்கடியர் கண்டாங்கி

கண்டாக் கலகலங்கும்
காரிழையா பூவாடை
கட்டைவெரலுக்குள் அடங்கும்
காந்தாரி பூவாடை
பாத்தா பளபளக்கும்
பாஞ்சாலி பூவாடை
பாம்புவெரலுக்குள் அடங்கும்
பார்வதியா பூவாடை

கருப்புஞ் செகப்பும்
கலந்துடுத்த நானிருந்தேன்
கட்டிமக்கள் ஐயா
கல்கத்தாக் கச்சைக்குக்
கவலைவரச் சொன்னமுன்னா

செகப்பும் கருப்பும்
சேத்துடுத்த நானிருந்தேன்
சிங்கப்பூர் கச்சைக்குச்
சீதைசிறை ஆக்கிவச்சா

பகிசிஎல்லாம் ரொம்பவில்ல
பிஞ்சுமக்கள் ஐயா இப்பப்
பாக்க நல்லநேரமில்ல
காட்சிஎல்லாம் மெத்தவில்ல
கட்டிமக்கள் ஐயா இப்பக்
காண நல்லவேளையில்ல

பேரனுண்டு பேத்தியுண்டு
பேத்தி மணவாளருண்டு
மணிபோல மக்களெல்லாம்
மாபகிசி பாக்கலியே
புத்திபோல மக்களெல்லாம்
பிம்பிருந்து பாக்கலியே

காணாதாக் காணவரக்
கடவுந் தெரியாதே
பாராதா பாக்கவரப்
பாதை தெரியாதே

OOO

எண்ணற்ற வகைப் பட்டும் பட்டாடையும் கட்டி மகிழ்ந்தவள் அளவற்ற அணிகலன்களை அணிந்து மகிழ்ந்தவள் பெருஞ் செல்வரான தன் கணவர் இறந்தபோது கைம்மைக் கொடுமைக்கு அஞ்சியும், வெள்ளை அணியும் விதி வந்ததே எனவும் வருந்திப் பாடியது.

கொப்புண்ணு பூக்கும்
கோத்திரத்துப் பொண்பொறந்தேன்
சில்லுன்னு பூக்கும்
சிவதலத்தில் வாழ்ந்திருந்தேன்

சங்கு வெளையும்
சமுத்திரத்தில் பொண்பொறந்தேன்
தனிவயிரம் கண்பாக்கும்
தருமருக்கோ வாழ்ந்திருந்தேன்

முத்து வெளையும்
மொதக்கடலில்
பொண்பொறந்தேன்
மொதவயிரம் கண்பாக்கும்
முத்துமன்னர் பாரியின்னேன்

பகளம் வெளையும்
பாக்கடலில் பொண்பொறந்தேன்
பகளம் கண்பாக்கும்
பாண்டியர்க்கோ வாழ்ந்திருந்தேன்
தங்கக் கொடிபடரும்
தனிக்கடலில் பொண்பொறந்தேன்
தங்கம்வெட்டி மாத்துரைக்கும்
தருமருக்கோ வாழ்ந்திருந்தேன்

வெள்ளிக் கொடிபடரும்
அலைகடலில் பொண்பொறந்தேன்
வெள்ளிவெட்டி மாத்துரைக்கும்
வீமருக்கோ வாழ்ந்திருந்தேன்

கைலாசத் தூதன் வந்தான்
கர்ணரை அழைக்கவந்தான்
கடசல்ரதங் கொண்டு வந்தான்
கப்பூரமாலை கட்டிக்
கலந்தமல்லி ஊஞ்சலிட்டுக்
கனகாம்பரம் தொங்கலிட்டுக்
கர்ணரை அழைச்சுவிட்டான்
கடசல்ரதம் ஓட்டிவிட்டான்

வைகுந்தத் தூதன் வந்தான்
மன்னரை அழைக்கவந்தான்
வயிரரதம் கொண்டுவந்தான்
மல்லியப்பூ மாலையிட்டு
மலந்தமல்லி ஊஞ்சலிட்டு
மகிழம்பூ ஆரமிட்டு
மன்னரை அழைச்சுவிட்டான்
வயிரரதம் ஓட்டிவிட்டான்

பூலோகத் தூதன்வந்தான்
பெருமாளை அழைக்க வந்தான்
பொன்னுரதம் கொண்டுவந்தான்
பூத்தமல்லி மாலைகட்டிப்
புதுமல்லி ஊஞ்சலிட்டுப்
பொடலம்பூ ஆரமிட்டுப்
பெருமாளை அழைச்சுவிட்டான்
பொன்னுரதம் ஓட்டிவிட்டான்

வைகுந்தத் தூதன்வந்தான்
வீமரை அழைக்கவந்தான்
வெள்ளிரதம் கொண்டுவந்தான்
விரிந்தமல்லி ஆரமிட்டு
விரிந்தமலர் ஊஞ்சலிட்டு
வீமரை அழைச்சுவிட்டான்
வெள்ளிரதம் ஓட்டிவிட்டான்

சாலையிலே வந்தாலும்
தங்க மக்கள் ஐயா
தங்கரதம் போலிருக்கும்
தங்கரதத் திலேயும்
தர்மர்வந்தாப் போலிருக்கும்

வீதியிலே வந்தாலும்
வாழும் மக்கள் ஐயா
வெள்ளிரதம் போலிருக்கும்
வெள்ளிரதத் திலேயும்
வீமர்வந்தாப் போலிருக்கும்

சோலையிலே வந்தாலும்
செல்லமக்கள் ஐயா
செகப்புரதம் போலிருக்கும்
செகப்புரதத் திலேயும்
சுந்தரனார் வந்தாப் போலிருக்கும்

பாதையிலே வந்தாலும்

பிஞ்சுமக்கள் ஐயா
பச்சைரதம் போலிருக்கும்
பச்சைரதத் திலேயும்
பாண்டியனார் வந்தாப்
போலிருக்கும்

கருணவா முன்னாலே
காசு குமிஞ்சிருக்கும்
கனசனங்க சூழ்ந்திருக்கும்

புண்ணியவா முன்னாலே
பொன்னாக் குமிஞ்சிருக்கும்
பெருஞ்சேனை சூழ்ந்திருக்கும்

வேணுமுன்னு சொன்னாக்க
வெள்ளி தடையுமில்ல
வேறதட்டான் அட்டியில்லே
தாகமுன்னு சொன்னாக்கத்
தங்கம் தடையுமில்லே
தனித் தட்டான் அட்டியில்லே
போதுமுன்னு சொன்னாக்கப்
பொன்னோ தடையுமில்லே
புதுத்தட்டான் அட்டியில்லே

கொஞ்ச வெலப்பட்டு
கொஞ்சு டுத்திப் பாத்ததில்லே
மட்ட வெலப்பட்டு
மாதுடுத்திப் பாத்ததில்லே
இத்தி வெலப்பட்டு
எடுத்துடுத்திப் பாத்ததில்லே

பொண்ணுடுத்தும் பட்டு
பொண்ணழைக்கும் பட்டு
மாதுடுத்தும் பட்டு
மணவறைப் பட்டு
சீதை உடுத்தும் பட்டு
திருப்பூட்டுப் பட்டு
கோதை உடுத்தும் பட்டு
குடியழைப்புப் பட்டு.

உடுத்தி உரிஞ்சது
ஒருகோடிப் பட்டிருக்கும்
உடுத்தாம வச்சிருக்கேன்
ஒசந்தவெலைப் பட்டிருக்கும்

அஞ்சுமொழம் கொஞ்சவர்ணம்
ஆனையடி முந்தாங்கி
அரக்கெழைச்ச கண்டாங்கி
அடுத்தாக் கலகலக்கும்
அல்லியுட பூவாடை
கொஞ்சமொழம் அஞ்சுவர்ணம்
குதிரைமுகம் முந்தாங்கி
கோடெல்லாம் கெண்டைநூல்
கொஞ்சாக் கலகலங்கும்
கோதையுட கண்டாங்கி

நனைச்சா நனைபெறுமே
நாயகியா பூவாடை
புடிச்சாப் புடியடங்கும்
பொய்க்கடியா பூவாடை

கருப்புச் செகப்பும்
கலந்துடுத்தும் நாளையிலே
வெள்ளையுஞ் செகப்பும்
விரிச்சுடுத்தும் நாளையிலே
பச்சையுஞ் செகப்பும்
பாத்துடுத்தும் நாளையிலே
சிங்கப்பூர்க் கச்சைக்கா
சீதை பொறந்திருந்தேன்
மதராசுக் கச்சைக்கா
மாது பொறந்திருந்தேன்

ஐயாகருணர் திருவகுத்தில்
கஞ்சிக்கா பொண்பொறந்தேன்
ஐயாவீமர் திருவகுத்தில்
வேலைக்கா பொண்பொறந்தேன்
சோழர் திருவகுத்தில்

சோத்துக்கா பொண் பொறந்தேன்

கந்தையிது கந்தையிது
கால்பணத்துக் கந்தையிது
கன்னி சிறியரெல்லாம்
கைதுடைக்கும் கந்தையிது
காசிப் பரதேசி
கைதுடைக்கும் கந்தையிது
மடத்துப் பரதேசி
வாய்துடைக்கும் கந்தையிது
ஆக்குற பொண்களுக்கு
அடபுடி கந்தையிது
பொங்குற பொண்களுக்குப்
புடிச்சிறக்கும் கந்தையிது

புள்ளை புலந்திரனுக்குப்
பீதுடைக்கும் கந்தையிது
மஞ்சன் புலந்திரனுக்கு
வாய்துடைக்கும்கந்தையிது
சிங்கப்பூர் கச்சைக்கா
சீதை பொறந்திருந்தேன்
வங்காளம் கச்சைக்கா
மாது பொறந்திருந்தேன்

பொல்லாப் பொருத்துப்
பொருத்தத் தெரியாதே
பொருத்தாட்டாக் குத்தமில்லே
போகுமட்டும் துக்கமில்ல
மாயப் பொருத்து
வளையத் தெரியாதே
வளையாட்டிக் குத்தமில்ல
மாளுமட்டும் துக்கமில்ல

எங்கையா வாசல்
கண்டாங்கி யின்னு
கணக்கில் எழுதலியே
முத்துவனமுன்னு
முறியில் எழுதலியே
பட்டுவனமுன்னு

பொங்குதே கண்ணீரு

பணத்தில் எழுதலியே

கட்டிப் பொறப்பெல்லாம்
கடங்கால் தெரியாமே
கண்டாங்கி போடலியே
முழங்கால் தெரியாமே
முத்துவனம் போடலியே

சிங்கப்பூர் கச்சையின்னு
செலவெழுதச் சொல்லியிட்டா
வங்காளங் கச்சையின்னு
வரியெழுதச் சொல்லியிட்டா
எங்கையா வாசல்
தங்கம் ஒருபாத்தி
தனியே வெளைஞ்சாலும்
தங்கமுங்க ஆசையில்லே
தனிவயிரம் தேவையில்லே
பொன்னால் ஒருபாத்தி
போத வெளைஞ்சாலும்
பொன்னுங்க ஆசையில்லே
புதுவயிரம் தேவையில்லே

மச்சம் ஒருபாத்தி
மகுர வெளைஞ்சாலும்
மச்சமுங்க ஆசையில்லே
மணிவயிரம் தேவையில்லே

தங்கம் ஒருபாத்தி
தனியே வெளைஞ்சாலும்
தங்கமக்கள் ஐயா
தனிமை ஒரு பாத்தி
தனியே வெளையவச்சா

வெள்ளி ஒரு பாத்தி
வேறே வெளைஞ்சாலும்
வாழும் மக்கள் ஐயா
விசாரம் ஒரு பாத்தி
வேறே வெளையவச்சா

OOO

ஈடு இணையின்றி வாழ்ந்தவளும், கணவனை விட்டுப் பிரிந்தே அறியாதவளுமாகிய மனைவி கணவன் இறந்தபோது வீரமும், கொடையும் தோட்டமும் வயலும் உடைய கணவரின் பெருமைகளைச் சொல்லி வீட்டின் சிறப்பினைச் சொல்லி, கணவருக்கு முன்தான் இறக்கத் தவங்கள் செய்யவில்லையே என வருந்திப் பாடியது.

பொட்டழிஞ்சேன் மையழிஞ்சேன்
பெருந்தவசுப் பொண்ணு
பொண்ணோ தலகொலஞ்சேன்

மையழிஞ்சேன் பொட்டழிஞ்சேன்
மாதவசுப் பொண்ணு
மாதோ தலகொலஞ்சேன்

வைகுந்த நாட்டிருந்து
வயசோலை பாத்தெடுத்தான்
வயசு சரியாச்சு முன்னான்
வளவு வளஞ்சிருந்தான்
வடமதுரை பாத்துவந்தான்
வயிரரதம் கொண்டு வந்து
வளவில் எதிரே வச்சான்
வீமரை அழைச்சுவிட்டான்
வயிரரதம்ஓட்டிவிட்டான்

சிவலோக நாட்டிருந்து
செத்தஓலை பாத்தெடுத்தான்
தேதி சரியாச்சு முன்னான்
தெருவை வளஞ்சிருந்தான்
தென்மதுரை பாத்துவந்தான்
செகப்புரதம் கொண்டு வந்து
தெருவில் எதிரே வச்சான்
செல்வர் அழைச்சுவிட்டான்
செகப்புரதம் ஓட்டிவிட்டான்

கைலாச நாட்டிருந்து
கணக்கோலை பாத்தெடுத்தான்
காலம் சரியாச்சு முன்னான்
கடவெல்லாம் சுத்திவந்தான்
கடசல்ரதம் கொண்டு வந்து
கடவில் எதிரே வச்சான்
கர்ணரை அழைச்சுவிட்டான்
கடசல்ரதம் ஓட்டிவிட்டான்

காசியா தேரோட்டம்
காண வருவமுன்னா
கல்லிக்கட்டு வில்வமரம்
கைலாசப் பூநாடு
காணவர ஏலாது.

பழனியா தோரோட்டம்
பாக்க வருவமுன்னா
பரமலோகப் பூநாடு
பாக்கவர ஏலாது

காசைச் செலவழிச்சா
காசியிலே தேரோட்டம்
காணக் கெடைக்குமே
கல்கத்தா நெய்விளக்கு
காணக் கெடைக்குமே
காசைச் செலவழிச்சாலும்
காட்சியுள்ளார் சீர்பாதம்
காணக் கெடைக்காதே

பணத்தைச் செலவழிச்சா
பழனித் தேரோட்டம்
பார்க்கக் கெடைக்குமே
பம்பாயி நெய்விளக்கு
பாக்கக் கெடைக்குமே
பணத்தைச் செலவழிச்சாலும்
பகிசியுள்ளார் சீர்பாதம்
பாக்கக் கெடைக்காதே

சதுரகிரி ஓடையிலே
தான்மலந்த மல்லியப்பூ

நானெடுத்து நான்முடிச்சேன்
ராச்சியத்தை ஆண்டிருந்தேன்
இத்திகொறை இல்லாம
தரணியிலே வாழ்ந்திருந்தேன்
கொஞ்சம் கொறை இல்லாம
கோட்டையிலே வாழ்ந்திருந்தேன்
எதிர்ஒருதர் இல்லாம
எல்லை முழுதாண்டிருந்தேன்
சரிஒருதர் இல்லாம
தரணி முழுதாண்டிருந்தேன்
போதமக்கள் கண்டிருந்தோம்
பின்னிமஞ்சன் பெத்திருந்தோம்
புத்திபோல வாழ்ந்திருந்தோம்
மகுரமக்கள் கண்டிருந்தோம்
மாத்திமஞ்சன் பெத்திருந்தோம்
மனம்போல வாழ்ந்திருந்தோம்
பூச்சேத்த மக்களெல்லாம்
பெத்துவரக் கண்டிருந்தோம்
மலர்சேத்த மக்களெல்லாம்
வளத்துவரக் கண்டிருந்தோம்

மாதுடைய வாசல் எல்லாம்
மலந்து அலந்துவரும்
மகிழ்ச்சிகளைப் பாத்திருந்தோம்
வாள்விசயன் வாசல் எல்லாம்
அலந்து மலந்து வரும்
அதிசயத்தைப் பாத்திருந்தோம்

கருணர் கொலுவிருந்தா
கைப்பொட்டி முன்னருக்கும்
கடுதாசித்தாள் இருக்கும்
கரண்டுவிளக்கு எரியும்
கைவிசிறி நின்னெலங்கும்
கப்பூரத் தட்டிருக்கும்
கனசனமும் சூழ்ந்திருக்கும்
கையெழுத்துப் போட்டாக்கக்
காசாக் குமிஞ்சிருக்கும்

வீமர் கொலுவிருந்தா
வில்பொட்டி முன்னருக்கும்
மெல்லிசுத்தாள் இருக்கும்
வில்விசிறி நின்னெலங்கும்
வெசையவிளக்கு எரியும்
வெத்திலைத் தட்டிருக்கும்
வெகுசனமும் சூழ்ந்திருக்கும்
வெரல் எழுத்துப் போட்டாக்க
வீராகன் குமிஞ்சிருக்கும்

மன்னர் கொலுவிருந்தா
மரப்பொட்டி முன்னருக்கும்
மதராஸ்தாள் இருக்கும்
வங்கி விளக்கு எரியும்
மணிவிசிறி நின்னெலங்கும்
மாம்பழத் தட்டிருக்கும்
மையெழுத்துப் போட்டாக்க
மச்சங் குமிஞ்சிருக்கும்

வீட்டுக்கு ராசா
வெளிப்பட்டுப் போனாக்கக்
காட்டுக் கிளிகளெல்லாம்
கால்மடக்கித் தெண்டனிடும்

வேட்டைக்கு ராசா
வெளிப்பட்டுப் போனாக்க
வேட்டைக் கிளிகளெல்லாம்
வெரல்மடக்கித் தெண்டனிடும்

இஞ்சி வெளையும்
எடைகீழ பொன்வெளையும்
எருவணைச்சா வேரெறங்கும்
எலுமிச்சை பிஞ்செறங்கும்

மஞ்சள் வெளையும்
மண்கீழ பொன்வெளையும்
மண்ணணைச்சா வேரெறங்கும்
மாதுளையும் பிஞ்செறங்கும்

தங்கம் வெளையும்
தரை கீழ பொன்வெளையும்
சாணியணைச்சா வேரெறங்கும்
சாத்துக்கட்டியும் பிஞ்செறங்கும்

அதிகச் செலவு வந்தா
ஆல்விடு காத்து வரும்
மெத்தச் செலவு வந்தா
மேவீடு காத்து வரும்

உண்ணுட்டு வீத்திருக்க
ஓலைப்பூ மண்டபந்தான்
தின்னுட்டு வீத்திருக்கத்
தெகழிப்பூ மண்டபந்தான்
சாப்பிட்டு வீத்திருக்கத்
தாழம்பூ மண்டபந்தான்

புள்ளை அழுதா
பிலாமரமும் பிஞ்செறங்கும்
கொழந்தை அழுதா
கொய்யாவும் பிஞ்செறங்கும்
செம்பன் அழுதா
தென்னையும் பிஞ்செறங்கும்

சட்டித் தயிர் கடைஞ்சேன்
சம்பத்தை ஆண்டிருந்தேன்
சத்தியர்க்கு வாழ்ந்திருந்தேன்
பானைத்தயிர் கடைஞ்சேன்
பாக்கியத்தை ஆண்டிருந்தேன்
முடிமன்னர் பாரியின்னேன்

முத்துவெளையும் மொதக்கடலில்
பொண் பொறந்தேன்
முழுவயிரம் கண்பாக்கும்
முடிமன்னர் பாரியின்னேன்

சங்குவெளையும் சமுத்திரத்திப்
பொண் பொறந்தேன்
தனிவயிரம் கண்பாக்கும்
தருமருக்குப் பாரியின்னேன்

பவளம்வெளையும் பாக்கடலில்
பொண் பொறந்தேன்
பவளம் வெலைமதிக்கும்
பாண்டியர்க்குப் பாரியின்னேன்

செல்லச் செகப்பழிச்சா
சின்னமக்கள் ஐயா
செந்தூரப் பொட்டழிச்சா
வரிசைச் செகப்பழிச்சா
வாழும் மக்கள் ஐயா
மாணிக்கப் பொட்டழிச்சா

கோரைச் செகப்பழிச்சா
கொஞ்சும் மக்கள் ஐயா
குங்குமப் பொட்டழிச்சா

சீவிமுடிச்ச தலை
சிங்காரக் கொண்டையிட்டுச்
செண்டுமல்லி வச்சதலை

கோதிமுடிச்ச தலை
கோடாலிக் கொண்டையிட்டு
கொடமல்லி வச்சதலை

கலந்துமுடிச்ச தலை
கலவடைக் கொண்டையிட்டுக்
கனகாம்பரம் வச்சதலை
வாரிமுடிச்ச தலை
வச்சால் ஒழக்கெண்ணை
இப்பச் செடியால் ஒருமயிரு
சிக்குப்பட்டு நிக்குதிப்போ

மாது உடுத்தினதும்
மாயவரம் கண்டாங்கி
வைக்கல் அரிக்கிறதும்
வங்கிபோட்ட முந்தாங்கி

கோதை உடுத்தினதும்

கும்பகோணம் கண்டாங்கி
குப்பை அரிக்கிறதும்
குஞ்சம்வச்ச முந்தாங்கி

சீதை உடுத்தினதும்
திருப்பூர் கண்டாங்கி
செத்தை அரிக்கிறதும்
சரிகைவச்ச முந்தாங்கி

சாலைவழி வந்தாலும்
தள்ளிவர வேணுமென்பார்
வீதிவழி வந்தாலும்
வெலகிவர வேணுமென்பார்

கோதிமுடிச்சு குண்டுமல்லி வச்சுக்
குமுகுமுன்னு வந்தெறங்கும்
கோதை தடை ஆயிட்டேன்

வாரிமுடிச்சு மல்லியப்பூவச்சு
மளமளன்னு வந்தெறங்கும்
மாது தடை ஆயிட்டேன்
சீவிமுடிச்சுச் செம்பகப்பூவச்சுச்
சிலுசிலுன்னு வந்தெறங்கும்
சீதை தடை ஆயிட்டேன்

ஓயாச் சடங்கு இருக்கே
உரியாதபட்டு இருக்கே
நித்தம் சடங்கு இருக்கே
நெமராதபட்டு இருக்கே

தள்ளியிரு என்காத
தருமருக்கே வாழ்ந்திருந்தேன்
தருமருக்கு முன்போகத்
தவங்கள்மெத்தச் செய்யலியே

வெலகியிரு என்காத
வீமருக்கே வாழ்ந்திருந்தேன்
வீமருக்கு முன்போக
வெகுதவங்கள் செய்யலியே

அடசியிரு என்காத
அர்ச்சுனர்க்கு வாழ்ந்திருந்தேன்
அர்ச்சுனர்க்கு முன்போக
அநேக தவஞ் செய்யலியே

OOO

கடல்கடந்து சென்று வெளி நாட்டில் பொருளீட்டிச் சிறப்புடன் வாழ்ந்து, பின் நொடித்துப் போன தன் கணவர் இறந்தபோது, மீண்டும் கணவன் முகத்தைக் காண முடியாதே என்றும், மங்கலம் இழந்து வீட்டிலேயே முடக்கப் பட்டாளே என்றும் பெற்ற மக்கள் அருகிருந்து இறப்புச் சடங்குகள் செய்ய இயலவில்லையே எனவும் மனைவி வருந்திப் பாடியது.

பொட்டழிஞ்சேன் மையழிஞ்சேன்
புண்ணயவார் பொண்ணு
பொண்ணோ தலகொலஞ்சேன்
பொறந்தநெறம் பேந்தமுன்னேன்

மையழிஞ்சேன் பொட்டழிஞ்சேன்
மகராசர் பொண்ணு
மாதோ தலகொலஞ்சேன்
வளந்தநெறம் பேந்தமுன்னேன

தென்னை மரமேறித்
தினுசுக்கொரு காயெறக்கித்
தென்னெலையைத் தொன்னை
தச்சுத்
தேங்காயைக் கும்பம்வச்சு
சேனை தளங்கூடிச்
சீகாழி மோளம் வந்து
சேவிச்சாக் காண்பதில்லே
சேனைதளந் தன்னோடு
சேந்திருக்கப் போவதில்லே
சேதி சொல்லக் கேட்பதில்லே
செல்லமொகம் பாப்பதில்லே

மாங்காய் மரமேறி
மரத்துக்கொரு காயெறக்கி
மாவெலையைத் தொண்ணைதச்சு
மாங்காயைக் கும்பம்வச்சு
மாசனங்க கூடி
வடகாஞ்சி மோளம்வந்து
வாசிச்சாக் காண்பதில்லே
மாசனங்க தன்னோடு
வந்திருக்கப் போவதில்லே
வார்த்தைசொல்லக் கேட்பதில்லே
மாதுமொகம் பாப்பதில்லே

பூலோகம் மதிச்ச
புண்ணியர்க்கோ பாரியின்னேன்
வையகம் மதிச்ச
மதிச்சாண்டார் பாரியின்னேன்
தேசமெல்லாம் மதிச்ச
தெசையருக்கோ பாரியின்னேன்

கப்பல் அதிகாரி
கனத்தகடை கூட்டாளி
தோணி அதிகாரி
சொமந்தகடை கூட்டாளி
கணக்கெடுத்த நாமொதலாக்
கப்பலிலே வியாபாரம்
தூக்கெடுத்த நாமொதலாத்
தோணியிலே வியாபாரம்
ஏடெடுத்த நாமொதலா
எலங்கையிலே வியாபாரம்

அப்பன் முதலுமில்லே
ஐயாக்கள் சொத்துமில்லே
முந்தி முதலுமில்லே
முப்பாட்டன் சொத்துமில்லே
தன் புத்தியாலே
தகுந்த குடியானார்

எட்டுக்கடை பார்ப்பார்
எதுத்தகடை மேப்பாப்பார்
எட்டுலச்சம் கொண்டுவரும்
இந்திரரைத் தப்பவிட்டேன்

பத்துக்கடை பாப்பார்
பழையகடை மேப்பாப்பார்
பத்து லச்சம் கொண்டுவரும்
பாண்டியரைத் தப்பவிட்டேன்

கொண்டுவர உண்ணிருந்தேன்
கோரைமடங் காத்திருந்தேன்
அள்ளிவரப் பாத்திருந்தேன்
அடர்ந்தமனை காத்திருந்தேன்
வாரிவரப் பாத்திருந்தேன்
மகுந்தமனை காத்திருந்தேன்

கணக்கன் கணக்கிலேயும்
கால்வீசம் கூடஇருக்கும்
ஐயன் கணக்கிலேயும்
அரைவீசம் கூட இருக்கும்
மணியன் கணக்கிலேயும்
மாகாணி கூட இருக்கும்

சுட்டிச் சமத்தைக்
காண முடியாது
மெத்தச் சமத்தை
வெல்ல முடியாது

கைலாச நாட்டுக்கும்
கணக்கெழுத நல்லமஞ்சன்
சிவலோக நாட்டுக்கும்
சீட்டெழுத நல்ல மஞ்சன்

கனக சபையிலும்
கலந்திருந்தா திட்டிவரும்
சேனை சபையிலும்
சேந்திருந்தா திட்டிவரும்

கருணர் சமத்தைக் காணமுடியாது
வீமர்சமத்தை வெல்லமுடியாது

ஓங்கசெல்லக் கெடையைத்
தெருவார் அறியலியே
சேனைதளம் பாக்கலியே
செத்துவே அறியலியே

ஓங்கவருசக் கெடையை
வளவார் அறியலியே
மாசேனை பாக்கலியே
மாண்டதுவே அறியலியே

தந்திரத்தைக் கீழ்ப்போட்டுத்
தரையில் படுத்தமுன்னா
தன்சமத்தைக் கொண்டு
சாக நெனச்சமுன்னா

மனவலுவைக் கீழ்ப்போட்டு
மண்ணிப் படுத்தமுன்னா
மாசமத்தைக் கொண்டு
மாள நெனச்சமுன்னா

உத்திரத்துக் குள்ளே
ஒருதர் படையெடுத்தா
சித்திரத்துக் குள்ளே
சேர மயக்கம்இப்போ

போதங் கணக்குக்குப்
பெரியகப்பல் ஏறினதும்
பொன்தேடப் போனதுவும்
போராக் குமிஞ்சபணம்
பொன்கொறவாத் தோணுதுன்னா
பிஞ்சுமக்கள் ஐயா
பிம்பிருக்க மாட்டமுன்னா

வருசங் கணக்குக்ககு
மகுந்தகப்பல் ஏறினதும்
மச்சம்தேடப் போன்தும்
மலையாக் குமிஞ்சபணம்
மச்சம்கொறவாத் தோணுதுன்னா
மதலைமக்கள் ஐயா
மறுத்திருக்க மாட்டமுன்னா

காலை எழுந்திரிச்சா
கடவுளைக் கையெடுத்துக்
கருணார்பணி செய்திருந்தேன்

விடிகாலை எழுந்திரிச்சா
விநாயகரைக் கையெடுத்து
வீமர்பணி செய்திருந்தேன்

மாலை எழுந்திரிச்சா
மகதேவர் கையெடுத்து
மன்னர்பணி செய்திருந்தேன்

பூமாம மஞ்சருக்குப்
பொறசாதி வையாமே
பூப்போல சோத்தைப்
பொண்ணுடைய கையாலே
பொங்கியிட்டு நின்னமுன்னேன்

மாமருடை மஞ்சனுக்கு
மறுசாதி வையாமே
மைப்போல சோத்தை
மாதுடைய கையாலே
வடிச்சிட்டு நின்னமுன்னேன்

மஞ்சளும் பொட்டும்
மறந்துவிட்டேன் இன்னோட
மகராசன் சீர்பாதம்
மறந்துவிட்டேன் இன்னோட
பொட்டும் மஞ்சளும்
போகவிட்டேன் இன்னோட
புண்ணியவார் சீர்பாதம்
போகவிட்டேன் இன்னோட

வையகத்திப் பொண்களோடநான்
வாதாடப் போனதில்லை அவுக
மங்கிலியம் போகவுன்னுநான்
மாதுமே சொன்னதில்லே

பூலோகத்துப் பொண்களோடநான்

போராடப் போனதில்லை அவுக
பூணாரம் போகவுன்னுநான்
பொண்ணுமே சொன்னதில்லே

மன்னர் கொலுவிருந்தா நான்
வாவரசிப் பொண்ணாக
வையகத்தைச் சுத்திவந்தேன்
மன்னர் எழந்திப்ப
வளவில் கொலுவிருக்கேன்

பெருமாள் கொலுவிருந்தாநான்
போரழகிப் பொண்ணாக
பூலோகத்தைச் சுத்திவந்தேன்
பெருமாள் எழந்திப்பப்
பூமிக் கொலுவிருக்கேன்
கன்னத்து வார்த்தையே
காட்டிவிட்டுப் போகலியே
தொண்டையிி வார்த்தையே
சொல்லிவிட்டுப் போகலியே

பெத்தா பொரசனத்தைப்
போகயிலே பாக்கலியே
பூவடியைச் சுத்தலியே
பூரதத்தைக் காணலியே

வளத்தா பொரசனத்தை
மாளயிலே பாக்கலியே
மலரடியைச் சுத்தலியே
வயிரரதங் காணலியே

போதமக்கள் கண்டிருந்தும்
பின்னிமஞ்சள் பெத்திருந்தும்
போத்தோட காச்சிருந்தும்
போகயிலே காட்டலியே
பெருமையாத் தோணலியே

மகுரமக்கள் கண்டிருந்தும்
மாத்திமக்கள் பெத்திருந்தும்
வாதோடிக் காச்சிருந்தும்
மாளயிலே காட்டலியே
மதிப்பாத் தெரியலியே
சந்தனக் கொள்ளி
தலைநீக்கி வைக்கலியே
மாணிக்கக் கொள்ளி
மயிர்நீக்கி வைக்கலியே
குங்குமக் கொள்ளி
குளிரத்தணல் மூட்டலியே

OOO

வம்பென்றும் வழக்கென்றும் நீதிமன்றங்கள் சென்று பெரும் பொருளையிழந்து வறுமைக்கு ஆட்பட்ட நிலையில் கணவன் இறந்த போது, தங்கள் வறுமைத் துயரோடு கணவனின் இறப்பும் நேர்ந்ததே என மனைவி வருந்திப் பாடியது.

வந்துதோ காலம்
வயிரமுடி கொள்ளையிட
பொறந்துதோ காலம்
பொன்னுமுடி கொள்ளையிட

பொட்டழிஞ்சேன் மையழிஞ்சேன்
பொண்ணோ தலகொலஞ்சேன்
பொறந்த நெறம் பேந்தமுன்னேன்
மையழிஞ்சேன் பொட்டழிஞ்சேன்
மாது தலகொலஞ்சேன்
வளந்தநெறம் பேந்தமுன்னேன்

பொன்னில்லா நேரம்
பெரிய நகைக்குப்
பேராசைப் பட்டதில்லே
புடிஒசந்த பட்டுக்கும்
பொண்ணாசை வச்சதில்லே

மச்சமில்லா நேரம்
மகுந்த நகைக்கும்
மனசாசைப் பட்டதில்லே
மடிப்பொசந்த பட்டுக்கும்
மாதாசை வச்சதில்லே.

இத்திவெலைப் பட்டு
எடுத்துடுத்திப் பாத்தாலும்
இடுப்புக்கு எசைஞ்சிருக்கும்
ஏந்திழைக்கு ஒத்திருக்கும்

கொஞ்ச வெலப்பட்டு
கொஞ்சுடுத்திப் பாத்தாலும்
கோப்புக்கு எசைஞ்சிருக்கும்
கொம்பனைக்கு ஒத்திருக்கும்

மட்டவெலப் பட்டு
மாதுடுத்திப் பார்த்தாலும்
மடிப்புக்கு எசைஞ்சிருக்கும்
மயிலனைக்கு ஒத்திருக்கும்

இத்திவெலப் பட்டுக்கும்
எடஞ்சல் வரச்சொன்னாக
கொறஞ்சவெலப் பட்டுக்கும்
கொறச்சல் வரச் சொன்னாக
மட்டவெலப் பட்டுக்கு
வருத்தம் வரச் சொன்னாக

இத்தி நகைக்கும்
எடஞ்சல் வரச்சொன்னாக
கொஞ்ச நகைக்கும்
கொடுமை வரச் சொன்னாக
மட்ட நகைக்கும்
வருத்தம் வரச்சொன்னாக
பெரியவுக தேடிய
பொன்னோ மிகுந்தாலும்
பொன்னைப் பணத்தைப்
பேணிவச்சுப் பாக்கலியே
பொன்னுக்கு ஒருமுடிச்சு
பேணி முடியலியே

மகுந்தவுக தேடிய
மச்சம் மிகுந்தாலும்
மச்சம் பணத்தை
வருந்திவச்சுப் பாக்கலியே

காசுக்கு ஒருமுடிச்சு
கணக்கா முடியலியே

காசைப் பணத்தைக்
கையிறுக்கம் செய்யலியே
பொண்ணைப் பணத்தைப்
பேணிவச்சுப் பாக்கலியே

பெரியவுக வச்ச
பேரும் அம்பலமும்
பெலத்தி அரசாளலியே
நம்மபெருமை தெரியலியே
களையொசந்தார் பேரைக்
காட்சிபண்ணி வாழலியே

ஆத்திமணல் போல
அள்ளிச் செலவழிச்சா
கொழுந்துமணல் போலக்
கொட்டிச் செலவழிச்சா
வையைமணல் போல
வாரிச் செலவழிச்சா

பேணிப் பொழைக்கலியே
பொல்லாக் கொணத்தாலே
பேச்சொரைக்கக் கேக்கலியே
வருந்திப் பொழைக்கலியே

மாயக் கொணத்தாலே
வார்த்தைசொன்னாக் கேக்கலியே
ஆறா வழக்குக்கு
ஆள்விட்டு நின்னாரே
செல்லா வழக்குக்குச்
சீட்டுவிட்டு நின்னாரே

வருசமெல்லாம் கோர்ட்டிலே
வம்பு தெளிஞ்சதில்லே
போதமெல்லாம் கோர்ட்டிலே
போரு தெளிஞ்சதில்லே

ஜில்லா ஜட்ஜுக்கும்

சேதி சொல்லிவந்தாரே
மதுரை ஜட்ஜூக்கும்
வார்த்தை சொல்லிவந்தாரே

மகுந்த பணத்தை
வழிபண்ணிச் சேக்கலியே
பெரிய பணத்தைப்
புருதிபண்ணிச் சேக்கலியே

கோர்ட்டிலே போட்டது
கோடிப் பணமிருக்கும்
அமீனாவுக்குப் போட்டது
அடந்த பணமிருக்கும்
தகுந்த பணத்தையும்
ஜட்ஜியான் தின்னழிச்சான்
மகுந்த பணத்தையும்
வக்கீலான் தின்னழிச்சான்

பொழுதை வளைஞ்சாலும்
பொன்னு வந்து சிக்கலியே
மலையை வளைஞ்சாலும்
மச்சம் வந்து சிக்கலியே
கடலை வளைஞ்சாலும்
காசு வந்துசிக்கலியே

காசால் திரேகம்
கட்டு விட்டுப்போகுது
பொன்னால் திரேகம்
பூட்டு விட்டுப் போகுது
மச்சத்தால் திரேகம்
மயக்கம் வந்துபோகுது

எண்ணி நெனச்சா
எலும்புருகிப் போகுதே
சரியா நெனச்சா
சதுரம் கொறையுதே
உத்து நெனச்சா
உடம்புருகிப் போகுதே

மன்னர் கெரகமோ
மாதுடைய நேரமோ
மகுந்த பணமும்
மறுத்து வந்து சேரலியே

பெருமாள் கெரகமோ
பொண்ணுடைய நேரமோ
பெரியபணமும்
பின்பு வந்து சேரலியே

போந்தமனை தோத்தா
பெரியபணம் எழந்தா
மட்டமனை தோத்தா
மகுந்தபணம் எழந்தா
கதவை ஜப்தியின்னா
கட்டிடத்தை ஏலமுன்னா

ஓட்டை ஜப்தியின்னா
உத்திரத்தை ஏலமுன்னா
வீட்டை ஜப்தியின்னா
விட்டத்தை ஏலமுன்னா

அன்னமிட்டார் வாசலிலே
அவதிவந்தா நீங்கலியே
சோறுஇட்டார் வாசலிலே
துயரம்வந்தா நீங்கலியே

சம்மதமா சம்மதமா
சாமிக்கே சம்மதமா
அசக்காமக் கையெடுத்த
அண்ணாமலையாருக்குச் சம்மதமா
மறக்காமக் கையெடுத்த
மலையாண்டிக்குச் சம்மதமா

பெரியமனை இல்லையின்னு
போகும் சமயம்
பிஞ்சுமக்கள் அப்பச்சிக்குப்
புத்தியிலே தாங்கலுன்னா
மகுந்தமனை இல்லையின்னு
மாளும் சமயம்

மட்டமக்கள் அப்பச்சிக்கு
மனசிலேயும் தாங்கலுண்ணா

○○○

பொருளீட்ட வெளியூர் சென்ற கணவன் வெளியூரில் இறந்த பொழுது, தன் கோபக்காரக் கணவனுடன் தான் பொறுமையாக வாழ்ந்ததையும், வறுமையிலும் செம்மையாக வாழ்ந்ததையும், பணமில்லாக் காரணத்தால் மகளுக்கு மணமுடிக்க இயலவில்லையே என்றும் கணவனில்லாத நிலையில் உதவ மகன் தனக்கு இல்லையே எனவும் மனைவி வருந்திப் பாடியது.

சம்மதமா சம்மதமா
சாமிக்கே சம்மதமா
அசக்காமல் கையெடுத்த
அண்ணாமலைக்குச் சம்மதமா
மறக்காமல் கையெடுத்த
மகதேவர் சம்மதமா

பிஞ்சுமக்கள் அப்பச்சி
பொறவூரு போனவுக
பூமிவந்து சேரலியே
போன மொகத்தைப்
பொன்மொகத்தைப் பாத்தழுதேன்

மதலைமக்கள் அப்பச்சி
மறுவூரு போனவுக
வளவில்வந்து சேரலியே
மாண்டமொகத்தை
மதிமொகத்தைப் பாத்தழுதேன்
கட்டிமக்கள் அப்பச்சி

கடுங்கோபம் கண்டாக்க
நான்காணாதா போலிருப்பேன்
முன்கோபம் கண்டாக்க
நான்முகமறியா போலிருப்பேன்
அதிகோபம் கண்டாக்க
நான் அறியாதா போலிருப்பேன்
பெருங்கோபங் கண்டாக்க
நான்புரியாதா போலிருப்பேன்

பொறக்கயிலே செல்வம்
பொறகே துயரம்
வளரயிலே செல்வம்
மறுத்தோ துயரம்

இத்திவெலைப் பட்டுக்கும்
எடஞ்சல்வரச் சொன்னாக
கொறஞ்சவெலைப் பட்டுக்கும்
கொறச்சல்வரச் சொன்னாக

மணிவயிரம் வேணுமுன்னு
மாது நெனச்சாலும்
மகுந்தவெலைப் பட்டுக்கு
மனசாசைப் பட்டாலும்
மச்சமில்லா நேரம்நான்
மன்னரிடம் சொன்னதில்லே
வையகத்தைப் பாத்து
வகுத்தெரிச்சப் பட்டதில்லே

புதுவயிரம் வேணுமுன்னு
புத்தி நெனச்சாலும்
பெரியவெலைப்பட்டுக்குப்
பேராசைப் பட்டாலும்
பொன்னில்லா நேரம்நான்
பெருமாளிடம் சொன்னதில்லே
பூலோகத்தைப் பாத்துப்
பொறாமைப் பட்டதில்லே

வளந்திருக்கும் மாதுக்கு
மாலையிட்டுப் பாப்பமுன்னு
மையழிஞ்ச மாது
மனசி நெனச்சாலும்
மன்னரு மில்லாது
வலுவாத் தெரியலியே
மகுந்தபண மில்லாது

மனசுதெட மாகலியே
மண்ணாளுந் தம்பி
மஞ்சனும் இல்லாது
வார்த்தைதெட மாகலியே

பெருத்திருக்கும் மாதுக்குப்
பூச்சேத்துப் பாப்பமுன்னு
புத்தி நெனச்சாலும்
பெருமாளும் இல்லாது
பெலனாத் தெரியலியே
பெரியபண மில்லாது
புத்திதெட மாகலியே
பொன்னாளுந் தம்பி
புள்ளையும் இல்லாது
பேச்சுதெட மாகலியே

தலைக்குத் தலைவச்சுத்
தங்கமுடி சாயலியே
முடிக்கு முடிவச்சு
முத்துமுடி சாயலியே

பொறவீடு போகும்
பொண்ணாக் கண்டமுன்னேன்
மறுவீடு போகும்
மகளாக் கண்டமுன்னேன்
மண்ணாளப் பேர்விளங்க
மஞ்சன்ஒத்தன் இல்லையின்னு
மனசில் கவலைகொண்டா
பொன்னாளப் பேர்விளங்கப்
புள்ளைஒத்தன் இல்லையின்னு
புத்திக் கவலைகொண்டா

OOO

திடீரென்று விபத்துக் காளாகிக் கணவன் இறந்துவிட, வெளிநாட்டில் உள்ள மகன் வர இயலாமற்போனதால் மகன் கைக் கொள்ளி பெறாது, தன் கோவிலைச் சேர்ந்த வேறொருவர் கொள்ளி வைக்க நேர்ந்ததே எனவும் மனைவி வருந்திப்பாடியது.

சரியோ சரியுமில்லே
செல்ல மக்கள் ஐயா
சாகுறநாள் இப்பவில்ல
பிஞ்சுமக்கள் ஐயா
போகுறநாள் இப்பவில்லே
பின்புங் கொறையிருந்து
பொனத்தில் எடமிருந்து
பொனம் பாக்கப் போனமுன்னா
மறுத்துக் கொறையிருந்து
வனத்தில் எடமிருந்து
வனம் பாக்கப் போனமுன்னா
ஓடிப்போய்ப் பள்ளிகொண்ட
உபாயம் அறியலியே
நடந்துபோய்ப் பள்ளிகொண்ட
நடனம் அறியலியே

நம்மவளவை விட்டுப்போகயிலே
நம்மவாச விட்டுத் தாண்டயிலே
வாராப் பயணமுன்னு
மணிக்காரும் ஏறியிட்டா

நம்மபூமி விட்டுப் போகயிலே
நம்மபொய்கை விட்டுத்
தாண்டயிலே
பெஷல் காரும் ஏறயிலே
பிம்புவர மாட்டமுன்னு
பொறப்பயணம் ஆயிட்டா

உச்சந் தலையிலே
உளிகொண்டு அடிச்சாப்போல
திட்டென்று வார்த்தைகளைத்
தெருக்களிலே கேட்டுவிட்டோம்

இடிஇங்கக் கேளாம
எறந்துபடக் கேட்டுவிட்டோம்
படைஇங்கக் கேளாமப்
பட்டுவிடக் கேட்டுவிட்டோம்

பெண்டிர் அறியாமே

புள்ளையெல்லாம் காணாமே
பெருஞ்சேனை பாராமே
பொனமறியப் போன
பூங்காரம் கேட்டிகளா

மாதுமே அறியாமே
மக்களெல்லாம் காணாமே
மாசேனை பாராமே
வனமறியப் போன
வகுத்தெரிச்ச கேட்டிகளா

நீங்கபோகும் சமயம்
நீங்கபோத்தி வளத்தமக்க
பெருந்தொடையில் போடலியே
ஒங்கபேச்சுமொழி கேக்கலியே

நீங்கவருந்தி வளத்தமக்க
நீங்கமாளும் சமயம்
மணித்தொடையில் போடலியே
ஒங்கவார்த்தைமொழி கேக்கலியே

கன்னத்து வார்த்தையைக்
காட்டிவிட்டுப் போகலியே
தொண்டை வார்த்தையைச்
சொல்லிவிட்டுப் போகலியே

காதவருவார்க்குக் கட்டிமகனும்
கைகுடுத்து நிக்கலியே
கட்டிமகன் தேவியின்னு
கண்டாங்கி காட்டலியே

தூர வருவார்க்கும் சொந்தமகனும்
தோள்குடுத்து நிக்கலியே
சொந்தமகன் தேவியின்னு
துகிலாடை காட்டலியே

மாளும் சமயம்
வந்தா விசாரிக்க
வழியிலேயும் நிக்கலியே
கண்டா விசாரிக்க
கடலிலேயும் நிக்கலியே

என் எளவுன்னு
இருந்தெளவு சொல்லலியே
தன் எளவுன்னு
தனிச்சிருந்து சொல்லலியே

ஊர்ப் பொரசனத்தை
ஒழுங்கயிலே கண்டிருப்பா
உத்தார் பொரசனத்தை
ஒழுங்கயிலே காணலியே

நாட்டுப் பொரசனத்தை
நடுத்தெருவே பாத்திருப்பா
நம்ம பொரசனத்தை
நடுத்தெருவே பாக்கலியே

வளத்தார் பொரசனத்தை
மாளயிலே காணலியே
பெத்தார் பொரசனத்தைப்
போகயிலே காணலியே

பெத்தார் மடியயிலே
பெருந்தொடையில் போடலியே
பேச்சுமொழி கேக்கலியே
வளத்தா மடியயிலே
மணித்தொடையில் போடலியே
வார்த்தைமொழி கேக்கலியே

செத்த மொகத்தைத்
திருமொகத்தைப் பாக்கலியே
மாண்ட மொகத்தை
மதிமொகத்தைப் பாக்கலியே

நாளை வருவா
நகரத்தா காண்பதில்லே
விடிஞ்சா வருவா
வெகுசனங்க காண்பதில்லே

தெசையுள்ள ஐயா

செத்தது அறியாமே
சேதிசொல்லக் கேட்டிருப்பா
மதிச்சமுடி ஐயா
மாண்டது அறியாமே
வார்த்தை சொல்லக் கேட்டிருப்பா

சவுக்கை மொழுகிச்
சமுக்காளம் மேவிரிச்சுச்
சனங்களெல்லாம் கூடி
ஜட்ஜோட பேசயிலே
தங்கமுடி ஐயா
தவறுபட்டார் இன்னாக்க
தந்தியைக் கண்டாக்க

உடுத்திய வேட்டி
ஒருமொழமும் தோயஅழுவா
கட்டியவேட்டி
காமொழமும் தோயஅழுவா
பேண்ட் துணிகளெல்லாம்
பாதியும் தோயஅழுவா

பேச்சுப் புரியாத
பொலவருடை சீமையிலே
பெத்தா மடிஞ்சான்னு
பேனாவைக் கண்டாக்கப்
பொருமி அழுதிருப்பா
புத்தி தெகைச்சிருப்பா
பெலன்சொல்லித் தேத்தி வைக்கப்
பெரியவுக பஞ்சமில்ல

வார்த்தை புரியாத
வடுகருடைய சீமையிலே
வளத்தா மடிஞ்சான்னு
மைஎழுத்தைக் கண்டாக்க
மண்டி அழுதிருப்பா
மனசு தெகைச்சிருப்பா
வலுச்சொல்லித் தேத்திவைக்க
மகுந்தவுக அருமையில்ல

பக்கமசையப் பரிமுத்து
நின்னு எலங்க
பக்கத்தி வேம்பசைய
தோணிதொரை மகனார்
சத்திவந்து வைக்கலியே
பாண்டிதொரை மகனார்
பக்கம்வந்து வைக்கலியே

மாணிக்கக் கொள்ளி
மயிர்நீக்கி வைக்கலியே
குங்குமக் கொள்ளி
கூந்தலொதுக்கி வைக்கலியே
சந்தனக் கொள்ளி
தலைநீக்கி வைக்கலியே
கோடி கொள்ளா
மஞ்சன் இருக்கக்
கொள்ளிவச்சது ஆர் காணும்
கண் கொள்ளா
மஞ்சன் இருக்கக்
கரப்பிரிவார் தேடிட்டீர்

OOO

உள்நாட்டிலேயே பெரும்பொருள் ஈட்டிய கணவன் இறந்தபோது கணவனை விட்டுப் பிரிந்தே அறியாத மனைவி, தன் கணவனின் தலைமைச் சிறப்பு, பண்பு, குடிப்பெருமை, சொல் தவறாமை ஆகியவற்றைப் பெருமிதத்துடன் குறிப்பிட்டு தன் மகள்கள் இருவரும் விதவையானதால் தந்தைக்கு இறுதிச் சடங்குகளைச் செய்ய இயலாதே என வருந்திப் பாடியது.

திருப்பாக் கடலிலே
சீதை பொறக்கயிலே
திருவண்ணாமலையிலே
செல்வர் வளரயிலே
இருவருக்கும் மாலை
மீனாட்சியம்மன் எடுத்துக்

குடுக்கையிலே
அம்மனுக்கும் சாமிக்கும்
அமைஞ்ச பொருத்தம்
சாமிக்கும் அம்மனுக்கும்
சரியாப் பொருத்தம்.

நாழி புடிச்ச நேரம்
நயமான நேரந்தான்
திராசு புடிச்சநேரம்
சரியான நேரந்தான்

கொத்தவரும் தேவியும்
எங்கஐயா வாசல்
கொலுவிருந்த நாள்மொதலாக்
கொத்தவரை விட்டு
நான்கோதை பிரிஞ்சதில்லே
மன்னவரும் தேவியும்
எங்கையா வாசல்
மதிச்சாண்டார் எல்லையிலே
மனைக்கிருந்த நாள்மொதலா
மன்னரையும் விட்டு
நான் மாது பிரிஞ்சதில்லே

தள்ளியிரு என்காத
என்னைப் பெத்த ஐயாக்க
தருமருக்கே பொண்கொடுத்தா
விலகியிரு என்காத
என்சமத்தி மாதா
வீமருக்கே பொண் கொடுத்தா
அடசியிரு என்காத
அருச்சுனர்க்கே பொண் கொடுத்தா

தள்ளி யிருந்தாக்கத்
தங்க மக்கள் ஐயா
சதுரம் கொறையுதும்பா
நான் அடசியிருந்தா
அன்பு கொறையுதும்பா
நான் வெலகியிருந்தா
வீசம் கொறையுதும்பா

வளவை அலங்கரிச்சு
மாவரைச்சுக் கோலமிட்டு
வண்ணலங்கைப் பாய்விரிச்சு
மாவெலையும் தோரணமும்
மாதழைச்ச நாமொதலாத்

தெருவை அலங்கரிச்சுத்
திண்ணையெல்லாம் கோலமிட்டுத்
தென்னெலங்கைப் பாய்விரிச்சுத்
தென்னைலையும் தோரணமும்
சீதைவந்த நாமொதலா

ஆடி தவக்கமில்லே
அதிகநா வாட்டமில்லேஇன்னி
ஆடி தவக்கம்வச்சா
அதிகநா வாட்டம்வச்சா
திங்கத் தவக்கமில்லே
தெய்யநா வாட்டமில்லே இன்னித்
திங்கத் தவக்கம்வச்சா
தெய்யநா வாட்டம்வச்சா
வையகத்துப் போல
வாழுமக்கள் அப்பச்சி
வாரிவரப் போனதில்லே
மகுந்தகப்பல் ஏறவில்லே
வருசங் கணக்குக்கு
நான்வாவரசி மாது
மதலைமக்கள் ஆத்தா
மகுரப்பொறந்த
மக்களெல்லாம் அழைச்சு
எங்கஐயா வாசல்
வளந்தஎடம் போனதில்லே
வளத்தாரும் இல்லையின்னு
மனசு நெனச்சதில்லே

பூலோகத்தார் போலப்
போதங் கணக்குக்குப்
பெரியகப்பல் ஏறவில்லே
போதப் பொறந்த

புள்ளையெல்லாம் கூட்டிப்
பொறந்த எடம் போனதில்ல
போரழகி மாதா
பெத்தாரும் இல்லையின்னு
புத்தி நெனைச்சதில்லே

வாழும் மக்கள் ஐத்தை
மாது சலிச்சதில்லே
வையகத்தார் போல
வம்புசெய்து நின்னதில்லே
நான்வளந்த எடம்போனதில்லே
மறுத்தும் ஒருக்கா
மகிரமொறை கொண்டு
மாதை அழைச்சு எங்க
வளவில் வந்து சேந்ததில்லே

உலகத்தார் போலப்
பிஞ்சுமக்கள் அப்பச்சி
பெருமாள் சலிச்சதில்லே
பிஞ்சுமக்கள் ஐத்தை
பொண்ணு சலிச்சதில்லே
பூலோகத்தார் போலப்
போர் செய்து நின்னதில்லே
நான் போதப் பொறந்த
புள்ளையெல்லாம் கட்டிப்
பொறந்தஎடம் போனதில்லே
பின்பும் ஒருக்காப்
போதமொறைக் கொண்டு
பொண்ணை அழைச்சு எங்க
பூமிவந்து சேந்ததில்லே

வாழுமக்கள் ஐத்தை
வச்சிருந்த நன்மையினால்
நான்மகுந்த குடியானேன்
பிஞ்சுமக்கள் அப்பச்சி
போத்திவச்ச நன்மையினால்
நான்பெரிய குடியானேன்

என்னைப் பேசநெனச்சதில்லே
பிம்பொண்ணும் சொன்னதில்லே
வைய நெனச்சதில்லே
மறுத்தொண்ணும் சொன்னதில்லே

மனம்பொறுகாப் பொண்ணுமுன்னு
மதலைமக்கள் ஆத்தாளை
வருந்திவச்சுப் பாத்திருந்தா
பொறுகாத பொண்ணுமுன்னு
பிஞ்சுமக்கள் ஆத்தாளைப்
போத்திவச்சுப் பாத்திருந்தா

உத்தண்ட புத்திரர்தான்
ஊருக்கு அதிபதிதான்
சந்திர புத்திரர்தான்
சனத்துக்கு அதிபதிதான்
சூரிய புத்திரர்தான்
சொல்லுக்கு அதிபதிதான்
காலமறிஞ்சு கம்பளந்து நிப்பாக
நேரமறிஞ்சு நெல்லளந்து நிப்பாக
பஞ்சமறிஞ்சு படியளந்து நிப்பாக
அநகேசனமும் ஒங்க
அருமைக்கு அழுகுது
கோடிசனமும் ஒங்க
கொணத்துக்கு அழுகுது
சேனைதளமும் ஒங்களைச்
சேதிசொல்லத் தேடுது
மாசேனை அத்தனையும்
வார்த்தைசொல்லத் தேடுது

ஆங்கோலும் ராஜ்ஜியமும்
அதட்டி அரசாண்டிருந்தா
செங்கோலும் ராஜ்ஜியமும்
செலுத்தி அரசாண்டிருந்தா

செல்லற நாட்டைச்
செலுத்தி அரசாண்டிருந்தா
செல்லாத நாட்டை
ஒரு சொல்லால் ஆண்டிருந்தா

இடும்பியிலே வாரான்னா
எங்களல்ல கிடுகிடுங்கும்
இருக்கசனம் திடுக்கிடுமே
வண்டியிலே வாரன்னா
மண்ணோ கிடுகிடுங்கும்
எங்கமாசனங்க திடுக்கிடுமே

காரானை போரானை
ஐயாகடலி முரசானை
தொடமடக்கா வெள்ளானை
கொம்பு இரண்டும் இல்லா
நம்கொலத்து வெள்ளானை
தந்தம்ரெண்டும் இல்லா
சனத்திலுள்ள வெள்ளானை

வெள்ளானை போன
வீதி தெரியலியே
காரானை போன
கடவுந் தெரியலியே
போரானை போன
பூமி தெரியலியே

மாசேனைக் கூட்டத்தில்
வார்த்தை தெடம் உள்ளவுக
பெருஞ்சேனைக் கூட்டத்தில்
பேச்சுத்தெடம் உள்ளவுக
சேனைதளக் கூட்டத்தில்
சேதித்தெடம் உள்ளவுக

ஊர்ஜிதம்தான் ஊர்ஜிதம்தான்
வாழுமக்கள் ஐயா
மகராசா போடும்
மையெழுத்தும் ஊர்ஜிதந்தான்

கட்டிமக்கள் ஐயா
கருணவா போடும்
கையெழுத்தும் ஊர்ஜிதம்தான்

ஊரணித் தண்ணி
உவவரண்டு போனாலும்
உத்தண்டர் சொல்லு
உவவரண்டு போனதில்லே

கம்மாயித் தண்ணி
கரைவரண்டு போனாலும்
கருணவா சொல்லு
கரைவரண்டு போனதில்லே

சமுத்திரத்துத் தண்ணி
தடம்பொரண்டு போனாலும்
சத்தியவார் சொல்லு
தடம்பொரண்டு போனதில்லே

பிடிச்சுவந்த வாசல்
போதமக்கள் கண்டிருந்தோம்
வாங்கிவந்த வாசல்
மகுரமக்கள் கண்டிருந்தோம்
மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருந்தோம்

காணலாம் காட்சிகளைக்
கண்கள் மலர்சொரியப்
பாக்கலாம் காட்சிகளைப்
பாவை மலர்சொரிய
மக்கள் பகிசிகளை
மறுத்திருந்தும் பாக்கலியே
பொண்கள் பகிசிகளைப்
பிம்பிருந்தும் காணலியே

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்த நாவாழ்ந்து
வளத்தா மாளுஞ் சமயம்
மாது இருபேரும்
மலரடிக்குச் சொந்தமில்லே
வளத்தா மடியலிலே
மடிப்பொசந்த பட்டுடுத்தி
மலரடியைச் சுத்தலியே

பொன்னாண்டு மண்ணாண்டு

பெருவாரிநா வாழ்ந்து
பெத்தா போகுஞ் சமயம்
பொண்கள் இருபேரும்
பூவடிக்குச் சொந்தமில்லே
பெத்தா மடியயிலே
புடிஒசந்த பட்டுடுத்திப்
பூவடியைச் சுத்தலியே

மகுந்த மகளும்
ஒட்டனார் செய்த
ஒரலைப் பொரட்டிவச்சு
ஓங்கி வளந்த
ஒலக்கை கைப்புடிச்சு
ஒசந்த மணிச் சம்பாவை
ஒரல் எரம்பக் கொட்டிவச்சு
ஒசந்தமடிப் பட்டிலே
உமிப் பறக்கக் குத்தலியே
சரிகைவெலைப் பட்டிலே
தவிடணையக் குத்தலியே

சித்திரமணி முத்தொலக்கை
குத்த அதிட்டம் பத்தலியே
சின்னச் சிறுசுளகு
கொழிக்க அதிட்டம் செய்யலியே

வச்சிரமணி முத்தொலக்கை
குத்த அதிட்டம் பத்தலியே
வண்ணச் சிறுசுளகு
கொழிக்க அதிட்டம் செய்யலியே

வாழை நெருங்கி
மனைநெருங்கிச் சுத்தயிலே
வாழுமகன் தேவி
மலரடியைச் சுத்தலியே

தென்னை நெருங்கித்
தெருநெருங்கிச் சுத்தயிலே
செல்லமகன் தேவி
திருவடியைச் சுத்தலியே

மஞ்சன்ரெண்டு கண்டிருந்தும்
மாத்திமஞ்சன் பெத்திருந்தும்
மாளயிலே காட்டலியே
வரிசைபெற ஏலலியே
வாள்விசயன் மஞ்சன்
மலர்வளத்தான் ஓவியமா

பிள்ளைரெண்டு கண்டிருந்தும்
பின்னிமஞ்சன் பெத்திருந்தும்
போகயிலே காட்டலியே
போர்பெற ஏலலியே
போர்விசயன் மஞ்சன்
பூவளத்தான் ஓவியமா

OOO

சீரும் சிறப்புமாக வளர்ந்த தனக்கு தன் கணவன் இறந்தபோது, சுவீகாரம் வந்த தன் தம்பி 'பொறந்தையர்சீர்' கொண்டு வராததால், தான் பிறந்த கோவிலைச் சேர்ந்த ஒருவரைத் தேடி, சேலைபெற நேர்ந்ததே என வருந்தி மனைவி பாடியது.

தரையின்மேல் சீர்பாதம்
தண்டைக்கால் நோகுமுன்னு
மண்ணின்மேல் சீர்பாதம்
வைக்கக்கால் நோகுமுன்னு
பூமியின்மேல் சீர்பாதம்
போகக்கால் நோகுமுன்னு
மார்மேல் தொட்டிகட்டி
மடிமேல் நடைபழகித்
தோள்மேல் தொட்டிகட்டித்
தொடைமேல் நடைபழகி
ஆலமரம் வெட்டி
அந்நேரம் ஊஞ்சலிட்டு
மல்லியப் பூப்போல
மெலுக்கா வளந்தமக
சூடிய பூப்போல

சொகுசா வளந்தமக

மக்க பொறக்க
மாதவங்க செய்வாகநான்
மாது பொழைக்க என்
மாசமத்தி மாதா
மாதவங்க செய்தமுன்னா
மண்ணை மொழுகி
மண்வாயைக் கோலமிட்டு
மண்ணின்மேல் சாதமிட்டு
வாயால் சோறு
வாரியமுது உண்ணுநான்
மாது பொழைக்க
மாதவங்க செய்தமுன்னா

புள்ளை பொறக்கப்
பெருந்தவங்க செய்வாகநான்
பொண்ணு பொழைக்களன்
பெருஞ்சமத்தி மாதா
பெருந்தவங்க செய்தமுன்னா
பூமி மொழுகிப்
பூமிமேல் கோலமிட்டு
பொங்கினசோறு மேலயிட்டுப்
பொறங்கை கட்டிப்
புடிச்சமுது உண்ணுநான்
பொண்ணு பொழைக்கப்
பெருந்தவங்க செய்தமுன்னா

காப்பி குடிச்சுக்
கருத்தா வளந்தமக
சோடா குடிச்சுச்
சொகுசா வளந்தமக
பொல்லா மொறைக்கும்
போர்வைக்கும் ஆளானேன்
ஆகா மொறைக்கும்
அருஞ்சிறைக்கும் ஆளானேன்
வேண்டா மொறைக்கும்
வேர்வைக்கும் ஆளானேன்

பொட்டி நகைக்கும்
போடாத பொண் ஆனேன்
மரவை நகையை
வாங்காத பொண் ஆனேன்

நான் பொண்ணு துணைக்கு
என்பொரதானி ஐயா
புள்ளை அழச்சதுவும்
போந்த பணத்துக்குப்
புள்ளைவழி யில்லயின்னு
பொன்னிட்டுக் கூட்டிய

புள்ளைவழி தோணலன்னு
என்பொரதானி ஐயா
பொறவியெல்லாம்
என்னுதுன்னேன்
பொறவியுடை மக்கள்
புள்ளையெல்லாம் சொந்த
முன்னேன்
புடிச்சுவந்த பாவிக்குநான்
பொறந்தநெறம் தோணாட்டா
இந்தபூமிப் பொறந்தார்க்கும்
நான்பொறந்த்நெறம் தோணலியா

வாங்கிவந்த பாவிக்கு நான்
வளந்தநெறம் தோணாட்டா
இந்தமண்ணிப் பொறந்தார்க்கும்
நான்வளந்தநெறம் தோணலியா

கோயிலா தேடிநான்
கொண்டுவரச் சொன்னேனே
கருப்பூரா தேடிநான்
கச்சைபோடச் சொன்னேனே

ஒங்கபணமிருந்து என்ன செய்ய
பவுருக்கு ஆகாதே
ஒங்ககாசிருந்து என்ன செய்ய
கனசனத்துக்கு ஆகாதே

OOO

கணவன் இறந்தபோது, பெரியோர்கள் வாழ்த்திக் கட்டிய மாங்கல்யத்தை இப்போது கழட்டி வைக்க நேர்ந்ததே எனவும், விலையுயர்ந்த பட்டாடைகளை விடுத்து எளிய ஆடைகளைக் கட்ட நேர்ந்ததே எனவும், அணிகலன்களை அணிய முடியாமல் பூட்டி வைக்க நேர்ந்ததே எனவும் வருந்தி மனைவி பாடியது.

வந்துதோ காலம்
வாழுமக்கள் ஐயா
வயிரமுடி தீயணைய
சென்னுதோ காலம்
சின்னமக்கள் ஐயா
செல்லமுடி தீயணைய
பொறந்துதோ காலம்
பிஞ்சுமக்கள் ஐயா
பொன்னுமுடி தீயணைய

பொட்டழிஞ்சேன் மையழிஞ்சேன்
பிஞ்சுமக்கள் ஆத்தா
பொண்ணு தலகொலஞ்சேன்
எங்கையா வாசல்
பொறந்தநெறம் பேந்துவிட்டேன்

பொறக்கையிலே வச்ச
பொட்டை அழிச்சுவிட்டா
பொறந்திட்டு வச்ச
பூவைப் பறிச்செறிஞ்சா
சிந்தியிட்டேன் சிந்தியிட்டேன்
சின்னமக்கள் ஆத்தா
சிறுவயிரம் சிந்தியிட்டேன்
கொத்தரளி நல்பவளம்
கோக்கையிலே சிந்தியிட்டேன்
சீமைக்கமலம் சிறுவயிரம்
சிந்தியிட்டேன் சிந்தியிட்டேன்
நாட்டுக் கமலம் நல்வயிரம்
சிந்தியிட்டேன் சிந்தியிட்டேன்
சிந்துச்சே ஆபரணம்

பொரதானி கோட்டையிலே
போரழகி எல்லையிலே
பொன்னுதிரும் பூமியிலே
பொறக்க வசம்அத்தமுன்னேன்

மங்குச்சே ஆபரணம்
மலரெடுத்தார் கோட்டையிலே
வாவரசி எல்லையிலே
வளவெல்லாம் பொன்னுதிர
வாங்கவசம் அத்தமுன்னேன்

எங்கையா வாசல்
நானூறு பார்ப்பார்கள்
நாள்பாத்த மங்கிலியம்
முன்னூறு பார்ப்பார்கள்
முடிச்சிட்ட மங்கிலியம்
அரையர் துரையர் எல்லாம்
அள்ளியிட்ட மங்கிலியம்
தொரையர் அரையரெல்லாம்
தொட்டிட்ட மங்கிலியம்
பிஞ்சு மக்கள் ஐயா
பூவின்மேல் சூடின
பூணாரம் போகுதிப்போ
மலரின்மேல் சூடின
மங்கிலியம் போகுதிப்போ

கட்டத் தலங்களிலே
கதறிவரச் சொல்லாமே
பாடத் தலங்களிலே
பதறிவரச் சொல்லாமே
இந்தக் கள்ளியங் காலருகே
கழட்டி வைக்கச் சொன்னிகளே
ஆவரங்கால் அருகே
அவுத்துவைக்கச் சொன்னிகளே
காலாட்ட கையாட்ட

கழட்டிவைக்கச் சொன்னிகளே
வாயாட்ட கையாட்ட
வாங்கிவைக்கச் சொன்னிகளே

ஒருகோடி தங்கநகை
உருவிவைக்கச் சொன்னிகளே
அரைக்கோடி தங்கநகை
அவுத்துவைக்கச் சொன்னிகளே
காக்கோடி தங்கநகை
கழட்டிவைக்கச் சொன்னிகளே

காலக் கொலுவிழந்தேன்
காக்கொடலைப் பூவிழந்தேன்
களையொசந்த அந்தணரைக்
கடலில்விடச் சம்மதிச்சேன்
காக்கோடித் தங்கநகை
கழட்டி வைக்கச் சம்மதிச்சேன்

உச்சிக் கொலுவிழந்தேன்
ஒருகொடலைப் பூவிழந்தேன்
ஒசத்தியுள்ள அந்தணரை
ஊரைவிடச் சம்மதிச்சேன்
ஒருகோடித் தங்கநகை
உருவிவைக்கச் சம்மதிச்சேன்

அந்திக் கொலுவிழந்தேன்
அரைக்கொடலைப் பூவிழந்தேன்
அழகொசந்த அந்தணரை
அனுப்பிவிடச் சம்மதிச்சேன்
அரைக்கோடித் தங்கநகை
அவுத்துவைக்கச் சம்மதிச்சேன்

கும்பகோணம் பட்டு
கொஞ்சாக் கலகலங்கும்
கோதைக்கு எசஞ்சிருக்கும்
கொஞ்சுமக்கள் ஐயா
கொள்ளத் தடையுமில்லே

வங்காளம் பட்டு
மடிச்சாக் கலகலங்கும்
மாதுக் கெசஞ்சிருக்கும்
மதலைமக்கள் ஐயா
வாங்கத் தடையுமில்லே

கொஞ்சவெலைக் கண்டாங்கி
கோப்புக் கெசஞ்சிருக்கும்
கோபுரத்தைப் போலிருக்கும்
குணத்துக் கெசஞ்சிருக்கும்

மகுந்தவெலைக் கண்டாங்கி
மாதுக்கெசஞ்சிருக்கும்
மயிலனைக்கு ஒத்திருக்கும்
வாழ்மயிலைப் போலிருக்கும்
மகுந்தவெலைப் பட்டுக்கும்
வருத்தம்வரச் சொன்னதென்ன

ஈரத் துகிலுரிஞ்சேன்
எணைசேந்த பட்டுரிஞ்சேன்
நனைஞ்ச துகிலுரிஞ்சேன்
நயமான பட்டுரிஞ்சேன்
காஞ்ச துகிலுரிஞ்சேன்
கண்டாங்கிப் பட்டுரிஞ்சேன்

சேலை ரெண்டாச்சு
சிறுபணுதி வேறாச்சு
ஆடை ரெண்டாச்சு
ஆபரணம் வேறாச்சு
ஆடை கொடியிலதான்
ஆபரணம் பொட்டியில
அரக்கு மஞ்சள் சட்டியிலே
அல்லி ஒரு மூலையிலே
சீலை கொடியிலதான்
சிறுபணுதி பொட்டியிலே
தேர்மஞ்சள் சட்டியிலே
சீதை ஒரு மூலையிலே.

○○○

**நோயுற்றிருந்து, பொங்கலன்று இறந்த தன் கணவனுக்கு, தானும் தன்**

மக்களும் கணவனைப் பேணியதையும், மூத்த மகன் வெளிநாட்டில் இருப்பதால் மூத்த மகன் கையால் கொள்ளி பெற இயலாமற் போனதையும், சீரும் சிறப்புடன் பிறந்து வளர்ந்தது போல, பிறந்த வீட்டிலிருந்து சீர்பெற்று வா(ழ்)வரசியாக மாளத் தனக்குப் பேறு கிட்டவில்லையே எனவும் வயதான மனைவி வருந்திப் பாடியது.

வாவரசி வாழ்வெடுத்தேன்
மகுரமக்க கண்டிருந்தேன்
மகிழ்ச்சிபண்ணி வாழ்ந்திருந்தேன்
மகுந்த கலியாணம்
மங்களமும் செய்திருந்தேன்
மாளுஞ் சமயம்
வாவரசிப் பொண்ணும்
மயிலனையும் பாக்கலியே
மக்களெல்லாம் காணலியே

போரழகி வாழ்வெடுத்தேன்
போதமக்கள் கண்டிருந்தேன்
பெருமைபண்ணி வாழ்ந்திருந்தேன்
பெரிய கலியாணம்
பெருமைகளும் செய்திருந்தேன்
போகும் சமயம்
போரழகி மாதும்
பொய்க்கடியும் பாக்கலியே
புள்ளையெல்லாம் காணலியே

தங்கச் சமுதாடு
சாஞ்சதுவக் காணலியே
பொன்னுஞ் சமுதாடு
போனதுவக் காணலியே
வெள்ளிச் சமுதாடு
வீழ்ந்ததுவக் காணலியே

பெத்தா கெடையும்
பெரிய கெடை தோணுதுன்னா
பொண்ணாசை தீத்தமக
பெசகாமக் கிட்டருந்தா
பெரியகெடை பாத்தமுன்னா
பெத்தா பெழைச்சாக்க
பொறுகாத மாதாவுக்குப்
பூணாரம் மிஞ்சுமுன்னா
பெத்தா பொழைக்கலியே
எக்குப் பூணாரம் மிஞ்சலியே

வளத்தா கெடையும்
வலுவாத் தோணுதுன்னா
மாதாசை தீத்தமக
மாறாமக் கிட்டருந்தா
வளத்தா பொழைச்சாக்க
மனம்பொறுகா மாதாவுக்கு
மங்கிலியம் மிஞ்சுமுன்னா
வளத்தா பொழைக்கலியே
எக்குமங்கிலியம் மிஞ்சலியே

மன்னர் கெடையை
மாறாமப் பாத்திருந்தேன்
பெருமாள் கெடையைப்
பிசகாமப் பாத்திருந்தேன்

பெரும்பகிசி மன்னருன்னு
பூப்போல வச்சிருந்தேன்
மாபகிசி மன்னருன்னு
மலர்போல வச்சிருந்தேன்

மங்கள வாசல்எல்லாம்
வாரியுங்கப் போனாலும்
மணிநேரம் செல்லாம
வளவிவந்து சேந்திருப்பேன்
வாரியுங்க வச்சிருப்பேன்
மன்னர்மொகம் பார்ப்பேன்
வார்த்தைமொழி கேட்டிருப்பேன்

கலியாண வாசல் எல்லாம்
கைநனைக்கப் போனாலும்

கால்நிமிசம் செல்லாம
காணிவந்து சேந்திருப்பேன்
கருணர்பணி செய்திருப்பேன்

மண்ணின்மேல் பட்ட
மருக்கடி ரொம்பவில்ல
மண்ணின் மேப்பட்ட
மருக்கடியுந் தீந்தமுன்னா

பூமிமேப் பட்ட
பொல்லாங்கும் ரொம்பவில்ல
பூமிமேப் பட்ட
பொல்லாங்குந் தீந்தமுன்னா

போதமெல்லாந் தானும்
பொல்லா நசலாப்
பூமிக் கொலுவிருந்தா
போதத்திப் பொங்கவிட்டாப்
பிம்பொருநாச் சிக்கலியா
போகக் கெடைக்கலியா
போதத்தில் பொங்கலுன்னு
பெருமையுள்ள நாளுமுன்னு
பிஞ்சான மக்களெல்லாம்
பூமிபோய்ச் சேருவமுன்னு
புத்தி நெனச்சிருந்தா
பிஞ்சுமக்கள் ஐயா
போகுறநா இப்பவுன்னா

வருசமெல்லாந் தானும்
மாய நசலா
வளவிக் கொலுவிருந்தா
வருசத்திப் பொங்கவிட்டா
மறுத்தொருநாச் சிக்கலியா
மாளக் கெடைக்கலியா
மாட்டுத் திருநாளுமுன்னு
மகிழ்ச்சியுள்ள நாளுமுன்னு
மட்டமுள்ள மக்களெல்லாம்
வளவிபோய்ச் சேருவமுன்னு
மனசி நெனச்சிருந்தா

வாழுமக்கள் ஐயா
மாளுறநா இப்பவுன்னா

திண்ணை வெளியாச்சா
சிவலோகம் தோப்பாச்சா
வாச வெளியாச்சா
வைகுந்தம் தோப்பாச்சா
திண்ணையில் காணோமே
தெருவிக்கொரல் கேக்கலியே
வாசலில் காணோமே
வளவிக்கொரல் கேக்கலியே
திண்ணையும் வீடும்
தெருவுமொரு சாயலில்ல
வாசலும் வீடும்
வளவுமொரு சாயலில்ல

பொண்ணாசை தீத்தமக
போரைப் பிரிச்சிட்டா
பொன்னரிசி குத்தியிட்டா
பிம்பு பொறந்தமகஎன்
பொறந்தையிலே செய்தமக
பின்னப்பாய் சுத்திட்டா
புள்ளைமுடி தீத்தமகன்
பொறநாடு போனதினால்
பூவளக்க மாட்டலியே
பிம்பு பொறந்தமகன்
பூவளத்தான் ஓவியமா
பெத்த ஓசத்திபோலப்
பேர்பெத்தா ஓவியமா

மாதாசை தீத்தமக
மச்சைப் பிரிச்சிட்டா
மணியரிசி குத்தியிட்டா
மறுத்துப் பொறந்தமகஎன்
வளந்தையிலே செய்தமக
வண்ணப்பாய் சத்தியிட்டா
மஞ்சமுடி தீத்தமகன்
மறுநாடு போனதினால்

மலர்வளக்க மாட்டலியே
மறுத்துப் பொறந்தமகன்
மலர்வளத்தான் ஓவியமா
பெத்த ஒசத்திபோலப்
பேர்பெத்தா ஓவியமா
வளத்த ஒசத்திபோல
வரிசைபெத்தா ஓவியமா
பொறவிஎல்லாம் போலநான்
போரழகி ஆகலியே
பூவோட போகலியே
வளந்தை எல்லாம் போலநான்
வாவரசி ஆகலியே
மலரோட போகலியே
பொறவி எழுத்தெல்லாம்களக்குச்
சேத்தெழுத மாட்டலியே
வளந்தை எழுத்தெல்லாம்எக்கு
மாத்திஎழுத மாட்டலியே
சங்குவெளையும் எங்கையாவாசல்
சமுத்திரத்துப் பொண்பொறந்தேன்
தள்ளியிரு என்காத
தருமருக்கு வாழ்ந்திருந்தேன்
தருமருக்கு முன்போகத்
தவங்கள் மெத்தச் செய்யலியே

வெள்ளிவெளையும் எங்கையா
வாசல்
வீமபுரம் பொண்பொறந்தேன்
விலகியிரு என்காத
வீமருக்கு வாழ்ந்திருந்தேன்
வீமருக்கு முன்போக
வெகுதவங்கள் செய்யலியே

முத்துவெளையும் எங்கையா
வாசல்
மொதக்கடலில்
பொண்பொறந்தேன்
முழுவயிரம் கண்பாக்கும்
முதலியர்க்கு வாழ்ந்திருந்தேன்

பவளம்வெளையும் எங்கையா
வாசல்
பாக்கடலில் பொண்பொறந்தேன்
பத்துலச்சம் கண்பாக்கும்
பாண்டியர்க்கு வாழ்ந்திருந்தேன்

பெத்த ஒசத்திபோலப்
பூவோட போகலியே
புண்ணியவார் மாது
பெரிய வயதாகிப்
பொட்டழிஞ்ச பொண்ணானேன்

வளத்த ஒசத்திபோல
மலரோட போகலியே
மகராசா மாது
மகுந்த வயதாகி
மையழிஞ்ச பொண்ணானேன்

சிங்கப்பூர்ப் பட்டெடுத்துச்
செலவில் எழுதிவச்சு
வங்காளம் பட்டெடுத்து
வரவில் எழுதிவச்சுக்
கும்பகோணம் பட்டெடுத்துக்
குறிப்பில் எழுதிவச்சு

மரவை எடுத்துவச்சு
மஞ்சள் அரச்சுவச்சு
எங்கையா வாசல்
வட்ட மரவையிலே
பட்டை மடிச்சுவச்சு
அம்மனுக்குச் சாத்துற
அடுக்குமல்லி வாங்கிவச்சுச்
சாமிக்குச் சாத்துற
சரமல்லி வாங்கிவச்சு
கோயிலுக்குச் சாத்துற
குடமல்லி வாங்கிவச்சுப்
பட்டணத்திப் பட்டெடுத்துப்
பாளையத்துக் கொட்டழச்சுப்

பாடுபட்ட ஆயா
பாங்கிவனம் போனன்னு

பந்தி பந்தியாகப்
பகுந்தெளவு கேக்கலியே
குப்பம் குப்பமாகக்
குமிஞ்செளவு கேக்கலியே
வங்காளங் கச்சைக்கு
மாது பொறந்திருந்தேன்
சிங்கப்பூர்க் கச்சைக்குச்
சீதை பொறந்திருந்தேன்

மட்டத்தி மாலையிட்ட
மன்னர் தவறவிட்டேன்
மதிச்சமுடி ஐயாக்க
மலர்மேல் சாத்திய
மங்கிலியம் போகவிட்டேன்

பிஞ்சிலே மாலையிட்ட
பெருமாள் தவறவிட்டேன்
போந்தமுடி ஐயாக்க
பூமேல் சாத்தின
பூணாரம் கொள்ளையிட்டேன்

OOO

நோய்வாய்ப்பட்டு இறந்த கணவனுக்கு, தானும் தன் மக்களும் அருகிருந்து பேணியதையும், கணவன் உயிர் பிழைக்க வேண்டித் தெய்வங்களை வேண்டியதையும் கூறி மனைவி வருந்திப் பாடியது.

நாளுஞ் சரியில்லே
நடப்பதுக்கு நாளில்லே
பொழுதுஞ் சரியில்லே
பிஞ்சுமக்கள் ஐயா
போவதுக்கு நாளில்லே
இதுவோ சரியுமில்லே
எறக்கநா இப்பவில்லே
சரியோ சரியுமில்லே
சாகுறநா இப்பவில்லே

பிஞ்சுமக்கள் ஐயா
பொன்னுந் திருமேனியிலே
பிணியும்வந்து சேந்தபின்பு
பொன்னைத் துரும்புமுன்னோம்
பெரியதொரை கட்டிவந்தோம்
பெருந்தொடையில் ஊசியிட்டான்
பொழச்சு இருப்பீகன்னு
பேச்சொரைச்சு ஏச்சுவிட்டான்

வாழுமக்கள் ஐயா
வருசத்திரு மேனியிலே
விசாதிவந்து சேந்தபின்பு
மச்சம் துரும்புமுன்னோம்
மகுந்ததொரை கூட்டிவந்தோம்
வாழ்ந்து இருப்பீகன்னு
வார்த்தைசொல்லி ஏச்சுவிட்டான்
பின்னிப் படந்ததே
பிஞ்சான மக்கள் எல்லாம்
பிச்சு எறிஞ்சாப் போகலியே
பத்திப் படந்ததே
பறிச்செறிஞ்சாப் போகலியே
ஆணிப் படந்ததே
அரிச்செறிஞ்சாப் போகலியே

கடல்வைத்தியனும் இதைக்
கணக்கறிய மாட்டலியே
கல்கத்தா ஜோசியனும் இதைக்
கண்டெடுக்க மாட்டலியே

செஞ்சிவைத்தியனும் இந்தச்
சீக்கறிய மாட்டலியே
தென்மதுரை ஜோசியனும் இதைத்
தெரிஞ்செடுக்க மாட்டலியே

மலையின்வைத்தியனும் இந்த
மருந்தறிய மாட்டலியே
மதராஸ்ஜோசியனும் இதை

மதிச்செடுக்க மாட்டலியே

குடிச்ச மருந்தெல்லாம்
கொல்லத் துணிஞ்சுதே
குத்தின ஊசியெல்லாம்
கொல்லத் துணிஞ்சுதே
கும்பிட்ட சாமியும்
கொல்லத் துணிஞ்சுதே

தின்ன மருந்தெல்லாம்
திங்கத் துணிஞ்சுதே
செலுத்திய ஊசியெல்லாம்
திங்கத் துணிஞ்சுதே
தெண்டனிட்ட சாமியெல்லாம்
திங்கத் துணிஞ்சுதே

இத்தி எலங்காத
ஈஸ்வரியைக் கையெடுத்தோம்
கொஞ்சம் எலங்காத
கோவில்களைக் கையெடுத்தோம்
சத்தே எலங்காத
சரஸ்வதியைக் கையெடுத்தோம்

பெத்தார் பொழைக்கவுன்னு
பொன்னா கருணங்க
பொறநாடு விட்டுவந்து
பெருஞ்சோலி பாராம
பெசகாமக் கிட்டஇருந்து
பொன்னைச் செலவழிச்சா
பெத்தா பொழைக்கலியே
பெருஞ்சமத்தி மாதாவுக்குப்
பூணாரம் மிஞ்சலியே
பிஞ்சான மக்களுக்குப்
பெலனாத் தெரியலியே

வளத்தார் பொழைக்கவுன்னு
வருசக் கருணங்க
மறுநாடு விட்டுவந்து
மாசோலி பாராம
மாறாமக் கிட்டஇருந்து
மச்சம் செலவழிச்சா
வளத்தார் பொழைக்கலியே
மாசமத்தி மாதாவுக்கு
மங்கிலியம் மிஞ்சலியே
மட்டமுள்ள மக்களுக்கு
வலுவாத் தெரியலியே

கட்டிலிட்டா மெத்தையிட்டா
காணாக் குருச்சியிட்டா
காணாக் குருச்சியிலே
காலமுக்க ஆளுவச்சா

மெத்தையிட்டா கட்டிலிட்டா
வேணாக் குருச்சியிட்டா
வேணாக் குருச்சியிலே
மேலமுக்க ஆளுவச்சா

தலையை வலிக்குதுன்னா
தலகாணி மாத்திவச்சா
பொறண்டு படுக்கப்
பூவால மெத்தையிட்டா
திண்டிட்டா மெத்தையிட்டா
சீர்பவளக் கட்டிலிட்டா

உடம்பு வலிக்குதுன்னா
ஒலுகெடுத்துச் சாத்திவச்சா
மேலு வலிக்குதுன்னா
மெத்தை விரிச்சுவச்சா

திரும்பிப் படுக்க
செவந்திப்பூ மெத்தையிட்டா
செவந்திப்பூ மெத்தையிலே
சின்ன மக்கள் ஐயா
திரும்ப எணங்கலேன்னா

மாறிப் படுக்க
மல்லியப்பூ மெத்தையிட்டா
மல்லியப்பூ மெத்தையிலே
வாழும் மக்கள் ஐயா

மாற எணங்கலேன்னா

கைலாசப் பூநாடு
காட்சியாத் தோணுதுன்னா
சொக்கலோகப் பூநாடு
ஜோதியாத் தோணுதுன்னா
வைகுந்தப் பூநாடு
மகிழ்ச்சியாத் தோணுதுன்னா

நெடுநாக் கெடைதானே
நிச்சயந்தான் இன்னிருந்தேன்
நெடுநாக் கெடைக்கும்
நின்னா பயணமுன்னா
பலநாக் கெடைதானே
பயமில்லே இன்னிருந்தேன்
பலநாக் கெடைக்கும்
படுத்தா பயணமுன்னா

எங்க எல்லை
மகுந்தவுக அரிதின்னு
மயங்கி அழுதாலும்
வாங்கவந்தான் கேக்கலியே

இன்னம் கெடந்தாலும்
எய்யாமல் பாப்பேனே
மறுத்துக் கெடந்தாலும்
வருசக் கருணங்க
மாறாமப் பாப்பாக

OOO

அறப்பணியும், கல்விப் பணியும் செய்து, அனைவர்க்கும் உதவிய நல்லவரும், கணக்கிலும், கல்வியறிவிலும் வல்லவருமான கணவர் இறந்தபோது கணவரை இனி எங்கே காண்பது எப்படிக் காண்பது எனவும், தான் கணவனை இழந்து அவமதிப்புக்குள்ளான அவலம் தாங்க ஒண்ணாதது எனவும் வயதான மனைவி வருந்திப் பாடியது.

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநா வாழ்ந்து
மகுந்த கலியாணம்
மகுந்த மணைஏறி
மகிழ்ச்சிபண்ணிச் செய்திருந்து
மாளும் சமயம்நான்
வடிவொசந்தார் முன்போக
மாதவங்கள் செய்யலியே

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநா வாழ்ந்து
பெரிய கலியாணம்
பெரிய மணைஏறிப்
பெருமைபண்ணிச் செய்திருந்து
போகும் சமயம்நான்
பொட்டொசந்தார் முன்போகப்
பெருந்தவங்கள் செய்யலியே

காணக் கெடைக்கலியே
கண்ணுவழித் தட்டலியே
பாக்கக் கெடைக்கலியே
பாவைவழித் தட்டலியே

தேடிப் பொறப்பட்டா
தெருவிலேயும் காணமே
சிந்தையிலே எண்ணியிட்டா
திருமொகத்தே காணமே

வருந்திப் பொறப்பட்டா
வளவிலேயும் காணமே
மனசிலே எண்ணியிட்டா
மதிமொகத்தே காணமே

திண்ணையும் வீடும்
தெருவும் ஒரு சாயலில்ல
தெருவோரம் வந்தாலும்
சேகண்டிச் சத்தம் வரும்

குமுதமடிச்ச குறிச்சி

எல்லாந் தேடுதே
நடனம் பொழிஞ்ச
நாக்காலி தேடுதே

கும்பிட்ட மூக்கழகும்
கோதுகனி வாயழகும்
தெண்டனிட்ட மூக்கழகும்
தெய்வகனி வாயழகும்
சந்தனப் பொட்டழகும்
தகுந்த நடையழகும்
தரணியிலே காணமே
ஒய்யாரப் பொட்டழகும்
ஒசந்த நடையழகும்
ஊரிலேயும் காணமே

வையகத்தி சனத்துக்கு
வார்த்தைசொல்லி நீப்பீக
பூலோகத்தி சனத்துக்கு
பேச்சொரைச்சு நிப்பீக
சன்மார்க்கசபை சாஞ்சிருக்கக்
காண்ப தெப்போ
கூட்டம் பெருக்கிவச்சுக்

கொரலோசை கேக்கக்
கோடிச்சனம் காத்திருக்கும்
நரளப் பெருக்கிவச்சு
நாவோசை கேக்க
நரளெல்லாம் காத்திருக்கும்

பூலோகத்தி மக்களுக்குப்
போதிச்சு வச்சீக
வையகத்தி மக்களெல்லாம்
வாசிக்க வச்சீக
சேணியுள்ள மக்களெல்லாம்
சேதிசொல்ல வச்சீக

ஐயமுதலி அறியவந்தா
என்செய்வா
கணக்கன்முதலி காணவந்தா
என்செய்வா
செட்டிமுதலி தேடிவந்தா
என்செய்வா

கணக்கன் கணக்கிலேயும்
காவீசம் கூடவில்ல
ஐயன் கணக்கிலேயும்
அரைவீசம் கூடவில்ல
செட்டி கணக்கிலேயும்
திக்காணி கூடவில்ல

பத்துக் கிளாசும்
பாரதமும் கத்தவுக
பட்டணத்தி மக்களுக்குப்
பாரதமும் சொன்னவுக
எட்டுக் கிளாசும்
எலக்கணமும் கத்தவுக
இந்திய மக்களுக்கு
எலக்கணமும் சொன்னவுக

அஞ்சு கிளாசும்
அடிவிருத்தம் கத்தவுக
அவ்வினிய பஞ்சவருக்கும்
அடிவிருத்தம் சொன்னவுக

நாட்டமுள்ளார் மஞ்சன்
நாக்குஞ் சரசுவதி
நடுநாக்கும் வேதாந்தம்
ஆசைமக்கள் அப்பத்தா
உத்தமியா பெத்த மஞ்சன்
உதடும் சரசுவதி
உள்நாக்கும் வேதாந்தம்
பாஞ்சாலி வாழ்ந்தமன்னர்
பல்லுஞ் சரசுவதி
படிச்சதெல்லாம் வேதாந்தம்

குளிக்கக் குளமும்வெட்டி
கும்பிடவும் கோயில்கட்டி
மதிக்க மடமுங்கட்டி
மதிப்பாக வாழ்ந்தவுக

கணேசர் செந்தமிழ்க்கல்லூரி
கருத்துடனே தோற்றுவித்துக்
கருத்தாக வாழ்ந்தவுக

மணிவிளக்கு ஏத்த
மாதை அழைப்பாக
தீபஅமுது வைக்கச்
சீதையை அழைப்பாக
பொன்விளக்குப் போட
பொண்ணை அழைப்பாக

கண்திட்டி சுத்தக்
கன்னியை அழைப்பாக
திட்டிமிதி சுத்தச்
சீதையை அழைப்பாக
மண்திட்டி சுத்த
மாதை அழைப்பாக
இப்பமன்னர் எழுந்து
வளவில் கொலுவிருக்கேன்
பெருமாள் எழுந்து
பூமிக் கொலுவிருக்கேன்

காணுவமா காணுவமா
நம்மகடவில் வரக்காணுவமா
முத்தணிவாசல் முகப்பேறக்
காணுவமா
பலகணிவாசல் படியேறக்
காணுவமா
பட்டியக்கல்லில் பல்வெளக்கக்
காணுவமா

செப்போடு பாவிய
சிங்கமுகத்திண்ணையிலே
எப்போதும்போல இனிதிருக்கக்
காணுவமா
சேனைதளத்தோட சேந்திருக்கக்
காணுவமா
கொலுமேளந்தன்னோட
கூடஇருக்கக் காணுவமா
நாதசுரந்தன்னோட நடுவிருக்கக்
காணுவமா
சிநேகிதமார்தன்னோட
சேந்திருக்கக்காணுவமா

வாசல் வெளியாச்சே
வைகுந்தம் தோப்பாச்சே
வாசலில் காணலியே
வளவில்கொரல் கேக்கலியே

திண்ணை வெளியாச்சே
சிவலோகம் தோப்பாச்சே
திண்ணையில் காணலியே
தெருவில்கொரல் கேக்கலியே

மூத்தமகன் கொள்ளிவைக்க
முடிகுழலாள் பச்சைகுத்த
அல்லி அரிசிகுத்த
அரிராமர் தீமூட்ட
சீதை அரிசிகுத்த
சீராமன் தீமூட்ட
கோதை அரிசிகுத்தக்
கோதண்டர் கொள்ளி வைக்கப்
பெத்த ஒசத்தி போல
போர் பெத்தா ஓவியமா
வளத்த ஒசத்திபோல
வரிசைபெத்தா ஓவியமா

OOO

வயல் வளமும் பொருள் வளமும் மிக்கவராய், பெரும் பொருளீட்டிப் பெற்ற மக்களுக்குச் சிறப்பாக மணமுடித்து வைத்த கணவன் அம்மை நோய் வந்து இறந்துபட, மக்கள் நிறைய இருந்தும் அம்மைநோயால் இறந்ததால் இறுதிச் சடங்குகள் செய்ய இலாமற் போயிற்றே என வருந்தி மனைவி பாடியது.

மாது நெனச்சபடி
மயிலனையா சொன்னபடி
மாது மனம்போல
வாழ்ந்தேன் செலகாலம்

பொண்ணு நெனச்சபடி
பொய்க்கடியா சொன்னபடி
பொண்ணு மனம்போலப்
பொழிஞ்சேன் செலகாலம்

அல்லி நெனச்சபடி
அருங்கிளியா சொன்னபடி
அல்லி மனம்போல
ஆண்டேன் செலகாலம்

மணிக்காரு வச்சவுக
வையகத்தி ரொம்ப இருக்கா
மணிவயிரம் போட்டவுக
வையகத்திகூட இருக்கா
மச்சம் கொழிச்சவுக
வையகத்தி மெத்த இருக்கா
மாது மனம்கோணாம
வாவரசி மஞ்சன்
மாதே அளவெடுத்து
மணிவயிரம் சேத்துவச்சு
மணிக்காரைக் கிட்டவச்சு
வரிசையிட்ட மன்னர்
வையகத்தி பாத்ததில்லே

பெசக்காரு வச்சவுக
பூலோகத்தி ரொம்ப இருக்கா
புதுவயிரம் போட்டவுக
பூலோகத்தி கூட இருக்கா
பொன்னைக் கொழிச்சவுக
பூலோகத்தி மெத்தஇருக்கா
பொண்ணு மனம்கோணாம
போரழகி மஞ்சன்
பொண்ணை அளவெடுத்துப்
புதுவயிரம் சேத்துவச்சு
பெசக்காரைக் கிட்டவச்சுப்
போத்தியிட்ட மன்னர்
பூலோகத்தி பாத்ததில்லே

நம்ம உருண்டமணிக் காருமெங்கே
ஓட்டிவிட்ட டிரைவர் எங்கே
ஒக்கஇருந்த மன்னரெங்கே
சலங்கைமணிக் காருமெங்கே
தட்டிவிட்ட டிரைவர் எங்கே
சாஞ்சிருந்த மன்னரெங்கே
பகளமணிக் காருமெங்கே
வெரட்டிவிட்ட டிரைவர் எங்கே
வீத்திருந்த மன்னர் எங்கே

நம்ம மதிச்சாண்டார் எல்லையிலே
வாவரசி கோட்டையிலே
வாழ்ந்திருந்தேன் சித்திரமா

மதுரைக் கடையிலே
வையகம் பேரோங்க
வாழ்ந்திருந்தா சித்திரமா
மண்ணாளும் தம்பியெல்லாம்
மஞ்சன் பெரிசாகாமே
வரிசைக் கருணன்

மகுந்த மகனுக்கு
மலர்சேத்துப் பாத்திருந்தா
மாது கனதிக்கெல்லாம்
மகுரக் குடுத்து
வருந்துவார் எல்லையிலே
மலர்சேத்துப் பாத்திருந்தா
மறுத்திருந்த மக்களுக்கு
மலர்சேத்துப் பாராமே
மாரிவந்து கொள்ளையிட்டு
வனம்பாக்கப் போனமுன்னா

பொன்னாளுந் தம்பியெல்லாம்
புள்ளை பெரிசாகாமே

பெரிய மகனுக்குப்
பூச்சேத்துப் பாத்திருந்தா
பொண்ணு கனதிக்கெல்லாம்
போதக் குடுத்துப்
போத்துவார் எல்லையிலே
பூச்சேத்துப் பாத்திருந்தா
பிம்பிருந்த மக்களுக்குப்
பூச்சேத்துப் பாராமே
பேச்சிவந்து கொள்ளையிட்டுப்
பொனம்பாக்கப் போனமுன்னா

மகுரமக்க கண்டிருந்தும்
மாத்திமஞ்சன் பெத்திருந்தும்
மாளும் சமயம்
மாரி பொறகாலே
வனம்பாக்கப் போனதினால்
வண்ணத் திருவழகை
மண்ணில் அமுக்கிவச்சு
வாய்க்கா தெர்ப்பை
வரிசைபெத்துப் போனதுன்னா

போதமக்க கண்டிருந்தும்
பின்னிமஞ்சன் பெத்திருந்தும்
போகும் சமயம்
பேச்சி பொறகாலே
பொனம்பாக்கப் போனதினால்
கோலத் திருவழகைக்
குழியில் அமுக்கிவச்சுக்
கொடிக்கால் தெர்ப்பை
கொள்ளிபெத்துப் போனதுன்னா

எண்ணையில்லா மாரி
எல்லைவந்து சேந்தாளே
தண்ணியில்லா மாரி
தரணிவந்து சேந்தாளே
வேப்பிலைக்காரி
வினைகாரி வந்தாளே
பச்சிலைக்காரி
பகைகாரி வந்தாளே

மாது ருதுவாகாமே
மலர்சேத்துப் பாக்கயிலே
மாதழைச்சுக் கட்டயிலே எங்க
மாசேனை அத்தனையும்
மன்னர் கொணத்துக்கு
மாது கொணம்பத்தாது
வையகத்தி கோடிசனம்
மன்னர் அழகுக்கு
மாதழகு கூடவின்னா

பொண்ணு ருதுவாகாமே
பூச்சேத்துப் பாக்கயிலே
பொண்ணழைச்சுக் கட்டயிலே எங்க
பெருஞ்சேனை அத்தனையும்
பெருமா கொணத்துக்குப்
பொண்ணு கொணம்பத்தாது
பூலோகத்தி கோடிசனம்
பெருமாள் அழகுக்குப்
பொண்ணழகு கூடவின்னா

ஓரெழை ஓடிய
ஈரெழை மெத்தையிலே
அஞ்செழை ஓடிய
பஞ்சணை மெத்தையிலே
அரக்கெண்ணை பூசிய
மினுக்கெண்ணை மெத்தையிலே
கார்த்திகைப்பூ மெத்தையிலே
கண்ணாடிக் கட்டிலிலே
கலந்திருந்த மன்னர்விட்டேன்
மல்லியப்பூ மெத்தையிலே
மணிவயிரக் கட்டிலிலே
மகிழ்ந்திருந்த மன்னர்விட்டேன்

கருணா குமரருக்குக்
காரிழையா நான்
கைப்புடிச்ச நாமொதலா
மதுரைத் தெசகருக்கு

மனைக்கிருந்த நாமொதலா
ஆடி தவக்கமில்லே
அதிகநா வாட்டமில்லே
திங்கத் தவக்கமில்லே
சேந்தநா வாட்டமில்லே
உங்கத் தவக்கமில்லே
பெரியநா வாட்டமில்லே

மதிச்சாண்டார் கோட்டையிலே
வாழ்ந்திருந்தார் எல்லையிலே
நல்ல செகப்பு
நடக்க நெழக்காட்டும்
நாலுபுறம் சோதிமின்னும்
நிலாவெளிச்சம் போலிருக்கும்
நடையே வெளிச்சரிக்கும்

இனிய செகப்பு
இருக்க நெழக்காட்டும்
இருபுறமும் சோதிமின்னும்
இருட்டோ வெளிச்சரிக்கும்

செகப்பை மதிக்கச்
சேனைதளம் வேணும்
அழகை மதிக்க
அநேகசனம் வேணும்
மதிச்சாண்டார் கோட்டையிலே
வாழ்ந்திருந்தார் எல்லையிலே
ஆரைச் சரியிடலாம்
ஆராரை ஒப்பிடலாம்

பத்துக் கடல்தாண்டி
பாக்கடலை வில்முறிச்சுப்
பார்வதியை மாலையிட்ட
பரமசிவர் ஒப்பிடலாம்.

எட்டுக் கடல்தாண்டி
ஏழுகடலை வில்முறிச்சு
ஏந்திழையை மாலையிட்ட
ஈஸ்வரரை ஒப்பிடலாம்

அஞ்சு கடல்தாண்டி
அருங்கடலை வில்முறிச்சு
அல்லியரை மாலையிட்ட
அருச்சுனரை ஒப்பிடலாம்

மதிச்சாண்டார் எல்லையிலே
வாவரசி கோட்டையிலே
தங்கக் கலப்பை கொண்டு
தார்க்காளை ஏர்பூட்டி
வெள்ளிக் கலப்பைகொண்டு
வெதைக்காளை ஏர்பூட்டி
பொன்னுங் கலப்பை கொண்டு
போர்க்காளை ஏர்பூட்டி

எட்டேர் உழுதுவர
எடச்சியர்கள் நட்டுவர
பத்தேர் உழுதுவர
பாங்கியர்கள் நட்டுவர
அஞ்சேர் உழுதுவர
அருங்கிளியா நட்டுவர

மாயவரம் சம்பா
வாங்கி வெதைபாவி
கும்பகோணம் சம்பா
கொண்டு வெதைபாவி
சிதம்பரத்துச் சம்பா
சேத்து வெதைபாவி
ஆத்தூர் சம்பா
அள்ளி வெதைபாவி

ஏரமத்தி மாடவுக்க
இலுப்பமரச் சோலைகளாம்
மாடமத்தி ஏரவுக்க
மாமரமும் சோலைகளாம்

குருவி குடிக்கக்
கொளத்திநீர் அத்தாலும்
கொத்தவனார் சேனையிலே
கோடைமழை பேஞ்சுவிடும்

கொலைக் கொழக்கு நெல்காணும்

காக்கா குடிக்கக்
கரண்டிநீர் அத்தாலும்
கருணவா சேனையிலே
காலமழை பேஞ்சுவிடும்
கட்டுக் கலங்காணும்
கருதொழக்கு நெல்காணும்

சம்பா அடிக்க
வாழ்ந்திருந்தார் கோட்டையிலே
தனியே களமும் உண்டு
வெள்ளை அடிக்க
வேறே களமும்உண்டு
மட்டை அடிக்க
மறுத்துக் களமும்உண்டு
குறுவை அடிக்கக்
குறுக்கே களமும் உண்டு

காணிப் பொலவரெல்லாம்
பாடிப் பொலிதூத்தக்
கங்காணிப் பேர்களெல்லாம்
கலந்து மொறம்வீச
பொலி பொலியின்னு
பொன்மரக்கா போட்டளக்கும்
பொலிஞ்சாண்டா சேனையிலே

தெற்கே கருத்திருந்தா
தெக்கத்தி நெல்லுவரும்
செவ்வானம் கூறியிட்டா
தெருவதிர நெல்லுவரும்
வடக்கே கருத்திருந்தா
வடக்கத்தி நெல்லுவரும்
வடமானம் கூறியிட்டா
வண்டியிலே நெல்லுவரும்

வைக்கச் சுருட்டுவரும்
மருவில்லா நெல்லுவரும்
மருவில்லா நெல்லவிக்க
வையையிலே தண்ணிவரும்

கட்டிச் சுருட்டுவரும்
கலப்பில்லா நெல்லுவரும்
மருவில்லா நெல்லவிக்க
வையையிலே தண்ணிவரும்

பாலூத்திச் சோறுங்க
வாழ்ந்திருந்தார் கோட்டையிலே
பவளமணிச் சம்பா
நெய்யூத்திச் சோறுங்க
நெறமணியும் சம்பா
தயிருத்திச் சோறுங்க
தங்கமணிச் சம்பா
மோரூத்திச் சோறுங்க
முத்துமணிச் சம்பா

அள்ளுனதும் சம்பா
ஆண்டதுவும் பாக்கியந்தான்
கொட்டுனதும் சம்பா
கொழிச்சதுவும் பாக்கியந்தான்

அம்மை வந்து இறந்தவர் உடலைப் புதைப்பதும், தர்ப்பைக் கட்டால் செய்த உருவத்திற்கே இறந்தவர் சார்பில் இறுதிக் கடன்கள் செய்யும் வழக்கமும் புலனாகின்றது.

OOO

பழநித் தலத்திற்கு, தைப் பூசத்தின் போது பலருடன் நடந்து சென்ற கணவன், குளத்தில் வழுக்கி இறந்துவிட, பழநித்தலம் சென்ற கணவன் திரும்பாததால் தான் புள்ளாகத் துடித்தழுததையும், பல தெய்வங்களை வேண்டி வழிபட்டிருந்தும், தன் மங்கிலியம் நிலைக்கவில்லையே எனவும் வா(ழ்)வரசியாகத் தான் மாளவில்லையே எனவும் மனைவி வருந்திப் பாடியது.

போதம் ஒருக்கா
பூலோகத்தி மானுடங்க
பெரியதலம் போவாக
பேசி மகிழ்ந்து
பெரியதலம் போகயிலே
வெகுதூரம் போகவுட்டிப்
பிஞ்சுமக்கள் அப்பச்சி
பொய்யை எறங்கி
பெருமா குளிக்கையிலே
பொய்யை வழுக்கியிட்டுப்
போறதொரு வேளையிலே
பொண்டாட்டி பாக்கலியே
புள்ளையெல்லாம் காணலியே
பெருஞ்சேனை அத்தனையும்
பொய்யைவிட்டுத் தூக்கியிட்டுப்
போனிலேயும் சொன்னாக
புள்ளாத் துடிச்சமுதேன்
பெருஞ்சேனை கூட்டிஎன்
புள்ளையெல்லாம் அழைச்சுஎன்
பொறந்தையெல்லாம் கூட்டி
என்பொலிஞ்சாண்டார் ஐயா
பெத்தார் அழைச்சு
பொறவூரு தாண்டிப்
பொய்யைக்கே போயிருந்தோம்
போன மொகத்தைப்
பொன்மொகத்தைப் பாத்தமுதோம்

வருசம் ஒருக்கா
வாரதொரு தைமாசம்
மாசேனை கூடி
வழியோா நடந்து
மகுந்ததலம் போவாக
மகுந்ததலம் போகயிலே
மாதூரம் போகவுட்டி
வாமுமக்கள் அப்பச்சி
வையை எறங்கி
மன்னர் குளிக்கையிலே
வையை வழுக்கியிட்டு
மாளுறதொரு வேளையிலே
மனையாட்டி பாக்கலியே
மக்கள் அறியலியே
மாசேனை அத்தனையும்
வையைவிட்டுத் தூக்கியிட்டு
மையிலேயும் எழுதிவந்தா
வண்டாத் துடிச்சமுதேன்
மாசேனை கூட்டி என்
மக்கள்எல்லாம் அழைச்சுஎன்
வளந்தைஎல்லாம் கூட்டி
என்மதிச்சமுடி ஐயா
வளத்தார் அழைச்சு
மறுவூரு தாண்டி
வையைக்கே போயிருந்தோம்
மாண்ட மொகத்தை
மதிமொகத்தைப் பாத்தமுதோம்

கையை விட்டா
கையை விட்டா
கடலி வழுக்கலிலே
கழுத்தளவு தண்ணியிலே
கையைவிட்டுப் போனமுன்னா
மலையி வழுக்கலிலே
மாரளவு தண்ணியிலே
வழுக்கிவிட்டுப் போனமுன்னா

சம்மதமா சம்மதமா
சாமிகளே சம்மதமா
மலைமேல் வீத்திருக்கும்
முருகனே சம்மதமா
பக்கத்தே வீத்திருக்கும்
பழனியாண்டவரே சம்மதமா
தென்புறமா வீத்திருக்கும்
தெய்வானை சம்மதமா
வடபுறமா வீத்திருக்கும்
வள்ளியம்மை சம்மதமா

குன்னக்குடி யானைக்
குழிவிழுகத் தெண்டனிட்டேன்
வையாபுரி யானை
வதிவிழுகத் தெண்டனிட்டேன்

மகுந்த குடும்பமுன்னேன்
வாழ்ந்திருக்க வேணுமின்னேன்
மறக்காம கையெடுத்தேன்
வையை விழுந்து
மன்னர் வனம் போறதுவே
மனசி நெனக்கலியே
வையகத்தார் போல
மகுந்ததலம் போயி
முருகனைக் கையெடுத்து
வாரம் சொணங்கி
வளவில் வரப்போறான்னேன்
மாசேனை வந்தாக
வாழும் மக்கள் ஐயா என்
மன்னரையும் காணோமே
வண்டாத் துடிச்சழுதேன்
மனசோ தெகைச்சழுதேன்
மையெழுத்தைப் பாத்தழுதேன்

பெரிய குடும்பமுன்னேன்
பொலிஞ்சிருக்க வேணுமின்னேன்
பெசகாமக் கையெடுத்தேன்
பொய்யை எறங்கி
பெருமாள் வனம்போறதுவே
புத்தி நெனக்கலியே
பூலோகத்தார் போல
பெரியதலம் போயி
பகவானைக் கையெடுத்து
பொழுது சொணங்கி
பூமி வரப்போறான்னேன்
பெருஞ்சேனை வந்தாக
பிஞ்சுமக்கள் ஐயா என்
பெருமாளையும் காணோமே
புள்ளாத் துடிச்சழுதேன்

புத்தி தெகைச்சழுதேன்
போனிலேயும் கேட்டழுதேன்

உண்டுமுன்னேன்
உண்டுமுன்னேன்
ஓசிமணி காளியை
உள்ளமட்டும் உண்டுமுன்னேன்
குலதெய்வம் கோயிலுன்னேன்
குறிப்பாகக் கும்பிட்டேன்
நம்மகுலம் நாச்சாத்தா
நம்மளுக்கே உண்டுமுன்னேன்
முன்னாடி வீத்திருக்கும்
முருகனையே உண்டுமுன்னேன்
மும்முரமாப் பூசையிடும்
முருகனையும் உண்டுமுன்னேன்
உண்டுமுன்னேன் உண்டுமுன்னேன்
ஊழிக்கே உண்டுமுன்னேன்

சாதிலிங்கப் பொட்டிபோல்
தலமொறைக்கே உண்டுமுன்னேன்
மாணிக்கப் பொட்டிபோல்
வாழ்மட்டும் உண்டுமுன்னேன்

பள்ளயச் சோத்தைப்
பகுந்துண்ணேன் எத்தனைநா
அண்டாவுச் சோத்தை
அள்ளியுண்ணேன் எத்தனைநா

ஐயனார் கோவில்
அடிவாரம் உள்ளமட்டும்
பிள்ளையார் கோயில்
பொரகாரம் உள்ளமட்டும்
புல்லுமுளைக்குமட்டும்
பூமாதேவி உள்ளுமட்டும்
கல்லுக் கரையுமட்டும்
காவேரி வத்துமட்டும்

வாழுமறுதி மஞ்சக்குளிப்ப
முன்னேன்

*பொங்குதே கண்ணீரு*

மங்கிலியம் வேணுமுன்னேன்
வாழுமக்கள் ஐயா
மன்னரையும் வேணுமுன்னேன்
வாழும் அறுதி
மன்னர் இருக்கவுன்னேன்
வாவரசி யாவமுன்னு
மாதவங்கள் செய்துவந்தேன்
மனசி நெனச்சதுபோல்
வாவரசி யாகலியே
மன்னர்பணி செய்தாக்க
வாவரசி ஆவாம்பா
நான்மன்னர்பணி செய்தாலும்
வாவரசி யாகலியே
மலரோட போகலியே
மாதவத்தைச் செய்யலியே

போகுமறுதி பூசிக்குளிப்ப
முன்னேன்
பூணாரம் வேணுமின்னேன்
பிஞ்சுமக்கள் ஐயா
பெருமா வேணுமுன்னேன்
போகும் அறுதி
பெருமா இருக்கவுன்னேன்
போரழகி ஆவமுன்னு
பெருந்தவங்கள் செய்துவந்தேன்
புத்தி நெனச்சதுபோல்
போரழகி ஆகலியே
பெருமாபணி செய்தாக்கப்
போரழகி ஆவாம்பா
நான் பெருமாள் பணி செய்தாலும்
போரழகி ஆகலியே
பூவோடு போகலியே
பெருந்தவத்தைச் செய்யலியே

OOO

**சபரிமலைக்குச் சென்ற கணவன்**

அங்கேயே இறந்துபட, அறச் செயல்கள், தருமங்கள் செய்திருந்தும், நாளும் வழிபாடுகள் செய்திருந்தும் துன்பம் வந்ததே என மனைவி வருந்திப் பாடியது.

தவமோ தவமிருந்தேன்
தவமோ தவக்கொறையோ
தவத்தில் ஒரு கொறையோ
தவமுனிவர் சாபமோ
தருமரையுந் தப்பவிட்டேன்

வரமோ வரமிருந்தேன்
வரமோ வரக்கொறையோ
வரத்தில் ஒரு கொறையோ
மாமுனிவர் சாபமோ
மந்திரியைத் தப்பவிட்டேன்

சிவனைச் சிவனறியச்
செய்ததெல்லாம் புண்ணியந்தான்
ஆதி சிவனறிய
அநியாயம் செய்யலியே
ஆண்டியை அடிச்சதில்லே
அநியாயம் செய்ததில்லே
பாப்பானை அடிச்சதில்லே
பாப்பசுவைக் கொண்ணதில்லே
கோவில் மாட்டைக்
கொண்டிமாடு இன்னதில்லே
சாமியுடை மாட்டைச்
சண்டிமாடு இன்னதில்லே

பிச்சையின்னு வந்தார்க்குப்
பின்பொண்ணும் சொன்னதில்லே
தாகமுன்னு வந்தார்க்குத்
தள்ளிப்போ இன்னதில்லே
அன்னமுன்னு வந்தார்க்கு
அடுத்தொண்ணும் சொன்னதில்லே

பூசையிட்டார் எல்லையிலே
பொழைவந்தாத் தீரலியே
அன்னமிட்டார் எல்லையிலே
அவதிவந்தாத் தீரலியே

சரணம் சரணம் என்றவுக
சாமிசரணம் சொன்னவுக
அரகரா என்றவுக
அய்யப்பன் சரணம் சொன்னவுக

சிவசிவா என்றவுக
திருநீறு அணிந்தவுக
சிவன்பூசை செய்தவுக
சீக்கிரமாச் சேந்தவுக

குளிச்சு முழுகிக்
கோவிலுக்குப் போனாலும்
புள்ளையாரு காணாமே
பொங்கியசோறு உண்ணதில்லே
மகதேவர் காணாம
வடிச்சசோறு உண்ணதில்லே

பத்தடுக்குத் தீபம்
பாக்கவுட்டு வாரனும்பா
பவுரான தீபம்
பாக்குமட்டும் நிப்பனும்பா

எட்டடுக்குத் தீபம்
எடுக்கவுட்டு வாரனும்பா
எதுவான தீபம்
எடுக்குமட்டும் நிப்பனும்பா

அஞ்சடுக்குத் தீபம்
ஆகவுட்டு வாரனும்பா
அழகான தீபம்
ஆகுமட்டும் நிப்பனும்பா

சரணம்சரணம் என்று சொல்லிச்
சாமிசரணம் என்று சொல்லிச்
சாக நெனச்சவுக
அரகரா என்று சொல்லி
அய்யப்பன்சரணம் என்று சொல்லி
அணைய நெனச்சவுக

அரகரா என்றுசொல்லி
அரன்பூசை செய்து

பொங்குதே கண்ணீரு

அள்ளி அணிந்து
அணையநாக் கேட்டவுக

சிவசிவா என்று சொல்லி
சிவன்பூசை செய்து
திருநீறணிந்து
சேர நெனச்சவுக

பம்பைநதித் தீத்தமாடிப்
பரமநதி சேந்தீகளா
கங்கைநதித் தீத்தமாடிக்
கருமலை ஏத்தத்தில்
கைலாசம் சேந்தீகளா
இருமுடி ஏந்தி
எறக்க நெனச்சீகளா

மஞ்சள் மாதாவைச்
சிந்தையில் எண்ணி
மாள நெனச்சீகளா
புலிகரடி யானைசிங்கம்
தேசத்தில் அணைய நெனச்சீகளா

பெரியதலமும் போயி
புண்ணியமும் தேடிப்
பூமி வந்து சேராமப்
போக நெனச்சீகளா

மகுந்ததலம் போயி
மாதாவை வணங்கி
வளவி வந்து சேராம
மாள நெனச்சீகளா

நீங்க மாளும் சமயம்
மதிச்சாண்டார் தேடிய
மகுந்தமனை சிக்கலியே
நீங்க போகும் சமயம்
பொலிஞ்சாண்டார் கட்டிய
பெரியமனை சிக்கலியே
ooo

காசித்தலம், கண்டுவழிபடச் சென்ற கணவன், அங்கேயே இறந்துவிட, மனைவியும், மக்களும் இறந்தவரின் முகத்தைக் காண இயலாமற் போனதே என்றும், இறுதிக் கடன் செய்ய உரிமை உடையோர் இருந்தும், செய்ய இயலாமற் போனதே என்று மனைவி வருந்திப் பாடியது.

பழநிக்குப் போனா
பாவங்கள் தீருமுன்னா
காசிக்குப் போனா
கருமங்கள் தீருமுன்னா

தூரப் பயணம் தொலைப் பயணம்
காசிநதி என்பாக
காதப் பயணம் கடும்பயணம்
காசிநதி என்பாக

காசைச் செலவழிச்சா
காசிநதி கிட்டமுன்னா
துட்டைச் செலவழிச்சா
சோதிநதி கிட்டமுன்னா

பெருமா தனியே
போகவே வேண்டாமுன்னேன்
பேச்சொரைக்க கேக்கலியே
புள்ளையெல்லாம் கூட்டாமே
பொண்டி அழையாம
பொயித்தே வருவனின்னா

பெருமா தனியே
பெருந்தூரம் போயி
பொய்யை குளிச்சதுவே
பெருங்காசி பாத்ததுவே
காசி அறிஞ்சதுவே
காட்சியெல்லாம் பாத்ததுவே
கண்டறிஞ்சும் சொல்லலியே

மன்னர் தனியே
மாதூரம் போயி
வையை குளிச்சதுவே
மாபகிசி பாத்ததுவே
வந்தறிஞ்சும் சொல்லலியே

வில்வத்தழை யெடுத்து
வெகுசுருக்காப் பூசை செய்த
வெகுகாட்சி சொல்லலியே
காசி விசுவருக்குக்
கனசுருக்காப் பூசை செய்த
காட்சியெல்லாம் சொல்லலியே
கண்டும்அறிஞ்ச
காட்சியெல்லாம் சொல்லலியே
கண்டும் அறிஞ்ச
பகிசியெல்லாம் சொல்லலியே
வீதி அழகும்
வெம்பாயி ஓவியமும்
காசி அழகும்
கல்கத்தா ஓவியமும்
கண்டறிஞ்சும் சொல்லலியே

மாசேனை போகாத
மகுந்த தலம்
பொய்த்து வருவமுன்னு
பேச்சொரைச்சு ஏச்சுவிட்டா

பெருஞ்சேனை போகாத
பெரியதலம்
சென்னு வருவமுன்னு
சேதிசொல்லி ஏச்சுவிட்டா

கண்டறிஞ்சும் சொல்லாம
கனசுருக்காப் போறதுவே
கனவிலேயுந் தட்டலியே
வந்தறிஞ்சும் சொல்லாம
வெகுசுருக்காப் போறதுவே
மனசுக்கும் தோணலியே

மாதும் அறியாம

மன்னர் வனம்போனமுன்னா
பொண்ணும் அறியாம
போனம் பாக்கப்போனமுன்னா
புள்ளையெல்லாம் காணாம
போக நெனச்சமுன்னா
மக்கள்எல்லாம் காணாம
மாள நெனச்சமுன்னா
மாசேனை தானிருந்தும்
மாண்டதுவே காணலியே
பெருஞ்சேனை தானிருந்தும்
போனதுவே காணலியே
மக்கள்எல்லாம் தானிருந்தும்
வரிசைபெற ஏலலியே
புள்ளையெல்லாம் தானிருந்தும்
போர்பெற ஏலலியே

போறதுவே உண்டானா
பொறவூரு போனவுக
பூமிவந்து சேரலியே
போகும் சமயம்
பொலிஞ்சாண்டார் கட்டிய
பெரியமனை சிக்கலியே

மாளுறதே உண்டானா
மறுவூரு போனவுக
வளவிவந்து சேரலியே
மாளும் சமயம்
மதிச்சாண்டார் கட்டிய
மகுந்தமனை சிக்கலியே

OOO

இரண்டாம் உலகப்போர் முடிந்ததும், கப்பலில் கணவன் வருவான் எனக் காத்திருந்தபோது, மனைவியும், மக்களும், உறவினரும் காணமுடியாதபடி வெளிநாட்டிலேயே மாண்ட கணவனுக்கு, மாண்ட கணவனின் மதிமுகத்தைக் காணலியே, நெஞ்சில் இருந்த நேசம் உரைக்கலியே என மனைவி புலம்பிப் பாடியது.

தந்தி வந்தாக்கூட
மணிக்குமணி தங்கிவரும்
தாக்க வெளங்கிவரும்
தங்கமக்கள் ஐயா
சமத்தர் மடிஞ்சதுன்னா
சனநேரந் தங்கலியே
தாக்க வெளங்கலியே

வங்கி வந்தாக்கூட
மணிக்குமணி தங்கிவரும்
வார்த்தை வெளங்கிவரும்
வாழும்மக்கள் ஐயா
வலதர் மடிஞ்சதுன்னா
மணிநேரந் தங்கலியே
வார்த்தை வெளங்கலியே

பூலோகத்தி சண்டை
பெரியகப்பல் ஓடலைன்னா
பூலோகத்தி சண்டை
போரோ முடிஞ்சாக்கப்
பெரிய கப்பல் ஓடுமுன்னா
நம்மபூமி வருவான்னு
பூலோகத்தி சொன்னாக
போரு முடியுமுந்தி
பெரியகப்பல் ஓடுமுந்தி
நீங்கபோறதுவே நாங்கறியோம்

வையகத்தி சண்டை
மகுந்தகப்பல் ஓடலைன்னா
வையகத்தி சண்டை
வம்போ முடிஞ்சாக்க
மகுந்த கப்பல் ஓடுமுன்னா

நம்மவளவில் வருவான்னு
வையகத்தி சொன்னாக
வம்பு முடியுமுந்தி
மகுந்தகப்பல் ஓடுமுந்தி
நீங்கமாளுறதை நாங்கறியோம்

நீங்கபோனதுக்குப் பிற்பாடு
போனிலேயும் கேட்டழுதோம்
நீங்க மாண்டதுக்குப் பிற்பாடு
மைக்காலே கேட்டழுதோம்
நீங்க செத்ததுக்குப் பிற்பாடு
தேதியவும் கேட்டழுதோம்

சேனைதளம் இங்கிருக்கச்
செத்தது அறவையில்லே
மாசேனை இங்கிருக்க
மாண்டது அறவையில்லே
பிதிர்வழி இங்கிருக்கப்
போனது அறவையில்லே

பெண்டிர் அறியாமே
பெருஞ்சேனை காணாமே
புள்ளைஎல்லாம் காணாமே
மனைவி அறியாமே
மாசேனை காணாமே
மக்களெல்லாம் பாராமே
வனமறியப் போன
வகுத்தெரிச்ச கேட்டீகளா

சங்கூதிப் பச்சைகுத்தும்
சானகையா இங்கிருக்கப்
பட்டுடுத்திப் பாய்சுருட்டும்
பாஞ்சாலி இங்கிருக்கக்
கொம்பூதிக் கொள்ளிவைக்கும்
கருணருமே இங்கிருக்க

தண்டியலை அங்கவச்சா
தண்டக்கால் இங்கவச்சா
பல்லாக்கை அங்கவச்சா
பந்தக்கால் இங்கவச்சா

அழுதா வருவிகளா
அன்னமிடப் போரமா
சொன்னா வருவிகளா
சோறிடவும் போரமா

வார்த்தை புரியாத
வடுகருடை சீமையிலே
மாண்டது அறவையில்லே
பேச்சுப் புரியாத
பொலவருடை சீமையிலே
போனது அறவையில்லே

தங்கச் சமுதாடு
சாஞ்சதுவைக் காணலியே
வெள்ளிச் சமுதாடு
விழுந்ததுவைக் காணலியே
பொன்னுஞ் சமுதாடு
போனதுவைக் காணலியே

மாண்ட மொகத்தை
மதிமொகத்தைக் காணலியே
போன மொகத்தைப்
பொன்மொகத்தைக் காணலியே
செத்த மொகத்தைத்
திருமொகத்தைக் காணலியே

போகையிலே காணாது
பெருகுதே கண்ணீரு
பேச்சுமொழி கேளாது
பெருகுதே கண்ணீரு
மாளயிலே காணாது
மகுருதே கண்ணீரு
வார்த்தைமொழி கேளாது
மகுருதே கண்ணீரு

நெஞ்சிலிருந்த நேசம் ஒரைக்கலியே
மனசிலிருந்த வார்த்தை
ஒரைக்கலியே
தொண்டையிச் சேதி
சொல்ல மறந்தமுன்னா
கன்னத்துவார்த்தை
காட்ட மறந்தமுன்னா

பிஞ்சுமக்கள் ஆத்தா

பொண்ணிடத்தே சொல்லும்
பேச்சுமெத்த வச்சிருந்தா
மதலைமக்கள் ஆத்தா
மாதிடத்தே சொல்லும்
வார்த்தைமெத்த வச்சிருந்தா

மன்னவர்க்கு முன்போக
மலரோடு தீக்கலக்க
மாததிட்டம் பத்தலியே
பெருமாளுக்கு முன்போகப்
பூவோடு தீக்கலக்கப்
பொண்ணதிட்டம் பத்தலியே

○○○

இலங்கைக்குக் குடும்பத்துடன் பொருளீட்டச் சென்ற கணவன், கருவுற்றிருந்த மனைவியையும், இளமக்களயும் விடுத்து அங்கேயே மாண்டுவிட, வெளிநாட்டில் தான் தனியே தவித்ததையும், தனக்கு ஆண்மகனில்லாததால், மாமனாரே கணவனுக்குக் கொள்ளி வைத்ததையும் பற்றி மனைவி பாடியது.

சிங்களவன் நாட்டில்
செல்வருந் தேவியரும்
செறந்த பணந்தேடி
வங்காள நாட்டில்
மன்னருந் தேவியும்
மகுந்த பணந்தேடி
மறுசாதி வையாமே
மச்சக் கடைவச்சு
மகிழ்ந்திருந்து பாத்திருந்தோம்

மனுசா மனுசருக்கும்
வாய்ப்பொழக்கம் உள்ளமன்னர்
வக்கீல்மார் தன்னிடத்தில்
வாய்ப்பொழக்கம் உள்ளமன்னர்
மாசமத்தாலே
மச்சம் குமிச்சமுன்னா
மகுந்தகடை வச்சமுன்னா
மச்சம் குமியுதுன்னு
வடகடலுக் கப்பாலே
மகிழ்ச்சிகளைப் பாக்கவுன்னுநான்
மக்கள் அழச்சு
மாதுபோய்ச் சேந்தமுன்னேன்
மறுதேசம் போனதுக்கு
வருசம் ரொம்ப ஆயி
வளவிவந்து சேரயிலே
மறுசாதிச் சீமையிலே நான்
மாதுகனதி மணிவயிரப் பொண்ணு
மதிக்கச் செறக்க

மாது திரிஞ்சதுவே நம்ம
வாசல்வளவி வந்து காட்டலியே
மட்டமுள்ள மக்கள்
மக்கள் பறக்கவிட்டு
வயித்தில் உதிச்ச
மஞ்சன் வெளியாகாமே
மாதைக் கெடுத்து
மனசுவலி தாங்காமே
மாசுருக்கா மாண்டுவிட்டா
பொறசாதிச் சீமையிலே
பொன்னாக் குமியுதுன்னு
பெரியகடை பாப்பமுன்னு
பிஞ்சான மக்க
பிள்ளைகளைக் கூட்டிப்
பொறதேசச் சீமைக்குப்
பொண்ணுபோய்ச் சேந்தமுன்னேன்
பெருக்கமெல்லாம் பாத்தமுன்னேன்
போத மெல்லாஞ்சென்னு
இந்தப்பூமி வரும் நாளயிலே
பொறசாதிச் சீமையிலே
பெருக்கமாத்தான் திரிஞ்ச
பொண்ணுகனதி புதுவயிரமாது
இந்தப்பூமிவந்து சேரயிலே
பெருஞ்சமத்து மன்னரும்
புள்ளை அசத்தமுன்னா

நான்பிஞ்சான மாது
பொண்ணை மறந்தமுன்னா
பொனலில் உதிச்ச
புள்ளை வெளியாகாமே
பொறகடலுக் கப்பாலே
பொண்ணைத் தவிக்கவச்சுப்
பெருஞ்சுருக்கா மாண்டுவிட்டா

மன்னர் மடிஞ்சபின்பு
மஞ்சனுமே இல்லையின்னு
மாதுகைக் கொள்ளி
மாதுமே வைப்பான்னு
மனசி நெனச்சிருந்தோம்
வளத்தாரும் தானும்
வங்காளி நாட்டி
மட்டமுள்ள தம்பிக்கு
வளத்தாரே வைப்பமுன்னா
மலர்வளத்து வாரமுன்னா

பெருமா மடிஞ்சபின்பு
புள்ளையுமே இல்லையின்னு
பிஞ்சான தங்கை
பொண்ணு கைக்கொள்ளி
பொண்ணுமே வைப்பான்னு
புத்தி நெனச்சிருந்தோம்
பெத்தாருந் தானும்
புலவனார் சீமை
பிஞ்சான தம்பிக்குப்
பெத்தாரே வைப்பமுன்னா
பூவளத்து வாரமுன்னா
பொனலில் உதிச்சதுவும்
பொன்னாளுந் தம்பி
புள்ளை பொறக்குமுன்னு
பேராசை வச்சிருந்தோம்
பொண்ணுடைய காலம்
பொண்ணோட்டிப் பொண்ணா
பொறந்து முடிதீத்துன்னேன்
போகு மறுதி
புத்தியில் தாங்கலுன்னோம்.

வகுத்தில் உதிச்சதுவும்
மன்னவர்க்குப் பிறபாடு
மஞ்சன் பொறக்குமுன்னு
மனசாசை வச்சிருந்தோம்
மாதுடைய காலம்
மக்களுடை நேரம்
மாதோட்டி மாதா
வந்துமுடி தீத்ததுன்னேன்
மாளு மறுதி
மனசில் கவலையின்னேன்

பொனலில் உதிச்ச
பொண்ணு வெளியானபின்பு
பூணாரம் தோத்தமுன்னேன்
வகுத்தில் உதிச்ச
மாது வெளியானபின்பு
மங்கிலியம் தோத்தமுன்னேன்

பெருமா மடிஞ்சாலும்
பூலோக நாட்டுக்குப்
புதுக்கோட்டை கச்சை
பொண்ணுடுத்த மாட்டனுன்னு
பொடவையும் கண்டாங்கி
பொண்ணுடுத்தி வந்தமுன்னேன்

கருணர் மடிஞ்சாலும்
கச்சையும் சேலையும்
கன்னி உடுத்தாம
கலர்ப் பொடவை
கன்னி உடுத்திவந்தேன்

**கணவன் இறந்தபோது, மனைவி கருவுற்றிருந்தால், குழந்தை பிறந்த பின்னரே, விதவைக்குச் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்யும் நகரத்தார் வழக்கம் புலப்படுகிறது. விதவையர் வெள்ளையணியும்**

வழக்கத்தை மீறி வண்ணப் புடவையை அணிந்ததையும் பாடல் வெளிப்படுத்துகிறது.

OOO

கடல்தாண்டிப் பொருள் தேடப்போன கணவன் அங்கேயே இறந்து விட, கணவன் இறக்கும் போதுதான் அருகில் இல்லையே எனவும், மக்கள் பார்க்காதது விதிப்பயன் என்றாலும், கணவனுடன் வீட்டில் இருந்து மகிழவில்லையே, தன் மனத்தாசை தீரவில்லையே எனவும், எக் காலத்தும் மாறாத துன்பத்திற்கு ஆளாகினாள் எனவும் வருந்தி இளம் மனைவி பாடியது.

வந்துதோ காலம்
வயிரமுடி தீயணைய
பொறந்துதோ காலம்
பொன்னுமுடி தீயணைய
சென்னுதோ காலம்
செல்லமுடி தீயணைய

வையகத்தார் போல
மச்சமில்லை யின்னு
மகுந்தகப்பல் ஏறி
வாரிவரப் போயிருந்தா
ஐயாமகுந்தமுடி வச்ச கடை
மறுத்தொருக்காப் பாப்பமுன்னா
வருசங் கணக்குக்கு
வாரிவரப் போயிருந்து
வருசங் கணக்காச்சுநான்
மாளயிலே காணவில்லே
வார்த்தைமொழி கேக்கவில்லே
வளவிவந்து சேரவில்லே
வளத்துமொதல் ஆகாது
மகதேவர் கட்டளைதான்
மன்னருந் தேவியரும்
மகுந்தமனைக்கு உள்ளாக
வாவரசி எல்லையிலே
வடிச்சுச் சலிக்கலியே
மனசாசை தீரலியே

பூலோகத்தார் போலப்
பொன்னு இல்லையின்னு
பெரியகப்பல் ஏறிப்
பொன்தேடப் போயிருந்தா
ஐயாபோந்தமுடி வச்ச கடை
பின்பொருகாப் பாப்பமுன்னா
போதங் கணக்குக்குப்
பொன்தேடப் போயிருந்தா
போதங் கணக்காச்சுநான்
போகையிலே காணவில்லே
பேச்சுமொழி கேக்கவில்லே
பூமிவந்து சேரவில்லே
பெத்துமொதல் ஆகாது
பிரம்மதேவர் கட்டளைதான்
பெருமாளும் தேவியரும்
பெரிய மனைக்குள்ளாகப்
போரழகி எல்லையிலே
பொங்கிச் சலிக்கலியே
பேராசை தீரலியே

அஞ்சுகடை பாப்பா
அடுத்தகடை மேப்பாப்பா
அஞ்சுலச்சம் கண்பாப்பா
அஞ்சுலச்சம் கொண்டுவரும்
அருச்சுனரைத் தப்பவிட்டேன்

எட்டுக்கடை பாப்பா
எதுத்தகடை மேப்பாப்பா
எட்டுலச்சங் கண்பாப்பா
எட்டுலச்சங் கொண்டுவரும்
இந்திரரை தப்பவிட்டேன்

பத்துக்கடை பாப்பா
பணக்கடையை மேப்பாப்பா
பத்துலச்சங் கண்பாப்பா

பத்துலச்சங் கொண்டுவரும்
பாண்டியைரத் தப்பவிட்டேன்

கனசமத்துக் காரரையா
காணிக்கும் முள்ளெடுப்பா
கருணருக்கும் மேப்பாப்பா
வேலிக்கும் முள்ளெடுப்பா
வீமருக்கும் மேப்பாப்பா

தொட்டாத் துலங்குமே
தோட்டம் பயிர் ஏறுமே
வச்சா வெளங்குமே
வாழை பயிர் ஏறுமே

காதத்தே பெஞ்சமழை
கம்மாய்க்கு இன்னிருந்தோம்
கண்ணருகே வந்து
கரிக்க மழைபேஞ்சுதே

தூரத்தே பெஞ்சமழை
தூவான முன்னிருந்தோம்
தோளருகே வந்து
துடிக்க மழைபேஞ்சுதே

செவ்வானம் குமுறுது
சீமைக்கு அத்துபடி
செல்வரும் போவார்னு
சிந்தையிலே நெனக்கலியே

மானம் குமுறுது
வையகத்துக் கத்துப்படி
மன்னரும் போவார்னு
மனசிலே நெனக்கலியே

பூமிகுமுறுது
பூலோகத்துக் கத்துபடி
பெருமாளும் போவார்னு
புத்தியிலே நெனக்கலியே

எள்ளளவு புண்ணுமுன்னா
எண்ணையிட்டால் ஆறிவிடும்
எட்டு மட்டும் சுட்டபுண்ணு
எண்ணையிட்டால் ஆறாது

கடுகளவு புண்ணுமுன்னா
களிம்பிட்டா ஆறிவிடும்
கண்டமட்டும் சுட்டபுண்ணு
களிம்பிட்டா ஆறாது

ஆவி அடங்கலியே
அனல்கெடந்து மூடலியே
சாம்பல் அடங்கலியே
தணல்கெடந்து மூடலியே

ஆராரு மூட்டிய தீ
ஆறுன்னா ஆறிவிடும்
ஆக்கியுண்ணா ஆறிவிடும்
அடிமழைக்கும் நீந்துவிடும்
ஆத்தில் உள்ள தண்ணியை
அனுப்பிவிட்டா ஆறிவிடும்
அவசரமாய் மூட்டிய தீ
ஆறுண்ணா ஆறலியே
ஆக்கியுண்ணா ஆறலியே
அடிமழைக்கும் நீறலியே
ஆத்தில் உள்ள தண்ணியை
அனுப்பிவிட்டா ஆறலியே

மத்தொருதர் மூட்டிய தீ
மாறுன்னா மாறிவிடும்
மழைபேஞ்சா ஆறிவிடும்
வடிச்சுண்ணா நீந்துவிடும்
வையைத் தண்ணியை
வரவழைச்சா ஆறிவிடும்
மாசுருக்கா மூட்டியதீ
மாறுண்ணா மாறலியே
மழைபேஞ்சா ஆறலியே
வடிச்சுண்ணா நீறலியே
வையைத் தண்ணியை
வரவழைச்சா ஆறலியே

பிம்பொருதா் மூட்டிய தீ
பொங்கியுண்ணா ஆறிவிடும்
பெருமழைக்கும் நீந்துவிடும்
பொய்யைத் தண்ணியைப்
புடிச்சுவிட்டா ஆறிவிடும்
பெருஞ்சுருக்கா மூட்டிய தீ
பொங்கியுண்ணா ஆறலியே
பெருமழைக்கும் நீறலியே
பொய்யைத் தண்ணியைப்
புடிச்சுவிட்டா ஆறலியே

OOO

பொருளீட்டக் கடல்கடந்து சென்ற கணவன் அங்கேயே இறந்துவிட, சொந்த ஊரைவிட்டுப் புறப்படுகையில் தீயசகுனங்கள் எதிர்ப்பட்டனவோ என்றும், திரும்பி வாராப் பயணம் மேற்கொண்டாரோ என்றும் கணவனை வழியனுப்பி வைத்தவளுக்குப் பதில்சொல்ல வேண்டுமே என எமனிடம் கேட்கவில்லையா எனவும் கேட்டு இளம் மனைவி வருந்திப் பாடியது.

சரியோ சரியுமில்லே
சாகுறநா இப்பவில்லே
பொழுதோ சரியுமில்லே
போகுறநா இப்பவில்லே

பிம்புங் கொறையிருந்து
பொனத்தில் எடமிருந்து
பொனம்பாக்கப் போனமுன்னா
மறுத்துங் கொறையிருந்து
வனத்தில் எடமிருந்து
வனம்பாக்கப் போறமுன்னா

மச்சம் தெரட்டலியே
வளவில்வந்து சேரலியே
பொன்னைத் தெரட்டலியே
பூமி வந்து சேரலியே
வையை தெரட்டலியே
வார்த்தைசொல்லக் கேக்கலியே

நான் பிஞ்சானமாது
பொட்டழிஞ்சேன் மையழிஞ்சேன்
பொண்ணு தலகுனிஞ்சேன்
மையழிஞ்சேன் பொட்டழிஞ்சேன்
மாது தலகுனிஞ்சேன்
புள்ளை பொறக்கலியே
பெத்து மொதலாகலியே
மஞ்சன் பொறக்கலியே
வளத்து மொதலாகலியே

எல்லைவிட்டுப் போகயிலே
இதைவிட்டுத் தாண்டயிலே
எண்ணைவிக்கும் வாணியன்
எதிராக வந்தானோ
வையைவிட்டுப் போகயிலே
வாசவிட்டுத் தாண்டயிலே
எண்ணை விக்கும் வாணியன்
எதிராக வந்தானோ

ஐயன் எதிராக
அவசரமா வந்தானோ
பாப்பான் எதிராகப்
பறந்தோடி வந்தானோ
பூனை குறுக்காச்சோ
புதுப்பானை முன்னாச்சோ
இருப்பிடமும் அங்கேயின்னு
ஏவுச்சா பல்லி
வாழ்விடமும் அங்கேயின்னு
தடுத்துச்சா பல்லி

கப்பல்லே பாய்விரிச்சுக்
கலகம்வரச் சொன்னாக
தோணியிலே பாய்விரிச்சுத்
துயரம் வரச் சொன்னாக
எலங்கையிலே பாய்விரிச்சு

எழவுவரச் சொன்னாக

தூக்கியடி வைக்கயிலே
சொழட்டியடி வச்சமுன்னா
வாரியடி வைக்கயிலே
வழுக்கியடி வச்சமுன்னா
இன்னிவர மாட்டமுன்னு.
எடுத்தடி வச்சமுன்னா
மறுத்துவர மாட்டமுன்னு
மாறியடி வச்சமுன்னா

கணக்கெடுத்த நாமொதலாக்
கப்பல்லே வியாபாரம்
கனத்தகடைக் கூட்டாளி
தூக்கெடுத்த நாமொதலாத்
தோணியிலே வியாபாரம்
தொடந்தகடைக் கூட்டாளி
ஏடெடுத்த நாமொதலா
எலங்கையிலே வியாபாரம்
எதுத்தகடைக் கூட்டாளி
நகம் முளைச்ச நாமொதலா
நித்தம் கொண்டுதலை

எப்போ வருவான்னு
எதிர்பாத்துக் காத்திருந்தேன்
நாளை வருவான்னு
நாள்பாத்துக் காத்திருந்தேன்

மறுத்துவரும் கப்பலெல்லாம்
மன்னர்வரும் கப்பலுன்னேன்
அடுத்துவரும் கப்பலெல்லாம்
அருச்சுனர்வரும் கப்பலுன்னேன்
பூமிவரும் கப்பலெல்லாம்
பெருமாள் வரும் கப்பலுன்னேன்

தோகை வழிவிட்டாளைத்
துகிலுரியச் சொன்னாக
தொட்டுவழி விட்டாளுக்குத்
துயரம்வரச் சொன்னதென்ன

பாங்கி வழிவிட்டாளைப்
பட்டுரியச் சொன்னாக
பாத்துவழி விட்டாளுக்குப்
பாடுவரச் சொன்னதென்ன

மாபாவிச் சீமையிலே
மாசுருக்காத் தானும்
வனத்தை நெனக்கயிலே
மாது சிறியா
மணிவயிரப் பொண்ணு
மையழிய மாட்டான்னு
மனசிலேயும் ஓடலியா
வாங்கவந்தான் தன்னெடத்தில்
வார்த்தைசொல்ல மாட்டலியா

பொழைபாவிச் சீமையிலே
பெருஞ்சுருக்காத் தானும்
பொனத்தை நெனக்கயிலே
பிஞ்சான மாது
புதுவயிரப் பொண்ணு
பொட்டழிய மாட்டான்னு
புத்தியிலேயும ஓடலியா
புடிக்கவந்தான் தன்னெடத்தில்
பேச்சொரைக்க மாட்டலியா
வையைவிட்டுத் தாண்டி
மணிக்கப்ப விட்டெறங்கி
மான்வாயில் புகுந்த
மந்திரியாத் தீந்தாரே

எல்லைவிட்டுப் போகயிலே
எலங்கைவிட்டுத் தாண்டயிலே
எமன்வாயில் புகுந்த
இந்திரராய்த் தீந்தாரே

பொய்யைவிட்டுத் தாண்டி
ஸ்பெஷல் கப்ப விட்டெறங்கிப்
புலிவாயில் புகுந்த
புண்ணியராத் தீந்தாரே

எலங்கை அதிசயம்
எல்லாரிடமும் சொல்லலியே
மலேயா அதிசயம்
மனைவியிடம் சொல்லலியே
தோணி அதிசயம்
தோகையிடம் சொல்லலியே

ООО

கணவனுடன் ஒற்றுமையில்லாமல் பிரிந்து வாழ்ந்த மனைவி, கணவன் இறந்தபோது, கணவனுக்கு வகைவகையாய்ச் சமைத்துக் கொடுக்கவில்லை எனவும், கணவருடன் மகிழ்ந்தும் இருக்கவில்லை எனவும் கூறித் திருமணம் முடித்துக் கொண்ட பாவத்திற்காக, விதவைச் சடங்குகளை ஏற்க வேண்டியதாகி விட்டதே எனவும் கூறிப் பாடியது.

மதிச்சாண்டார் எல்லையின்னு
வருந்துவார் கோட்டையின்னு
மாலையிட்டுப் பாத்தாக
மாலையிட்ட நாமொதலா
மன்னருக்கும் தேவிக்கும்
வம்பு நடந்ததினால்
மன்னருக்குச் சோறு
வடிச்சுச் சலிக்கலியே
மசாலா அவியல்
வச்சுச் சலிக்கலியே
மல்லியப்பூத் தோசை
சுட்டுச் சலிக்கலியே
மன்னரிடம் மகுந்துமிருக்கலியே
மனசாசை தீரலியே
வையகத்தைப் போல
வம்பை வெலக்கி
மயில்வண்டி கட்டி
மாதை அழைக்கலியே
மாது சமத்தாலே
மனசு தெடத்தாலே
மத்தொருத வாசல்
வடிச்சுன்னு பாத்திருந்தேன்
மாண்டதுக்குப் பிற்பாடு
மலர்மிதிச்ச குத்தமுன்னு
மனைக்கிருந்த தண்டமுன்னு
அம்மி எதிராக
அரசாணி முன்பாக
அய்யர் எதிராக
அருகிருந்த தண்டமுன்னு
மாதறுக்க வேணுமுன்னு
வையகத்தி சொல்லுமுன்னு
மயில்வண்டி கட்டி
மகுந்தவுக வந்து
மாதறுக்க வேணுமுன்னு
மையழிய வேணுமுன்னு
மாண்டதுக்குப் பிற்பாடு
வளவில் வந்து சேந்திருந்தேன்
வையகத்தி உள்ளவுக
வாழ்ந்து சலிச்சவுக
மையழியச் சம்மதியா
வாழ்ந்திருகா மாதுநான்
மையழியச் சம்மதிச்சேன்

பொலிஞ்சாண்டார் எல்லையின்னு
போத்துவார் கோட்டையின்னு
பூச்சேத்துப் பாத்தாக
பூச்சேத்த நாமொதலா
பெருமாளுக்கும் தேவிக்கும்
போரு நடந்ததினால்
பெருமாளுக்குச் சோறு
பொங்கிச் சலிக்கலியே
பொடலம்பூத் தோசை
சுட்டுச் சலிக்கலியே
பெருமாளிடம் பேசி மகிழலியே
பேராசை தீரலியே
பூலோகத்தைப் போல

போரை வெலக்கிப்
பொட்டுவண்டி கட்டி
பொண்ணை அழைக்கலியே
பொண்ணு சமத்தாலே
புத்தி தெடத்தாலே
பிம்பொருத வாசல்
பொங்கியுண்ணு பாத்திருந்தேன்
போனதுக்குப் பிறபாடு
பூச்சேத்த குத்தமுன்னு
பூமிதிச்ச தண்டமுன்னு
பொண்ணறுக்க வேணுமுன்னு
பொட்டழிய வேணுமுன்னு
பொட்டுவண்டி கட்டி
பெரியவுக வந்து
பொண்ணறுக்க வேணுமுன்னு
போனதுக்குப் பிறபாடு
பூமிவந்து சேந்திருந்தேன்
பூலோகத்தி உள்ளவுக
பொலிஞ்சு சலிச்சவுக
பொட்டழியச் சம்மதியா
பொலிஞ்சிருகா மாதுநான்
பொட்டழியச் சம்மதிச்சேன்

OOO

## குழந்தைக்கு

குழந்தை இறந்தபோது, அதன் மென்மை, அழகு, ஒளி இவற்றைக் கூறி தாய் வருந்திப் பாடியது.

ஈச்சங்குருத்தே
எடுக்கநல்ல செண்பகமே
வாழைக் குருத்தே
வளக்க நல்ல செண்பகமே

முத்து மொகதலவே
மோதிரத்தின் கல்லொளியே
பட்டு மொகதலவே
பதக்கத்தின் கல்லொளியே
தங்க மொகதலவே
தாயத்தின் நல்லொளியே
தில்லை முருகே
சிவதலத்தில் வாழும் முருகே
கொத்துப் பவளம்
கோக்காத நல்பவளம்
சாதிப் பவளம்
சரியாத நல்பவளம்
வேர்ப் பவளம்
வெளையாத நல்பவளம்
நீரத்தினமும் போறதுக்கு
எங்களுக்கு
ஒரு சொப்பனமும் தட்டலியே

OOO

பொன்னிலும் சிறந்தொளிரும் பொன்னைப் பூமி விழுங்க விட்டதற்காகத் தாய் வருந்திப் பாடியது.

கண்ணார் தெருக்களிலே
காசுருக்கி வார்த்த தங்கம்
காசுருக்கி வார்க்கையிலே
களையேத்தி வார்த்த தங்கம்
பார்ப்பார் தெருக்களிலே
பவனுருக்கி வார்த்த தங்கம்
பவனுருக்கி வார்க்கையிலே
பதம்ஏத்தி வார்த்த தங்கம்

செட்டி தெருக்களிலே
செம்புருக்கி வார்த்த தங்கம்
செம்புருக்கி வார்க்கையிலே
செயலேத்தி வார்த்த தங்கம்

தங்க முருக்கித் தரையில்
கவுத்து விட்டோம்
சந்தன வாழ்முருகைத்
தரையை முழுங்கவிட்டோம்
பொன்னைஉருக்கிப் பூமியில்
கவுத்துவிட்டோம்

பூரண வாழ்முருகைப்
பூமி முழுங்கவிட்டோம்

மச்சம் உருக்கி மண்ணில்
கவுத்துவிட்டோம்
மாணிக்க வாழ்முருகை
மண்ணை முழுங்கவிட்டோம்

நெத்தி வரிசையிலே
நீர்த்தாரா முட்டையிடும்
நீர்த்தாரா முட்டையிலே
நின்னமுத்து சோதிவிடும்

பல்லு வரிசையிலே
பனித்தாரா முட்டையுடும்
பனித்தாரா முட்டையிலே
பதிஞ்சமுத்து சோதிவிடும்

ooo

கண்ணாடி போல் அழகும் ஒளியும் நிறைந்த குழந்தை போன இடம் தெரியவில்லையே என மழலை பேசும் குழந்தை இறந்தபோது தாய் வருந்திப் பாடியது.

பச்சைக்கிளி வளத்தேன்
பறக்கையிலே தப்பவிட்டேன்
அன்னக்கிளி வளத்தேன்
ஆடையிலே தப்ப விட்டேன்
கொஞ்சுங்கிளி வளத்தேன்
கூவையிலே தப்பவிட்டேன்

கண்ணாடி கண்ணாடி
கைப்பூரக் கண்ணாடி
பூசி விளக்கிப்
பொடியிட்ட கண்ணாடி
பூரண சந்திரரைப் போல
இந்தக் கண்ணாடி
அந்தணர்கள் வேதியர்கள்
அழகுரைக்கும் கண்ணாடி

சாலட்சி அம்மன்
சன்னதிக கண்ணாடி
மீனாட்சி அம்மன்
விளக்கடிக் கண்ணாடி

ஒழக்குப்பவன் குடுத்து
உரிச்சேத்த கண்ணாடி
உமையவள் சன்னதிக்கு
ஒக்கவைக்கும் கண்ணாடி

பதக்குப்பவன் குடுத்துப்
பதம்வைச்ச கண்ணாடி
பரமசிவன் சன்னதிக்குப்
பக்கம் வைக்கும் கண்ணாடி

நாழிப்பவன் குடுத்து
ரசம்சேத்த கண்ணாடி
நடராசர் சன்னதிக்கு
நடுவேவைக்குங் கண்ணாடி

கண்ணாடி போன
கடவுந் தெரியலியே
பொய்ப்பாவை போன
பூமி தெரியலியே

ooo

## இருகுழந்தைகள் அடுத்தடுத்து இறந்தபோது

விலங்குகளைப் பறவைகளைச் சேர்த்துப் பிணைத்து விடுவதுபோல் இருகுழந்தைகளை யும் ஒருசேர இழந்துவிட்டேனே என தாய் வருந்திப் பாடியது.

பொறக்கயிலே ஜோடியில்லே
போகயிலே ஜோடியா
வளரயிலே ஜோடியில்லே
மாளயிலே ஜோடியா

வையகத்தி உள்ளவுக

மாடு பொணைஞ்சு
மந்தையிலே விடுவாக
மஞ்சன் பொணைஞ்ச
வகுத்தெரிச்ச கேட்டியளா

கோழி பொணைஞ்சு
குப்பையிலே விடுவாக
கொழந்தை பொணைஞ்ச
கொடுமைகளை கேட்டியளா

புறாப் பொணைஞ்சு
பூலோகத்திக் கேட்டிருக்கோம்
புள்ளை பொணைஞ்ச
பூங்காரம் கேட்டியளா

ஆடு பொணைஞ்சு
அக்கத்தே விடுவா
ஆள் பொணைஞ்ச
அவதிகளைக் கேட்டியளா

கண்ணோடு கண்ணு
கலந்து வச்சோம்
பொய்யாச்சு
ஒண்ணோட ஒண்ணு
ஒக்க வச்சோம்
பொய்யாச்சு

OOO

## ஆண்குழந்தை

யாருக்கும் கிட்டாத பெரும் பேற்றைப் பெற்று இழந்தேனே என்று ஆண்குழந்தை இறந்தபோது அதன் அழகையும் பெருமையை யும் சொல்லி வருந்திப் பாடியது.

கட்டிமுத்தே ரத்தினமே
கைநெறஞ்ச குஞ்சலமே
வாச்சமுத்தே ரத்தினமே
மடிநெறஞ்ச குஞ்சலமே
கோடித் தெரவியமே
கொடுத்துவையாப் பாக்கியமே
அணையாத் தெரவியமே
அதிட்டமில்லா அச்சரமே
பொன்னே பொருளே
பொருளிருக்கும் பொட்டகமே
நல்ல பொருளே
நகையிருக்கும் பொட்டகமே
தங்கமே லிங்கமே
தனமிருக்கும் பொட்டகமே
பொன்னே பொருளே
பொருளிருக்கும் பொட்டகமே
வெள்ளிப் பொருளே
வேலிருக்கும் பொட்டகமே

ஆளுங் குடிக்கு
அரசுஒத்தன் போதுமே
வாளுங் குடிக்கு
மஞ்சன்ஒத்தன் போதுமே
செறக்குங் குடிக்குச்
செம்பன்ஒத்தன் போதுமே
அஞ்சாறு பேரு
அறியாத தங்கமில்ல
பத்தெட்டுப் பேரு
பாராத தங்கமில்ல
ஏழெட்டுப் பேருக்கு
இல்லாத தங்கமில்ல

காணாப் பொருளுக்குக்
கையேந்தி நிப்பாக
கண்ட பொருளைக்
கைதட்டி விட்டமுன்னா

வாய்க்காப் பொருளுக்கு
மடியேந்தி நிப்பாக
வாச்ச பொருளை
வகைதப்ப விட்டமுன்னா

OOO

அழகே உருவான தன் மைந்தனை எமன்கையில் கொடுத்தேனே என வருந்திப் பாடியது.

பட்டுக் கவுறே
பவுனுருவி நாடகமே
மூட்டாங் கவுறே
எம்பொன்னுருவி நாடகமே
வாழக் குருத்தே
வளக்கநல்ல செம்பகமே
ஈச்சங் குருத்தே
எடுக்கநல்ல செம்பகமே
தென்னங் குருத்தே
சேக்கநல்ல செம்பகமே

காலழகும் கையழகும்
கட்டைவெரல் லெச்சணமும்
தோளழகும் காலழகும்
சுண்டுவெரல் லெச்சணமும்
முன்காலழகும் முகத்துத்
திருவழகும்
பின்காலழகும் பிடரியுடைய
லெச்சணமும்
மயிற்றுக் கறுப்பொழிய
மத்ததெல்லாம் தங்கநெறம்
புருவங் கறுப்பொழிய
பின்புளல்லாம் தங்கநெறம்

கட்டில் மஞ்சள்
கண்ணசந்தான் என்றிருந்தேன்
கட்டில் மஞ்சன்
களச்சதை நானறியேன்
தொட்டில் மஞ்சன்
தூங்குறான் என்றிருந்தேன்
தொட்டில் மஞ்சன்
துடிச்சதை நானறியேன்

சாமவிளக் கெரிச்சேன்
சலியாமப் பாடுபட்டேன்

விடியவிளக் கெரிச்சேன்
வெலகாமப் பாடுபட்டேன்
அந்திவிளக் கெரிச்சேன்
அசராமப் பாடுபட்டேன்

ஈக்கடிக்கச் சம்மதியேன்
எமன்வரச் சம்மதிச்சேன்
தூசிபடச் சம்மதியேன்
எமதூதன் வரச் சம்மதிச்சேன்
காத்தடிக்கச் சம்மதியேன்
காலன்வரச் சம்மதிச்சேன்

OOO

கண்டவர்கள் கண்படும் பேரழகுப் பெட்டகத்தை, தனக்குக் கிடைத்த பொன்னை, மண்ணிட்டு மண்மிதிக்க நேர்ந்ததே. காட்டு நரிக்கு விருந்து வைக்கவோ மகனைச் சுமந்தேன் என ஆண் குழந்தை இறந்தபோது தாய் புலம்பியது.

தங்கத்தீத் தங்கமே
தாமரையின் கீழ்மடலே
செல்லத்தீச் செல்லமே
செம்பகத்தின் கீழ்மடலே
அச்சில்லாத் தேரே
அரக்கில்லாப் பம்பரமே

அழகை வருணிச்சா
அச்சுக் கொசந்திருக்கும்
அரைமாத்துக் கூட இருக்கும்
வடிவை வருணிச்சா
மாத்துக் கொசந்திருக்கும்
மாகாணி கூடஇருக்கும்

சுவத்தில் எழுதலாம்
சுயம்போல மஞ்சனைச்
சுந்தரமாப் பாக்கலாம்
படத்தில் எழுதலாம்
பாங்கிநல்லா மஞ்சனைப்

பொங்குதே கண்ணீரு

பசுங்கிளியாப் பாக்கலாம்

ஆலிலைத் தொங்கலிலே
ஆடும் பசுங்கிளியே
ஆலப்பழம் கொய்ய வந்த
அழகுவனப் பைங்கிளியே

பச்சிலைத் தொங்கலிலே
பறக்கும் பசுங்கிளியே
பாலப்பழம் கொய்யவந்த
பச்சைவர்ணப் பைங்கிளியே

வேப்பிலைத் தொங்கலியே
மேயும் பசுங்கிளியே
வேப்பம்பழம் கொய்யவந்த
மேகவர்ணப் பைங்கிளியே

நல்லமஞ்சன் சீர்வடிவு
ராசசபைக் கொத்திருக்கும்
ராச சபைகளிலே
நடுவேவச்சா திட்டிவரும்

செல்ல மஞ்சன் சீர்வடிவு
தேவசபைக் கொத்திருக்கும்
தேவ சபைகளிலே
சேத்துவச்சா திட்டிவரும்

ஆலிலை போல
அடிவயிறு மேல்வயிறு
புளியிலை போலப்
பொன்னுமுழி கண்ணுமுழி
வேப்பிலை போல
மேப்புருவம் கீழ்ப்புருவம்

புள்ளைமார் வீட்டுக்கு
பிறக்கிற மஞ்சனில்லே
ஜட்ஜ்மார் வீட்டுக்கு
சமிக்கிற மஞ்சனில்லே
வக்கீல்மார் வீட்டுக்கு
வருகிற தம்பியில்லே

நம்ம குலப்பிள்ளையில்ல
ராஜ குலப்பிள்ளையிது
செட்டி குலப் பிள்ளையில்லே
தெய்வ குலப் பிள்ளையிது

பொன்னிட்டுப் பொன்கழட்டப்
பொருந்தா மனசுடையாள்
மண்ணிட்டு மண்மிதிக்க
மனசோ துணிஞ்சமின்னேன்
பிள்ளைவச்ச மண்மிதிக்கப்
புத்தி துணிஞ்சமின்னேன்

காட்டுநரி கூட்டமிட்டுக்
கள்ளநரி ஓசையிட்டு
காட்டு நரிக்கா
கனக்கச் சொமந்திருந்தேன்
கறியோ சமச்சிருந்தேன்
வேட்டை நரிக்கோ
விரும்பிச் சொமந்திருந்தேன்
விருந்தோ சமச்சிருந்தேன்.

OOO

தவமோ தவமிருந்து பெற்ற ஆண்குழந்தை இறந்தபோது, ஆயுள் இல்லாக் குழந்தையை அணைத்து முத்தம் கொண்டேனே என்றும் உயிரை வாங்க வந்த எமனை விரட்ட முடியவில்லையே எனவும் வருந்தித் தாய் பாடியது.

அஞ்சரை மாத்தை
அழகைச் சொமந்திருந்தேன்
ஆயுசில்லாத் தம்பியை
அணைச்சு முத்தங்
கொண்டிருந்தேன்

எட்டரை மாத்தை
எடையில் சொமந்திருந்தேன்
எழுத்தில்லா இந்திரனை
எடுக்கிமுத்தங் கொண்டிருந்தேன்

பத்தரை மாத்தைப்
பவனைச் சொமந்திருந்தேன்
பவுரான தம்பியைப்
பாரிமுத்தங் கொண்டிருந்தேன்

திங்கவந்த பண்ணியைத்
தெறிக்கவசம் அத்தாக
கொல்லவந்த பண்ணியைக்
குத்தவசம் அத்தாக

அஞ்சுகிளி ரஞ்சிதமே
அழகுகிளி தாராவே
கொஞ்சும் கிளி ரஞ்சிதமே
கூவும்கிளி தாராவே

அன்னம்போல் வந்து
அருகிருக்கும் தாராவே
கிளிபோல் வந்து
கிட்டஇருக்கும் தாராவே

பச்சைக் கிளியே
பறக்கும் பசுங்கிளியே
பார்வதியா கையில்
படுத்திருக்கும் பொன்கிளியே

வண்ணக் கிளியே
வடமதுரை மீனா
வலதுகை மேலிருக்கும்
வயிரம்வச்ச பூங்கிளியே
கையழகும் கால்அழகும்
கட்டைவெரல் லச்சணமும்
கடங்கால் ஒப்புரவும்
புருவச் செயல்அழகும்
பூமலந்த கண்ணழகும்
வார்ப்புச் செயல் அழகும்
வடிவொசந்த மூக்கழகும்
செப்புச் செயலழகும்
சிரிச்சகனி வாயழகும்

கிரீடம் வச்ச கிருட்ணனைக்
கிட்டவரக் கண்டாலும்
கிளிபோலத் தம்பியைக்
கிட்டவரக் காண்பதில்லே

மகுடம்வச்ச கிருட்ணனை
வளவிவரக் கண்டாலும்
மணிபோலத் தம்பி
வளவிவரக் காண்பதில்லே

குழியை மொழுகி
குழிவாயைக் கோலமிட்டுக்
கோடித் தவமிருந்து
குழிவாயில் குஞ்சலரைக்
கூட்டிமுத்தம் கொண்டிருந்தோம்

மண்ணை மொழுகி
மண்வாயைக் கோலமிட்டு
மாதவமோ தானிருந்து
மண்வாயில் குஞ்சலரை
வாரிமுத்தம் கொண்டிருந்தோம்

பொசுப்பில்லா மஞ்சனைப்
புடிச்சுமுத்தம் கொண்டிருந்தோம்
வயசில்லா மஞ்சனை
வாரிமுத்தம் கொண்டிருந்தோம்

OOO

**இளஞ்சூரியனைப் போல் எழிலும், அழகும் கொண்ட மகனை இழந்த தாய், வளர்ந்து மேலாவான் என எண்ணிய எண்ணமெல்லாம் வீணானதே எனப் புலம்பிய பாடல்.**

நல்லமணி சிண்டுமணி
நறுக்கிக் கடஞ்சமணி
நயமான சிண்டுமணி
உருக்கிக் கடஞ்சமணி
ஓசையுள்ள சிண்டுமணி
வார்த்துக் கடஞ்சமணி

வயிரம்வச்ச சிண்டுமணி
காச்சிக் கடஞ்சமணி
காசிச் சிண்டுமணி
சொல்லிக் கடஞ்சமணி
சுயமான சிண்டுமணி

எழுத்தில்லாத் தங்கம்
இங்கேவந்து என்னசுகம்
வயதில்லாத் தங்கம்
வந்ததினால் என்னசுகம்
பொசுப்பில்லாத் தங்கம்
பொறந்ததினால் என்னசுகம்

கருணன் திருவழகு
காலத்தால் சூரியன்போல்
கனசனத்தில் கண்டாக்க
காந்த விளக்கதுபோல்
வீமன் திருவழகு
விடிகாலச் சூரியன்போல்
வெகுசனத்தில் கண்டாக்க
மேசை விளக்கதுபோல்

சோளப் பயித்தைப்
பயறுன்னு எண்ணியிட்டோம்
தம்பி சொல்பொரட்டுக்காரனை
மகன்னு எண்ணியிட்டோம்

நெல்லுப் பயித்தைப்
பயறுன்னு எண்ணியிட்டோம்
தம்பி நெலைப் பொரட்டுக்காரனை
மகன்னு எண்ணியிட்டோம்

கம்பம் பயித்தைப்
பயறுன்னு எண்ணியிட்டோம்
தம்பி கனபொரட்டுக்காரனை
மகன்னு எண்ணியிட்டோம்

OOO

அழகும், ஒளியும் நிறைந்த ஆண் குழந்தை இறந்தபோது, உனைக் காணக் கண்கள் துடிக்கிறதே என்றும், அழகை அதிகம் எழுதிய இறைவன் உனக்கு ஆயுளை அதிகம் எழுதவில்லையே என்றும் தாய் வருந்திப் பாடியது.

கண்ணோ துடிக்குது
கடைக்கண்ணோ தேடுது
கடைக்கண்ணுக் குள்ளாகக்
கட்டி மகனைக்
காணுறாப் போலிருக்கே

புருவந் துடிக்குது
பூங்கண்ணோ தேடுது
பூங்கண்ணுக் குள்ளாகப்
பிஞ்சு மகனோட
பேசுறாப் போலிருக்கே

நெத்தி துடிக்குது
ரெண்டு கண்ணுந் தேடுது
ரெண்டு கண்ணுக் குள்ளாக
நிக்கிறாப் போலிருக்கே

புடிக்கவந்த தூதனுக்கும்
புள்ளையைப் போலப்
பொன்னால் எழைச்ச
பொம்மைபண்ணித் தாரமுன்னம்
பொன்னால் எழைச்ச
பொம்மை செலவுமில்லே
பொன்னா கருணைப்
புடிச்சாலே விடுவமுன்னான்

வாங்கவந்த தூதனுக்கும்
மதலையைப் போல
வயிரம் எழைச்ச
மதலைபண்ணித் தாரமுன்னம்
வயிரம் எழைச்ச
மதலை செலவுமில்லே
வருசக் கருணனை

வாங்கினாப் போவமுன்னான்

அழைக்கவந்த தூதனுக்கும்
அனேக திரவியமும்
ஆனைவிடாய் தாரமுன்னம்
அநேக திரவியமும்
ஆனைவிடாய் தேவையில்ல
இந்த அழகான மைந்தனை
அழைச்சாலே போவமுன்னாக்

கொல்லவந்த தூதனுக்கும்
கோடித் திரவியமும்
குருதைவிடாய் தாரமுன்னம்
கோடித் திரவியமும்
குருதைவிடாய் தேவையில்லே
கோப்பான மஞ்சனைக்
கொன்னாலே போவமுன்னான்

அன்னம்போல் சொல்லழகன்
ஆடைதின்னி வாயழகன்
செல்லம்போல் சொல்லழகன்
சீனிதின்னி வாயழகன்
வெல்லம்போல் சொல்லழகன்
வெண்ணைதின்னி வாயழகன்

வெண்ணைதின்னிக் கிருட்ணனை
வீதியிலே காணுவமா
ஆடைதின்னிக் கிருட்ணனை
ஆட்களிலே காணுவமா

சீனி தின்னிக் கிருட்டிணனை
தெருக்களிலே காணுவமோ
கனியடிச்ச கிருட்டிணனை
கடவுகளிலே காணுவமோ
பச்சைமுடி அச்சுதனைப்
பாதையிலே காணுவமா

மூட னெழுத்தா
முழுமோசம் கையெழுத்தா
ஆண்டி எழுத்தா
அறியாதான் கையெழுத்தா
சித்தன் எழுத்தா
தெரியாதான் கையெழுத்தா
ஓரெழுத்தா ஈரெழுத்தா
ஒடையாளி கையெழுத்தா

அழகை எழுதினவன்
ஆயுள் எழுதலியே
வடிவை எழுதினவன்
வயசை எழுதலியே

OOO

வீடெங்கிலும் ஓடி ஆடி விளையாடிய மகன் இறந்தபோது, அவனை வளர்த்த அருமையைச் சொல்லி, அவன் போன இடம் தெரியவில்லையே எனத் தாய் புலம்பியது.

ஆடை புடிச்சு
அழுது வந்த தம்பி எங்கே
சேலை புடிச்சு
சேந்து வந்த தம்பி எங்கே

திண்ணைக்குத் திண்ணை
திரிஞ்சு வெளையாண்ட தம்பி
சன்னலுக்குச் சன்னல்
சாஞ்சு வெளையாண்ட தம்பி

ஒருமா நிலத்தில்
ஓடி வெளையாண்டதம்பி
அரைமா நிலத்தில்
ஆடி வெளையாண்ட தம்பி

மார்மேலும் தோள்மேலும்
வச்சு வெளையாண்ட தம்பி
தோள்மேலும் மார்மேலும்
தூக்கி வெளையாண்ட தம்பி

மண்ணின்மேல் சீர்பாதம்

வைக்கக்கால் நோகுமுன்னு
பூமியின்மேல் சீர்பாதம்
பொருந்தக்கால் நோகுமுன்னு
மார்மேல தொட்டிகட்டி
மடிமேல் நடைபழகி
மருக்கொழுந்து போல
மெலுக்கா வளத்த மஞ்சன்
சூடிய பூப்போலச்
சொகுசா வளத்த மஞ்சன்

பொம்மையிது பொம்மையிது
பூக்கொடுக்கும் பொம்மையிது
தில்லை நடராசரும்
சிவகாமி அம்மனும்
தேரேறி வீதிவந்தாச்
சிங்காரக் கொட்டகைக்குச்
செண்டிமலர் கொடுக்கும்
செழிப்பமுள்ள பொம்மையிது

மலைமேல் முருகரும்
வள்ளி தெய்வானையும்
மயிலேறி வீதிவந்தா
மாணிக்கக் கொட்டகைக்கு
மல்லிமலர் கொடுக்கும்
மதிப்புள்ள பொம்மையிது

பொய்ப்பாவை போன
பூமி தெரியலியே
கைப்பாவை போன
கடவுந் தெரியலியே

OOO

## முதல் மகனுக்கு

தலைப்பிள்ளையான, மகன் இறந்தபோது, எத்தனை பிள்ளைகள் பெற்றாலும் முதற் பிள்ளைக்கு இணையில்லை என்றும் முதல் பிள்ளைக்குச் செய்த சிறப்புகள் இவை என்றும் தாய் புலம்பிப் பாடியது.

மஞ்சன் பதினாறும்
வளத்துச் சலிச்சாலும்
மருந்து குடிச்ச
மஞ்சன் வரமாட்டாது
மாசமத்தி மாதா
வாவுக் கழைச்ச
மஞ்சன் வரமாட்டாது
மகராசர் ஐயா
வாழ்ந்திருந்தார் பேரழைச்ச
மஞ்சன் வரமாட்டாது

புள்ளை பதினாறும்
பெத்துச் சலிச்சாலும்
பூடு குடிச்ச
புள்ளை வரமாட்டாது
பெருஞ்சமத்தி மாதா
போருக்கழைச்ச
புள்ளை வரமாட்டாது
புண்ணியவார் ஐயா
பொலிஞ்சிருந்தார் பேரழைச்ச
புள்ளை வரமாட்டாது

பட்டங்கள் விட்டதில்லே
பம்பரங்கள் ஆட்டவில்லே
கிட்டி அடிச்சதில்லே
கெட்டதொண்ணும் செஞ்சதில்லே

காடைக்கோ கண்ணிகட்டிக்
காட்சியுள்ளார் எல்லையிலே
கபடறியா வேடனவன்
கடலோரம் வச்சமுன்னான்
காடைவிழும் கண்ணியிலே தம்பி
கருணனுமே பட்டுவிட்டான்

சிட்டுக்கோ கண்ணிகட்டித்
தெசையுள்ளார் எல்லையிலே
தெரியாத வேடனவன்
தெருவோரம் வச்சமுன்னான்
சிட்டுவிழும் கண்ணியிலேதம்பி

தெசைகருணன் பட்டுவிட்டான்

குருவிக்கோ கண்ணிகட்டிக்
கோடியுள்ளார் எல்லையிலே
கூரறியா வேடனவன்
கோடியிலே வச்சமுன்னான்
குருவிவிழும் கண்ணியிலேதம்பி
குழந்தையனும் பட்டுவிட்டான்

ooo

போற்றி வளர்த்து 'புதுமை' செய்து பார்த்த மகன் இறந்தபோது, மின்னலைப் போலழகுடையான் மின்னலைப் போல் தோன்றியதும் மறைந்தானே என்றும் பிள்ளைகளிலே சிறப்பான பிள்ளை என்றும், எமன் வந்தபோது எதிரே நின்றாயோ எனத் தாய் புலம்பிப் பாடியது.

குத்துவெளக்கே குலவெளக்கே
லெச்சணமே
மாடவெளக்கே மணிவெளக்கே
லெச்சணமே
மார்மேலும் தோள்மேலும்
வண்ணமடி மேலும்
மதிப்பா வளந்தமகன்
தோள்மேலும் மார்மேலும்
தோகைமடி மேலும்
சொகுசா வளந்தமகன்
ஓடிவரும் புள்ளையிலே
ஒக்கவரக் காண்போமா
நடந்துவரும் புள்ளையிலே
நடுவே வரக் காண்போமா
திரிஞ்சுவரும் புள்ளையிலே
சேர்ந்துவரக் காண்போமா
படிச்சுவரும் புள்ளையிலே
பக்கம் வரக் காண்போமா
வெளையாடும் புள்ளையிலே
வீற்றிருக்கக் காண்போமா

பள்ளிக் கூடத்தில்

பொங்குதே கண்ணீரு

படித்துவரக் காண்போமா
ஏடும் எழுத்தாணியும்
எடுத்துவரக் காண்போமா

அன்ன ஊஞ்சல் பொன்னூஞ்சல்
ஆட்டிவிட்டோம் பொய்யாச்சு
பொன்னூஞ்சல் அன்னஊஞ்சல்
போட்டாட்டிப் பொய்யாச்சு
பூஞ்சோலை ஆஞ்சோலை
போட்டாட்டிப் பொய்யாச்சு

வயசில்லாப் பாலகனை
வயித்திச் சொமந்திருந்தேன்
எழுத்தில்லாப் பாலகனை
எடையிச் சொமந்திருந்தேன்
பொன்னாளுந் தம்பியின்னு
புத்தி நெனச்சிருந்தோம்
பொசுப்பில்லாத் தம்பியின்னு
புத்தி நெனக்கவில்லே

மண்ணாளுந் தம்பியின்னு
மனசிலேயும் நெனச்சிருந்தோம்
வயதில்லாத் தம்பியின்னு
மனசு நெனக்கவில்லே

புள்ளியிடம் சேப்பமுன்னு
பேரு சொல்லவந்த
பொன்னா கருணன்னு
புத்தியிலே எண்ணியிட்டோம்

சித்தானைக் கையெல்லாம்
செங்கறையான் திங்குமே
மதசானைக் கையெல்லாம்
மண்கறையான் திங்குமே
கட்டழகன் மேனியைக்
கறையான் அரிக்குமே
சிறுத்தொண்டன் மேனியைச்
செங்கறையான் அரிக்குமே

மண்குழிக்கு வேணுமுன்னு

வாதா வளத்திருந்தோம்
பொதைகுழிக்கு வேணுமுன்னு
போத்தா வளத்திருந்தோம்

ஓடிவரும் மஞ்சனிலே
உறுதியுள்ள மஞ்சனில்ல
நடந்துவரும் மஞ்சனிலே
நயமான மஞ்சனில்ல
திரிஞ்சுவரும் மஞ்சனிலே
திருத்தமுள்ள மஞ்சனில்ல

போதக் குடுத்துப்
போத்தி வளத்திருந்தோம்
மகுரக் குடுத்து
வருந்தி வளத்திருந்தோம்

மஞ்சன் திருவழகு
மானமின்னல் இட்டாப்போல்
மறுத்துமொரு சாயலுக்கு
வயிரநகை இட்டாப்போல்

புள்ளை திருவழகு
பொழுதுமின்னல் இட்டாப்போல்
பிம்புமொரு சாயலுக்குப்
புதுவயிரம் சேத்தாப்போல்

முன்னூத்துக் காதவழி
மேகமின்னல் இட்டாப்போல்
ஐநூத்துக் காதவழி
அழகுமின்னல் இட்டாப்போல்
தொண்ணூத்திக் காதவழி
சொகப்புமின்னல் இட்டாப்போல்

பொழிஞ்சாண்டார் பேரழைச்ச
புள்ளைவர மாட்டானே
மதிச்சாண்டார் பேரழைச்ச
மஞ்சனவர மாட்டானே

போத்தி வளத்திருந்தும்
புதுமைபண்ணிச் செய்திருந்தும்
போத்தா வளந்தமகன்
போக நெனச்சமுன்னான்

வருந்தி வளந்திருந்தும்
மாராப்புக்கட்டி மகிழ்ச்சி
செய்திருந்தும்
வாதா வளந்தமகன்
மாள நெனச்சமுன்னான்

காலன் பசுவேறிக்
காணிவந்து நிக்கயிலே
காலன் பசுவுக்குக்
கடக்கப்போய் நில்லாமக்
கண்ணருகே நின்னமுன்னான்
கடுஞ்சுருக்கா வாரமுன்னான்
கைலாசஞ் சேந்தமுன்னான்

எமன் பசுவேறி
எல்லைவந்து நிக்கயிலே
எமன் பசுவுக்கு
எடம்போய் நில்லாம
எதிரப்போய் நின்னமுன்னான்
இக்கணமே வாரமுன்னான்
எமலோகஞ் சேந்தமுன்னான்.

OOO

## மகனுக்கு

பள்ளியில் படித்து வந்த மகன் இறந்தபோது, அழகும் அன்பும் உள்ள நீ இறப்பதென்றால் குழந்தையாக இருக்கும்போதே இறந்திருக்கலாமே எனவும் எங்களை நம்பிக்கை மோசம் செய்தாயே எனவும் வருந்திப் பாடியது.

போகும் மொறையுமில்லே
போத்தா வளந்த மஞ்சன்
போறதுக்கு நாளுமில்லே
மாளும் மொறையுமில்லே
வாதா வளந்த மஞ்சன்

மாளுறதுக்கு நாளுமில்லே

பெரிசா வளத்தமகன்
பொறவிமார் தம்பி
பொழைமோசம் செய்தமகன்
வலுவாவளத்த மகன்
வளந்தைமார் தம்பி
வகைமோசம் செய்தமகன்

போதப் பொறந்ததிலே தம்பி
புள்ளை ஒரு சாயல்இல்ல
பெலவாயம் உள்ளதம்பி
மகுரப்பொறந்ததிலே தம்பி
மஞ்சன் ஒரு சாயல்இல்ல
வலுவான தம்பியில்ல

கண்ணும் கனிவாயும்
காதும் ஜெயதோளும்
வண்ண விடாயும்
வாருகாதி மூக்கழகும்
கும்பிட்ட மூக்கும்
கோதுகனி வாயழகும்
தெண்டனிட்ட மூக்கும்
சிரிச்சகனி வாயழகும்

அருச்சுனனைப் போல இல்ல
ஆணழகன் ஓம்பல்லு
தருமரைப் போலஇல்ல
தம்பியுட ஒங்கொணமும்
கிருஷ்ண லீலைபோல்
கிளிமொழிதான் ஒம்பேச்சு

நீபோறதுவே உண்டானா
பிஞ்சிலே போகாயா
மாளுறதே உண்டானா
நீமட்டத்திப் போகாயா

பத்துக் கிளாசும்
படிச்சு வந்தமகன்
எட்டுக் கிளாசும்
எதவா வந்தமகன்
கூடப் படிக்க இருந்த
கொம்பனையான் போயிட்டான்

இப்பநெனச்சாலும் எனக்குநீ
எறந்தநாள் போலயிடா
மறுத்து நெனச்சாலும் எனக்குநீ
மாண்ட நாள் போலயிடா

○○○

**திருமணம் செய்யும் வயதுடைய மகன் இறந்த போது அழகு, பொலிவும் உடைய மகன் துன்பத்தையும் துயரத்தையும் தந்தானே என்றும், தன்னை அனுப்பித் தனக்கு இழவு சொல்ல வேண்டிய மகனுக்குத் தான் இழவு சொல்லும் அவலம் நேர்ந்ததே எனத்தாய் அழுது புலம்பியது.**

நாயமில்லாச் சாவுக்கு
நான்வார முன்னான்
நீதியில்லாச் சாவுக்கு
நீட்டிப் படுத்தமுன்னான்
வகுத்தெரிச்சச் சாவுக்கு
வணங்கிப் படுத்தமுன்னான்

வாதா வளந்தமகன்
வருத்தம் வச்சுப் போனாயே
தோளளவு வளந்தமகன்
துயரம்வச்சுப் போனாயே
கழுத்தளவு வளந்தமகன்
கவலைவச்சுப் போனாயே

காயா மடியுதிர
காச்சொடனே போகாம
காச்சித்தான் என்னசுகம்
பூவா மடியுதிர
பூத்தொடனே போகாம
பூத்துத்தான் என்னசுகம்

கைக்கணக்கு வாங்கஇருந்த
கருணன்வனம் போனமுன்னான்
மணிக்கணக்கு வாங்கஇருந்த
மஞ்சன்வனம் போனமுன்னான்
புகழ்க்கணக்கு வாங்கஇருந்த
புள்ளைவனம் போனமுன்னான்

பாதையிலே கண்டாலும்
பச்சரதம் போலஇல்ல
பவுரான தம்பி
பச்சை ரதத்திலேயும்
பதுமையைச் சோடிச்ச
பலவயிரம் போலிருக்கும்

வீதியிலே கண்டாலும்
வெள்ளிரதம் போலிருக்கும்
வெள்ளி ரதத்தின்மேல்
வேலிருந்தாப் போலிருக்கும்

சாலையிலே கண்டாலும்
தங்கரதம் போலிருக்கும்
தங்க ரதத்திலேயும்
சாமிவந்தாப் போலிருக்கும்

சட்டையின்மேல் சட்டையிட்டா
ஜட்ஜ்மார் போலிருக்கும்
தம்பியுட நல்செகப்பு
சட்டைக்கு மேத்தெரியும்
பிம்புமொரு சட்டையிட்டா
போலீஸ்மார் போல இருக்கும்
புள்ளையுட நல்செகப்பு
பொழுதுமின்னல் இட்டாப்போல்

பூலோகத்திப் போலப்
போதத்தனம் வாங்கிப்
பூச்சேத்துப் பாப்பமுன்னு
புத்தி நெனக்கயிலே
பொல்லாக் கெரகம்
பொனத்திலெடம் கேட்டமுன்னா

வையகத்திப் போல
மகுரத்தனம் வாங்கி
மாலையிட்டுப் பாப்பமுன்னு
மனசு நெனக்கையிலே
மாயக் கெரகம்
வனத்திலிடம் கேட்டமுன்னா

எண்ணினோவோம் கோடி
நீ எறப்பதறியாமே
கோருனோம் கோடி
ஒன்னைக் குடுப்பதறியாமே

மகுந்த பணமும்
மலையாக் குமிப்பாயின்னு
மனசு நெனச்சிருந்தோம்
மாளுறதே எண்ணாமே

பெரிய பணமும்
போராக் குமிப்பாயின்னு
புத்தி நெனச்சிருந்தோம்
போறதுவே எண்ணாமே

பொண்ணையுமே கைப்பிடிச்சாப்
பெரும்பாவம் சிக்குமுன்னு
தன்பாவம் கொண்டு
தன்வழியே போனமுன்னே
மாதையுமே கைப்பிடிச்சா
மாபாவம் சிக்குமுன்னு
மஞ்சன்வனம் போனமுன்னே

தாயார்தேர் ஓடாமத்
தம்பிதேர் ஓடுதே
பெத்தாதேர் ஓடாமப்
புள்ளைதேர் ஓடுதே
ஆத்தாதேர் ஓடாம
அரசுதேர் ஓடுதே
வளத்தாதேர் ஓடாம
மஞ்சன் தேர் ஓடுதே

என்னை அனுப்பி
எனக்கெழவு சொல்லாமத்
தன்னை அனுப்பி
தனக்கெழவு சொல்லவச்சா

பெத்தாரைப் பாவியிங்கப்
புள்ளைவனம் போனமுன்னான்
வளந்தாரைப் பாவியிங்க
மஞ்சன்வனம் போனமுன்னாக்

○○○

கணவன் இறந்த மறு ஆண்டே நீரில் மூழ்கி இறந்து போன மகனுக்கு, கணவனை இழந்த துன்பம் மாறுமுன்னே அடுத்தடுத்துத் துன்பம் வந்ததே என்றும், பலதெய்வங்களையும் தவமிருந்து பெற்ற மகன் தவிக்க வைத்துச் சென்றானே என்றும், மனைவி, தாய், சகோதரி முதலியோர் வருந்தும்படி மாண்டானே என்றும், தனக்கு இறுதிக் கடன்கள் செய்யாமல் மறைந்தானே என்றும் தாய் புலம்பியது.

பெருந்தவசு மஞ்சன்
பெத்தாரும் போன
பொனம்பாக்கப் போனமுன்னான்
மாதவசு மஞ்சன்
வளத்தாரும் போன
வனம்பாக்கப் போனமுன்னான்
பிஞ்சுமக்கள் ஐயா
பெருமா மடிஞ்ச
போதமொண்ணு சென்னாத்தான்
பொண்ணுடைய துக்கம்
புத்திவிட்டு நீங்கும்பா
பெரியதலம் போயி
பொண்ணு குளிச்சுவந்து
பூமிவந்து சேந்தாக்கப்
பொண்ணுடைய துக்கம்
புத்திவிட்டு நீங்குமுன்னு
பெரியவுக சொல்லுமுண்டு

வாழும் மக்கள் ஐயா
மன்னர் மடிஞ்சு
வருசமொண்ணு சென்னாத்தான்
மாதுடைய துக்கம்
மனசவிட்டு நீங்கும்பா
மருந்ததலம் போயி
மாது குளிச்சுவந்து
வளவிவந்து சேந்தாக்க
மாதுடைய துக்கம்
மனசுவிட்டு நீங்குமுன்னு
மருந்தவுக சொல்லுமுண்டு

பெருமா மடிஞ்சு
போதம் ஒண்ணு செல்லுமுன்பு
பெருந்தவசா வந்தமஞ்சன்
பொழையவிக்கக் காத்திருந்தான்

மன்னர் மடிஞ்சு
வருசம் ஒண்ணு செல்லுமுன்பு
மாதவசா வந்தமஞ்சன்
வருத்தம் வைக்கக் காத்திருந்தான்

பெத்தாரும் தானும்
பாடு வருதுன்னு
பாடைக்கு முந்தியிட்டா
சூடு வருதுன்னு
சுடலைக்கு முந்தியிட்டா
கருப்பு வருதுன்னு
கானலுக்கு முந்தியிட்டா

மறந்திருக்க மாட்டாமே
மக்யாநாள் பள்ளியறை
அசந்திருக்க மாட்டாமே
அடுத்தநாள் பள்ளியறை
பொறுத்திருக்க மாட்டாமே
பொறகால பள்ளியறை

தானாப் பொறக்கலியே
தவத்தினால் வந்ததம்பி
அவனாப் பொறக்கலியே
அருந்தவசா வந்ததம்பி

குன்னக் குடியானைக்
குழிவிழுகத் தெண்டனிட்டு
வையா புரியானை
வம்பறியத் தெண்டனிட்டுப்
பெருந்தவசா வந்ததம்பி

மூணுமலை தாண்டி
மும்மலையும் சுத்திவந்து
மூவாக்கள் தெண்டனிட்டு

அஞ்சுமலை தாண்டி
அடுத்தமலை சுத்திவந்து
அருணகிரி நாதரையும்
அடுத்தொருகால் தெண்டனிட்டு

எட்டுமலை தாண்டி
எதுத்தமலை சுத்திவந்து
இடும்பரையும் தெண்டனிட்டுப்

பத்துமலை தாண்டிப்
பழனிமலை சுத்திவந்து
பகவானைத் தெண்டனிட்டுப்
பெருந்தவமோ தானிருந்து
புள்ளை ஒருதனையும்

புத்திரனைக் கண்டிருந்தோம்
மாதவமோ தானிருந்து
மஞ்சன் ஒருதனையும்
மகனாரைக் கண்டிருந்தோம்

இருட்டை வெளியாக்கி
இருந்திட்ட தம்பியில்ல
பகலை இருட்டாக்கிப்
பாவியின்னு சொல்வச்சே

கழுத்தளவு தண்ணியிலே
கைநழுவிப் போனமுன்னே
மாரளவு தண்ணியிலே
வகைதப்பிப் போனமுன்னே
இடுப்பளவு தண்ணியிலே
எடறியுமே போனமுன்னே

வையை எறங்கயிலே
மட்டத்தி மாலைகொண்ட
மாது நெனவோடலியா
பொய்யை எறங்கயிலே
பிஞ்சிலே மாலைகொண்ட
பொண்ணு நெனவோடலியா

போறதுவே உண்டானா
புள்ளைவச்சுப் போகலியே
மாளுறதே உண்டானா
மஞ்சன் வச்சுப் போகலியே
பெத்தா களைக்கவச்சுப்
போதப் பொறந்த
பொறவியெல்லாம் சோம்பவச்சுஒன்
பிஞ்சான தேவி
பொண்ணு தெகைச்சமுகப்
போனாச் சுகமும் உண்டோ

வளத்தா களைக்கவச்சு
மகுரப்பொறந்த
வளந்தையெல்லாம் சோம்ப வச்சு
மட்டத்து மாது
மாது தெகைச்சமுக
மாண்டாச் சுகமும் உண்டோ

பெத்தாரை அனுப்பாமே
பெரியளளவைக் கட்டாமே
பிள்ளைவனம் போனமுன்னான்
மாதாவை அனுப்பாமே
மகுந்தளளவைக் கூட்டாமே
மஞ்சன்வனம் போனமுன்னான்

சட்டித்தீ கேட்பார்க்குச்
சதுரத்தீ தந்தமுன்னான்
ஓட்டுத்தீ கேட்பார்க்கு
ஓடம்புத்தீ தந்தமுன்னான்

பெத்தாரை அனுப்பிப்
பொன்னுரதம் ஓட்டாமே
வளத்தாரை அனுப்பி
வயிரரதம் ஓட்டாமே
தாயாரை அனுப்பித்
தங்கரதம் ஓட்டாமே

ஈரல் ஒதுக்கி
இளங்குருத்தா வந்ததம்பி
கூந்தல் ஒதுக்கிக்
கொள்ளிவைக்க மாட்டலியே
வயிறை ஒதுக்கி
வளரவச்ச தாயார்க்கு
மயித்தை ஒதுக்கி
மலர்வளக்க மாட்டலியே

பெருந்தவசா வந்தமகன்
பெத்தாரும் போகயிலே
பூவளக்க மாட்டலியே
மாதவசா வந்தமகன்
வளத்தாரும் போகயிலே
மலர்வளக்க மாட்டலியே

மாதவசி மஞ்சன்கை
மலர்வாங்க எட்டலியே
மாததிட்டம் பத்தலியே
வையகத்திச் சொல்லாச்சே
பெருந்தவசிப் புள்ளை கை
பூவாங்க எட்டலியே
பொண்ணதிட்டம் பத்தலியே
பூலோகத்தி சொல்லாச்சே

காவேரித் தண்ணியைக்
கலக்கப் பொறக்கலியா
எள்ளுந் தண்ணியும்
எரைக்கப் பொறக்கலியா
மூவிலையும் தண்ணியும்
தெளிக்கப் பொறக்கலியா
முன்னை முஷ்டை
புடுங்கப் பொறக்கலியா

பெத்தாரும் போனபின்பு
பச்சைநெல்லு வாங்கிப்
பாப்பான் அழைச்சுவச்சு
திதிக்குடுக்க மஞ்சனில்லே
திங்கத் தெவசம்
திதிக் குடுக்க மஞ்சனில்லே
வையகத்தின் சொல்லாச்சே

OOO

## பெண்குழந்தைக்கு

பெண்குழந்தை இறந்தபோது, அதன் அழகும், நிறமும் பற்றியும் கூறி அவையெல்லாம் மண்ணில் புதைந்து போகுமே என வருந்தித் தாய் பாடியது.

கட்டிமுத்த ரத்தினமே
கைநெறஞ்ச குஞ்சலமே
கானமயில் வாகனமே
கல்லெழச்ச மோதிரமே
காலமில்லாப் பாக்கியமே

வாச்சமுத்தே ரத்தினமே
மடிநெறஞ்ச குஞ்சலமே
மயிலாடும் வாகனமே
வயிரம்வச்ச மோதிரமே
வயதில்லாப் பாக்கியமே

தேங்கா நெறமோ
செம்பகப்பூ வாசனையோ
மாங்கா நெறமோ
மல்லியப்பூ வாசனையோ

ஆனிழையை முத்தமிட்டா
அடிநாக்கும் தித்திக்கும்
காரிழையை முத்தமிட்டாக்
கடைவாயும் தித்திக்கும்

கையிச் சிவமாலை
கக்கத்திப் பூமாலை
மடியில் சிவமாலை
வச்சாடும் பூமாலை
கோலக் கிலுகிலுப்பை
கொண்டாடும் பூமாலை
வண்ணக் கிலுகிலுப்பை
வச்சாடும் பூமாலை
திண்டுமெத்தை இரண்டொலுகு
தெருத்திண்ணை இங்கிருக்க
பஞ்சுமெத்தை இரண்டொலுகு
பட்டாலை இங்கிருக்க

வயலா தலகாணி
வயவரப்பா பஞ்சுமெத்தை
செய்யா தலகாணி
செய்வரப்பா பஞ்சுமெத்தை

காட்டுநரி கூட்டமிட்டுக்
கள்ளநரி ஓசையிட்டு
வேட்ட நரிக்கும்
விருந்தாக்கி வச்சமுன்னா

நீலமுழிக் கண்ணிரண்டும்
நிலக்கறையான் திங்கவிட்டோம்
கோலமுழிக் கண்ணிரண்டும்
குழிக்கறையான் திங்கவிட்டோம்
வண்ணமுழிக் கண்ணிரண்டும்
மண்கறையான் திங்கவிட்டோம்

OOO

பெண்குழந்தை இறந்தபோது, பலமரங்களிருக்க அவற்றில் பழங்களைப் பறிக்காமல் தன் குழந்தையைப் பறித்தீரே எனப் பொன் கிளிகளிடம் தாய் கேட்பதாக அமைந்த பாடல்

ஆலம்பழந் திங்கவந்த
அஞ்சுலச்சம் பொன்கிளிகாள்
ஆலம் பழத்திலேயும்
அணையலியே ஒங்கமனம்
அல்லிநல்லா குஞ்சலத்திலே
அணைஞ்சுதோ ஒங்க மனம்

வாழப்பழம் திங்கவந்த
பத்துலட்சம் பொன்கிளிகாள்
வாழப் பழத்திலேயும்
பதியலியே ஒங்கமனம்
பைங்கொடியா குஞ்சலத்திலே
பதிஞ்சுதோ ஒங்கமனம்

எலந்தைப்பழம் திங்கவந்த
எட்டுலச்சம் பொன்கிளிகாள்
எலந்தைப் பழத்திலேயும்
எணங்கலியே ஒங்கமனம்
எளங்கொடியா குஞ்சலத்தில்
எணங்குச்சோ ஒங்கமனம்

நாவப்பழம் திங்கவந்த
நாலுலச்சம் பொன்கிளிகாள்,
நாவப் பழத்திலேயும்
நாடலியே ஒங்கமனம்
நாயகியா குஞ்சலத்தில்
நாடுச்சோ ஒங்கமனம்

OOO

## முதல் பெண்குழந்தைக்கு

முதல்பெண் குழந்தை இறந்தபோது, தன் இறப்பிற்குச் சடங்கு செய்வாள் என நினைத்து ஊட்டி வளர்த்ததையும், எமன் வெற்றி பெற்றான் எனவும் வளரும் பருவத்தில் குழந்தை மறைந்ததே எனவும் வருந்தித்

தாய் பாடியது.

நடுவீட்டில் தொட்டிகட்டி
நான்வளப்பேன் என்கையிலே
நடுக்காட்டில் தொட்டிகட்டி
நமன்வளப்ப முன்னானே

உள்வீட்டில் தொட்டிகட்டி
உளைவளப்பேன் என்கையிலே
இடுகாட்டில் தொட்டிகட்டி
எமன்வளப்ப முன்னானே

கையில்கிளி வளத்தேன்
கானலோகம் போகவிட்டேன்
கானலோகம் போன கிளி
கைக்குவரும் எக்காலம்

பச்சைக்கிளி வளத்தேன்
பறக்கயிலே தப்பவிட்டேன்
பறக்கயிலே போனகிளி
பாதைவரும் எக்காலம்

OOO

## மகளுக்கு

மணமுடிக்க இருந்த மூத்தமகள் இறந்தபோது, மகளின் திருமணம் நடைபெறுமுன்னே மாண்டாளே எனவும், முதல்மகள் தாய்க்குச் செய்யவேண்டிய சடங்கு களைக் செய்யாமற் போனாளே எனவும் வருந்தித் தாய் பாடியது.

பொழுதுஞ் சரியாச்சா
என்பிஞ்சான பொண்ணு
போறதுக்கு நாளாச்சா
நாளுஞ் சரியாச்சா
நாட்டமுள்ளார் மாது
நடப்பதுக்கு நாளாச்சா

பெத்தாரைப் பாவியிங்கப்
பொண்ணு வனம்போனமுன்னே
வளத்தாரைப் பாவியங்க
மாது வனம்போனமுன்னே

மரத்திலிருந்த மயிலோபறந்தா
மரமோ அசைஞ்சுவிடும்
மரமசைஞ்ச நேரமில்லே
நீமாது வனம்போனதும்

கொம்பிலிருந்த குயிலோ பறந்தா
கொம்போ அசைஞ்சுவிடும்
கொம்பசைஞ்ச நேரமில்லே
நீகோதை வனம்போனதும்

செடியிலிருந்த சிட்டோபறந்தா
செடியோ அசைஞ்சுவிடும்
செடியசைஞ்ச நேரமில்லே
நீசீதை வனம்போனதும்

மண்ணால் மணைபோட்டு
மாவால் கோலமிட்டு
வயிரவரும் மாலைவந்து
மாலையிட நானிருந்தேன்
மாலைமணங் கொள்ளாமே
மண்ணு மணங் கொண்டுவிட்டே

பூவசைக்கத் தாகமுன்னு
போதவெள்ளம் சேத்துவெச்சேன்
பூவுமணங் கொள்ளாமே
பூமிமணங் கொண்டுவிட்டே

மலரசைக்கத் தாகமுன்னு
மகுரவெள்ளம் சேத்துவச்சேன்
மாலைமணங் கொள்ளாமே
மண்ணுமணங் கொண்டுவிட்டே

நான்போட்டு வளத்ததெல்லாம்
பொய்யாயிப் போயிருச்சே
அண்ணன்மார் தங்கையின்னு
அருகவச்சுப் பாத்தேனே

அல்லிமலர் சூடலியே
தம்பிமார் ஆச்சியின்னு
தனிச்சுவச்சுப் பாத்தேனே
தங்கமலர் சூடலிலே

மாலையிட்டுப் பாராது
வையகத்துச் சொல்லாச்சே
என்மனசுக்கொரு சூடாச்சே
பூவசைச்சுப் பாராது
பூலோகத்திச் சொல்லாச்சே
பெத்தார்க்கும் சூடாச்சே

செல்லக் கலியாணம்
செய்யவில்ல தாகமுன்னேன்
வருசக் கலியாணம்
மாலையிடத் தாகமுன்னேன்
பொன்னில்லாக் குத்தம்
ஒனக்குப் பூவசைக்க மாட்டலியே
மச்சம் இல்லாக் குத்தம்
ஒனக்கு மாலையிட மாட்டலியே

எண்ணி நெனச்சா
எனக்கு எலும்பு தணல் ஆகுதே
சரியா நெனச்சா
எனக்குச் சதை உருகிப்போகுதே

பொன்னரிசிப் பொண்ணுன்னு
போரோட திங்கவிட்டேன்
மணியரிசிப் பொண்ணுன்னு
மச்சோட திங்கவிட்டேன்

தயிரூத்திச் சோறிட்டேன்
சடங்குக்கு ஒதவலியே
பாலூத்திச் சோறிட்டேன்
பச்சைக்கு ஒதவலியே

பொன்னரிசி குத்தலியே
போகவழி காட்டலியே
பெத்தார்க்கு முந்தியிட்டா
மணியரிசி குத்தலியே
மாளவழி காட்டலியே
வளத்தார்க்கு முந்தியிட்டா

வள்ளி வனத்திலே
மயில்போல் வீத்திருந்தா
வள்ளிவனங் காக்கவந்த
மதிகெட்ட வேடன்அவன்
வள்ளியின்னு எண்ணாமே
மயிலுன்னு எய்துவிட்டான்

சீதைவனத்திலே
செயல்போல் வீத்திருந்தா
சீதைவனங் காக்கவந்த
தெறிகெட்ட வேடன்அவன்
சீதையின்னு எண்ணாமே
செயலுன்னு எய்துவிட்டான்

ooo

திருமணத்திற்கு ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தபோது காய்ச்சலால் இறந்துபோன அழகான மகளுக்குத் தாய் வருந்திப் பாடியது.

சுருக்கா இருந்துதா
தோகை கைலாசம்
கடுசா இருந்துதா
கன்னி கைலாசம்
வெரசா இருந்துதா
மெல்லி கைலாசம்

வாதா வளந்து
மாது ருதுவாகி
மாலையிட்டுப் பாப்பமுன்னு
மனசு நெனக்கையிலே
மாசுருக்காத் தானும்
வனத்தை நெனச்சமுன்னே

போத்தா வளந்து
பொண்ணு ருதுவாகிப்
பூச்சேத்துப் பாப்பமுன்னு

புத்தி நெனைக்கையிலே
பெருஞ்சுருக்காத் தானும்
புனத்தை நெனச்சமுன்னே

தோளளவு வளந்தமக
துயரம்வச்சுப் போனமுன்னே
மாரளவு வளந்தமக
வருத்தம் வச்சுப் போனமுன்னே
கழுத்தளவு வளந்தமக
கவலைவச்சுப் போனமுன்னே

தூருந்தலவும் சோடிச்சபூமாலை
அடியுந்தலவும் அலங்கரிச்ச
பூமாலை
கையும் கணக்கெழுதும்
கருத்தமுழி சேதிசொல்லும்
நெத்தி கணக்கெழுதும்
நீலமுழி சேதிசொல்லும்
பல்லுங் கணக்கெழுதும்
பச்சமுழி சேதிசொல்லும்

ஒன்னைஅசத்து இருப்பமுன்னா
ஒன்அழகுவந்து நேரிடுதே
அழகை அசப்பமுன்னா ஒன்
அருமை வந்து நேரிடுதே
அருமையை அசப்பமுன்னாநீ
ஆத்தான்ன சொல்லை
அசத்துவிட மாட்டலியே

ஒன்னைமறந்து இருப்பமுன்னா
ஒன்வடிவுவந்து நேரிடுதே
வடிவை அசப்பமுன்னாஒன்
வார்த்தைவந்து நேரிடுதே
வார்த்தை அசப்பமுன்னாநீ
மாதான்ன சொல்லை
மறந்துவிட மாட்டலியே

வாங்க வந்துத சண்டாளனுக்கு
மாதைப் போல் மாது

பதுமை பண்ணித் தாரமுன்னோம்
வாங்கவந்தான் சண்டாளன்
பதுமை ஒண்ணும் தேவையில்லே
பாங்கி வரவேணுமின்னான்

புடிக்கவந்த சண்டாளனுக்குப்
பொண்ணைப் போல்பொண்ணு
பொம்மைபண்ணித் தாரமுன்னோம்
பொம்மைஒண்ணும் தேவையில்லே
இந்தப்பொண்ணு வரவேணு
முன்னான்

போதக் குடுத்துப்
பூச்சேத்துப் பாப்பமுன்னு
புத்தி நெனக்கயிலே
பொண்ணுக்கு மாப்பிள்ளை
பூலோகத்துப் பாக்கயிலே
பொண்ணுக்கு அதிட்டமில்லே
பொண்ணுடைய நேரம்
பெருஞ்சுருக்காத் தானும்
பொனத்தை நெனச்சமுன்னே

மகுரக் குடுத்து
மலர்சேத்துப் பாப்பமுன்னு
மனசு நெனக்கையிலே
மாதுக்கு மாப்பிள்ளை
வையகத்துப் பாக்கயிலே
மாதுக்கு அதிட்டமில்லே
மாதுடைய நேரம்
மாசுருக்காத் தானும்
வனத்தை நெனச்சமுன்னே

பொய்யத் தலைவலிக்கும்
பூலோகத்திக் காச்சலுக்கும்
பொண்ணு வனம்போனமுன்னே
மையத் தலைவலிக்கும்
வையகத்துக் காச்சலுக்கும்
மாது வனம்போனமுன்னே

ஏடெடுத்துப் பாத்தவனும்
இத்தி வயதுங்கலியே
குறிப்புஎடுத்துப் பாத்தவனும்
கொஞ்ச வயதுங்கலியே

அழகை எழுதினவன்
ஆயுள்எழுத மாட்டலியே
வடிவை எழுதினவன்
வயசெழுத மாட்டலியே

உக்கருத்தும் பாவனையும்
ஒருவர் அறிஞ்சதில்லே
ஒக்க இருந்தார் கத்ததில்லே
மனக்கருத்தும் பாவனையும்
மனுசர் அறிஞ்சதில்லே
மறுத்திருந்தார் கத்ததில்லே

ஆண்டி எழுத்தா
அறியாதான் கையெழுத்தா
சித்தன் எழுத்தா
தெரியாதான் கையெழுத்தா

OOO

**மிகச்சிறப்பாகச் சீர் வரிசைகள் செய்து மணமுடித்துக் கொடுத்த முதல்மகள், மக்கள் பெறாமலே மாண்டதற்குத் தாய் வருந்திப் பாடியது.**

நாளோ சரியாச்சோ
நடப்பதுக்கு நாளாச்சோ
பொழுதோ சரியாச்சோ
எம்பிஞ்சான பொண்ணு
போவதுக்கு நாளாச்சோ

அப்பப் பொறந்தமக
ஆசைக்கலி தீத்தமக
முந்திப் பொறந்தமக
முடிமார்க்கம் தீத்தமக
தலத்திலே பொண்பொறந்து
தாகவிடாய் தீத்தமக

ஆதியிலே பொண்பொறந்து
ஆசை தெளிச்சமக
அன்னவிடாய் தீத்தமக

அத்தின புரத்துக்கும்
ஐயான்ன பேத்தியில்ல
அங்கவள நாட்டுக்கும்
ஐயான்ன பேத்தியில்ல
முத்துவள நாட்டுக்கும்
மொறமை சொன்ன பேத்தியில்ல

போத்துவார் எல்லையிலே
போதத்தனங் குடுத்துப்
புதுவயிரம் சீர்குடுத்துப்
போதவெள்ளம் சாமானைப்
பூமிப் பரப்பிவச்சு
போரழகி மஞ்சருக்குப்
பூவசைச்சோம் ஓவியமா
பூவசைச்ச ஓவியம்போல்
பொண்ணு திருவகுத்தில்
புள்ளை நெழலாடலியே
பெருஞ்சேனை கூட்டிப்
பூடு குடிக்கலியே
புள்ளை மொதலாகலியே

வருந்துவார் எல்லையிலே
மகுரத்தனங் குடுத்து
மணிவயிரம் சீர்குடுத்து
மகுரவெள்ளம் சாமானை
வளவில் பரப்பிவச்சு
வாவரசி மஞ்சருக்கு
மலரசைச்சோம் ஓவியமா
மலரசைச்ச ஓவியம்போல்
மாது திருவகுத்தில்
மஞ்சன் நெழலாடலியே
மாசேனை கூட்டி
மருந்து குடிக்கலியே
மஞ்சன் மொதலாகலியே

ஆத்திலுள்ள தண்ணியே
அலறக் குளியாயே
அலறக் குளிச்சாலும்
அலைவந்து மோதாதே
குளத்திலுள்ள தண்ணியே
குளிரக் குளியாயே
குளிரக் குளிச்சாலும்
கொழைவந்து மோதாதே

அன்னநடை நடப்பே
ஆதரிச்சு வாதெறப்பே
மெல்லநடை நடப்பே
மெத்தனமா வாதெறப்பே
பையநடை நடப்பே
பனிபோல வாதெறப்பே

அன்னம்போல் செல்லிநீ
அமுதுபோல் பாஞ்சாலி
பதட்டம் பதட்டம் போம்
பைய வரட்டும்பே
மெத்தப் பதட்டம்போம்
மெதுவே வரட்டும்பே

அழகை எழுத
ஆயிரநாச் செல்லுமே
வடிவை எழுத
வருசமொண்ணு செல்லுமே

பொண்ணு திருவழகு
புதுவயிர மின்னொளிவோ
மாது திருவழகு
வயிரத்து மின்னொளிவோ

பொன்னாண்டு மண்ணாண்டு
பெருவாரிநா வாழ்ந்து
போறதொரு நாளையிலே
பெரியமக கையி
பொன்னரிசி வாங்கலியே
போர்பெத்துப் போகலியே

மண்ணாண்டு பொன்னாண்டு
மட்டத்தநா வாழ்ந்து
மாளுறதொரு நாளையிலே
மகுந்தமக கையி
மணியரிசி வாங்கலியே
வரிசைபெத்துப் போகலியே

புண்ணியவார் மாப்பிள்ளை
பிம்பொருதர் மாப்பிள்ளைதான்
மகராசா மாப்பிள்ளை
மத்தொருதர் மாப்பிள்ளைதான்
மதிச்சமுடி மாப்பிள்ளை
மத்தொருதர் மாப்பிள்ளைதான்
பெருஞ்சமத்தர் மாப்பிள்ளை
பிம்பொருதர் மாப்பிளைதான்

OOO

சிறப்பாக மணம்முடித்த மகள், ஓராண்டு முடிவதற்குள் பிள்ளைப் பேறின்றி, உறவினர் எல்லாம் வருந்தும்படியாக இறந்து போனபோது தாய் வருந்திப் பாடியது.

பொழுதோ சரியுமில்லே
என் பிஞ்சான மாது
போகுறநாள் இப்பவில்லே
நாளோ சரியுமில்லே
நடக்குறநாள் இப்பவில்லே
சரியோ சரியுமில்லே
சாகுறநாள் இப்பவில்லே

போதத் தனம் குடுத்துப்
பொழிஞ்சாண்டார் எல்லை
பெருஞ்சமத்துக் காரருக்குப்
பூச்சேத்துப் பாக்கயிலே
பொழிஞ்சிருக்க வேணுமுன்னு
பூவெடுத்துச் சாத்தலையா
பிஞ்சுத்தெனை வெதைச்ச
பொழபாவன் சீமை
பொண்ணுக்கோ ராசியில்லே

பொங்குதே கண்ணீரு

என் மட்டமுள்ள மாதை
மகுரத்தனங் குடுத்து
மதிச்சாண்டார் எல்லை
மாசமத்துக் காரருக்கு
மலர்சேத்துப் பாக்கயிலே
மகவாழ வேணுமுன்னு
மலரெடுத்துச் சாத்தலையா
வறுத்த தெனை வெதைச்ச
மாபாவன் சீமை
மாதுக்கோ ராசியில்லே

வையகத்தி உள்ளவுக
மாலையிட்டுப் பாத்தவுக
மகிழ்ச்சிதான் எம்பாக
வளத்துவரப் பாப்பாக

பூலோகத்தி உள்ளவுக
பூச்சேத்துப் பாத்தவுக
பெருமைதான் எம்பாக
பெத்துவரப் பாப்பாக

வெளையும் நெலமுன்னு
வெள்ளரியைப் போட்டுவந்தோம்
வீசிப் படரலியே
வெதைமிச்சம் ஆகலியே

காய்க்கும் நெலமுன்னு
கத்திரியைப் போட்டுவந்தோம்
காய்ச்சுச் சொலிக்கலியே
காய்மிச்சம் ஆகலியே

பூக்கும் நெலமுன்னு
பூசணியைப் போட்டுவந்தோம்
பூத்துச் சொலிக்கலியே
பூமிச்சம் ஆகலியே

மலர்சேத்த வருசந்திரும்பாமே
மன்னர் மயங்கவச்சு
மாசேனை வாட்டம்வச்சு
வளத்தாரைச் சோம்பவச்சு
மாமியா மயங்கவச்சு
மட்டவயசில் வாவரசியாக
மன்னர்கைக் கண்டாங்கி
வரிசைபெத்துப் போனமுன்னே

பூச்சேத்த போதந்திரும்பாமே
பெருமா மயங்கவச்சு
பெருஞ்சேனை வாட்டம் வச்சு
பெத்தாரைச் சோம்பவச்சுப்
பூமாமி களைக்கவச்சுப்
பிஞ்சுவயசில் போரழகியாகப்
பெருமாள்கைக் கண்டாங்கி
புகழ்பெத்துப் போனமுன்னே

மாசேனை அத்தனைக்கும்
மனசுக் கெசஞ்சிருப்பே
மாமியாருக்குத் தானும்
வார்த்தைக் குரிமையா
மனசுக் கெசஞ்சிருந்தே
மறுத்திருக்கக் காலமில்லே

பெருஞ்சேனை அத்தனைக்கும்
புத்திக் கெசஞ்சிருப்பே
பூமாமிக்குத் தானும்
பேச்சுக் குரிமையா
புத்திக் கெசஞ்சிருந்தே
பிம்பிருக்கக் காலமில்லே

சேனை தளத்துக்கும்
சேதிக் கெசஞ்சிருப்பே
செல்லருடைய ஆத்தாளுக்குச்
சேதிக்கு உரிமையா
சிந்தைக் கெசஞ்சிருப்பே
சேந்திருக்கக் காலமில்லே

மன்னர் பொறந்தையெல்லாம்
வளந்தையுட தேவியின்னா
மனப்பிரியம் தோணுதும்பா

மகிழ்ந்திருக்க ஆசையிம்பா

பெருமா பொறந்தையெல்லாம்
பொறந்தையோட தேவியின்னா
புத்தி மகிழ்ந்திருப்பா
பேசியிருக்க ஆசையிம்பா

சதுரகிரி மேடையிலே
சவுத்துவந்த மல்லியப்பூ
நீமுடிச்சு நீவாழ்வாய்
நிச்சயந்தான் என்னிருந்தோம்
ஆர்முடிச்சு ஆர்வாழ
ஆரணங்கே சம்மதிச்சே

வடமதுரைச் சீமையிலே
மதிச்சுவந்த மல்லியப்பூ
மாதுமுடிச்சு மாதுவாழ்வாய்னு
மனசு நெனச்சிருந்தோம்
மத்தொருதர் வாழ
மனசோ சம்மதிச்சே

புடிச்சபுடி இருக்கப்
புடிநழுவிப் போனமுன்னே
கட்டிப்புடி இருக்கக்
கைநழுவிப் போனமுன்னே

கொட்டி முழக்கிக்
கொடுத்துவிட்ட சாமானை
குமுறி அழுது
கொண்டுவரச் சொன்னமுன்னே
அடிச்சு முழக்கி
அள்ளிவிட்ட சாமானை
அழுது மயங்கி
அள்ளிவரச் சொன்னமுன்னே

போறதுவே மெய்யானா
புள்ள வச்சுப் போனாக்கப்
போதவெள்ளம் சாமானும்
பொண்ணுடைய சீதனமும்
புள்ளையிடம் காட்டுவமே
போரழகி பேர்துலங்கும்

மாளுறதே மெய்யானா
மஞ்சன்வச்சுப் போனாக்க
மகுந்தவெள்ளஞ் சாமானும்
மாதுடைய சீதனமும்
மஞ்சனிடம் காட்டுவமே
மாதொடைய பேர்விளங்கும்

ஆயிரத்தில் ஒண்ணு
அடிப்பாத்து வச்சமக
கோத்திரத்தில் ஒண்ணு
குலம்பாத்து வச்சமக
நூத்திலொரு மாப்பிளை
பாத்தெடுத்து வச்சமக

பொண்ணு திருவகுத்தில்
புள்ளை நெழலாடலியே
பூடு குடிக்கும்
பெருமைகளைக் காணலியே
பேராசை தீரலியே

மாது திருவகுத்தில்
மஞ்சன் நெழலாடலியே
மருந்து குடிக்கும்
மகிழ்ச்சிகளைக் காணலியே
மனசாசை தீரலியே

தென்னை பழுத்துத்
தெருவில் சொரிஞ்சாலும்என்
சீதையில்லாவாசல் இந்தத்
தென்னையின்மேல் சிந்தைஇல்லே
தெருவில்வர ஆசையில்லே

வாழை பழுத்து
வளவில் சொரிஞ்சாலும்என்
மாதில்லாவாசல் இந்த
வாழையின் மேல் சிந்தையில்லே

வளவில்வர ஆசையில்லே

பிள்ளையின்றி இறந்து
போனமகளின் சீர்வரிசைப்
பொருட்களைப் பிறந்த
வீட்டாரே திரும்ப
எடுத்துச் செல்லும்
வழக்கம் புலனாகிறது.

OOO

பி.இ. படித்தவளும், புத்தி கூர்மை மிக்கவளுமான மகளை மணமுடித்துக் கொடுத்து, கணவனுடன் வாழாமல் தனித்து வாழ்ந்த மகள் பேருந்து விபத்தினால் மாண்டுவிட, கணவனுடன் மகளை வாழவிடாமற் செய்தவள் மாமியார் என்றும், தான் வணங்கிய தெய்வங்கள் எல்லாம் கைவிட்டனவே என்றும் தாய் வருந்திப் பாடியது.

பொறக்கக் கடைசாரி
பிஞ்சான பொண்ணு
மதுரை நகரத்தில்
வாசிச்ச தங்கையின்னேன்
பாண்டியனார் எல்லையிலே
படிச்சு வந்த பொண்ணுமின்னேன்
பி.ஈ.படிச்ச மக
பெலான பொண்ணுமின்னேன்
காலேஜ் படிச்சுவந்த
களையான தங்கையின்னேன்
பட்டங்கள் வாங்கிய
பவுரான பொண்ணுமின்னேன்
கம்ப்யூட்டர் படிச்சு
கணக்குகள் போட்ட
கனசமத்துப் பொண்ணுமின்னேன்
எம்.ஈ. படிக்க இருந்த
என்சமத்தி மாதுமின்னேன்.

மட்டமுள்ள தம்பி
மகுரக் கொடுப்போம்
மாப்பிள்ளையைப் பாருமின்னான்
பிஞ்சான தம்பி
போதக் கொடுப்போம்
பொய்ம்மானைத் தேடுமின்னான்

மாது உயரமின்னேன்
மகுந்த படிப்புமின்னேன்
மாதுக்கு எசஞ்ச
மாப்பிள்ளையைத் தேடி
வையகத்தைச் சுத்திவந்தேன்
இந்த மாபாவி எல்லையிலே
மறுநாடு போற
மாதுமணவாளருன்னேன்
நாங்க மன்னரும் தேவியரும்
மறுநாடு போனாக்க
மச்சம் மகிருமுன்னு
மனசாசைப் பட்டுவிட்டா
மாப்பிள்ளையைப் பாராமே
மைக்காலே பேசுனதுக்கு
மாதோ சம்மதிச்சா

பொண்ணு உயரமின்னேன்
பெரிய படிப்புமின்னேன்
பொண்ணுக்கு எசஞ்ச
பொய்ம்மானைத் தேடி
பூலோகத்தைச் சுத்தி வந்தேன்
இந்தப் பெரும்பாவி எல்லையிலே
பொறநாடு போற
பொன்னி மணவாளருன்னேன்
நாங்க பெருமாளும் தேவியரும்
பொறநாடு போனாக்க
பொன்னோ மகிருமுன்னு
பேராசைப்பட்டு விட்டா
பொய்ம்மானைப் பாராமே
போனிலேயும் பேசி
பொண்ணோ சம்மதிச்சா

பொன்னா கருணனெல்லாம்
போதக் குடுத்தாய்ங்க
பிஞ்சான தம்பியும்
புதுவயிரம் சீர்குடுத்தான்
எங்க பூமியெல்லாம் பூவுதிர
பூச்சேத்துப் பாத்தமுன்னேன்

வருசக் கருணனெல்லாம்
மகுரக் குடுத்தாய்ங்க
மட்டமுள்ள தம்பியும்
வயிரநகை சீர்குடுத்தான்
எங்க வளவெல்லாம் பூவுதிர
மாலையிட்டுப் பாத்தமுன்னேன்

பூச்சேத்துப் பாக்கையிலே
பொய்ம்மானைப் பாத்திருந்தா
பொழுது மூன்று வாழ்ந்திருந்தா
பெத்தாரும் பேச்சாலே
பொண்ணை அழச்சு அவன்
பொறநாடும் போகவில்ல

மலர்சேத்துப் பாக்கையிலே
மாப்பிள்ளையைப் பாத்திருந்தா
மாதம் மூன்று வாழ்ந்திருந்தா
வளத்தாரும் பேச்சாலே
மாதை அழச்சு அவன்
மறுநாடும் போகவில்லை

அவள் மறுத்தும் ஒருக்கா
மயில நிறமுன்னு
மன்னரையும் பார்க்கவில்லே
பின்ன நிறமுன்னு
பெருமாளைப் பார்க்கவில்லே
இன்ன நிறமுன்னு
இந்திரரைப் பார்க்கவில்லே

பெருமாளும் தேவியும்
பொங்கியுண்ணு பாராதா
பூலோகத்தி ரொம்ப இருக்கா
புதுக்கோட்டை கோர்ட்லேயும்
போர் செய்து நின்னவுக
பூலோகத்தி ரொம்ப இருக்கா
பிஞ்சான தங்கை
புதுக்கோட்டை கோர்ட்லேயும்
போர் செய்து நிக்கவில்லே

மன்னரும் தேவியும்
வடிச்சுன்னு பாராதா
வையகத்தில் மெத்த இருக்கா
மதராசுக் கோர்ட்டிலேயும்
வாது செய்து நின்னவுக
வையகத்தில் மெத்த இருக்கா
மட்டமுள்ள தங்கை
மதராசுக் கோர்ட்டிலேயும்
வாது செய்து நிற்கவில்லே

சங்கரம் பொங்கலுன்னு
பொங்கல் மொறை கொண்டு
அந்த பூமி போய்ச் சேந்தமுன்னா
அந்தப் பெரும்பாவி சண்டாளி
பொங்கலுன்னு பாராமே
பொங்கலிட்டு உண்ணாமே
பொண்ணை வெரட்டிவிட்டா
பிஞ்சான பொண்ணும்
புத்தி தெகைச்சு இந்த
பூமிவந்து சேந்தமுன்னா

மகதேவர் பொங்கலுன்னு
வருசமொறை கொண்டு
அந்த வளவில்போய்ச்
சேந்தமுன்னா
மகதேவர் பொங்கலுன்னு
மனசிலேயும் எண்ணாமே
வாரியுங்க விடாம
மாதை வெரட்டி விட்டா
மட்டமுள்ள தங்கை
மனமோ தெகைச்சு இந்த
வளவில் வந்து சேந்தமுன்னா

பெரும்பாவி சண்டாளன்
போனிலேயும் பேசலன்னு
புத்தி தெகைச்சமுதா
மாபாவி சண்டாளன்
மைக்கிலேயும் பேசலன்னு
மனமோ தெகைச்சமுதா

நான் மாபாவி ஆத்தா
வலுச் சொல்லி நின்னமுன்னேன்
மட்டமுள்ள தங்கை
மனசோ களைச்சாலும்
மதராசுப் பட்டணத்தில்
மனசு தெடத்தாலே
வடிச்சுன்னு பாத்தமுன்னா

நான்பெரும்பாவி ஆத்தா
பெலஞ்சொல்லி நின்னமுன்னேன்
பிஞ்சான தங்கை
புத்தி களைச்சாலும்
புகழ்பெரிய சீமையில்
புத்தி தெடத்தாலே
பொங்கியுண்ணு பாத்தமுன்னா

மட்டமுள்ள தங்கை
வையகத்தைச் சுத்தி
மாளும் சமயம் இந்த
வளவில் வந்து சேந்தமுன்னா

பிஞ்சான தங்கை
பூலோகத்தைச் சுத்தி
போகும் சமயம் இந்தப்
பூமிவந்து சேந்தமுன்னா

நான் மைப்போல சோறு தங்கைக்கு
வடிச்சிட்டுப் பாத்திருந்தேன் அவள்
வாரியுண்ணு பாத்திருந்தா
மாதாவும் பிள்ளையும்
வார்த்தை மகிழ்ந்திருந்தோம்

நான் பூப்போல சோறு தங்கைக்குப்
பொங்கியிட்டுப் பாத்திருந்தேன்
அவள்
புடிச்சுண்ணு பாத்திருந்தா
பெத்தாரும் பிள்ளையும்
பேசி மகிழ்ந்திருந்தோம்.

இந்தப்பூமிவிட்டுத் தாண்டயிலே
பொய்கைவிட்டுப் போகயிலே
பெசல்காரு ஏறயிலே
பிம்பு வரமாட்டமுன்னு
பிறழ அடி வச்சமுன்னா

இந்த மண்ணைவிட்டுத்
தாண்டயிலே
வையை விட்டுப் போகயிலே
மணிக்காரு ஏறயிலே
மறுத்து வரமாட்டமுன்னு
மாறி அடி வச்சமுன்னா

மருவத்தூரா சன்னிதியில்
மாபாவி ஓட்டிய
மணிக்காரு அடிக்கையிலே
மணிக்காருக்குள்ளாக
மகாசனங்கள் இருக்கையிலே
நீ மாதொருதி மாண்டுவிட்டே

பெரிய தலத்திலே போய்
பெரும்பாவி ஓட்டிய
பெசல்காரு அடிக்கையிலே
பெசல் காருக்குள்ளே
பெருஞ்சனங்கள் இருக்கையிலே
நீபொண்ணொருதி மாண்டுவிட்டே

மணிக்காருக்குள்ளாக நீ
மாது மடியயிலே
நான் மாபாவம் செய்தாத்தா
மாதா நினைவோடலையா
பெசல் காருக்குள்ளாக நீ

பொண்ணு மடியயிலே
நான் பெரும்பாவம் செய்தாத்தா
பெத்தா நினைவோடலையா

நான் மாதொருதி மக்களுண்ணோன்
மகுந்த குடும்பமின்னேன்
மையொசந்த மக்களுக்கு
வயசு நூறு வேணுமின்னேன்
மதுரையின் மீனாளை
மாறாமக் கையெடுத்தேன்

நான் சின்னமுள்ள மக்களுக்குப்
பொண்ணும் ஒருத்தியின்னேன்
பெரிய குடும்பமுன்னேன்
பொலிஞ்சிருக்க வேணுமின்னேன்
என் சின்னமுள்ள மக்களுக்கு
எழுத்துநூறு வேணுமின்னேன்

மாலைக் கழுத்தியை
மாறாமல் கையெடுத்தேன்
பொன்னால கொப்பியைப்
பெசகாமக் கையெடுத்தேன்
பொன்னி வள நாட்டில்
நாங்க பெத்தாரும் பொண்ணும்
போகாத கோயில் இல்லை
காஞ்சிபுர நாட்டினில்
கைஎடுகாத் தெய்வமில்லை
மதராசுப் பட்டணத்தில்
வணங்காத தெய்வமில்லே
அண்ணாமலையாரை நான்
அடிபணியத் தொண்டனிட்டேன்
மகுந்த தலமெல்லாம்
மகதேவர் கையெடுத்தேன்
பூலோகத்துத் தெய்வமெல்லாம்
பெசகாமல் கையெடுத்தேன்
மாயவனார் கோயில் எல்லாம்
மாறாமக் கையெடுத்தேன்
அரிராமர் கோயில் எல்லாம்
அசராமக் கையெடுத்தேன்
சமயபுரம் மாரியை
சலியாமக் கையெடுத்தேன்

நம்ம சுந்தரேசர் கோவிலிலே
வருசமொருக்கா
வாவரசிப் பொண்டுக
மணிவிளக்குப் பூசை செய்ய
மாபாடு பட்டமுன்னேன்
போதம் ஒருக்கா
போரழகிப் பொண்டுக
பொன்விளக்குப் பூசைசெய்ய
பெரும்பாடு பட்டமுன்னேன்

சிவனார் திருக்கோவில்லே
திருவிளக்குப் பூசை
செய்துமே நான் வச்சுவந்தேன்
மாமாங்கம் ரெண்டு
மகதேவர் கோவில்லே
மணிவிளக்குப் பூசை
செய்துமே வச்சு வந்தேன்

இல்லையா தெய்வம்
இருந்துமா காக்கவில்லை
மருவத்தூர் அம்மா
மயிலணையைக் காக்கலியே
ஏரிகாத்த ராமர்
ஏந்திழைக் காக்கலியே
நான் கும்பிட்ட தெய்வமெல்லாம்
கூட இருந்து காக்கலியே
நான் கையெடுத்த தெய்வமெல்லாம்
கைவிடத் துணிஞ்சுதே

இத்தி இலங்காத
ஈஸ்வரியைத் தெண்டனிட்டேன்
சத்தே இலங்காத
சண்முகரைத் தெண்டனிட்டேன்
கொஞ்சம் இலங்காத

கொப்பத்தாவைத்
தெண்டனிட்டேன்

மயிலாடு கன்னி
வடிவொசந்த ராசகன்னி
புருவச் செயலழகி
பொட்டொசந்த பொண்ணு
புள்ளிமயில் போல நீ
புறப்பட்ட மின்னாயே

வையைக் கரையோரம்
மயில்குஞ்சு மேயயிலே
மாயக் கருடன்
மயில்குஞ்சைக் கவ்வி
வனத்தில் மறஞ்சாப்போல்
நீ மயில் போலப் பொண்ணு
வனத்தில் மறஞ்சுவிட்டே

கொளத்தங் கரையோரம்
குயில்குஞ்சு மேயயிலே
கூரிய நாகம்
குயில் குஞ்சைக் கவ்வி
கூட்டில் மறஞ்சாப்போல்
நீ குயில் போலப் பொண்ணு
கோதை மறஞ்சுவிட்டே

ooo

## மாமியாருக்கு

தன்னை மகள்போலக் கருதி அன்புபாராட்டிய மாமியார் விடியற்காலைநேரம் இறந்தபோது, மாமியார் நிறைய மக்கள் பெற்றுச் சிறந்திருந்ததையும், தன்னிடத்தில் சண்டையே போடாததையும், செல்வமும் செல்வாக்கும் உடையவளாய்த் திகழ்ந்ததையும் சிறப்பாக வாழ்ந்தது போல, சிறப்பாக இறுதிக் கடன்கள் செய்யப் பெற்றதையும் கூறி மருமகள் வருந்திப் பாடியது.

காலப் பொழுதிலே
கதம்பமல்லி பூக்கயிலே
கதிரவனார் சூரியனார்
கலந்துதயம் ஆகயிலே
கானமயில் கூவயிலே
கன்னி சிறியரெல்லாம்
கடவு தெளிக்கயிலே
கட்டிமக்கள் அப்பத்தா
கைலாசம் கண்டமுன்னா

அதிகாலை வேளயிலே
அடுக்கரளி பூக்கயிலே
அருணோதயம் ஆகயிலே
அழகுமயில் கூவயிலே
ஆண்டிருக்கும் பொண்களெல்லாம்
அள்ளித் தெளிக்கயிலே
ஆசைமக்கள் அப்பத்தா
அடஞ்சா கைலாசம்

பொழுது விடியயிலே
பூக்கள் மலரயிலே
பொழுது உதயம் ஆகயிலே
பொய்க்கோழி கூவயிலே
பூலோகத்திப் பொண்களெல்லாம்
பூமி தெளிக்கயிலே
பிஞ்சுமக்கள் மப்பத்தா
போகநாக் கேட்டமுன்னா

மருளும் மசண்டயிலே
மல்லியப்பூ பூக்கயிலே
மைக்கோழி கூவயிலே
வயகத்துச் சூரியனார்
வந்துதயம் ஆகயிலே
வாழ்ந்திருக்கும் பொண்களெல்லாம்
வாசத் தெளிக்கயிலே
வாழும்மக்கள் அப்பத்தா
மாளநாக் கேட்டமுன்னா

நாளுஞ் சரியாச்சா
நாட்டமுள்ளார் மாது
நடப்பதுக்கு நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா
பிஞ்சுமக்கள் அப்பத்தா
போறதுக்கு நாளாச்சா

வாழுமக்கள் அப்பத்தாவை
மாது ருதுஆகாமே
மாசமத்தி ஆயா
மாத்து தலையா
மாலையிட்டுப் பாத்தாளாம்
மாலையிட்ட ஓவியம்போல்
மாசமத்தி ஆயா
மாதழைச்ச சித்திரம்போல்
வாழ்வாக் கொறையுமில்லே
மக்களுன்னா அட்டியில்லே
மலர்ச்செண்டும் பம்பரமும்
மலந்தமலர் ரோசாவும்
வடமதுரை மீனாள்
மார்பதைக்கம் மின்னலைப்போல்
மகுரமக்கள் கண்டிருந்தா
மாத்திமக்கள் பெத்திருந்தா
வளத்ததொரு மக்களுக்கு
மாலையிட்டுப் பாத்திருந்தா
மாலையிட்ட மக்கள் எல்லாம்
வளத்துவரக் கண்டிருந்தா

பிஞ்சுமக்கள் அப்பத்தாவைப்
பொண்ணு ருது ஆகாமே
பெருஞ்சமத்தி ஆயா
பின்னு தலையாப்
பூச்சேத்துப் பாத்தாளாம்
பூச்சேத்த ஓவியம்போல்
பெருஞ்சமத்தி ஆயா
பொண்ணழைச்ச சித்திரம்போல்
போராக் கொறையுமில்லே
புள்ளையின்னா அட்டியில்லே

பூச்செண்டும் பம்பரமும்
பூத்தமலர் ரோசாவும்
புகழ்மதுரை மீனாள்
பொன்பதைக்கம்
மின்னலைப்போல்
போதமக்கள் கண்டிருந்தா
பின்னிமஞ்சன் பெத்திருந்தா
பெத்ததொரு மக்களுக்குப்
பூச்சேத்துப் பாத்திருந்தா
பூச்சேத்த மக்களெல்லாம்
பெத்துவரப் பாத்திருந்தா

பொண்களுடை வாசலெல்லாம்
பொங்கல் பகிசிகளும்
பொட்டுவண்டிச் சோடனையும்
பெரும்பகிசி பாக்கலியே
போர்விசயன் கண்காட்சி
பிம்பிருந்து பாக்கலியே

மக்களுடை வாசலெல்லாம்
மயில்வண்டிச் சோடனையும்
மக்கள் பகிசிகளும்
மறுத்திருந்து பாக்கலியே
மஞ்சன் அரசாட்சி
வாள்விசயன் கண்காட்சி
மறுத்திருந்து பாக்கலியே

ஐத்தை சலிச்சதில்லே
அயல்வளவு போனதில்லே
மாமி சலிச்சதில்லே
மறுவளவு போனதில்லே
மாமி சலிச்சாலும்
மறுவளவு போனாலும்
ஐத்தை சலிச்சாலும்
அயல்வளவு போனாலும்
வாள்விசயன் தேவியிடம்
வம்பாகச் சொன்னதில்லே
வார்த்தைசொல்லி நின்னதில்லே

வாதாடி நின்னதில்லே
சேதிவந்து நின்னாலும்
சீராடி நின்னதில்லே
பேச்சுவந்து நின்னாலும்
போராடி நின்னதில்லே

வாழும் மக்கள் அப்பத்தா
வையகத்தி சொல்லுக்கு
வாள்விசயன் தேவியிம்பா
மனசுக்கும் தொண்டைக்கும்
வளத்தபிள்ளை போலயிம்பா
மாதுமணவாளர் எல்லாம்
மகுந்தமகன் போலயிம்பா

பிஞ்சுமக்கள் அப்பத்தா
பூலோகத்தி சொல்லுக்குப்
போர்விசயன் தேவியிம்பா
புத்திக்கும் தொண்டைக்கும்
பெத்தபுள்ளை போலயிம்பா
பொண்ணுமணவாளர் எல்லாம்
பெரியமகன் போலயிம்பா

ஆனைமேல் வாரவனும்
அஞ்சுவான் வாய்திறக்க
ஆனைவிட்டுக் கீழெறங்கி
ஆத்தாசரணம் என்பான்

குதிரைமேல் வாரவனும்
கூசுவான் வாய்திறக்கக்
குதிரைவிட்டுக் கீழெறங்கிக்
கோடிசரணம் என்பான்

காலெடுக்கச் செல்வம்
கனகம் சொரிஞ்சுதாம்
அடிஎடுக்கச் செல்வம்
அள்ளிச் சொரிஞ்சுதாம்
மோதிரக்கால் வச்சாளாம்
முத்தாக் குவிஞ்சுதாம்
பாடகக்கால் வச்சாளாம்
பணமாக் குவிஞ்சுதாம்
கணுக்கால் வச்சாளாம்
கனகம் சொரிஞ்சுதாம்

செல்லமக்கள் அப்பத்தா
சட்டித்தயிர் கடஞ்சா
சம்பத்தை ஆண்டிருந்தா
சத்தியர்க்கு வாழ்ந்திருந்தா

பிஞ்சுமக்கள் அப்பத்தா
பானைத்தயிர் கடஞ்சா
பாக்கியத்தை ஆண்டிருந்தா
பாண்டியர்க்கு வாழ்ந்திருந்தா

வாழும் மக்கள் அப்பத்தா
முட்டித்தயிர் கடஞ்சா
முக்கடலை ஆண்டிருந்தா
முடிமன்னர் பாரியின்னா

முத்துவெளையும் மொதக்கடலில்
பொண் பொறந்தா
முழுவயிரங் கண்பாக்கும்
தருமருக்குப் பாரியின்னா

பவளம்வெளையும் பாக்கடலில்
பொண் பொறந்தா
பவளம் வெலைமதிக்கும்
பாண்டியர்க்குப் பாரியின்னா

இராசசபை பொண் பொறந்தா
நடனசபை பாரியின்னா
தேவசபை பொண்பொறந்தா
திருச்சபையா பாரியின்னா

மாதுவந்த நாமொதலா
மல்லியப்பூ நந்தவனம்
பொண்ணுவந்த நாமொதலாப்
பிச்சிப்பூ நந்தவனம்
சீதைவந்த நாமொதலாச்
செவந்திப்பூ நந்தவனம்

அல்லிவந்த நாமொதலா
அடுக்கரளி நந்தவனம்
கோதைவந்த நாமொதலாக்
கொடமல்லி நந்தவனம்

வாழுமக்கள் அப்பத்தா
வளந்த ஒசத்திபோல
வரிசைபெத்தா ஓவியமா
பிஞ்சுமக்கள் அப்பத்தா
பெத்த ஒசத்திபோலப்
பேர்பெத்தா ஓவியமா

முத்துமுடி தரிச்ச
மூத்தமகன் கொள்ளியுண்டு
முழுவயிரம் பூண்டிருந்த
மெல்லிநல்லா பச்சையுண்டு

வாள்விசயன் மக்களும்
மாது திரவியமும்
வளவு நெருங்கி
மலரடியைச் சுத்தி
வளத்த ஒசத்திபோல
வரிசைபெத்தா ஓவியமா

போர்விசயன் மக்களும்
பொண்களுடை மக்களும்
பூமி நெருங்கிப்
பூவடியைச் சுத்திப்
பெத்த ஒசத்திபோலப்
பேர்பெத்தா ஓவியமா

பிஞ்சுமக்கள் அப்பத்தா
போத்தின மாமி
பொனம் பாக்கப் போனது
பொறுக்க எணங்கலியே
பொங்குது கண்ணீரு

வாழுமக்கள் அப்பத்தா
வருந்தின மாமி
வனம் பாக்கப்போனது
மனது எணங்கலியே
மருகுது கண்ணீரு

OOO

மக்கட்செல்வம் நிறையப் பெற்றவளும், பேரக் குழந்தைகளை அன்போடு பேணியவளுமாகிய மாமியார் இறந்தபோது மருமகள் வருந்திப் பாடியது.

பொழுதுஞ் சரியாச்சா
பிஞ்சுமக்கள் அப்பத்தா
பொழிஞ்சாண்டார் தேவி
போறதுக்கு நாளாச்சா
நாளுஞ் சரியாச்சா
நாடாண்டார் தேவி
நடப்பதுக்கு நாளாச்சா

இருந்தநாப் போதுமுன்னா
எறக்கநாக் கேட்டமுன்னா
வாழந்தநாப் போதுமுன்னா
மாளநாக் கேட்டமுன்னா

பிஞ்சு வயசில்
நாடாண்ட ஐயாக்க
போதமொறை குடுத்துப்
பெரியநகை சீர்குடுத்துப்
பெருவாரிச் சாமானைப்
பூமிப் பரப்பிவெச்சுப்
பூமியெல்லாம் பூவுதிரப்
பூவசைச்சா ஓவியமா
பூவசைச்ச ஓவியம்போல்
போதமக்கள் பெத்திருந்தா
பிஞ்சுமக்கள் அப்பத்தா
பின்னிமஞ்சன் பெத்திருந்தா
புத்திரரும் செல்வமும்
பொருந்தக் கொழிச்சிருந்தா

மட்ட வயசில்

மதிச்சாண்டார் எல்லை
மகுர மொறைகுடுத்து
வயிரநகை சீர்குடுத்து
மட்டத்த சாமானை
வளவில் பரப்பிவச்சு
வளவெல்லாம் பூவுதிர
மாலையிட்டா ஓவியமா
மாலையிட்ட ஓவியம்போல்
மகுரமக்கள் கண்டிருந்தா
வாழுமக்கள் அப்பத்தா
மாத்திமஞ்சன் பெத்திருந்தா
மகனாரும் செல்வமும்
மகுரக் கொழிச்சிருந்தா

கொய்யாவும் மாதுளையும்
குலுங்கப் பழுத்திருந்தா
மாதுளையும் கொய்யாவும்
மகுரப் பழுத்திருந்தா

ஈச்சங்காய் செவ்வெளனி
எணைக்கெணையாக் காச்சிருந்தா
சாதிக்கா செவ்வெளனி
சரஞ்சரமாக் காச்சிருந்தா

தென்னை பழுத்துத்
தெருவில் சொரிஞ்சிருந்தா
சீதை மணவாளரெல்லாம்
தெருவில்வரப் பாத்திருந்தா

வாழை பழுத்து
வளவில் சொரிஞ்சிருந்தா
வாள்விசயன் தேவியெல்லாம்
வளவில்வரக் கண்டிருந்தா

மாது மணவாளரெல்லாம்
மணைமிதிக்கப் பாத்திருந்தா
மாலையிட்ட மக்களெல்லாம்
வளத்திருக்கக் கண்டிருந்தா
பூவசைச்ச மக்களெல்லாம்
பெத்திருக்கக் கண்டிருந்தா

புள்ளை வளத்தவுக
பூலோகத்தி ரொம்ப இருக்கா
பேராசை அன்போட
போதக் கனிகுடுத்துப்
போத்தி வளத்தவுக
மக்க வளத்தவுக
வையகத்தி ரொம்ப இருக்கா
மனசாசை அன்போட
மகுரக் கனிகுடுத்து
மக்க வளத்தவுக

கண்ணாடி விக்குதுன்னு
கருணருடை மக்களெல்லாம்
கண்டோடி வந்தாக்கக்
கண்ணாடிப் பொட்டிக்குக்
காசெடுத்தார் எங்கொளிஞ்சா

பகளவெலை விக்குதுன்னு
பாலனொடை மக்களெல்லாம்
பாத்தோடி வந்தாக்கப்
பகளவெலைப் பொட்டிக்குப்
பணமெடுத்தார் எங்கொளிஞ்சா

அங்காடி விக்குதுன்னு
அருமைமகன் மஞ்சனெல்லாம்
அழுதோடி வந்தாக்க
அங்காடிப் பொட்டிக்கும்
அவுத்திட்டார் எங்கொளிஞ்சா

OOO

தன் மகனுடன் மனவேறுபாடு கொண்டதால், மகனையும், மருமகளையும் பேரக்குழந்தைகளையும் போற்றாத மாமியார் இறப்புக்கு, தங்களை வீட்டில் சமைத்துண்ணக்கூட அனுமதிக்காமல் விரட்டியடித்த மாமியாரின் கொடுமைகளையும்,

மாமியார் வீட்டில் நடந்த கொழுதனார் மணவிழாவிற்குத் தங்களை அழைக்கவே இல்லை என்பதையும், தங்களை வெறுத்த போதும் தன் கணவன் இறுதிக் கடன்களைச் செய்ததையும் கூறி மருமகள் பாடியது.

வாழுமக்கள் அப்பத்தா
மன்னர் மடிஞ்ச
மாஞ்சோலை கண்டமுன்னா
மாலையிடா மாது
மாண்டு தணல்ஆன
மலர்மேடை கண்டமுன்னா
மாது மணவாளர்
வனம்பாக்கப் போன
வனத்திலெடங் கேட்டமுன்னா

பிஞ்சுமக்கள் அப்பத்தா
பெருமாள் மடிஞ்ச
பூஞ்சோலை கண்டமுன்னா
பூச்சேர்க்கா மாது
போய்த் தணல்ஆன
பூமேடை கண்டமுன்னா
பொண்ணு மணவாளர்
பொனம்பாக்கப் போன
பொனத்திலெடங் கேட்டமுன்னா

வாழுமக்கள் அப்பத்தா
வையகம் வாயூற
மகுரமக்க கண்டிருந்தா
மாத்திமக்க பெத்திருந்தா
மாத்திமக்க கண்டதிலே
வையகம் ஐயோங்க
மகுந்தமக தோத்தமுன்னா

பிஞ்சுமக்கள் அப்பத்தா
பூலோகம் வாயூறப்
போதமக்க கண்டிருந்தா
பிஞ்சுமக்க பெத்திருந்தா
பிஞ்சுமக்க பெத்ததிலே
பூலோகம் ஐயோங்கப்
பெரியமக தோத்தமுன்னா

பிஞ்சுமக்கள் ஐயா
பொறந்ததிலே பேர்பாதி
பூச்சேத்தாப் போதுமுன்னு
பொனத்தை நெனச்சுவிட்டா
பிம்பிருந்த மக்களுக்குப்
பிஞ்சுமக்கள் அப்பத்தா
பூச்சேத்துப் பாத்திருந்தா

வாழுமக்கள் ஐயா
வளந்ததிலே பேர்பாதி
மலர்சேத்தாப் போதுமுன்னு
வனத்தை நெனச்சுவிட்டா
மறுத்திருந்த மக்களுக்கும்
வாழுமக்கள் அப்பத்தா
மலர்சேத்துப் பாத்திருந்தா

பிஞ்சுமக்கள் அப்பத்தா
பொறக்கக் கடைசாரிக்குப்
பூச்சேத்துப் பாக்கயிலே
பெரிய மனைவித்த
பொன்னு தெகுட்டாலே
பெரியமகன்
தேவையில்லையின்னா

பூலோகத்தி உள்ளவுக
பொழிஞ்சாண்டார் மஞ்சன்
பொன்னதிகம் கண்டவுக
பேர்மதிப்பு உள்ளவுக
பொண்ணுடைய வாசல்
பொன்கொடுக்கப் போகவுன்னு
பேச்சுமொழி சொன்னாக
பொழிஞ்சாண்டார் மஞ்சன்
பெரியவுக சொன்ன
பேச்சுத் தவறாம

பெத்தார் வாசல்
புடிச்சுண்ணு பாராம
பொண்ணுடைய வாசல்
பொண்கொடுத்து வந்தாக

வாழுமக்கள் அப்பத்தா
வளக்கக் கடைசாரிக்கு
மலர்சேத்துப் பாக்கயிலே
மகுந்த மனைவித்த
மச்சந் தெகுட்டாலே
மகுந்தமகன்
தேவையில்லையின்னா

வையகத்தி உள்ளவுக
மச்சம்ரொம்பக் கண்டவுக
மனுசப்பேர் ஆனவுக
மாதுடைய வாசல்
மச்சம்கொண்டு போகவுன்னு
வார்த்தை ஒரைச்சாக
மதிச்சாண்டார் மஞ்சன்
மகுந்தவுக சொன்ன
வார்த்தை தவறாமே
வளத்தார் வாசல்
வாரியுண்ணு பாராமே
மாதுடைய வாசல்
மச்சம்குடுத்து வந்தாக

வாழுமக்கள் ஐயா
மாதவசா வந்த
மதிச்சாண்டார் இல்லாம
வாழுமக்கள் அப்பத்தா

வளக்கக் கடைசாரி
மனம்பொறுத்த மஞ்சனுக்கு
மாலையிட்டுப் பாக்கயிலே
மாசேனைக் கூட்டத்திலே
மகுந்தமகன் கூட்டமில்லை

மகுந்த மகன்னு

வளத்தார்க்குத் தானும்
மனசு எலங்காட்டா
வளந்தையர்க்குத் தானும்
மனசு எலங்கலியே
வளந்தையர்க்குத் தானும்
மனசு எலங்காட்டா
மத்தொருதர் வாசல்
மஞ்சன்விட்டுப் பாத்த
மகுந்தபணம் கண்பாத்த
வளந்தையர்க்குத் தானும்
மனசு எலங்கலியே
வளந்தையர்க்குத் தானும்
மனசு எலங்காட்டா
மாது மணவாளர்
மகுந்தபணம் கண்பாத்த
மாப்பிளைக்கும் மனசு எலங்கலியே
மாசேனை அத்தனைக்கும்
மனசு எலங்கலியே

பிஞ்சுமக்கள் ஐயா
பெருந்தவசா வந்த
பொலிஞ்சாண்டார் இல்லாம
பிஞ்சுமக்கள் அப்பத்தா
பொறக்கக் கடைசாரி
புத்திபொறுத்த மஞ்சனுக்குப்
பூச்சேத்துப் பாக்கையிலே
பெருஞ்சேனைக் கூட்டத்திலே
பெரியமகன் கூட்டமில்லை

பெரிய மகன்னு
பெத்தார்க்குத் தானும்
புத்தி எலங்காட்டாப்
பொறந்தையர்க்குத் தானும்
புத்தி எலங்கலியே
பொறந்தையர்க்குத் தானும்
புத்தி எலங்காட்டாப்
பிம்பொருதர் வாசல்
புள்ளைவிட்டுப் பாத்த

பெரியபணம் கண்பாத்த
பொறந்தையர்க்குத் தானும்
புத்தி எலங்கலியே
பொறந்தையர்க்குத் தானும்
புத்தி எலங்காட்டா
பொண்ணு மணவாளர்
பெரியபணம் கண்பாத்த
பொண்ணு மணவாளர்க்கும்
புத்தி எலங்கலியே
பெருஞ்சேனை அத்தனைக்கும்
புத்தி எலங்கலியே

வாழும் மக்கள் அப்பத்தாவுக்கும்
மகுந்த மகன்னா
மனசு துணியாது
மகுந்தமகன் தேவியின்னா
வருந்தஆசை தோணாது

பிஞ்சுமக்கள் அப்பத்தாவுக்கு
பெரிய மகன்னா
புத்திக்கு இனிக்காது
பெரியமகன் தேவியின்னா
போத்தஆசை தோணாது

போத்தியிட்ட மாமியின்னா
பொங்குமே கண்ணீரு
போத்தாத மாமியின்னு
பொங்கலியே கண்ணீரு

வரிசையிட்ட மாமியின்னா
மகுருமே கண்ணீரு
வருந்தாத மாமியின்னு
மகுரலியே கண்ணீரு

ஆசை மக்கள் அப்பத்தா
அன்னம்போல் வந்து
அருகே யிருந்தாலும்
ஆசையில்லே எம்பாக

கிளிப்போல வந்து
கிட்ட இருந்தாலும்
கெளையில்லை எம்பாக

மயில்போல வந்து
மாமியின்னு சொன்னாலும்
மனசுஇல்ல எம்பாக

குயில்போல வந்து
கூட இருந்தாலும்
கூட்டு இல்லை எம்பாக

நான்பொல்லாத மாதுமில்லே
பொறுமையுள்ள மாதுமுன்னு
பிஞ்சுமக்கள் அப்பத்தா
புத்தி நெனச்சதில்லே
பேச்சுகளில் சொன்னதில்லே

நான்மல்லாரி மாதுமில்லே
மனம்பொறுத்த மாதுமுன்னு
வாழுமக்கள் அப்பத்தா
மனசு நெனச்சதில்லே
வார்த்தைககளில் சொன்னதில்லே

பிஞ்சுமக்கள் அப்பச்சி
பெத்தகடன் தீக்கவுன்னு
பூலோகத்தி சொல்லுமுன்னு
பிஞ்சுமக்கள் அப்பத்தாவுக்குப்
பூவளத்தா ஓவியமா

வாழுமக்கள் அப்பச்சி
வளத்த கடன் தீக்கவுன்னு
வையகத்தி சொல்லுமுன்னு
வாழுமக்கள் அப்பத்தாவுக்கு
மலர்வளத்தா ஓவியமா

OOO

## மாமனாருக்கு

பேரன் பேத்திகளின் திருமணத்தைக் காணுமுன் இறந்த

மாமனாருக்கு, அவர் நோய்வாய்ப் பட்டபோது தாங்கள் அன்புடன் பேணியதையும், மாமியார் மறைந்ததால் காண இயலாமற்போன பேரன் பேத்திகள் திருமணத்தை மாமனாரும் காணாமல் மறைந்தாரே என்பதையும் கூறித் தங்களுக்கு வலுச்சொல்ல மாமனாரில்லையே என வருந்தி மருமகள் பாடியது.

சென்னுதா காலம்
செறந்ததா இத்தேசம்
செழிச்சதா வானுலகம்
வந்துதா காலம்
மறந்ததா இத்தேசம்
மகுந்ததா வானுலகம்

பிஞ்சுமக்கள் ஐயா
பெத்தாரும் போன
பொனம்பாக்கப் போனமுன்னா
வாழும் மக்கள் ஐயா
வளத்தாரும் போன
வனம்பாக்கப் போனமுன்னா
மகுரப் பொறந்த
வளந்தையெல்லாம் போன
வனத்தை நெனச்சமுன்னா
போதப் பொறந்த
பொறவிஎல்லாம் போன
பொனத்தை நெனச்சமுன்னா
வாழும் மக்கள் அப்பத்தா
வாவரசி கண்ட
மலர்மேடை கண்டமுன்னா
பிஞ்சுமக்கள் அப்பத்தா
போரழகி கண்ட
பூமேடை கண்டமுன்னா

பூமி விழுகையிலே
பிஞ்சுமக்கள் ஐயா
பெசகா விழுந்தமுன்னா
பொன்னுந் தமிளரிலே
போர்விசயன் மக்களெல்லாம்
புதுநீரா தேவையின்னா
புதுநீரோ தேவையில்லே
பொன்னுரதம் தேவையின்னா
போகுறதே மோச்சமுன்னா

தரையில் விழுகையிலே
தங்கமக்கள் ஐயா
தவறி விழுந்தமுன்னா
தங்கமகன் மக்களெல்லாம்
தங்கத் தமிளரிலே
தண்ணீரா தேவையின்னா
தண்ணீரோ தேவையில்லே
தங்கரதம் தேவையின்னா
சாகுறதே மோச்சமுன்னா

திரும்பிப் படுக்கச்
செவந்திப்பூ மெத்தையிட்டா
செவந்திப்பூ மெத்தையிலே
திரும்ப எணங்கலேன்னா
சீராளன் மக்களுக்குச்
சேதிசொல்ல மாட்டமுன்னா

மாறிப் படுக்க
மல்லியப்பூ மெத்தையிட்டா
மல்லியப்பூ மெத்தையிலே
மாற எணங்கலேன்னா
மாதுடைய மக்களுக்கு
வார்த்தைசொல்ல மாட்டமுன்னா

பிஞ்சுமக்கள் அப்பத்தா
பெருஞ்சமத்தி பேரிட்ட
பிஞ்சான மாது
பொண்ணோ சமஞ்சிருக்கா
பூவோ மலந்திருக்கு
இந்தப் பெருஞ்சமத்தர் கண்ணோட
பொண்ணு கனதிக்குப்
பூவசைக்க மாட்டலியே

மதலமக்கள் அப்பத்தா
மாசமத்தி பேரிட்ட
மட்டமுள்ள பொண்ணு
மாதோ சமஞ்சிருக்கா
மலரோ மலந்திருக்கு
இந்தமாசமத்தா் கண்ணோட
மாது கனதிக்கு
மலரசைக்க மாட்டலியே

போத்தி வளத்தபேரன்
புள்ளைபெரிசு ஆயிட்டான்
போதம் ஒண்ணு சென்னாக்க
இந்தப் பூமிஎல்லாம் பொன்னுதிரப்
பூவசைச்சுப் பாத்திருப்பா
பொண்ணழைச்சும்
கூட்டியிருப்போம்
பேரனுடை தேவி
பூமிவரப் பாக்கவிட்டுப்
போகநாக் கேக்கலியே
பெசகாமக் கிட்டருந்து
போத்தி வளத்த
பிஞ்சுமக்கள் அப்பத்தா
பெருஞ்சமத்தி காணாதபகிசிகளை

பிஞ்சுமக்கள் ஐயா
பெருமை பண்ணிப் பாத்திருக்கப்
புத்தி நெனச்சிருந்தோம்
புத்தி நெனச்சதுபோல்
ஐயா பெருமைக்கு இருக்கலியே
ஒங்கபேராசை தீரலியே

வருந்தி வளத்தபேரன்
மஞ்சன் பெரிசு ஆயிட்டான்
வருசம்ஒண்ணு சென்னாக்க
இந்தவளவெல்லாம் பொன்னுதிர
மலரசைக்கப் பாத்திருப்பா
மாதழைச்சும் கூட்டியிருப்போம்
எங்க வாள்விசயன்தேவி
வளவிவரப் பாக்கவிட்டு
மாளநாக் கேக்கலியே
மாறாமக் கிட்டருந்து
வருந்தி வளத்த
வாழும் மக்கள் அப்பத்தா
மாசமத்தி காணாத பகிசிகளை
வாழும் மக்கள் ஐயா
மகிழ்ச்சிபண்ணிப் பாத்திருக்க
மனசு நெனச்சிருந்தோம்
மனசு நெனச்சதுபோல்
ஐயா வலுவுக்கிருக்கலியே
ஒங்கமனசாசை தீரலியே

இந்தப் பெரியவாசல்
பெரியவுக அரிதின்னு
பதறி அழுதாலும்
பிடிக்கவந்தான் கேக்கலியே
எங்க எல்லை
மகுந்தார் அரிதின்னு
தெகைச்சு அழுதாலும்
வாங்கவந்தான் கேக்கலியே

OOO

மாமனார் பட்ட கடனுக்காகச் சொத்துக்களை விற்று, மகனுக்குப் பங்கு தருவதாகச் சொல்லிய மாமனார், மகனின் பங்குப் பணத்தைத் தருமுன் மாண்டுவிட, தன்னையும் தன் கணவரையும், மக்களையும் வெறுக்கும் மாமியாருடன் போராடி வாழும் மருமகள் மாமனாருக்குப் பாடியது.

பெத்தார் வகுத்திப்
பொறக்கின்ற நாளயிலே
பூலோக அந்நாட்டில்
பொன்னுங் குயவனவன்
புடிமண்ணும் போடயிலே
புகழ்பெறும் இந்நாட்டில்
பொறந்துமுடி தீரயிலே
புகழ்வேந்தர் தன்னிடத்தில்

போர்பெற்று வந்த
பொழுதும் சரியாச்சா
பிஞ்சுமக்கள் ஐயா
போரநாள் செல்லாச்சா

மாதா வகுத்தில்
வளர்கின்ற நாளயிலே
மாயலோக அந்நாட்டில்
மாயக் குயவனவன்
மண்பிடித்துப் போடயிலே
வளம்பெறும் இந்நாட்டில்
வந்துமுடி தீரயிலே
மாமுனிவர் தன்னிடத்தில்
வரம்வாங்கி வந்த
வருசங் கணக்காச்சா
வாழுமக்கள் ஐயா
மாளுறநாள் செல்லாச்சா

தாயார் வகுத்தில்
சனிக்கின்ற நாளயிலே
தவலோக அந்நாட்டில்
சாமி குயவனவன்
மண்பிடித்துப் போடயிலே
தவம்பெறும் இந்நாட்டில்
தங்கிமுடி தீரயிலே
தவமுனிவர் தன்னிடத்தில்
தவம் வாங்கி வந்த
தவணை சரியாச்சா
செல்லமக்கள் ஐயா
சாகுறநாள் செல்லாச்சா

வளத்தா கெடையும்
மகுந்தகெடை தோணுதுன்னு
வழியோ தொலையுமுன்னு
மனசு நெனையாமே
மகுந்த மனையுமுன்னு
மதிச்சாண்டார் எல்லையின்னு
மாப்பழுக்கும் சோலையின்னு
மாசேனைக் கூட்டமுன்னு
மாலையிட்டுப் பாத்தாக
மாலையிட்ட ஓவியம்போல்
மாதழைச்ச சித்திரம்போல்
மாலையிட்ட வருசந்திரும்பயிலே
மண்ணாளப் போர்விளங்க
வாளுருவி அம்புவிட்ட
வாழுமக்கள் ஐயா
மாதவசா வந்த
மதிச்சாண்டார் பேரழைக்க
மஞ்சன் மொதலானமுன்னேன்
வாழுமக்கள் ஐயா
மனங்கொள்ளாச் சந்தோஷம்
வாரிமுத்தங் கொண்டிருந்தா
மனசு மகிழ்ந்திருந்தா

பெத்தா கெடையும்
பெரிய கெடை தோணுதுன்னு
போதந் தொலையுமுன்னு
புத்தி நெனையாமே
பெரிய மனையுமுன்னு
பொழிஞ்சாண்டார் எல்லையின்னு
பூப்பழுக்கும் சோலையின்னு
பெருஞ்சேனைக் கூட்டமுன்னு
பூச்சேத்துப் பாத்தாக
பூச்சேத்த ஓவியம்போல்
பொண்ணழைச்ச சித்திரம்போல்
பூச்சேத்த போதந்திரும்பயிலே
பொன்னாளப் போர்விளங்கப்
பொன்னுருவி அம்புவிட்ட
பிஞ்சுமக்கள் ஐயா
பெருந்தவசா வந்த
புண்ணியவா பேரழைக்கப்
புள்ளை மொதலானமுன்னேன்
பிஞ்சுமக்கள் ஐயா
புத்திகொள்ளாச் சந்தோஷம்
புடிச்சுமுத்தங் கொண்டிருந்தா

புத்தி மகிழ்ந்திருந்தா

மச்சமில்லா நேரம்
மகுந்தகடன் கொடுக்கவுன்னு
வளந்திருக்கும் மக்களுக்கு
மலர்சேத்துப் பாக்கவுன்னு
மகுந்த மனைக்கும்
மச்சம் மதிச்சாக
வாழுமக்கள் ஐயா
மகுந்த மனைவித்து
மனசு கெட்டுச்
சிந்தை நொந்து
மகுந்துவந்த கண்ணீரை
மலரால் ஆத்திவிட்டு
வளவில் திரிஞ்சுவந்தா
மகுந்தமனை வித்து
வருசந் திரும்பாமே
வனத்திலிடம் கேட்டுவிட்டா

பொன்னில்லா நேரம்
பெரியகடன் கொடுக்கவுன்னு
பொறந்திட்ட மக்களுக்குப்
பூச்சேக்க வேணுமுன்னு
பெரிய மனைக்கும்
பொன்னு மதிச்சாக
பிஞ்சுமக்கள் ஐயா
பெரியமனை வித்துப்
புத்தி கெட்டுச்
சிந்தை நொந்து
பொங்கிவந்த கண்ணீரைப்
பூவால் ஆத்திவிட்டுப்
பூமி திரிஞ்சுவந்தா
பெரியமனை வித்துப்
போதந் திரும்பாமே
பொனம்பாக்கப் போனமுன்னா

வாழும் மக்கள் ஐயா
மகுந்தமனை விக்கயிலே
மகுந்த மகனுக்கும்
மத்தொருதர் பங்கை
வாங்கிவச்சுப் பாப்பமுன்னா
வாரம்பிரிஞ்ச வளவையும்
வழிபண்ணி வைப்பமுன்னா
மகுந்தகடை வைப்பமுன்னா
மையெழுத்தைப் போடுமுன்னா
வளத்தாருஞ் சொன்ன
வார்த்தை தவறாமே
வாழுமக்கள் அப்பச்சியும்
மையெழுத்தைப் போட்டாக
வாழுமக்கள் ஐயாவும்
மறுத்திருக்கக் காலமில்லே

மகுந்த மகனுக்கும்
வாழுமக்கள் ஐயா
மகுந்த மனைவித்த
மச்சம் அறியலியே
வளத்தாருந் தானும்
வார்த்தை ஒரைச்சாப்போல்
வழிபண்ணி வைக்கலியே
வளத்தாருந் தானும்
மறுத்திருக்கக் காலமில்லே
மஞ்சனுக்கும் அதிட்டமில்லே

பிஞ்சுமக்கள் ஐயா
பெரியமனை விக்கயிலே
பெரிய மகனுக்கும்
பிம்பொருதர் பங்கை
வாங்கி வச்சுப் பாப்பமுன்னா
பிரிஞ்ச வளவையும்
வழிபண்ணி வைப்பமுன்னா
பெரியகடை வைப்பமுன்னா
பேனா எழுத்தைப் போடுமுன்னா
பெத்தாருஞ்சொன்ன
பேச்சுத் தவறாமே
பிஞ்சுமக்கள் அப்பச்சியும்
பேனா எழுத்தைப் போட்டாக

*பிஞ்சுமக்கள் ஐயாவும்*
பிம்பிருக்கக் காலமில்லே

பெரிய மகனுக்கும்
பிஞ்சுமக்கள் ஐயா
பெரியமனை வித்த
பொன்னும் அறியலியே
பெத்தாருந்தானும்
பேச்சு ஒரைச்சாப்போல்
வழிபண்ணி வைக்கலியே
பெத்தாருந் தானும்
பிம்பிருக்கக் காலமில்லே
புள்ளைக்கும் அதிட்டமில்லே

வாழுமக்கள் ஐயா
வனம்பாக்கப் போனபின்பு
வாமு மக்கள் அப்பத்தா
வடிச்சுண்ணு பாத்தமுன்னா
மதிச்சாண்டார் மக்களுக்கும்
மணியரிசி போட்டமுன்னா
மச்சமெல்லாம் தீந்ததுன்னா
மத்தொருதர் பங்கை
வாங்கிவச்சும் பாக்கலியே
மகுந்தகடை வையாட்ட
வாரம்பிரிஞ்ச வளவில்தான்
வடிச்சுண்ணுட்டுப் போரான்னு
மனசு பொறுத்ததில்லே
மகுந்த மனையுமுன்னு
மனசாசைப் பட்டதுக்கு
வடிச்சுன்னு பாத்ததில்லே
மாசுருக்காக் கண்ட
மஞ்சன் வெளையாண்டதில்லே

பிஞ்சுமக்கள் ஐயா
பொனம்பாக்கப் போனபின்பு
பிஞ்சுமக்கள் அப்பத்தா
பொங்கியுண்ணு பாத்தமுன்னா
பொலிஞ்சாண்டார் மக்களுக்கும்
பொன்னரிசி போட்டமுன்னா
பொன்னெல்லாம் தீந்ததுன்னா
பிம்பொருதர் பங்கை
வாங்கிவச்சும் பாக்கலியே
பெரியகடை வைக்கலியே
பெரியகடை வையாட்டாப்
பிரிஞ்ச வளவிலதான்
பொங்கியுண்ணுட்டுப் போரான்னு
புத்தி பொறுத்ததில்லே
பெரிய மனையுமுன்னு
பேராசைப் பட்டதுக்குப்
பொங்கியுண்ணு பாத்ததில்லே
பெருஞ்சுருக்காக் கண்ட
புள்ளை வெளையாண்டதில்லே

எதிராளி வீடு
எசைவிக்கும் நாளுமுன்னா
இங்குவந்து சேந்திருப்பேன்
பங்காளி வீடு
பாவிக்கும் நாளுமுன்னா
பட்டணம் வந்து சேந்திருப்பேன்
கூட்டாளி வீடு
கோரிக்கை நாளுமுன்னா
கூடவந்து சேந்திருப்பேன்

வருசம் ஒருக்கா
மாரியுட பூவுக்கு
வளவில்வந்து சேந்திருப்பேன்
வளத்து மொதலான
மஞ்சன் எடுக்கி
வளவிவந்து சேந்திருப்பேன்
இந்தவளவு பிரிஞ்சதிலே
வடிச்சுண்ணுட்டுப் போரான்னு
மனசு பொறுத்ததில்லே

போதம் ஒருக்காப்
பேச்சியுட பூவுக்குப்
பூமிவந்து சேந்திருப்பேன்

இந்தப்பூமி பிரிஞ்சதிலே
பொங்கியுண்ணுட்டுப் போரான்னு
புத்தி பொறுத்ததில்லே

வளந்தை எடத்திருந்து
வடிக்க அரிசிகொண்டு
வடிச்செறக்கக் கந்தைகொண்டு
மாலையிட்ட சீமை
வளவிபோய்ச் சேந்தாக்க
வடிக்கப் புரியாம
வாழுமக்கள் அப்பத்தா
வம்பை நடத்திவந்தா
வடிக்கப் புரிஞ்சாலும்
வாரியுண்ணு பாராமே
வம்பை நடத்திவந்தா

பொறந்தை எடத்திருந்து
பொங்க அரிசிகொண்டு
புடிச்செறக்கக் கந்தைகொண்டு
பூச்சேத்த சீமை
பூமிபோய்ச் சேந்தாக்கப்
பொங்கப் புரியாம
பிஞ்சுமக்கள் அப்பத்தா
போரை நடத்திவந்தா
பொங்கப் புரிஞ்சாலும்
புடிச்சுண்ணு பாராமே
போரை நடத்திவந்தா

கடுங்கோபம் கண்டாக்க
காணாதா போலிருப்பேன்
முன்கோபம் கண்டாக்க
மொகமறியா போலிருப்பேன்
பெருங்கோபம் கண்டாக்கப்
புரியாதா போலிருப்பேன்
அதிகோபம் கண்டாக்க
அறியாதா போலிருப்பேன்

அளவுக்கு மிஞ்சி
அதிகமாப் பேசினா
அடுத்தொண்ணு சொல்லிருப்பேன்
வார்த்தைக்கு மீறி
வம்பொழையாச் சொன்னாக்க
மறுத்தொண்ணு சொல்லிருப்பேன்

ஆகாது ஆகாது
அருமைமகன் தேவி
அல்லிப்பூ வாசம்
அடுப்படியிலேயும் ஆகாது
மூத்தமகன் தேவி
முல்லைப்பூ வாசம்
முகப்பிலேயும் ஆகாது
பின்னப்பூ வாசம்
பிம்பக்கம் ஆகாது
அல்லிப் பூவாசம்
அடுத்த வீட்டிலேயும் ஆகாது
பிலாப்பூ வாசம்
கெணத்தடியில் ஆகாது
மருக்கொழுந்து வாசம்
வளவிலேயும் ஆகாது
செம்பகப்பூ வாசம்
தெருவிலேயும் ஆகாது

எருக்களைக்குத் தண்ணியூத்தி
எத்தனைபூப் பூத்தாலும்
நம்ம மருக்கொழுந்துக்கு உண்டான
வாசம் போகாதுன்னு
மனசில் நெனச்சு
மனசு பொறுத்து
வளவில் திரிஞ்சுவந்தேன்

போத்தாத வாசல்
போதமக்கள் கண்டிருந்தேன்
அருமையிடா வாசல்
அதிகமக்க கண்டிருந்தேன்

மனசு தெடத்தாலே
மக்கள் வளத்துவந்தேன்
வலுவைக் குடுத்து

மக்க வளத்துவந்தேன்

புத்தி தெடத்தாலே
புள்ளை வளத்துவந்தேன்
பெலனைக் குடுத்துப்
புள்ளை வளத்துவந்தேன்

அப்பத்தா சோறுன்னு
அள்ளியுண்ணு பாத்ததில்லே
பிஞ்சான மக்கள்
பூமாமி சோறுன்னு
புடிச்சுண்ணு பாத்ததில்லே
அடுப்பெரிஞ்ச மூலை
அனலும் தெரியாது
தீளரிஞ்ச மூலை
தெடலும் தெரியாது

வாழும் மக்கள் அப்பச்சி
வளத்தகடன் தீக்கவுன்னு
மண்ணதிரப் பொன்னதிர
வைபோக நாடதிர
வாழ்ந்தமனை ஓசையிட
வையகம் நல்லாங்க
வாழுமக்கள் ஐயாவுக்கு
மலர்வளத்தா ஓவியமா

பிஞ்சு மக்கள் அப்பச்சி
பெத்தகடன் தீக்கவுன்னு
பொன்னதிர மண்ணதிரப்
பூலோக நாடதிரப்
பொழிஞ்சமனை ஓசையிடப்
பூலோகம் நல்லாங்க
பிஞ்சுமக்கள் ஐயாவுக்குப்
பூவளத்தா ஓவியமா

OOO

## நாத்தனாருக்கு

குழந்தைகள் சிறியராயிருக்க, அண்மையில் ஈன்ற குழந்தையைப் பரிதவிக்கவிட்டு இறந்து போன நாத்தனாருக்கு. நாத்தனாரைப் போல மனைவி அவள் கணவனுக்குக் கிடைத்தாலும் அவள் மக்களுக்கு அவளைப் போல தாய் கிடைக்காதே என வருந்தி சகோதரன் மனைவி பாடியது.

நாளுஞ் சரியாச்சா
நாட்டமுள்ளார் மாது
நடப்பதுக்கு நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா
பொலிஞ்சாண்டார் மாது
போறதுக்கு நாளாச்சா

வாழும் மக்கள் ஐத்தை
மஞ்சன்னு சொன்னா
மனசுபயம் ஆகுதும்பா
மனப்பயமா தோணுதும்பா
மாதமும் சென்னு
மஞ்சன்வெளி ஆசையிலே
மன்னர் கெரகமோ
மாதுடைய நேரமோ
மஞ்சனுடை தோஷமோ
வாவெறக்கிப் பள்ளிகொண்ட
வகுத்தெரிச்ச சொல்லுவ்மா

பிஞ்சுமக்கள் ஐத்தை
புள்ளயைின்னு சொன்னா
புத்திபயம் ஆகுதும்பா
பெரும்பயமாத் தோணுதும்பா
போதமும் சென்னு
புள்ளைவெளி ஆசையிலே
பெருமாள் கெரகமோ
பொண்ணுடைய நேரமோ
புள்ளையோட தோஷமோ
போரெறக்கிப் பள்ளிகொண்ட
பூங்காரம் சொல்லுவமா

கட்டையெல்லாம் பால்வடியக்
கட்டழகி பள்ளியறை
பாடையெல்லாம் பால்வடியப்
பாஞ்சாலி பள்ளியறை

பிஞ்சும் பிலாக்காய்
பின்னிவச்சுக் கண்ணசந்த
பூங்காரம் சொல்லுவமா
அவலை சவலை
அள்ளிவச்சுக் கண்ணசந்த
அநியாயம் சொல்லுவமா
சின்னஞ்சிறிசு
சேத்துவச்சுக் கண்ணசந்த
சீரழிவு சொல்லுவமா

கொட்டத்து மாடு
கொழைபோட்டாத் திங்கலியே
காராம் பசுவும்
கண்ணுவிட நிக்கலியே

ஆடை புடிச்சு
அழுதுவந்த மஞ்சன்விட்டா
சீலை புடிச்சுச்
சேந்துவந்த மஞ்சன்விட்டா

கிண்ணியிலே சோறுவச்சா
கிணத்தடியில் மஞ்சன்விட்டா
வட்டியிலே சோறுவச்சா
வழிக்கரையில் மஞ்சன்விட்டா

மக்கள் பறக்கவச்சு
மன்னரையும் சோம்பவச்சு
மாண்டாச் சுகமும் உண்டா
புள்ளை பறக்கவச்சுப்
பெருமாள் களைக்கவச்சுப்
போனரச் சுகமும் உண்டா

மன்னவர்க்குத் தேவி
வாங்கக் கெடைக்குமே
மன்னவர்கத் தேவி

பொங்குதே கண்ணீரு

வாங்கக் கெடைச்சாலும்
மாசேனை உள்ளாளை
வாங்கக் கெடைக்காதே
மாசேனை உள்ளாளை
வாங்கக் கெடைச்சாலும்
மச்சினன்மார் உள்ளாளை
வாங்கக் கெடைக்காதே
மச்சினன்மார் உள்ளாளை
வாங்கக் கெடைச்சாலும் இந்த
மதலைமக்கள் ஆத்தாளை
வாங்கக் கெடைக்காதே

கொத்தவர்க்குத் தேவி
கொள்ளக் கெடைக்குமே
கொத்தவர்க்குத் தேவி
கொள்ளக் கெடைச்சாலும்
கோடிசனம் உள்ளாளைக்
கொள்ளக் கெடைக்காதே
கோடிசனம் உள்ளாளைக்
கொள்ளக் கெடைச்சாலும்
கொழுந்திமார் உள்ளாளைக்
கொள்ளக் கெடைக்காதே
கொழுந்திமார் உள்ளாளைக்
கொள்ளக் கெடைச்சலும் இந்தக்
கொழந்தையர்க்குத் தாயாரைக்
கொள்ளக் கெடைக்காதே

OOO

மகப்பேறின்றி சுவீகாரம் செய்து கொண்ட வயதான நாத்தானர் இறந்தபோது, அவள் பிறப்பு முதல் இறப்பு வரை அவள் வாழ்வில் நடந்தவற்றையெல்லாம் கதைபோலச் சொல்லி, மணிவிழா முடிந்து வா(ழ்)வரசியாக மாண்டதையும் சொல்லி தம்பி மனைவி பாடியது.

பெத்தாரும் போன
பிஞ்சுமக்கள் ஐத்தை

பொனம்பாக்கப் போறமுன்னா
வளத்தாரும் போன
வாழுமக்கள் ஐத்தை
வனம்பாக்கப் போறமுன்னா

பொண்ணு தனியாளும்
பெத்தாரைப் போலப்
போரழகி யானமுன்னா
மாது தனிச்சியும்
வளத்தாரைப் போல
வாவரசி யானமுன்னா

நம்ம பெருஞ்சேனைபோல
போரழகி யானமுன்னா
நம்ம மாசேனை போல
வாவரசி யானமுன்னா

அரும்பா மலந்தகுடி
அல்லிகளைத் தோத்தகுடி
பூவா மலந்தகுடி
பொண்டுகளைத் தோத்தகுடி
மலரா மலந்தகுடி
மயிலிகளைத் தோத்தகுடி

செம்பகப்பூத் தோட்டந்தான்
சித்தடியா கூட்டந்தான்
மல்லியப்பூத் தோட்டந்தான்
வாவரசி கூட்டந்தான்
அடுக்குமல்லித் தோட்டந்தான்
ஆரணங்கு கூட்டந்தான்

பொறவியுட, வாசல்எல்லாம்
பொன்னால ஆலாத்தி
புடிச்சுவச்சா எங்கொளிஞ்சா
சிலேட்டு விளக்கு வைக்கும்
சீதை வனம்போனமுன்னா
குத்துவிளக்கு வைக்கும்
கோதை வனம்போனமுன்னா
ஆலாத்தி சுத்திவந்த
அல்லி வனம்போனமுன்னா

பொன்னாசை தீத்தாளை
பிஞ்சுமக்கள் ஐத்தையைப்
பிஞ்சு வயசிலே
பொண்ணு ருதுவாகுமுந்தி
பிம்பொருத வாச
பூவசைக்க மாட்டமுன்னா
பெத்த அருமை எண்ணிப்
போத்திவைக்க மாட்டான்னா
பெத்தா பொறந்தையிலே
பிம்பு பொறந்த
பொலிஞ்சாண்டார் மஞ்சனுக்குப்
பிஞ்சுமக்கள் அப்பத்தா
போரழகி தம்பிக்கும்
போதக் குடுத்துப்
பூவசைச்சுப் பாத்திருந்தா
எங்க பெருஞ்சேனை போலப்
பெத்துமொதல் ஆகாமே
பொறந்தையரைப் போலப்
பெத்துமொதல் ஆகாமே

போதங் கணக்குக்குப்
பொண்ணு திருவகுத்தில்
புள்ளை நெழலாடுதும்பா
பொய்யை கலங்கவிட்டா
பூவா உதிரவிட்டா
போதங் கணக்குக்குப்
புள்ளை நெழலாடவில்லை

பூலோகத்தார் போலப்
பெத்தாரும் இல்லையின்னு
பொறந்தையுட தேவி
நான்போருக் கழைக்கவில்லே
பெத்தாரும் புள்ளையும்
போதமொறை வாங்கிப்
புள்ளநகை வாங்கிப்
பூமிபோய்ச் சேரலைம்பா

புத்தியிலே தாங்கலும்பா

மாதாசை தீத்தாளை
வாழுமக்கள் ஐத்தையை
மட்டவயசிலே
மாது ருதுவாகுமுந்தி
மத்தொருதர் வாச
மாலையிட மாட்டமுன்னா
வளத்த அருமை எண்ணி
வருந்திவைக்க மாட்டான்னா
மதா பொறந்தையிலே
மறுத்துப் பொறந்த
மதிச்சாண்டார் மஞ்சனுக்கு
வாழும் மக்கள் அப்பத்தா
வாவரசி தம்பிக்கும்
மகுரக் குடுத்து
மாலையிட்டுப் பாத்திருந்தா
எங்கமாசேனை போல
வளத்துமொதல் ஆகாமே
வளந்தையரைப் போல
வளத்துமொதல் ஆகாமே
மாதங் கணக்குக்கு
மாது திருவகுத்தில்
மஞ்சன் நெழலாடுதும்பா
வையை கலங்கவிட்டா
மலரா உதிரவிட்டா
வருசங் கணக்குக்கு
மஞ்சன் நெழலாடவில்லை

வையகத்தார் போல
வளத்தாரும் இல்லையின்னு
வளந்தையுட தேவி
நான்வாவுக் கழைக்கவில்லை
வளத்தாரும் புள்ளையும்
மகுரமொறை வாங்கி
மஞ்சன்நகை வாங்கி
வளவில் போய்ச் சேரலைம்பா
மனசிலேயும் தாங்கலும்பா

பெரியமாக் காய்க்காமப்
பிஞ்சுமாக் காச்சுதுன்னு
பொறந்தையுட மக்களெல்லாம்
போத்திவச்சுப் பாத்திருந்தா
பூவசைக்கக் கண்டிருந்தா
பூச்சேத்த மக்களெல்லாம்
பெத்துவரக் கண்டிருந்தா
பொறந்தையுட பேரனெல்லாம்
புடிச்சுமுத்தம் கொண்டிருந்தா

மகுந்தமாக் காய்க்காம
மட்டமாக் காச்சுதுன்னு
வளந்தையுட மக்களெல்லாம்
வருந்திவச்சப் பாத்திருந்தா
மாலையிடக் கண்டிருந்தா
மாலையிட்ட மக்களெல்லாம்
வளத்துவரக் கண்டிருந்தா
வளந்தையுட பேரனெல்லாம்
வாரிமுத்தங் கொண்டிருந்தா

பிம்பும் ஒருக்காப்
பிம்பொருதர் வாசல்
புள்ளை அழைக்காமே
போர்மாமன் மஞ்சனைப்
பிம்பு பொறந்தானைப்
புடிச்சுவச்சுப் பாத்திருந்தா
போதப் பொறந்தாளைப்
போதமொறை வாங்கிப்
பூச்சேத்துப் பாத்திருந்தா
போர்விசயன் தேவி
போதமக்கள் கண்டிருந்தா
பின்னிமஞ்சன் பெத்திருந்தா
போரழகி மாது
பொய்க்கடியா பேரழைக்கப்
பொண்ணையுமே கண்டிருந்தா
பொலிஞ்சாண்டார் பேரழைக்கப்
புத்திரனைக் கண்டிருந்தா
போர்விசயன் பொண்ணு

பொங்குதே கண்ணீரு

பொண்ணு ருதுவான
பெருமையெல்லாம் பாத்திருந்தா
போர்விசயன் பொண்ணுக்குப்
போதக் குடுத்துப்
பூவசைச்சுப் பாக்கவுன்னு
பேராசை தோணுதுன்னா
பூவசைச்சுப் பாராமப்
போரழகி ஆனமுன்னா

மறுத்தும் ஒருக்கா
மத்தொருதர் வாசல்
மஞ்சன் அழையாமே
மாமருடை மஞ்சனை
மறுத்துப் பொறந்தானை
வாங்கிவச்சுப் பாத்திருந்தா
மகுரப் பொறந்தாளை
மகுரமொறை வாங்கி
மாலையிட்டுப் பாத்திருந்தா
வாள்விசயன் தேவி
மகுரமக்கள் கண்டிருந்தா
மாத்திமஞ்சன் பெத்திருந்தா
வாவரசி மாது
மயிலனைய்யா பேரழைக்க
மகளாரைக் கண்டிருந்தா
மதிச்சாண்டார் பேரழைக்க
மகனாரைக் கண்டிருந்தா
வாள்விசயன் பொண்ணு
மாது ருதுவான
மகிழ்ச்சியெல்லாம் பாத்திருந்தா
வாள்விசயன் பொண்ணுக்கு
மகுரக் குடுத்து
மாலையிட்டுப் பாக்கவுன்னு
மனசாசை தோணுதுன்னா
மாலையிட்டுப் பாராம
வாவரசி ஆனமுன்னா

பொண்ணுக் கெசஞ்ச
பொய்ம்மானா வேணுமுன்னு
பூலோகத்தைச் சுத்திவந்தா
செல்லமகன் மாது
சித்தடிக்கு வேணுமுன்னு
சீதை மணவாளர்
தெசைகருணர் பாத்துவந்தா
மாதுக் கெசஞ்ச
மாப்பிளை வேணுமுன்னு
வையகத்தைச் சுத்திவந்தா

மண்ணாண்டா பொன்னாண்டா
வாழுமக்கள் ஐத்தை
மாது தனிச்சி
மட்டத்தநாள் வாழ்ந்தா

பொன்னாண்டா மண்ணாண்டா
பிஞ்சுமக்கள் ஐத்தை
பொண்ணு தனிச்சி
பெருவாரிநாள் வாழ்ந்தா

பெரிய மணைஏறிப்
பெரிய கலியாணம்
எங்க பிதிர்வழிகூட்டிப்
பெருமைபண்ணிச் செய்ததும்பு
போரழகி ஆகப்
பெருந்தவத்தைச் செய்திருந்தா
பூவோடு தீக்கலக்கப்
புண்ணியத்தைச் செய்திருந்தா

மகுந்த மணைஏறி
மகுந்த கலியாணம்
எங்க மாசேனைகூட்டி
மகிழ்ச்சிபண்ணிச் செய்ததும்பு
வாவரசி ஆக
மாதவத்தைச் செய்திருந்தா
மலரோட தீக்கலக்க
மாதவத்தைச் செய்திருந்தா

தென்சரணி கொள்ளாத
செல்லப் பொறப்பு

செம்பகப்பூ கொண்டுவந்தா
வடசரணி கொள்ளாத
வருசப் பொறப்பு
மல்லியப்பூக் கொண்டுவந்தா

எங்க சேனைதளம் கூட்டிச்
சித்திரக் கொட்டமைச்சுச்
செல்லப் பொறப்பு
தெருவதிரக் கொண்டுவந்தா

எங்க மாசேனைகூட்டி
வைகாசிக் கொட்டமைச்சு
வருசப் பொறப்பு
வளவதிரக் கொண்டுவந்தா

பொட்டோட மையோட
போடுசரப் பட்டோட
போரழகி யானமுன்னா
மையோட பொட்டோட
வங்காளம் பட்டோட
வாவரசி ஆனமுன்னா

அஞ்சுமொழம் கொஞ்ச பணம்
ஆனையடிக் கண்டாங்கி
அரக்கிழைச்ச முந்தாங்கி
கொஞ்சமொழம் அஞ்சுபணம்
குதிரைமொக முந்தாங்கி
கோடெழச்ச கண்டாங்கி
கொட்டடி முந்தாங்கி
கொஞ்சாக் கலகலங்கும்
கோதையுட கண்டாங்கி

பட்டும் பளபளக்கப்
பாடகக்கால் சோதிமின்ன
சீலை கலகலங்க
சித்தடியா சோதிமின்னப்
பொறக்கயிலே இட்ட
எங்கபிஞ்சுமக்கள் அப்பத்தா

பொன்னுஞ் சிலம்புகளும்
தவளயிலே இட்ட
தண்டைச் சிலம்புகளும்
கட்டத் தலங்களிலே
கண்டெடுக்கச் சொன்னமுன்னா
பாதை தலங்களிலே
பாத்தெடுக்கச் சொன்னமுன்னா

வாழுமக்கள் ஐத்தை
மலரோடு தீக்கலக்க
மாதவத்தைச் செய்திருந்தா
பிஞ்சுமக்கள் ஐத்தை
பூவோடு தீக்கலக்கப்
பெருந்தவத்தைச் செய்திருந்தா

OOO

பெண் மகவு இன்றி, ஆண்மக்கள் நிறையப் பெற்று வாழ்ந்த நாத்தானா் இறந்தபோது, அவள் வாழ்ந்த வீட்டின் சிறப்பு, மங்கலமாய்ச் சடங்குகள் செய்தது, தன் கணவன் நாத்தனார் இறந்தபோது பொறந்தையர் சீா் பெருமையாகச் செய்தது ஆகியவற்றைக் கூறி சகோதரன் மனைவி பாடியது.

பொழுதுஞ் சரியுமில்லே
பிஞ்சுமக்கள் ஐத்தை
போறதுக்கு நாளுமில்லே
நாளுஞ் சரியுமில்லே
வாழுமக்கள் ஐத்தை
நடப்பதுக்கு நாளுமில்லே

மரத்திலிரந்த மயிலோ பறந்தா
மரமோ அசைஞ்சுவிடும்
மரமசைஞ்ச நேரமில்லே
நீமாது வனம்போனதும்

கொம்பிலிருந்து குயிலோ பறந்தா
கொம்போ அசைஞ்சுவிடும்

கொம்பசைஞ்ச நேரமில்லே
நீகோதை வனம்போனதும்

செடியிலிருந்த சிட்டோ பறந்தா
செடியோ அசைஞ்சுவிடும்
செடியசைஞ்ச நேரமில்லே
நீசீதை வனம் போனதும்

மறுவீடு போய்வாழும்
மகளாரையும் காணலியே
பொறவீடு போய்வாழும்
பொண்ணாரையும் காணலியே
மாதுமே இல்லாது
மனசிலேயும் தாங்கலுன்னா
பொண்ணுமே இல்லாது
புத்தியிலே தாங்கலுன்னா
பொண்ணு கெளையுமே
பெருங்கெளை தானும்பா
மாது கெளையுமே
மகுந்தகெளை தானும்பா
மாளுஞ் சமயம்
மாதில்லாக் குத்தம்
மாதுகலியும் மனக்கலியுந் தீரலியே
போகுஞ் சமயம்
பொண்ணில்லாக் குத்தம்
பொண்ணுகலியும் பெருங்
கலியும் தீரலியே

வேடர்களும் தூதர்களும்
வெல்லப்பய மாகலையா
மேலுலகப் பூநாடு
மேன்மையாத் தோணுதின்னே
வெகுசுருக்கா மாண்டுவிட்டே

தூதர்களும் காதர்களும்
சொல்லப்பய மாகலையா
சொர்க்கலோகப் பூநாடு
சோதியாத் தோணுதின்னே
சுருக்கா மாண்டுவிட்டே

அரசும் செல்வமும்
அள்ளிக் கொழிச்சிருந்தா
மகனாரும் செல்வமும்
மகுரக் கொழிச்சிருந்தா
மதராசு ஆளும்
மகனாரைக் கண்டிருந்தா
புத்திரரும் செல்வமும்
போதக் கொழிச்சிருந்தா

பொன் கலப்பில்லாத
புத்திரராக் கண்டிருந்தா
மக கலப்பில்லாத
மகனாராக் கண்டிருந்தா

பொறந்தையின்னு சொன்னா
புத்திபிரிய மாகுதும்பா
பொறந்தையுட தேவியின்னா
புத்தி இனிக்குதும்பா
வளந்தையின்னு சொன்னா
மனப்பிரிய மாகுதும்பா
வளந்தையுட தேவியின்னா
மனசு இனிக்குதும்பா

பொறந்தையுட வாசலெல்லாம்
பெசகாச் சடங்கிருக்கே
வளந்தையுட வாசல்லெல்லாம்
மாறாச் சடங்கிருக்கே

சிலேட்டுவிளக்கு வைக்கும்
சீதைபோய் எங்கொளிஞ்சா
குத்துவிளக்கு வைக்கும்
கோதைபோய் எங்கொளிஞ்சா
பொன்னாலே ஆலாத்தி
புடிச்சுவந்தா எங்கொளிஞ்சா

மருதை மஞ்சள் போல
மாதுவளம் போனமுன்னா
தேர்மஞ்சள் போலச்
சீதைவனம் போனமுன்னா

அரக்குமஞ்சள் போல
அல்லிவனம் போனமுன்னா

சிங்கம்வச்ச மேவீடும்
செகப்பெழைச்ச மேத்தளமும்
சித்தடியா வாழ்ந்த எடம்
செண்டுமல்லி நந்தவனம்

ஆனைவச்ச மேவீடும்
அரக்குவச்ச மேத்தளமும்
ஆனிழையா வாழ்ந்த எடம்
அடுக்குமல்லி நந்தவனம்

குதிரைவச்ச மேவீடும்
குண்டுவச்ச மேத்தளமும்
கொம்பனையா வாழ்ந்தஎடம்
குடமல்லி நந்தவனம்

ஆக்குற இடமும்
அடுப்படியே பாத்ததில்லே
பொங்குற எடமும்
புகையடியும் கண்டதில்லே

ஐத்தை மகனுக்குநீ
ஆக்கிச் சலிச்சதில்லே
மாமி மகனுக்குநீ
வடிச்சுச் சலிச்சதில்லே

மாசமத்தி ஆத்தா
மான்வேட்டை ஆடிவரும்
மகனாரைக் கண்டிருந்தே
மானைக் கறியை
மாது சமைச்சதில்லே
மாது சமையலுக்கு
வடிச்சிடவும் ஆளுவச்சே

பெருஞ்சமத்தி ஆத்தா
புலிவேட்டை ஆடிவரும்
புத்திரரைக் கண்டிருந்தே
புலியைக் கறியைப்
பொண்ணு சமைச்சதில்லே
பொண்ணுடைய சமையலுக்குப்
பொங்கியிட ஆளுவச்சே

போசன வேளைக்குப்
போர்மாமன் மஞ்சன்
பெருமாள் அழைச்சிருந்தே
புள்ளையெல்லாம் கிட்டவச்சு
பொறசாதி தானும்
பொங்கிய சோறு
புடிச்சுண்ணு பாத்திருந்தே

வாரியுங்கும் நேரம்
மாமருடை மஞ்சன்
மன்னர் அழைச்சிருந்தே
மக்களெல்லாம் கிட்டவச்சு
மறுசாதி தானும்
வடிச்சிட்ட சோறு
வாரியுண்ணு பாத்திருந்தே

வாவரசி வாவரசி
பிஞ்சுமக்கள் ஐத்தை
மதிப்பான வாவரசி
அடசி வருவார்க்கும்
அதிட்டமுள்ள வாவரசி
தூர வருவார்க்கும்
துலக்கமுள்ள வாவரசி

கனக்கநகை பூண்டு
கண்டாங்கி தோளில் இட்டு
செறக்கநகை பூண்டு
சித்தாடை தோளில்இட்டு
பவரானநகை பூண்டு
பட்டாண்ட தோளில்இட்டு

மஞ்சள் மணமணங்க
மங்கிலியம் தீப்பறக்க
ஆடை மணமணங்க

ஆபரணம் தீப்பறக்கக்
கருணர் கைக்கண்டாங்கி
காட்சிபெத்துப் போனமுன்னே
வரிசைப் பொறப்பு
வளப்புடைய கையி
வங்கிவச்ச முந்தாங்கி
வரிசைபெத்துப் போனமுன்னே

பொண்ணும் பொறப்பு
பொறப்புடைய கையி
பொன்னெழைச்ச முந்தாங்கி
போருபெத்துப் போனமுன்னே

வையையிலே நீர்மோந்து
வாசல்லே நீராடி
மாந்தோப்பு மாலைவந்து
வளந்த எடத்திப் பட்டுவந்து
வையையெல்லாம் பூமிதக்க
மன்னருமே பாத்திருக்க
மையோட்ட பொட்டோட்ட
மலரோட தீக்கலக்க
மாததிட்டம் செய்திருந்தே

பொய்யையிலே நீர்மோந்து
பூமியிலே நீராடி
பூந்தோப்பு மாலைவந்து
பொறந்த எடத்திப் பட்டுவந்து
பொய்யையெல்லாம் பூமிதக்கப்
பெருமாளும் பாத்திருக்கப்
பொட்டோட்ட மையோட்ட
பூவோடு தீக்கலக்கப்
பொண்ணதிட்டம் செய்திருந்தே

OOO

பல தெய்வங்களையும் வேண்டித் தவமாத் தவமிருந்து பெற்ற மக்களை எல்லாம் விடுத்து இறந்து போன நாத்தனாருக்கு அண்ணன் மனைவி பாடியது.

வாவரசி வாவரசி
வாழுமக்கள் ஐத்தை
மதிப்பான வாவரசி
தூர வருவார்க்கும்
துலக்கமுள்ள வாவரசி
அடசி வருவார்க்கும்
அதிட்டமுள்ள வாவரசி
எட்ட வருவார்க்கும்
எடுப்பான வாவரசி
மாதவசு மாது
மக்கள் பறக்கவச்சு
வனம்பாத்த வாவரசி
பெருந்தவசுப் பொண்ணு
பிஞ்சுமக்கள் ஐத்தை
புள்ளை பறக்கவச்சுப்
பொனம்பாத்த வாவரசி

மாலைக் கழுத்தி
மடிநெறஞ்ச பூக்காரி
தாலிக் கழுத்தி
தங்கநகைக் காராத்தா
ஆருகளைச்சாலும் நீங்க
அழகோட போனவுக
புள்ளைகளைச்சாலும் நீங்க
பூவோட போனவுக
மக்க களைச் சாலும் நீங்க
மலரோட போனவுக
பெருமாள் களைச்சாலும் நீங்க
போரழகி ஆனவுக
மன்னர்களைச்சாலும் நீங்க
வாவரசி ஆனவுக

பிள்ளையாரிடம் போனாலும்
பிள்ளைவரம் கேட்டுவந்தா
அம்மனிடம் போனாலும்
அரசுவரம் கேட்டுவந்தா
சாமியிடம் போனாலும்
தம்பிவரம் கேட்டுவந்தா

ஊசி நிறுத்தி
ஒருநாத் தவமிருந்தா
பாசி நிறுத்திப்
பகலில் தவமிருந்தா
புறங்கை கட்டிப்
பொழுதன்னைக்கும் தவமிருந்தா
தரைமெழுகிச் சோறுன்னா
வெந்த மாத்தின்னா
வெரதம் கொலையுமுன்னு
பச்சை மாத்தின்னு
பகலில் தவமிருந்தா

தவம் பொறுக்கமாட்டாம
தம்பிவந்து சேரலியே
வரம் பொறுக்கமாட்டாம
மஞ்சன்வந்து சேரலியே
மஞ்சன் மஞ்சன் என்று
மாயவரம் போனாளாம்
மாயவரம் சாலாட்சி
மஞ்சனையுந் தந்தாளாம்
செம்பன் செம்பன் என்று
தில்லைபுரம் போனாளாம்
தில்லைபுரம் சிவகாமி
செம்பனையும் தந்தாளாம்

மஞ்சன் மஞ்சன் என்று
மதுரைக்குப் போனாளாம்
மதுரை மீனாட்சி
மஞ்சனையும் தந்தாளாம்

மஞ்சன் பொறக்கவுன்னு
மலைமேல் முருகருக்கு
மச்சோட நெல்லை
மாவிளக்கா வச்சாளாம்
புள்ளிமயில் வேலவர்க்குப்
போரோட்ட நெல்லைஎல்லாம்
பொங்கலா இட்டாளாம்
புள்ளைவரம் கேட்டாளாம்

எலைக்காஞ்சு கொடிக்கருகி
இல்லையின்னு போகயிலே
தழைக்காஞ்சு கொடிக்கருகி
தல்லையின்னு போகயிலே
எறும்பு மொழையா
ஈஸ்வரனார் கோவிலிலே
தவமாத் தவமிருந்து
தவம்பொறுக்க மாட்டாமே
தம்பிவந்து சேர்ந்தானாம்

அப்ப வருந்திய மக்கள்
இப்ப வளவில் திரியுது
வார்த்தைக்கு ஒருக்கா
மஞ்சன் பதழும்பா
அப்பத் தேடியமக்கள்
இப்பத் தெருவில் திரியுது
சேதிக்கு ஒருக்கா
செம்பன் பதழும்பா

பிள்ளைப்பேற்றுக்காக விரதம், தவம், நேர்த்திக் கடன் செய்தல் புலனாகின்றது.

ooo

## மருமகனுக்கு

பர்மாவிற்குக் கடல் கடந்து சென்ற மருமகன், அங்கே கொலை செய்யப்பட்டு இறந்தபோது, பிள்ளைப்பேறும் இல்லாத நிலையில் தன் மகளைத் தவிக்கவிட்டுப் போனதையும், விதவையான தன்னைப் போல் மகளையும் விதவையாக்கிவிட்டதையும் எண்ணிப் புலம்பி மாமியார் பாடியது.

பொட்டழிஞ்சா மையழிஞ்சா
என்பெருந்தவசுப் பொண்ணு
பொண்ணு கலியும்
பெருங்கலியும் தீத்தமக

பொறந்தநெறம் பேந்துவிட்டா
மையழிஞ்சா பொட்டழிஞ்சா
என்மாதவசுப் பொண்ணு
மாதுகலியும்
மனக்கலியும் தீத்தமக
வளந்தநெறம் பேந்துவிட்டா

போதப் பொறந்தாளே
பொண்ணாசை தீத்தாளே
புகழ்மதுரை மீனாளே
போதக் குடுத்துப்
பூவசைக்க மாட்டாமே
பொலிஞ்சாண்டார் பேரனுக்குக்
கோப்பிசைச்சார் ஓவியமா

பொழிஞ்சாண்டார் பேரன்
பொன்தேடப் போனதினால்
பொண்ணிலிருந்து வாழாம
பொன்தேடப் போனமன்னர்
பூமிவரக் காத்திருந்தா

மகுரப் பொறந்தாளே
மாதாசை தீத்தாளே
வடமதுரை மீனாளே
மகுரக் குடுத்து
மலரசைக்க மாட்டாமே
மதிச்சாண்டார் பேரனுக்கு
மாலையிட்டார் ஓவியமா
மதிச்சாண்டார் பேரனும்
மச்சம்தேடப் போனதினால்
மாதிருந்து வாழாமே
மச்சம்தேடப் போனமன்னர்
வளவிவரக் காத்திருந்தா

வங்காளி சீமை
வாரிவரப் போனவுக
பெரும்பாவன் சீமை
பொன்தேடப் போன்வுக

அம்புவிட்டான் குண்டுவிட்டான்
அநேகசனம் கொண்ணுவிட்டான்
குண்டுவிட்டான் அம்புவிட்டான்
கோடிசனம் கொண்ணுவிட்டான்

உயிர்தப்பி வருவமுன்னு
ஓடிவந்தா எத்தனையோ
நம்மசனத்தைப் பாக்க
நடந்துவந்தா எத்தனையோ
காலப் பசியாலே
களச்சசனம் எத்தனையோ
மதியப் பசியாலே
மாண்டசனம் எத்தனையோ
அந்திப் பசியாலே
அணஞ்ச சனம் எத்தனையோ

கட்டழகி முன்கை
காப்பணைஞ்ச காதலரே
காணாதான் சீமையிலே
கத்திக்கிரை யானவரே
மங்கைநல்லா முன்கை
காப்பணைஞ்ச மாயவரே
வாண்டாநான் சீமையிலே
வாளுக்கிரை யானவரே
பொழகேடன் சீமையிலே
புல்லுக்கிரை யானவரே
பொண்ணு எளங்குயிலைப்
புலம்பச்சுப் போனவரே

தண்டியலும் பல்லாக்கும்
தரணிவரக் காத்திருந்தா
தண்டியலை அங்கவச்சீர்
தண்டக்கால் இங்கவச்சீர்
பல்லாக்கும் தண்டியலும்
பாதைவரக் காத்திருந்தா
பல்லாக்கு அங்கவச்சீர்
பந்தக்கால் இங்கவச்சீர்
பாங்கி எளங்குயிலைப்

பறக்கவச்ச மாண்டமுன்னீர்

பிஞ்சான பொண்ணும்
பிதிர்வழி போலப்
பெத்துமொதல் ஆகலன்னு
பிஞ்சு மக்கள் ஐயா
புத்திக்கவலை கொண்டார்
மட்டமுள்ள மாதும்
வமிசத்தார் போல
வளத்துமொதல் ஆகலன்னு
வமிசத்தார் அத்தனையும்
மனதிக்கவலை கொண்டார்

போதப் பொறந்த
புள்ளை இருந்தாலும்
நான் போகுமறுதி
இந்தப் பொண்ணு கவலை
எக்குப்புத்திவிட்டு நீங்காது

மகுரப் பொறந்த
என்மணிபோல மக்கள்
மக்கள் இருந்தாலும்
இந்த மாதாசை தீத்தமக
இந்தமாது கவலை
எக்குமனசைவிட்டு நீங்காது

இந்தப் பொண்ணு சிறையோட்ட
வாழும் மக்கள் ஐயா
நான் பெரிய சிறை கூடவச்சா
இந்தமாது சிறைபோட்ட
என்வடுவான அந்தணரே
என்னைமகுந்த சிறை கூடவச்சா

இரண்டாவது உலகப் போரின் போது, உயிர் தப்பிப் பிழைக்க பர்மாவை விட்டு வெளி யேறிய மக்கள் பற்றிய குறிப்பு இடம் பெறுகிறது. இறப்பு வெளிநாட்டில் நிகழ்ந்து அங்கேயே இறந்தவரின் உடல் எரியூட்டப் பெற்றாலும், இறப்பை ஒட்டிய சடங்குகள் சொந்த வீட்டில் சொந்த ஊரிலேயே நடைபெறும் என்னும் நகரத்தார் வழக்கம் வெளிப்படுகிறது.

OOO

பிறந்த குடிக்கேற்ப பெருமையுடைய குடியில் பிறந்த கணவனை மணந்து, பெருமையோடு மகள் வாழும் போது மருமகன் இறந்துபட, மகளின் வாழ்வு குலைந்ததே என்றும், மகளின் நிலை கண்டு மெழுகினைப் போல் தந்தை உருகுகிறாரே என்றும், இழவுக்கு வந்தவர்களும் மருமகனின் அன்பையும், குணத்தையும் எண்ணி வருந்துகிறார்கள் என்றும் மாமியார் பாடியது.

பொட்டழிஞ்சா மையழிஞ்சா
என்பெருந்தவசுப் பொண்ணு
பொண்ணோ தலகொலஞ்சா
பூணாரம் கொள்ளையின்னா
பொன்னொசந்த பட்டுரிஞ்சா
பொறந்த நெறம் பேந்துவிட்டா

மையழிஞ்சா பொட்டழிஞ்சா
என்மாதவசுப் பொண்ணு
மாதோ தலகொலஞ்சா
மங்கிலியம் கொள்ளையின்னா
விராகன்பெத்த பட்டுரிஞ்சா
வளந்தநெறம் பேந்துவிட்டா

இட்ட தடுக்குக்கு
எங்க வாசல்
ஏத்த மணவாளரில்ல
வைச்ச தடுக்குக்கு
மதிச்ச மணவாளரில்ல
போட்ட தடுக்குக்குப்
போந்த மணவாளரில்ல

இந்த மன்னர் பாரியிங்க
என்ன தவம் செய்தாளோ
இந்த மன்னரைக் குடுத்தழுக
என்ன பொழை செய்தாளோ
இந்த மதிச்சமுடி பாரியிங்க
என்ன மாதவங்கள் செய்தாளோ
இந்த மந்திரியைக் குடுத்தழுக
என்ன மாபாவம் செய்தாளோ

சங்கும் சமுத்திரமும்
எங்க வாசல்
சரியாப் பொண் பொறந்திருந்தா
தனிவயிரம் கண் பார்க்கும்
தங்கமக்கள் ஐயா
சமத்தருக்கு வாழ்ந்திருந்தா

ஈட்டி நுழையாத
எங்கவாசல்
எல்லையிலே பொண்பொறந்தா
எட்டுலச்சம் கண்பார்க்கும்
இந்திரர்க்கு வாழ்ந்திருந்தா

பகளம் வெளையும்
பாற்கடலில் பொண்பொறந்தா
பத்துலச்சம் கண்பார்க்கும்
பாண்டியர்க்கு வாழ்ந்திருந்தா
ராசாக்கள் தன்னோட
நடுவே பொண் பொறந்தா
தேவாக்கள் தன்னோட
சேர்ந்து பொண் பொறந்தா

பூந்தேரும் சப்பரமும்
எங்க வாசல்
பொண் வளந்த ஓவியமும்
மாந்தேரும் சப்பரமும்
எங்க வாசல்
மகவளந்த ஓவியமும்

எங்க வாசல்
மதிச்சமுடி ஐயாக்க
வருசக் கனதியை
வருந்தியதை எண்ணியிட்டோ
வாழு மக்கள் ஐயா
மாளக் கருத்துமில்லே
மாளநாள் ரொம்ப இருக்கே
எங்க வருசக் கனதி
மையழிய நாயமில்லே

எங்க வாசல்
போந்தமுடி ஐயாக்க
பொண்ணு கனதியை
போத்தினதை எண்ணியிட்டா
பிஞ்சுமக்கள் ஐயா
போகக் கருத்துமில்லே
போகநாள் ரொம்ப இருக்கே
எங்க பிஞ்சான மாது
பொட்டழிய நாயமில்லே

சட்டித் தயிர் கடஞ்சா
சம்பத்தை ஆண்டிருந்தா
பானைத் தயிர் கடஞ்சா
பாக்கியத்தை ஆண்டிருந்தா

தங்கப் படியே
தளர மிதிச்சிருந்தா
தருமருக்கு முன்போக
தவங்கள் மெத்தச் செய்யலியே

பொன்னும் படியே
பொருந்த மிதிச்சிருந்தா
புண்ணியருக்கு முன்போக
பெருந்தவங்கள் செய்யலியே

வெள்ளிப் படியே
விளங்க மிதிச்சிருந்தா
வீமருக்கு முன்போக
வெகுதவங்கள் செய்யலியே

கொய்யாவும் மாதுளையும்
குலுங்கப் பழுத்திருந்தா
குன்னக்குடி போல
கொழுந்தோடிக் காச்சிருந்தா

மாதுளையும் கொய்யாவும்
மகுரப் பழுத்திருந்தா
வையாபுரி போல
வாதோடிக் காச்சிருந்தா

ஈச்சங்காய் செவ்வெளனி
எடைக்குஎடையா காச்சிருந்தா
சாதிக்காய் செவ்வெளனி
சரஞ்சரமாக் காச்சிருந்தா
தங்கக் கொடியேறி
தரந்தரமாப் பெத்திருந்தா
வெள்ளிக் கொடியேறி
வெதவெதமாப் பெத்திருந்தா

நாயமில்லாச் சாவுக்கு
நான்வார முன்னீகளே
நீதியில்லாச் சாவுக்கு
நீட்டிப் படுத்திகளே

இடியிங்கக் கேளாம
எறந்ததுவேக் கேட்டழுதோம்
படையிங்கக் கேளாமே
பட்டதுவே கேட்டழுதோம்

பொன்னி மணவாளர்
ஓலை கொழுத்தி
ஒருபுறமா வையாமே
பந்தங் கொழுத்திப்
பலபுறமா வச்சுவிட்டா

பவன் காய்க்கும் தென்னமரம்
பட்டதுவும் சீக்கிரம் தான்
பொன்காய்க்கும் தென்னமரம்
போனதுவும் சீக்கிரம்தான்

மாது மணவாளர்
மடிஞ்சதுவே கேட்டொடனே
வெந்த மெழுகதுவோ
வீமர் உருகுகிறது
காஞ்ச மெழுகதுவோ
கட்டி மக்கள் ஐயா
கருணர் உருகுகிறது.

தங்கம் உருகுறதைத்
தட்டான் உரையறிவான்
எங்க அருமை மக்கள் ஐயா
அங்கம் உருகுறது
தாமாறப் பொண்டுகளா
ஆரறியப் போறாக

மடிப்பும் மடிப்பழகும்
வாழுமக்கள் ஐயா
மணிவயிறும் தொந்தியும்
படிப்படியே சாத்திய
பஞ்சவர்ணப் பட்டழகும்
புதுக்கோட்டை வில்லை
பொட்டுக்கு எசஞ்சிருக்கும்
மதராசு வில்லை
மடிப்புக்கு எசஞ்சிருக்கும்

பச்சைக் கொடை பிடிச்சு
பாப்பாச்சி காலிலிட்டு
பிஞ்சுமக்கள் ஐயா
பாதைவழி போனாக்க
பாதையிலே பாத்தவுக
பிராமணரா என்பாக

வெள்ளிக் கொடைபுடிச்சு
மிதியடியைக் காலிலிட்டு
வாழுமக்கள் ஐயா
வீதியிலே போனாக்க
வீதியிலே பாத்தவுக
வேதியரா எம்பாக

பூணூல் இல்லாத
பூசை பிராமணர்தான்

கோடிச் சனமும் ஒங்க
கொணத்துக்கு அழகுதுக
அநேக சனமும் ஒங்க
அன்புக்கு அழுதுக.

வந்தா தரிக்கலியே
வழிகூடிப் போகலியே
கண்டா தரிக்கலியே
கால் கூடிப் போகலியே

OOO

## மருமகளுக்கு

தன் சகோதரன் மகளைத் தன் மகனுக்கு மணமுடித்து பெருமையோடு உறவு கொண்ட மாமியார், மருமகள் நோய்கண்டு இறந்தபோது மருமகளைத் தன்மகன் பேணிக் காத்ததையும் தன் மகளையும் பேரக்குழந்தைகளையும் உறவினர்களையும் வருந்த வைத்து மறைந்ததையும் அழகும் மென்மையும் சமத்தும் உடைய மருமகளை மகளாகவே எண்ணி அன்பு காட்டியதையும் கூறி வருந்திப்பாடியது.

நாளுஞ் சரியாச்சா
என்னரியான் தேவி
நடப்பதுக்கு நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா
போர்விசயன் தேவி
போறதுக்கு நாளாச்சா

பெருவாரிக் காலமா
புள்ளி பெருகிவந்த
புள்ளையார் பட்டியிலே
பிரியமுள்ள சம்மந்தம்
மகுந்ததொரு காலமா
வரியோ பெருகிவந்த
விநாயகர் வாசல்லே
மதிப்பான சம்மந்தம்

ஐயாக்க காலமா
அழகான சம்மந்தம்
எட்டுத் தலமொறையா
எடுப்பான சம்மந்தம்
பத்துத் தலமொறையா
பழக்கமுள்ள சம்மந்தம்
அந்நியர் சம்மந்தம்
அடசிக் கலக்காமே
தூரத்துச் சம்மந்தம்
தொட்டுக் கலக்காமே
கண்ணோட்ட சம்மந்தம்
கலந்துவச்சுப் பாத்திருந்தோம்
உறவோட்ட சம்மந்தம்
ஒக்கவச்சுப் பாத்திருந்தோம்
வளப்போட்ட சம்மசந்தம்
வாங்கிவச்சுப் பாத்திருந்தோம்
பொறப்போட்ட சம்மந்தம்
பின்னிவச்சுப் பாத்திருந்தோம்

பொறவியுட பொண்ணை
போதப் பொறந்தாளைப்
புதுவயிரஞ் சீர்வாங்கி
எங்கையா வாசல்
பூமியெல்லாம் பொன்னுதிரப்
பூவசைச்சுக் கூட்டிவந்தோம்
பூவசைச்ச ஓவியம்போல்
போதமக்கள் கண்டிருந்தா

வளந்தையுட பொண்ணை
மகுரப் பொறந்தாளை
வயிர நகை சீர்வாங்கி
எங்கையா வாசல்
வளவெல்லாம் பொன்னுதிர
மாலையிட்டுக் கூட்டி வந்தோம்
மலரசைச்ச ஓவியம் போல்

மகுரமக்கள் கண்டிருந்தே

பிஞ்சான தம்பி
பிஞ்சுமக்கள் ஆத்தா
பொண்ணு கெடையும்
பெலனாத் தெரியுதுன்னான்
போதச் செலவளிச்சான்
பெரியதொரை கூட்டி வந்தான்
பெரியதொரை கூட்டிவந்தும்
பிணியோ வெலகலியே
பிஞ்சான மக்களுக்கும்
பெத்தா பொழைக்கலியே
பெலனாத் தெரியலியே

மட்டமுள்ள தம்பி
மதலைமக்கள் ஆத்தா
மாது கெடையும்
வலுவாத் தெரியுதுன்னான்
மகுரச் செலவளிச்சான்
மகுந்ததொரை கூட்டி வந்தான்
மகுந்ததொரை கூட்டி வந்தும்
வியாதி தெரிக்கலியே
மட்டமுள்ள மக்களுக்கும்
வளத்தா பொழைக்கலியே
வலுவாத் தெரியலியே

மட்டமுள்ள தம்பிக்கும்
மனையாட்டி தோக்க
மகுந்த வயசுமில்லே
பிஞ்சான தம்பிக்கும்
பொண்டாட்டி தோக்க
பெரிய வயசுமில்லே

கொத்தவர்க்குத் தேவி
கொள்ளக் கெடைக்குமே
கொழந்தைமக்கள் ஆத்தாளைக்
கோடிதனம் உள்ளாளைக்
கொள்ளக் கெடைக்காதே
மன்னவர்கருத் தேவி
வாங்கக் கெடைக்குமே
மதலைமக்கள் ஆத்தாளை
மகுரத்தனம் உள்ளாளை
வாங்கக் கெடைக்காதே

சாலோட தண்ணி
சாச்சுக் குடிச்சாலும்
தாயிழந்த மக்களுக்குத்
தாய்வாத்த தண்ணிபோல்
தாகந் தெளியாதே

பெத்தபதம் கண்டதுதான்
பின்புபதம் காணலியே
வளத்தபதம் கண்டதுதான்
மறுத்துப்பதம் காணலியே

வாள்விசயன் தேவி
மக்கள் பறக்கவச்சு
மன்னர் மயங்கவச்சு
மாண்டாச் சுகமும்உண்டா
போர்விசயன் தேவி
புள்ளை பறக்கவச்சு
பெருமா மயங்கவச்சுப்
போனாச் சுகமும் உண்டா

பொண்ணோட மஞ்சன்
பின்னிப் பொறக்கலுன்னா
புத்திக்கும் தாங்கலுன்னா
மாதோட மஞ்சன்
மறுத்துப் பொறக்கலுன்னா
மனசிலேயும் தாங்கலுன்னா

என்னரியான் தேவி
அன்னம்போல் செல்லி
அமுதுபோல் பாஞ்சாலி
அன்னநடை நடப்பா
ஆதரிச்ச வாதெறப்பா
மெல்லநடை நடப்பா
மெத்தனமா வாதெறப்பா

பையநடை நடப்பா
பனிபோல வாதெறப்பா

குளிச்சு முழுகிவந்தாக்
கூடவரும் சீதேவி
முழுகிக் குளிச்சுவந்தா
முன்னேவரும் சீதேவி
தொடச்சுக் குளிச்சுவந்தா
தொட்டுவரும் சீதேவி

ஆறுன புத்தி
அமந்த கொணமுள்ளா
தேறுன புத்தி
தெளிந்த கொணமுள்ளா
பக்கமெல்லாம் ஆளப்
பகையாத மனசுடையா
சுத்தியெல்லாம் ஆளச்
சுளியா மனசுடையா

காரிழையா தன்மனசு
கபடில்லா நல்மனசு
மெல்லிநல்லா தன்மனசு
வெனையில்லா நல்மனசு

பாங்கியுட நல்மனசு
பழுதில்லா நல்மனசு
பாத்துக்கொடுத்தாலும்
பழுதறியா நல்மனசு

தோகையுட நல்மனசு
சூதில்லா நல்மனசு
சொல்லிக் கொடுத்தாலும்
சூதில்லா நல்மனசு
காரிழையா தன்மனசு
கபடில்லா நல்மனசு
காட்டிக் கொடுத்தாலும்
கபடில்லா நல்மனசு

ஆசைமக்கள் ஆத்தா
ஆத்தி மணல்லே
அதிலே துவாரமிட்டு
அடுக்கடுக்காக் கோக்க
அல்லி சமத்தியில்ல

மதலைமக்கள் ஆத்தா
வையமணல்லே
மையம் துவாரமிட்டு
வரிவரியாக் கோக்க
மாது சமத்தியில்ல

கொஞ்சுமக்கள் ஆத்தா
கொழுந்து மணல்லே
கொஞ்சம் துவாரமிட்டுக்
கொடிக்கொடியாக் கோக்கக்
கோதை சமத்தியில்ல
உண்ணாத் தொலையாது
சீருள்ள செல்லிக்கு
உடுத்தினாப் பிய்யாது
தின்னாத் தொலையாது
சீருள்ள செல்லிக்குச்
செலவழிச்சாத் தீராது

மதலைமக்கள் ஆத்தாளை
வையகத்தி சொல்லுக்கு
வாள்விசயன் தேவியிம்பேன்
மனசுக்கும்தொண்டைக்கும்
வளத்தபுள்ளை போலயிம்பேன்

பிஞ்சுமக்கள் ஆத்தாளைப்
பூலோகத்தி சொல்லுக்குப்
போர்விசயன் தேவியிம்பேன்
புத்திக்கும் தொண்டைக்கும்
பெத்தபுள்ளை போலயிம்பேன்

போர்விசயன் தேவி
பொய்யையிலே நீர்மோந்து
பூமியிலே நீர்ரிடிப்
பொறந்த இடத்திப் பட்டுவந்து
பூந்தோப்பு மாலைவந்து

பூமியெல்லாம் பூமிதக்கப்
புள்ளையெல்லாம் பாத்திருக்கப்
பொட்டோட மையோடப்
பூவோடு தீக்கலக்கப்
புண்ணியத்தைச் செய்திருந்தா

வாள்விசயன் தேவி
வையையிலே நீர்மோந்து
வாசலிலே நீராடி
வளந்தஇடத்திப் பட்டுவந்து
மாந்தோப்பு மாலைவந்து
வளவெல்லாம் பூமிதக்க
மக்களெல்லாம் பாத்திருக்க
மையோட பொட்டோட
மலரோடு தீக்கலக்க
மாதவத்தைச் செய்திருந்தா

OOO

அண்மையில் பச்சைக் குழந்தையைப் பாலுக்குத் தவிக்விட்டு வா(ழ்)வரசியாக மாண்ட மருமகளுக்கு, மருமகள் வந்தது முதல் வீட்டில் செல்வமும் மகிழ்ச்சியும் பொங்கியது என்றும், கண்ணேணு பட்டதால் இந்தக் கலக்கம் வந்து சேர்ந்தது என்றும் மாமியார் வருந்திப் பாடியது.

வாவரசி வாவரசி
வாள்விசயன் தேவி
மதிப்பான வாவரசி
மக்கள் பறக்கவச்சு
மன்னரையும் களைக்கவச்சு
வனம்பாத்த வாவரசி
புள்ளை பறக்கவைச்சுப்
பெருமா களைக்கவச்சுப்
பொனம்பாத்த வாவரசி
தாலிக் கழுத்தி
தங்கநகைக் காரர்த்தா
மாலைக் கழுத்தி
மல்லியப்பூ வாசமுள்ளாள்

பொங்குதே கண்ணீரு

காடுமணமணங்க
கண்டாங்கி தீப்பறக்கக்
கட்டையெல்லாம் பால்வடிய
கட்டித்தீ கொண்டாத்தா
மஞ்சள் மணமணங்க
மங்கிலியம் தீஎரிய
பாடையெல்லாம் பால்வடிய
பதறித் தீகொண்டாத்தா
செடியே மணமணங்க
சித்தாடை தீப்பிடிக்கச்
சிதையெல்லாம் பால்வடிய
சித்தடியா பள்ளியறை
கட்டிலு மஞ்சனைக்
களைக்கவச்சுப் போனாத்தா
தொட்டிலு மஞ்சனைத்
துடிக்கவச்சுப் போனாத்தா

பாலுக்கு மஞ்சனைப்
பறக்கவச்சுப் போனாத்தா
அமுதுக்கு மஞ்சனை
அழுகவச்சுப் போனாத்தா

போர்விசயன் தேவி
பொண்ணு திருவகுத்தில்
புள்ளை நெழலாடுதுன்னா
பிஞ்சான தம்பிக்குப்
புத்திகொள்ளாச் சந்தோஷம்
போதங் கணக்காகிப்
புனலில் உதிச்ச
புள்ளை வெளியாகவுட்டி
புள்ளைவச்சுக் கொஞ்சலியே
பேராசை தீரலியே

வாள்விசயன் தேவி
மாது திருவகுத்தில்
மஞ்சன் நெழலாடுதுன்னா
வடிவொசந்த தம்பிக்கு
மனங்கொள்ளாச் சந்தோஷம்

வருசங் கணக்காகி
வகுத்தில் உதிச்ச
மஞ்சன் வெளியாகவுட்டி
மடியில்வச்சுக் கொஞ்சலியே
மனசாசை தீரலியே

மாதுவந்த நாமொதலா
மல்லியப்பூ நந்தவனம்
பொண்ணுவந்த நாமொதலாப்
பிச்சிப்பூ நந்தவனம்
சீதைவந்த நாமொதலாச்
செவந்திப்பூ நந்தவனம்
அல்லிவந்த நாமொதலா
அரளிப்பூ நந்தவனம்
கோதைவந்த நாமொதலாக்
கொடைமல்லி நந்தவனம்

சித்தடியா கைக்கு
ஷேரும் மொடைவந்ததில்லே
சித்தடியா பேருசொன்னா
ஷேரும் வெலை கூடும்
பாஞ்சாலி கைக்குப்
பணமொடையும் வந்ததில்லே
பாஞ்சாலி பேருசொன்னாப்
பவுனும் வெலைகூடும்
கட்டழகி கைக்குக்
காசுமொடையும் வந்ததில்லே
கட்டழகி பேருசொன்னா
காசுமொடையும் வந்ததில்லே

காக்கா குடிக்கக்
குளத்தில்நீர் ஆத்தாலும்
கட்டிமக்கள் ஆத்தா
கட்டழகி பேருசொன்னாக்
காலமழை பேஞ்சுவிடும்
களங்குருணி நெல்காணும்

குருவி குடிக்கக்
குளத்தில்நீர் அத்தாலும்
கொஞ்சுமக்கள் ஆத்தா
கொம்பனையா பேருசொன்னா
கோடைமழை பேஞ்சுவிடும்
கொலைகுருணி நெல்காணும்

அதிட்டமுன்னு சொன்ன
அடிநாக்குத் தச்சுதா
இந்தஅவதி வந்துசேந்துதா
ஒசத்தியின்னு சொன்ன
உள்நாக்கு தச்சுதா
இந்தஉவத்திரியம் வந்துதா
பகிசியின்னு சொன்ன
பல்லேறு தச்சுதா
இந்தப்பாடு வந்துசேந்துதா
நல்லான்னு சொன்ன
நாவேறு தச்சுதா
இந்த நட்டம் வந்து சேந்துதா

காலப் பகிசியில்ல
கண்கொள்ளா நேரமில்ல
நேரப் பகிசியில்ல
நிலைகொள்ளா நேரமில்ல

பிஞ்சான மக்களெல்லாம்
போத்தி வளத்துப்
பூச்சேத்துப் பாக்கலியே
மட்டமுள்ள மக்களெல்லாம்
வருந்தி வளத்து
மலர்சேத்துப் பாக்கலியே

பெருமா களைக்கவச்சுப்
பெத்தா மயங்கவைச்சுப்
பூமாமி களைக்கவச்சுப்
புள்ளையெல்லாம் பறக்கவச்சுப்
போரழகி ஆனமுன்னா

மன்னர் களைக்கவச்சு
வளத்தா மயங்கவச்சு
மாமி களைக்கவச்சு

மக்களெல்லாம் பறக்கவச்சு
வாவரசி ஆனமுன்னா

போர்விசயன் தேவி
பொய்யையிலே நீர்மோந்து
பூமியிலே நீராடிப்
பூந்தோப்பு மாலைவந்து
பொறந்தளடத்திப் பட்டுவந்து
பொய்யையெல்லாம் பூமிதக்கப்
பெருமாளும் பாத்திருக்கப்
பொட்டோட மையோட
பூவோட தீக்கலக்கப்
புண்ணியத்தை செய்திருந்தா

வாள்விசயன் தேவி
வையையிலே நீர்மோந்து
வாசலிலே நீராடி
மாந்தோப்பு மாலைவந்து
வளந்தளடத்திப் பட்டுவந்து
வையையெல்லாம் பூமிதக்க
மன்னருமே பாத்திருக்க
மையோட பொட்டோட
மலரோட தீக்கலக்க
மாதவத்தைச் செய்திருந்தா

OOO

## பேரனுக்கு

தன் மகளின் ஒரே மகன் நோயுற்று இறந்தபோது, பேரனுக்குத் தன்மகள் பட்டபாடும், செய்த மருத்துவமும் குறித்தும், தன் மணிவிழா நடக்க இருக்கும் சமயத்தில் பேரன் வருத்தமுறச் செய்தானே என்றும் வருந்தி ஆயா பாடியது.

கண்ணோ துடிக்குதடா தம்பி
கடைக்கண்ணோ தேடுதடா
கடைக்கண்ணுக் குள்ளாகக்
கானமயில் ஆடுதடா
கானமயிலோட தம்பி
கலந்திருக்காப் போலிருக்கே

புருவந் துடிக்குதடா
பின்கண்ணோ தேடுதடா
பின்கண்ணுக் குள்ளாகப்
புள்ளிமயில் ஆடுதடா
புள்ளிமயிலோட தம்பி
பேசுறாப் போலிருக்கே

பாவை துடிக்குதடா
பச்சைமயில் ஆடுதடா
பச்சைமயிலோட தம்பி
பழகுறாப் போலிருக்கே

புருவந் துடிக்குதடா
புள்ளிமயில் ஆடுதடா
புள்ளிமயிலோட தம்பி
பேசுறாப் போலிருக்கே

நீஒருத்தன் இருக்க
ஒலகிலெடம் இல்லையின்னான்
நீதனியன் இருக்க
சனத்திலெடம் இல்லையின்னான்
ஒருதன் இருந்தா
உலகாளப் போதுமின்னேன்
தனியன் இருந்தாச்
சகமாளப் போதுமின்னேன்

தென்சரணி நாடெல்லாம் என்
சின்னமுள்ளமாது இந்தச்
செம்பனுக்கே வேணுமுன்னா
தென்சரணி ஆள இருந்த
செம்பன் வனம் போனமுன்னா

வடசரணி நாடெல்லாம் என்
மதிச்சமுடி பேரன்
மஞ்சனுக்கே வேணுமுன்னா
வடசரணி ஆளஇருந்த

மஞ்சன் வனம்போனமுன்னான்

சீக்குப் பொறுக்கலின்னான்
சீதையுட மஞ்சன்
தேனாத்துக் குள்ளே
தெகைச்சோடிப் பள்ளிகொண்டான்
பாடு பொறுக்கலின்னான்
பாங்கியுட மஞ்சன்
பாலாத்துக் குள்ளே
பயந்தோடிப் பள்ளிகொண்டான்

புள்ளைக்குச் சீக்குமுன்னா
பெரிய மதுரையிலே
பெரியதொரை கண்பாத்தா
பெரிய மதுரையிலே
புண்ணிய மில்லையின்னா
பொறநாடு போனாக்கப்
புள்ளை பொழைக்குமுன்னா
போந்தமுடி பேரன்
புள்ளை ஒருவனின்னா
பொழச்சிருக்க வேணுமுன்னா
பொறவூரே போனமுன்னா
புள்ளை அளவெடுத்தா
பொன்னைச் செலவளிச்சா
பொன்னாளுந் தம்பியின்னா
பிம்பு பொறக்கலின்னா
புத்தி களையாம
போதச் செலவளிச்சா
புள்ளை பொழைக்கலியே
என்பொண்ணுடைய பங்கு
பெலனாத் தெரியலியே

மஞ்சனுக்கோ சீக்குமுன்னா
மதராசுச் சீமையிலே
வைத்தியங்கள் பாப்பமுன்னா
விசாதி அறியலியே
வைத்தியமும் பார்க்கலியே
மறுநாடு போனாக்க
மஞ்சன் பொழைக்குமுன்னா
மதிச்சமுடி பேரன்
மஞ்சன் ஒருத்தனின்னா
வாழ்ந்திருக்க வேணுமுன்னா
மறுநாடு போனமுன்னா
மஞ்சன் அளவெடுத்தா
மச்சம் செலவளிச்சா

மண்ணாளுந் தம்பியின்னா
மறுத்துப் பொறக்கலின்னா
மனசு களையாமே
மகுரச் செலவளிச்சா
மஞ்சன் பொழைக்கலியே
என்மாதுடைய பங்கு
வலுவாத் தெரியலியே

இந்தப் பிள்ளையொருதனுக்குப்
பொலிஞ்சிருந்த ஐயாக்க
பெருந்தருமம் செய்தெடத்தே
அந்தப் பெருந்தருமம் எட்டலியே
பேரனுடைய மஞ்சன்
புள்ளை பொழைக்கலியே

இந்த மஞ்சனொருதனுக்கு
மதிச்சமுடி ராஜாக்க
மாதருமம் செய்தெடத்தே
அந்த மாதருமம் எட்டலியே எம்
மாதுடைய மஞ்சன்
மஞ்சன் பொழைக்கலியே

பொண்ணாசை தீத்தமக
புள்ளை நெழலாடுதுன்னா
எங்கபோரழகி எல்லையிலே
போருக்கு அழைச்சுவந்தோம்
பொழுது தொகைக்குப்
புனலு வலியெடுத்துப்
புள்ளை பொறக்கலியே எம்
பொண்ணாசை தீத்தமக

பெரும்பாடு பட்டிருந்தா
அந்தப் புள்ளைபொறந்து
பூமிவிழுகையிலே
புள்ளை் கொரல் கேக்கயிலே
போனாலுங்கூட நாங்க
புத்திமறந் திருப்போம்
பெருவாரி நாளாச்சே

மாதாசை தீத்தமக
மஞ்சன் நெழலாடுதுன்னா
வாவரசி கோட்டையிலே
வாவுக்கு அழைச்சுவந்தோம்
வாரங் கணக்குக்கு
மஞ்சன் பொறக்கலியே எம்
மாதாசை தீத்தமக
மாபாடு பட்டமுன்னா
மகுந்ததொரை பாத்து
மஞ்சன் வெளியாயி
மண்ணில் விழுகையிலே
மஞ்சன்கொரல் கேக்கயிலே
மாண்டாலுங்கூட நாங்க
மறந்தும் இருப்போம்
வருசந்தொகை ஆச்சே

மட்டத்திப் போகாம நீ
வளந்தெடுத்த கோட்டைஎன்ன
பிஞ்சிலே போகாம நீ
பெருத்தெடுத்த கோட்டை என்ன

பனிக்கம்பை நாடிப்
பறக்கும் பசுங்கிளிபோல்
பாஞ்சோடிப் பள்ளிகொண்ட
பாவினையும் தெரியலியே
தினைக்கம்பை நாடித்
திரியும் பசுங்கிளிபோல்
தெகைச்சோடிப் பள்ளிகொண்ட
தீவினையும் தெரியலியே

எந்தவனத்திலே தம்பி
இருக்கிறாய் இன்னறியேன்
எக்காட்டுக் குள்ளேதம்பி
இருக்கிறாய் இன்னறியேன்
நந்தவனத்திலே தம்பி
நடக்கிறாய் இன்னறியேன்
நாயகியா மஞ்சன்
நடுக்காட்டுக் குள்ளே
நடக்கிறாய் இன்னறியேன்
மாந்தோப்புக் குள்ளேதம்பி
மறஞ்சிருக்காய் இன்னறியேன்

சித்திரத்து அம்பெடுத்தான்
சிவலோக வில்லெடுத்தான்
செறப்புள்ளார் பொண்ணைத்
தெசைபாத்து எய்தமுன்னான்

கோத்திரத்து அம்பெடுத்தான்
கூறுபடா வில்லெடுத்தான்
கோப்பறியாப் பொண்ணைக்
கூரறிஞ்சு எய்தமுன்னான்

கட்டோட அம்பெடுத்தான்
கலையாம எய்தமுன்னான்
கொத்தோட அம்பெடுத்தான்
கொலையாம எய்தமன்னான்

சீனிப் பொடியிடிச்சுச்
சிங்கார வேடுகட்டிச்
சீனிப் பொடியுங்காமச்
சின்னமுள்ள மாது
தெருவோரம் தூத்தியிட்டா

மஞ்சப் பொடியிடிச்சு
மாணிக்க வேடுகட்டி
மஞ்சப் பொடியுங்காம
வளவோரம் தூத்தியிட்டா

கருணப் பொடியிடிச்சு

கற்பூர வேடுகட்டி
கருணப்பொடி யுங்காமக்
கடவோரம் தூத்தியிட்டா
இன்னம் மாதம்நாலு
சென்னாக்க எங்க
வாழ்ந்திருந்தா கோட்டையிலே
வாவரசி எல்லையிலே
மகுந்தமுடி வாசலிலே
வாங்கிவச்சுப் பாத்தெடத்தே
வாவரசி மஞ்சனுக்கு எங்க
வாழுமக்கள் ஐயாவுக்கு
மகுந்த கலியாணம்
மகிழ்ச்சியுள்ள வேளையின்னேன்
என்மயிலனையா மஞ்சன்
வருத்தம்வைக்கக் காத்திருந்தான்

இன்னம் போதம்நாலு
சென்னாக்க எங்க
பொலிஞ்சிருந்தா கோட்டையிலே
போரழகி எல்லையிலே
புடிச்சுவச்சுப் பாத்தெடத்தே
போரழகி மஞ்சனுக்கு எங்க
பிஞ்சு மக்கள் ஐயாவுக்கு
பெரிய கலியாணம்
பெருமையுள்ள வேளையின்னேன்
பொய்க்கடியா மஞ்சன்
பொழையவைக்கக் காத்திருந்தான்

காலப்பகிசியின்னேன்
கண்கொள்ளா நேர்முன்னேன்
காலப் பகிசியிலே என்
காரிழையா மஞ்சன்
கருப்பாலே புள்ளிவச்சான்

நேரப் பகிசியின்னேன்
நெமைகொள்ளா நேரமுன்னேன்
நேரப் பகிசியிலே
நாயகியா மஞ்சன்
நேரிலொரு புள்ளிவச்சான்

காணப்பெருஞ் சோட்டைதம்பி
ஒன்னைக் கண்டுவிடமாசோட்டை
பாக்கப் பெருஞ்சோட்டைதம்பி
ஒன்னைப் பாத்துவிடப் பெருஞ்
சோட்டை

 OOO

தன் மகன் வயிற்றுப் பேரன் இறந்தபோது, தெய்வங்களைக் காவல் வைத்தும் எமன் வந்து வெற்றி பெற்றானே என வருந்தி அப்பத்தாள் பாடியது.

என்னரியான் மஞ்சனுக்கு
எங்குந்திரை வளைச்சு
எரணியனைக் காவல்வச்சு
ஈஸ்வரியைச் சாச்சிவச்சோம்
எங்குந்திரை சோர்ந்து
எரணியனுந் தானொதுங்கி
ஈஸ்வரியுங் கண்ணசந்து
எமன்வந்துவெற்றிபெற்றான்

பாலனொடை மஞ்சனுக்குப்
பக்கந்திரை வளைச்சுப்
பார்வதியைக் காவல்வச்சுப்
பகவானைச் சாச்சிவச்சுப்
பக்கந்திரை சோர்ந்து
பார்வதியுந் தானொதுங்கிப்
பகவானுங் கண்ணசந்து
பாவிவந்து வெற்றிபெற்றான்

செம்பனொடை மஞ்சனுக்குச்
சுத்தித் திரை வளைச்சுச்
சூரியனைக் காவல்வச்சுத்
துர்ச்சடையைச் சாச்சிவச்சுச்
சுத்தித் திரை சோர்ந்து
சூரியனுந் தானொதுங்கித்
துர்ச்சடையுங் கண்ணசந்து

தூதன் வந்து வெற்றி பெற்றான்

○○○

## பேத்திக்கு

மிகச் சிறப்பாக மணம் முடித்துக் கொடுக்கப்பெற்ற பேத்தி (மகனின் மகள்) கணவனுடன் கருத்து வேறுபாடு கொண்டு தற்கொலை செய்து கொண்ட போது அப்பத்தா பாடியது.

நாளுஞ் சரியாச்சா
நடப்பதுக்கும் நாளாச்சா
பொழுதுஞ் சரியாச்சா
பிஞ்சான மாது
போறதுக்கு நாளாச்சா

வாள்விசயன் பொண்ணு
மாது தனிச்சியின்னு
மகுரவெள்ளம் சீர்குடுத்து
மட்டத்த சாமானை
வளவில் பரப்பிவச்சு
வாவரசி மஞ்சருக்கு
மலரசைச்சா ஓவியமா
மலரசைச்ச ஓவியம்போல்
மகிழ்ந்து மிருக்கலியே
மஞ்சன் மொதலாகலியே

போர்விசயன் பொண்ணு
பொண்ணு தனிச்சியின்னு
போதவெள்ளம் சீர்குடுத்துப்
பெருவாரிச் சாமானை
பூமிப் பரப்பிவச்சு
பூவசைச்சா ஓவியமா
பூவசைச்ச ஓவியம்போல்
பொலிஞ்சு மிருக்கலியே
புள்ளை மொதலாகலியே

மாலையிட்ட நாமொதலா
மன்னருக்கும் தேவிக்கும்
மாறாப் பகையாச்சு
மன்னருக்குந் தேவிக்கும்
வம்பு நடந்ததுவே
வையகத்தி ரொம்பருக்கு
மாளும் அறுதி
வம்பை வெலக்காதா
வையகத்தி கண்டதில்லே

பூச்சேத்த நாமொதலாப்
பெருமாளுக்கும் தேவிக்கும்
பெசகாப் பகையாச்சு
பெருமாளுக்கும் தேவிக்கும்
போரு நடந்ததுவே
பூலோகத்தி ரொம்பருக்கு
போகும் அறுதி
போரை வெலக்காதா
பூலோகத்தி கண்டதில்லே

மன்னர் சலிச்சாக்க
மாள நெனைக்காமே
வளந்தை வந்து சேரலியே
மன்னருக்கும் தேவிக்கும்
வம்பு நடந்ததினால்
மன்னருடை பேருசொல்லி
வனத்திலெடங் கேட்டமுன்னா
வளத்தா களைக்கவச்சு
வளத்தாரைப் பாவியிங்க
மாதுவனம் போனமுன்னா

பெருமா சலிச்சாக்கப்
போக நெனைக்காமே
பொறந்தை வந்து சேரலியே
பெருமாளுக்கும் தேவிக்கும்
போரு நடந்ததினால்
பெருமாளுடை பேருசொல்லிப்
பொனத்திலெடங் கேட்டமுன்னா
பெத்தா களைக்கவச்சுப்
பெத்தாரைப் பாவியிங்கப்

பொண்ணுவனம் போனமுன்னா

ООО

## கொழுதனார் மகளுக்கு

செல்வக்குடியில் மணம்முடித்துக் கொடுத்த கொழுதனார் மகள், குழந்தையை ஈன்ற சில திங்களிலேயே இறந்துபட, பெரிய தந்தையின் மனைவி, பெற்ற பிள்ளையைக் கொஞ்சி மகிழாமல் பாடை எல்லாம் பால்பெருக மாண்டாளே என வருந்திப் பாடியது.

பெத்தாரும் போன
பொனம் பாக்கப் போனமுன்னா
பிஞ்சான மாது
பெத்தாரைப் போல
போரழகியான முன்னா
வளத்தாரும் போன
வனம் பாக்கப் போனமுன்னா
மட்டமுள்ள மாது
வளத்தாரைப் போல
வாவரசியான முன்னா

பெரிய படப்பிலே
போத்துவார் எல்லையிலே
பெரிய மனையிலே
போதமொறை சீர்குடுத்து
போரழகி மாதைப்
பூமியெல்லாம் பொன்னுதிரப்
பூவசைச்சா ஓவியமா

மகுந்த படப்பிலே
வருந்துவார் எல்லையிலே
மகுந்த மனையிலே
மகுரமொறை குடுத்து
வாவரசி மாதை
வளவெல்லாம் பொன்னுதிர
மலர்சேத்தா ஓவியமா

படப்பை ஒசத்தியின்னா
பள்ளயத்தை மேன்மையின்னா
கொலத்தை ஒசத்தியின்னா
கோத்திரத்தை மேன்மையின்னா
சனத்தை ஒசத்தியின்னா
சனக்கட்டை மேன்மையின்னா

அண்டாவுச் சோத்தை
அள்ளியுங்க வச்சமுன்னா
பள்ளயத்துச் சோத்தைப்
பகுந்துங்க வச்சமுன்னா

மகிழ்ந்துவரும் கங்கையின்னா
மாப்பழுக்கும் சோலையின்னா
விலாசமுள்ளார் வீடுமுன்னா
மச்சொசந்த மேடையின்னா
மாசேனைக் கூட்டமுன்னா
மாதுவைக்க ஆசையின்னா
இப்பமகுருது கண்ணீரு

பெருகிவரும் கங்கையின்னா
பிலாப்பழுக்கும் சோலையின்னா
பேருமுள்ள வீடுமுன்னா
பொன்னொசந்த வீடுமுன்னா
பெருஞ்சேனைக் கூட்டமுன்னா
பொண்ணைவைக்கக்
ஆசையின்னா
இப்பப்பெருகுது கண்ணீரு

மட்டமுள்ள மாது
மலர்சேத்த வருசந்திரும்பயிலே
மாது திருவகுத்தில்
மஞ்சன் நெழலாடுதன்னு
மனசும் மகிழ்ந்திருந்தா
வாவு பொறுகாம
வனம்பாக்கப் போனமுன்னா
மஞ்சன் மொதலாகி
மயில நெறமுன்னு
மடியில் வச்சுக் கொஞ்சலியே

பிஞ்சான மாது
பூவசைச்ச போதந்திரும்பயிலே
பொண்ணு திருவகுத்தில்
புள்ளை நெழலாடுதுன்னு
புத்தி மகிழ்ந்திருந்தா
போரு பொறுகாமப்
பொனம்பாக்கப் போனமுன்னா
பெத்து மொதலாகிப்
புள்ளை நெறம்பாத்துப்
புடிச்சுமுத்தம் கொள்ளலியே

வாவு பொறுகாம
மத்தொருதர் கையி
மஞ்சன்விடச் சம்மதியா
மாமியா கையி
மஞ்சன்விட்டுப் போனாத்தா

போரு பொறுகாமப்
பிம்பொருதர் கையி
புள்ளைவிடச் சம்மதியா
பெத்தாரும் கையி
புள்ளைவிட்டுப் போனாத்தா

வாவுக்கு வாவும்விட்டே
வளர்ப்பார்க்கு மஞ்சன்விட்டே
போருக்குப் போரும்விட்டே
பெறுவார்க்கு மன்னன்விட்டே

சாலோட தண்ணி
சாச்சுக் குடிச்சாலும்
நீதாய் வார்த்த
தண்ணிபோல்
தாகந் தெளியாதே
தாயெழந்த மக்களுக்கும்

தாகந் தெளியாதே
ஆருதலைமூரி நீ
அமடுபட்ட முன்னாத்தா
எவதலையோமூரி நீ
எறக்க நெனைச்சாத்தா

தாலிக் கழுத்தி
தங்கநகைக் காராத்தா
மாலைக் கழுத்தி
மல்லியப்பூ வாசமுள்ளாள்

காடு மணமணங்கக்
கண்டாங்கி தீப்பறக்கக்
கட்டையெல்லாம் பால்வடியக்
கட்டித்தீ கொண்டாத்தா

மஞ்சள் மணமணங்க
மங்கிலியம் தீயெரிய
பாடையெல்லாம் பால்வடியப்
பதறித்தீ கொண்டாத்தா

செடியே மணமணங்கச்
சித்தாடை தீப்பிடிக்கச்
சிதையல்லாம் பால்வடியச்
சித்தடியா பள்ளியறை

கட்டிலு மஞ்சனைக்
களைக்கவச்சுப் போனாத்தா
பாலுக்கு மஞ்சனைப்
பறக்கவைச்சுப் போனாத்தா

தொட்டிலு மஞ்சனைத்
துடிக்கவச்சுப் போனாத்தா
அழுதுக்கு மஞ்சனை
அழுகவச்சுப் போனாத்தா

ooo

அம்மை நோயினால் அடுத்தடுத்து இருகுழந்தைகள் இறந்தபோது தாய் வருந்திப் பாடியது.

கொம்பனையும் அம்மா
கோடிசனம் வச்சதுக
அரண்மனையும் அம்மா
அநேகசனம் வச்சதுக

கொம்பனையும் அம்மா
சின்னமுள்ள மக்களைக்
கூட்டிப்போக வந்தாளோ
அரண்மனையும் அம்மா
அழச்சுப்போக வந்தாளோ

ஓடிவந்த மாரிக்கும்
ஒழுங்கையிலே நின்னிகளா
தேடிவந்த மாரிக்கும்
தெருவோரம் நின்னிகளா
வேப்பிலையும் பொய்க்கரகம்
வீதி வெளையாடயிலே
வேப்பிலைக் குள்ளிருந்து
வீரியத்தைப் பாக்கலியே

பச்சிலையும் பொய்க்கரகம்
பாதை வெளையாடயிலே
பச்சிலைக் குள்ளிருந்த
பாவினையைப் பார்க்கலியே

எண்ணையில்லாமாரி என்
எல்லைவந்து சேந்தாளோ
தண்ணியில்லாமாரி நம்ம
தரணியிலே வந்தாளோ

வேப்பிலையும் பொய்க்கரகம்
வீதி வெளையாடயிலே
வெரட்டிப் புடிச்சாளே
வெரட்டிப் புடிக்கையிலும்
வெரலைப் புடிச்சாளே

பச்சிலையும் பொய்க்கரகம்
பாதை வெளையாடயிலே
பாத்துப் புடிச்சாளே
பாத்துப் புடிக்கையிலும்
பதறிப் புடிச்சாளே

கோழி பொணைஞ்சுவிட்டா
குப்பயில மேஞ்சு வரும்
கொழந்தை பொணைஞ்சுவிட்ட
கொடுமைகளைக் கேட்டியளா

மாடு பொணைஞ்சுவிட்டா
மந்தையிலே மேஞ்சுவரும்
மக்க பொணைஞ்சுவிட்ட
வகுத்தெரிச்ச கேட்டியளா

தாராவும்புள்ளும் நாங்க
தனிக்கொளத்தை மேஞ்சிருந்தோம்
தாரா பிரிஞ்சொடனே
தனிமைமெத்தத் தோணுதிப்போ

புள்ளும் புறாவும் நாங்க
புதுக்கொளத்தை மேஞ்சிருந்தோம்
புள்ளுப் பிரிஞ்சொடனே
பூங்காரம் தோணுதிப்போ

OOO

**அம்மைவந்து இறந்தவர்க்குப் பாடுவது.**

அப்பவந்த மாரி
அடுத்துவரக் காத்திருந்தா
முந்திவந்த மாரி
மீண்டுவரக் காத்திருந்தா
பண்டுவந்த மாரி
பழகிவரக் காத்திருந்தா

ஓடிவந்த மாரிக்கு
ஒளிமறவா நில்லாமே
ஒழுங்கயிலே நின்னமுன்னா
ஓடிகரும்பாத் தீந்தமுன்னா

தேடிவந்த மாரிக்குச்
செடிமறவா நில்லாமே
தெருக்களிலே நின்னமுன்னா
தீங்கரும்பாத் தீந்தமுன்னா

வளவில்வந்த மாரிக்கு
மறைவாவும் நில்லாமே

வழியிலேயும் நின்னமுன்னா
வளைகரும்பாத் தீந்தமுன்னா

OOO

பங்குனிப் பொங்கலில் இறந்தவர்க்குப் பாடுவது

வருசம் ஒருக்கா
மாரியொட பொங்கலுக்கு
வருத்தம் வரச்சொன்னாக

போதம் ஒருக்கா
பேச்சியொட பொங்கலுக்குப்
பொழைக வரச்சொன்னாக

OOO

வருடப்பிறப்பில் இறந்தவர்க்குப் பாடுவது.

வருசப் பொறப்புன்னு
மகிழ்ச்சியுள்ள நாளுமுன்னு
மனசி நெனைச்சிருந்தோம்
மாளுறநாள் இப்பவுன்னா

புதுவருசப் பொறப்புன்னு
பெருமையுள்ள நாளுமுன்னு
புத்தி நெனைச்சிருந்தோம்
போகுறநாள் இப்பவுன்னா

OOO

உறவினர் பலர் ஒன்றாக இறந்தபோது பாடுவது

ஓட்டத்து மேல
ஒண்ணா இருந்தவுக
ஓட்டங் கவுரயிலே
ஒண்ணாக் கவுந்தவுக

சட்டத்தின் மேலே
சரியா இருந்தவுக
சட்டங் கவுரயிலே
சரியாக் கவுந்தவுக

மஞ்சக் கயிறாடி
மாயவரம்சூதாடி
மாயவரம் சூதிலே
மாண்டதெல்லாம் எங்கசனம்

சூச்சக் கயிறாடிச்
சோழவரம் சூதாடிச்
சோழவரம் சூதிலே
சொழண்டதெல்லாம் எங்கசனம்

பட்டுக் கயிறாடிப்
பாண்டிபுரம் சூதாடி
பாண்டிபுரம் சூதிலே
பட்டதெல்லாம் எங்கசனம்

சாட்டைக் கயிறாடித்
தருமபுரம் சூதாடித்
தருமபுரம் சூதிலே
சாஞ்சதெல்லாம் எங்கசனம்

அங்கவள நாட்டுக்கு
ஆள்பத்தா துங்கயிலே
அறிஞ்சும் இருந்து
அடியெடுத்து வச்சாக

மதுவள நாட்டுக்கு
மனுப்பத்தா துங்கயிலே
மனசும் அறிஞ்சு
மாள நெனைச்சாக

OOO

இறப்பு ஓலைப் பற்றிப் பாடியது.

சீமைக்குச் சீமை
சீட்டுவிட்டார் ஓவியமாய்
நாட்டுக்கு நாடு
நறுக்குவிட்டார் ஓவியமாய்
ஊருக்கு ஊரு
ஓலைவிட்டார் ஓவியமாய்

OOO

இறப்புச் செய்தி

தெரிவிக்கப்படாத உறவினர் பாடுவது.

காகிதமும் அருமையின்னா
காப்பணமும் பஞ்சமுன்னா
காகிதத்தை விட்டாக்க
காப்பணமும் நான்குடுப்பேன்

ஓலை அருமையின்னா
ஒருபணமும் பஞ்சமுன்னா
ஓலை அனுப்பிவச்சா
ஒருபணமும் நான்குடுப்பேன்

சீட்டு அருமையின்னாச்
சில்லரையும் பஞ்சமுன்னா
சீட்டை அனுப்பிவச்சா
சில்லரையை நான்குடுப்பேன்

OOO

உரையாடல் வடிவில் அமைந்த பாடல்கள்.

## பெற்றோர் இறந்தபோது (மகள் - மருமகள்)

மகள் பாடியது

கூந்தப்பனை யோலை
குயிலணையும் பொன்னோலை
கூந்தப்பனை சாஞ்சா
குயில்போய் எங்கணையும்

மகிழம்பனை யோலை
மயிலணையும் பொன்னோலை
மகிழம்பனை சாஞ்சா
மயில்போய் எங்கணையும்

OOO

மகள் பாடக் கேட்ட மருமகள் பாடியது

கூந்தப்பனை யோலை
குயிலணையும் பொன்னோலை
கூந்தப்பனை சாஞ்சா
கூடப் பொறந்த
கொத்தவனார் மெத்த உண்டு
குயில்வந்து இங்கணைய

மகிழம்பனை யோலை
மயிலணையும் பொன்னோலை
மகுரப் பொறந்த
வளந்தையெல்லாம் மெத்த உண்டு
மயில்வந்து இங்கணைய

OOO

கணவன் இறந்தபோது மனைவி பாடியது.

மாதுவச்ச மாதெடுக்க
மையொசந்த மன்னர்
மனசில் நெனக்கலில்லேஇது
மாதொருதி வச்சவினை

பொண்ணுவச்சுப் பொண்ணெடுக்க
பொட்டொசந்த மன்னர்
பெருமாள் நெனக்கவில்லே இது
பொண்ணொருதி வச்சவினை

OOO

மருமகள் பாடக் கேட்ட மாமியார் பாடியது.

வருசக் குமரனும்
மையொசந்த தம்பியும்
மண்ணாளப் பேர்விளங்க
மஞ்சன் ஒண்ணுவேணுமின்னான்
நீமாதழகு இல்லையின்னான்
மத்தொருத வாசலிலே
மாதழகாத் தோணுதுன்னான்
மாலையிட வேணுமுன்னான்நான்
மாதொருதி வைக்கவில்லே

பொன்னா குமரனும்
பொட்டொசந்த தம்பியும்

பொன்னாளப் பேர்விளங்க
புள்ளை ஒண்ணு வேணுமின்னான்
நீபொண்ணழகு இல்லையின்னான்
பிம்பொருதர் வாசலிலே
பொண்ணழகாத் தோணுதுன்னான்
பொன்னமலர் சூடவின்னான்நான்
பொண்ணொருதி வைக்கவில்லே

OOO

நாத்தனார் பற்றிச் சகோதரன் மனைவி பாடியது.

ஒந்தி மொகத்தழகி
ஒட்டவச்ச காதழகி
ஒட்டவச்ச காதுக்கு
ஓங்க அண்ணன்
உருட்டி விட்டா தங்கநகை

ஆந்தை மொகத்தழகி
அலக்கழிஞ்ச காதழகி
அலக்கழிஞ்ச காதுக்கு
ஓங்க அண்ணன்
அள்ளிவிட்டா தங்கநகை.

OOO

சக்களத்தி பற்றி மூத்த மனைவி பாடியது.

வையையிலே வாழ்ந்தமக
மதலைமகன் ஆத்தா
மகபோகப் போறான்னு
பொய்யையிலே வாழ்ந்தமக.

பிஞ்சுமகன் ஆத்தா
பொண்போகப் போறான்னு
ஒருநாள் பொழுது
ஒலைவச்சு உங்காம
பாண்டிப் பெருமா
பலகாரம் திங்காம
கருணப் பெருமா
காப்பி குடியாம

பரிசை அழச்சுவச்சு
பஞ்சாச்சரத்துக்கு ஒரு
பவன்கொடுத்துச் செய்துவந்தா

மாலையிட்டு வச்ச
மக்களெல்லாம் ஒன்னுதின்னேன்
மாது மணவாளர்
மதிப்பெல்லாம் ஒன்னு தின்னேன்
மறுத்திருந்த மக்கள்
மக்களெல்லாம் ஒன்னுதின்னேன்
மதிச்சாண்டார் பேரழச்ச
மஞ்சன்ஒக்குத் தாரமுன்னேன்

பூவசைச்சு வச்ச
புள்ளையெல்லாம் ஒன்னுதின்னேன்
போர்விசயன் தேவி
பெருமையெல்லாம்
ஒன்னுதின்னேன்
பிம்பு இருக்க மக்கள்
புள்ளையெல்லாம் ஒன்னுதின்னேன்
பொலிஞ்சாண்டார் பேரழச்ச
புள்ளைஒக்குத் தாரமுன்னேன்

தங்க அருணாக்கட்டிய
தம்பியெல்லாம் ஒன்னு தின்னேன்
பொன் அருணாக்கட்டிய
புள்ளையெல்லாம் ஒன்னுதின்னேன்

வயிரக் கடுக்கன்இட்ட
மஞ்சனெல்லாம் ஒன்னுதின்னேன்
சிகப்புக் கடுக்கன்இட்ட
செம்பனெல்லாம் ஒன்னுதின்னேன்

அத்தனையும் தேவையில்லைபாவி
ஆலயந்தான் தேவையின்னே
அடிச்சுவிழுந்தே என்
பாலன்படை போகவுன்னு
அள்ளிமண்ணு தூத்திவந்தே

சுத்திப் புடிச்சிருச்சு
சொல்ல முடியாம
பத்திப் புடிச்சிருச்சு
பந்தத்து எண்ணையைப் போல்
கூவிப் புடிச்சிருச்சு
கொப்பரை எண்ணையைப் போல்

மூக்குத் துளைச்சுவந்தா
முருங்கக்குச்சி போட்டிருந்தா
முடிமன்னர் பாரியின்னாஇப்ப
முழுவயிரம் பூண்டிருக்கா

காதைத் துளைச்சுவந்தா
கருவேப்பிலைக்குச்சி
போட்டிருந்தா
கனத்தமுடி பாரியின்னா இப்ப
கனவயிரம் பூண்டிருக்கா

ooo

## பின் இணைப்பு - 1

### நகரத்தார் வசிக்கும் செட்டிநாட்டு ஊர்ப்பெயர்கள்

| வரிசை எண். | ஊர்ப்பெயர் | மாவட்டம் | அஞ்சல் எண். |
|---|---|---|---|
| 1. | அமராவதிபுதூர் | சிவகங்கை | 630 301 |
| 2. | அரண்மனைசிறுவயல் | சிவகங்கை | 630 305 |
| 3. | அரிமளம் | புதுக்கோட்டை | 622 201 |
| 4. | அரியக்குடி | சிவகங்கை | 630 202 |
| 5. | அலவாக்கோட்டை | சிவகங்கை | 630 564 |
| 6. | ஆத்தங்குடி | சிவகங்கை | 630 101 |
| 7. | ஆத்திக்காடு தெற்கூர் | சிவகங்கை | 630 201 |
| 8. | ஆவினிப்பட்டி | சிவகங்கை | 630 205 |
| 9. | ஆறாவயல் | சிவகங்கை | 630 314 |
| 10. | இராங்கியம் | புதுக்கோட்டை | 622 409 |
| 11. | இராயவரம் | புதுக்கோட்டை | 622 506 |
| 12. | உய்யக்கொண்டான் சிறுவயல் | சிவகங்கை | 630 208 |
| 13. | உலகம்பட்டி | சிவகங்கை | 622 410 |
| 14. | ஒக்கூர் | சிவகங்கை | 630 557 |
| 15. | கடியாபட்டி | புதுக்கோட்டை | 622 505 |
| 16. | கண்டரமாணிக்கம் | சிவகங்கை | 630 204 |
| 17. | கண்டவராயன்பட்டி | சிவகங்கை | 630 203 |
| 18. | கண்டனூர் | சிவகங்கை | 630 104 |
| 19. | கருங்குளம் | சிவகங்கை | 630 204 |
| 20. | கல்லல் | சிவகங்கை | 630 305 |
| 21. | கல்லுப்பட்டி | சிவகங்கை | 630 306 |
| 22. | காரைக்குடி | சிவகங்கை | 630 001 |
| 23. | காளையார்மங்கலம் | சிவகங்கை | 630 557 |
| 24. | கானாடுகாத்தான் | சிவகங்கை | 630 103 |
| 25. | கீழச்சிவல்பட்டி | புதுக்கோட்டை | 630 205 |
| 26. | கீழப்பூங்குடி | சிவகங்கை | 630 552 |
| 27. | குருவிக்கொண்டான்பட்டி | சிவகங்கை | 622 415 |
| 28. | குழிபிறை | புதுக்கோட்டை | 622 402 |
| 29. | கொத்தமங்கலம் | சிவகங்கை | 630 105 |
| 30. | கொ.லெட்சுமிபுரம் | சிவகங்கை | 630 105 |

| வரிசை எண். | ஊர்ப்பெயர் | மாவட்டம் | அஞ்சல் எண். |
|---|---|---|---|
| 31. | கொப்பனாபட்டி | புதுக்கோட்டை | 622 401 |
| 32. | கொல்லங்குடி அழகாபுரி | சிவகங்கை | 630 561 |
| 33. | கோட்டையூர் | சிவகங்கை | 630 106 |
| 34. | கோட்டையூர் அழகாபுரி | சிவகங்கை | 630 106 |
| 35. | கோனாபட்டு | புதுக்கோட்டை | 622 503 |
| 36. | சக்கந்தி | சிவகங்கை | 630 560 |
| 37. | சிராவயல் | சிவகங்கை | 630 214 |
| 38. | சிறுகூடல்பட்டி | சிவகங்கை | 630 215 |
| 39. | செம்பனூர் | சிவகங்கை | 630 313 |
| 40. | செவ்வூர் | சிவகங்கை | 622 417 |
| 41. | சொக்கநாதபுரம் | சிவகங்கை | 630 313 |
| 42. | சொக்கலிங்கம்புதூர் (சொக்கனேந்தல்) | சிவகங்கை | 630 101 |
| 43. | சோழபுரம் | சிவகங்கை | 630 553 |
| 44. | தேவகோட்டை | சிவகங்கை | 630 302 |
| 45. | தேனிபட்டி | புதுக்கோட்டை | 622 202 |
| 46. | நடராஜபுரம் | சிவகங்கை | 630 555 |
| 47. | நற்சாந்துபட்டி | புதுக்கோட்டை | 622 404 |
| 48. | நாச்சியாபுரம் | சிவகங்கை | 630 207 |
| 49. | நாட்டரசன்கோட்டை | சிவகங்கை | 620 556 |
| 50. | நெற்குப்பை | புதுக்கோட்டை | 622 405 |
| 51. | நேமத்தான்பட்டி | சிவகங்கை | 630 103 |
| 52. | பட்டமங்கலம் | சிவகங்கை | 630 310 |
| 53. | பலவான்குடி | சிவகங்கை | 630 208 |
| 54. | பள்ளத்தூர் | சிவகங்கை | 630 107 |
| 55. | பனங்குடி | சிவகங்கை | 630 555 |
| 56. | பனையப்பட்டி | புதுக்கோட்டை | 622 406 |
| 57. | பாகனேரி | சிவகங்கை | 630 558 |
| 58. | பில்லமங்கலம் அழகாபுரி | சிவகங்கை | 630 205 |
| 59. | பிள்ளையார்பட்டி | சிவகங்கை | 630 207 |
| 60. | புதுவயல் | சிவகங்கை | 630 108 |
| 61. | பூலாங்குறிச்சி | புதுக்கோட்டை | 622 413 |

| வரிசை எண். | ஊர்ப்பெயர் | மாவட்டம் | அஞ்சல் எண். |
|---|---|---|---|
| 62. | பொன்புதுப்பட்டி | புதுக்கோட்டை | 622 408 |
| 63. | பொன்னமராவதி | புதுக்கோட்டை | 622 408 |
| 64. | மகிபாலன்பட்டி | புதுக்கோட்டை | 630 217 |
| 65. | மதகுபட்டி | சிவகங்கை | 630 553 |
| 66. | மானகிரி | சிவகங்கை | 630 307 |
| 67. | மதிலைப்பட்டி | புதுக்கோட்டை | 622 409 |
| 68. | மேலைச்சிவல்புரி | புதுக்கோட்டை | 622 403 |
| 69. | வலையபட்டி | புதுக்கோட்டை | 622 411 |
| 70. | விராமதி | புதுக்கோட்டை | 630 312 |
| 71. | விரையாச்சிலை | புதுக்கோட்டை | 622 412 |
| 72. | விரையாச்சிலை லெட்சுமிபுரம் | புதுக்கோட்டை | 622 412 |
| 73. | வெற்றியூர் | சிவகங்கை | 630 305 |
| 74. | வேகுப்பட்டி | புதுக்கோட்டை | 622 408 |
| 75. | வேந்தன்பட்டி | புதுக்கோட்டை | 622 419 |

## நகரத்தார் ஒப்பாரிப் பாடல்களில் இடம்பெறும் உறவுப் பெயர்கள்

| உறவுகள் | சொற்கள் |
|---|---|
| தாய் | ஆத்தா, தாய், தாயார், பெத்தா, மாதா, வளத்தா |
| தந்தை | அப்பச்சி, அப்பா, தகப்பன், பிதா, பெத்தார், வளத்தார் |
| சகோதரன் | அண்ணன், தம்பி, நான்பொறந்தசாமி, பொறந்தை, பொறப்பு, வளந்தை |
| சகோதரன் மனைவி | பொறந்தையுட தேவி, வளந்தையுட தேவி, வளப்புடைய தேவி |
| சகோதரன் மகன் | பொறந்தையுட மஞ்சன், வளந்தையுட மஞ்சன் |
| சகேதாரன் மகள் | பொறந்தையுட மாது, நம் அண்ணன் மாது, வளந்தையுட மாது |
| சகோதரன் மக்கள் | பொறந்தையுட மக்கள், வளந்தையுட மக்கள் |
| சகோதரி | ஆச்சி, தங்கச்சி, நான்பொறந்த செல்லி, பொறந்தை, பொறப்பு, வளந்தை |
| சகோதரி கணவன் | பிஞ்சுமக்களப்பச்சி |
| சகோதரி மகன் | பொறந்தையுட மஞ்சன், வளந்தையுட மகன் |
| சகோதரி மகள் | பொறவியுட மாது, வளந்தையுட மாது |
| சகோதரி மக்கள் | பொறவியுட மக்கள், வளந்தையுட மக்கள் |
| கணவன் | அரசர், கொத்தவர், செல்லர், பிஞ்சுமக்களப்பச்சி, பெருமாள், மன்னர், வாழுமக்கள் ஐயா |

| உறவுகள் | சொற்கள் |
|---|---|
| மகன் | அரசு, என்னரியான், செம்பன், சிறுத்தொண்டன், சீராளன், தம்பி, பாலன், புள்ளை, போர் விசயன், மகன், மஞ்சன், மார்க்கண்டன், வாள் விசயன் |
| மூத்த மகன் | புள்ளைமுடி தீத்த மகன், பூடு குடிச்ச புள்ளை, பெரிய மகன், பெருந்தவசு மஞ்சன், மஞ்சன்முடி தீத்த மகன், மருந்து குடிச்ச மஞ்சன், மகுந்த மகன், தம்பி |
| இரண்டாவது மகன் | பிம்பு பொறந்தான், மறுத்துப் பொறந்தான் |
| கடைசி மகன் | பொறக்கக் கடைசாரி, வளக்கக் கடைசாரி |
| ஒரே மகன் | புள்ளை ஒருதன், புள்ளை தனியன், மஞ்சன் தனியன் |
| சுவீகார மகன் | புடிச்சுவந்த மஞ்சன், வாங்கிவந்த மஞ்சன் |
| மருமகள் | என்னரியான் தேவி, புலந்திரன் தேவி, போர்விசயன் தேவி, மார்க்கண்டன் தேவி, வாள்விசயன் தேவி |
| மகள் | சீதை, தங்கச்சி, பொண்ணு, மயிலனையா, மாது, செல்லக் கனதி |
| மூத்த மகள் | பெரிய மகள், பெருந்தவசுப் பொண்ணு, பொண்ணாசை தீத்த மக, பொன்னரிசிப் பொண்ணு, மகுந்த மகள், மணியரிசிப் பொண்ணு, மாதாசை தீத்த மக |
| இரண்டாவது மகள் | பிம்பு பொறந்தா, மறுத்துப் பொறந்தா |
| கடைசி மகள் | பொறக்கக் கடைசாரி, வளக்கக் கடைசாரி |
| தந்தையின் தந்தை | பிஞ்சுமக்கள் ஐயர், பெருஞ்சமத்தர் ஐயா, மாசமத்தர் ஐயா |

| உறவுகள் | சொற்கள் |
|---|---|
| தந்தையின் தாய் | பிஞ்சு மக்கள் அப்பத்தா, பெருஞ்சமத்தி அப்பத்தா, மாசமத்தி அப்பத்தா |
| தாயின் தந்தை | பிஞ்சு மக்கள் ஐயா, பெருஞ்சமத்தர் ஐயா, மாசமத்தர் ஐயா |
| தாயின் தாய் | பெருஞ்சமத்தி ஆயா, மாசமத்தி ஆயா, சீரிட்ட செல்லி |
| தாயின் சகோதரன் | அம்மான், போர்மாமர், மாமர், தாய் பொறவி ராசா |
| தாயின் சகோதரன் மனைவி | போர்மாமர் தேவி, மாமருடை தேவி |
| தாயின் சகோதரி | சின்னத்தா, பெரியத்தா |
| மாமன் மகள் | பூமாமர் பொண்ணு, மாமருடை மாது |
| இளம்பெண் | பிஞ்சான மாது, மட்டமுள்ள மாது |
| இளம் வயதுள்ள ஆண் | பிஞ்சான தம்பி, மட்டமுள்ள தம்பி |
| மக்கட்பேறுடைய பெண் | பிஞ்சுமக்கள் ஆத்தா |
| மக்கட்பேறுடைய ஆண் | பிஞ்சுமக்கள் அப்பச்சி |
| ஒரே மகள் | பொண்ணு தனிச்சி, மாது தனிச்சி |
| மருமகன் | சீதை மணவாளர், மாப்பிள்ளை, மாது மணவாளர் |
| மாமனார் | பிஞ்சுமக்கள் ஐயா |

| உறவுகள் | சொற்கள் |
|---|---|
| மாமியார் | செல்லருடை ஆத்தா, பிஞ்சுமக்கள் அப்பத்தா, பூமாமி, மாமியா, ஐத்தை |
| நாத்தனார் | பிஞ்சுமக்கள் ஐத்தை, பெருமாளொட பொறந்தை, மன்னருடை பொறந்தை |
| மகனின் மகன் | அருமைமகன் மஞ்சன், புலந்திரன் மஞ்சன், போர்விசயன் மஞ்சன், வாள்விசயன் மஞ்சன் |
| மகனின் மகள் | புலந்திரன் பொண்ணு, போர்விசயன் பொண்ணு, வாள்விசயன் பொண்ணு |
| மகனின் மக்கள் | சீராளன் மக்கள், புலந்திரன் மக்கள், போர்விசயன் மக்கள், மார்க்கண்டன் மக்கள், வாள்விசயன் மக்கள் |
| மகளின் மகன் | சீதையுட மஞ்சன், மாதுடைய மஞ்சன் |
| மகளின் மகள் | சீதையுட மாது, மாதுடைய மாது |
| மகளின் மக்கள் | சீதையுட குஞ்சலர், சீதையுட மக்கள், மாதுடைய குஞ்சலர் |
| பேரனின் மனைவி | பேரனுக்குத் தேவி |
| பேத்தியின் கணவர் | பேத்தி மணவாளர் |

## ஒப்பாரிப் பாடல்களில் இடம் பெறும் வட்டார வழக்குச் சொற்கள்

| | | |
|---|---|---|
| அசத்தல் | - | மறத்தல் |
| அசராம | - | மறக்காமல் |
| அடசி | - | ஒதுங்கி, விலகி |
| அடபுடிகந்தை | - | சமையலறையில் கையில் பிடித்துக் கொள்ளும் துணி |
| அடுப்படி | - | சமையலறை |
| அட்டி | - | தடை |
| அமடுபட்டார் | - | இறந்துபட்டார் |
| அரசாணி | - | திருமணமேடையின் முன் அமைப்பது |
| அவலைசவலை | - | அடுத்தடுத்துப் பிறக்கும் குழந்தைகள் |
| அழிச்சுத்துவைச்சு | - | வீணாக்குதல் |
| அறவை | - | அறம், நீதி |
| அறுதி | - | வரை |
| அனுபோகம் | - | அனுபவம் |
| அனுவல் | - | விசேடம் |
| ஆசாமிக்காரன் | - | வாடிக்கைக்காரன், பற்று வரவு கணக்கு உள்ளவன் |
| ஆதாளி | - | ஆரவாரம் |
| இடும்பி | - | வீதி |
| இடைத்தட்டா | - | நடுவே, இடையில் |
| இத்தி | - | சிறிது |
| இழையைப் பெருக்குதல் | - | தாலி கழற்றுதல் |
| இளக்கம் | - | இழிவு |
| ஈக்கி | - | பனையோலை நடுவில் உள்ள குச்சி |
| உண்டியல் | - | திருமணத்தில் பெண்ணின் சீதனப் பணத்திற்கு எழுதிக் கொடுப்பது (டிராப்ட் போன்றது) |
| உத்தரிப்பார் | - | ஆதரிப்பார், சாதிப்பார் |
| எச்சா | - | களைத்தால் |
| எதவு | - | எளிமை |
| எரம்ப | - | நிறைய |

எலஞ்சியம் - செல்வம்
ஏப்பை சாப்பை - எளிதில் ஏமாறக் கூடியவர்
ஒக்க - உடன்
ஒசத்தி - உயர்ந்த
ஒடையாளி - கடவுள்
ஒருக்கா - ஒருமுறை
ஒலுகு - சதுர வடிவான தலையணை, திண்டு
ஒழுங்கை - வீதி
ஓலை } - இறப்புச் செய்தி தெரிவிக்கும் கடிதம்
சீட்டு }
நறுக்கு }
ஓவியம் - உயர்ந்த, சிறந்த
கச்சை - வெள்ளைச் சீலை
கடவு - சந்து, வாசல்
கடுசாய் }
சுருக்காய் } - விரைவாய்
வெரசாய் }
கடைக்கூட்டு - தொழிலில் கூட்டு வைத்தல்
கண்ணு வழித்தட்டல் - தென்படுதல்
கண்பார்க்கும் - மதிப்பிடும்
கம்மாய் - ஏரி, வாவி
கரப்படி - வரிசைப்படி
கலியாண ஓலை - இசை பிடிமானம் எழுதுகிற ஓலை
மங்கள ஓலை
கவல் - மேடுபள்ளமான இடம்
கவுரி - சாமரம்
களரி - அரங்கு, கூட்டம்
காதம் - தொலைவு
காவணக்கால் - திருமணத்தின்போது போடப்படும் பந்தல்
கிட்ட - அருகே
கிண்ணி - உண்ணும்போது காய்கறிகள் வைத்துண்ணும் சிறு தட்டு
குடி ஊதல் - புதுமனை புகுதல்
குடியழைத்தல் - திருணத்திற்குப் பின் மாப்பிள்ளை வீட்டில் பெண்ணழைத்தல்

| | | |
|---|---|---|
| குருச்சி | - | நாற்காலி |
| கூட்டு | - | உறவு |
| கூட்டாளி | - | தொழில் பங்கினர், நண்பர் |
| கெடி | - | பெருமை, சிறப்பு |
| கைப்பொட்டி | - | ரொக்க இருப்புள்ள மரப்பெட்டி |
| கைப்போகம் } மடிப்போகம் | - | கைப்பொருள் |
| கையிறுக்கம் | - | சிக்கனம் |
| கொண்டுதலை | - | பொருள் கொண்டு போய் விற்றல் |
| கோப்பு | - | பெருமை |
| கோரிச்சு | - | குறித்து |
| கோரைபட | - | அழிந்துபட |
| சட்டி | - | பாத்திரம் |
| சதுரம் | - | உடம்பு |
| சமத்தி | - | திறமைசாலி |
| சமுதாடு | - | ஓர் கருவி |
| சரக்கு | - | பிள்ளைப் பேற்றுக்குப் பின் தாய்க்குக் கொடுக்கும் நாட்டு மருந்து |
| சரணி | - | வீதி, வழி |
| சருவி | - | கலந்து |
| சவுத்து | - | மலிந்து |
| சால் | - | நீர் கவுக்கும் பெரிய பானை, பாத்திரம் |
| சிலேட்டு விளக்கு | - | மங்கலச் செயல்களில் பயன்படுத்தும் வேலைப்பாடு மிக்க விளக்கு |
| சின்னம், மட்டம் | - | சிறிய |
| சீகு | - | விளக்குமாற்றுக் குச்சியில் உள்ள முள் |
| சூடு | - | துன்பம் |
| சூப்பி | - | காய்கறிச் சாறு (சூப்) |
| செறுக்கி | - | செரித்து |
| செல்லாச்சா | - | கடன் வாங்கிய, செலுத்திய கணக்கு முடிதல் |
| செவ்வாய் | - | திருவிழா |
| சொணக்கம் | - | தாமதம் |
| சோட்டை | - | ஏக்கம் |
| சோமாத்தி | - | உதவி |
| தடுக்கு | - | பனையோலையால் முடையப் பெற்று, |

| | |
|---|---|
| | ஒரு ஆள் உட்காரக்கூடிய, தவிசுப் பலகைக்குப் பதிலாக உபயோகப் படுத்துவது |
| தண்டக்கால் | பந்தல்கால் (இறப்பின் போது போடுவது) |
| தண்டியல் | பல்லாக்கு |
| தருகமுருக | அளவிறந்து |
| தவக்கம் | தடை, குறை, வாட்டம் |
| தளுகை | உணவு (படைக்கும் உணவு) |
| தாக்கல் | செய்தி |
| தாங்கல் | வருத்தம் |
| திண்டு | தலையணை |
| திருப்பூட்டுதல் | தாலிகட்டுதல் |
| திரேகம் | உடம்பு |
| தீக்கலத்தல் | இறத்தல் |
| தும்பு | தாலி |
| தும்பைத் தெரித்தல் | தாலி கழற்றுதல் |
| தூக்கெடுத்தல் | நங்கூரம் வலித்தல் |
| தூருந்தலவும் | அடியும் முடியும் |
| தெகுட்டு | செருக்கு, வித்தியாசம் |
| தேர | முற்றிய, கனிந்த |
| தொலைப்பயணம் | அயல்நாடுகளுக்குக் கப்பற்பயணம் |
| நகல் | நோய் |
| நரள் | மனிதர் |
| நளுக்காத | தீட்டாத |
| நாட்டமுள்ளார் | விருப்பமுள்ளார் |
| நெமராத | நமுத்துப் போகாத |
| நேரிடுதல் | நினைவுறல் |
| பகிசி | பெருமை |
| பங்கு | வீட்டில் தனிக்குடும்பங்கட்கு ஒதுக்கப்பட்ட பகுதி |
| பச்சை | வாய்க்கரிசிக்கான நெல் |
| படங்கால் | புறங்கால் |
| படைப்பு | முன்னோர் வழிபாடு |
| பணுதி | ஆபரணம் |

| | | |
|---|---|---|
| பதம் | - | தன்மை, நிலை |
| பந்தல் | - | இறப்பு வீட்டில் போடப்படும் பந்தல் |
| பள்ளயம் | - | படைக்கப்பெற்ற உணவு |
| பள்ளியறை | - | ஈமப்படுக்கை |
| பாரி | - | மனைவி |
| பாரித்தல் | - | மணமுடித்தல் |
| பிஞ்சு | - | இளமை, சிறிய |
| பிள்ளையாம்பி | - | பிள்ளையார் நோன்பு |
| புடிக்கவந்தான்<br>மாய்க்கவந்தான்<br>வாங்கவந்தான் | - | எமன் |
| புடிச்சுவச்சுப் பாத்தல்<br>வாங்கிவச்சுப் பாத்தல்<br>புள்ளை கூட்டுதல்<br>மஞ்சன் அழைத்தல் | - | சுவீகாரம் செய்து கொள்ளல் |
| புதுமைச்சோறு<br>மாராப்புச்சோறு | - | புதுமையில் அளிக்கும் விருந்துணவு |
| புள்ளி<br>வரி | - | தனிக்குடும்பம் |
| புள்ளை நெழலாடல்<br>மஞ்சன் நெழலாடல் | - | கருவுறுதல் |
| புள்ளை விடுதல்<br>மஞ்சன் விடுதல் | - | சுவீகாரம் செய்து கொடுத்தல் |
| பூங்காரம் | - | ஆற்றாமை |
| பூச்சேத்தல்<br>மலர்சேத்தல்<br>பூவசைத்தல்<br>மலரசைத்தல் | - | மணமுடித்தல் |

| | | |
|---|---|---|
| பூடு குடித்தல்<br>மருந்து குடித்தல் | - | கருவுற்ற 6, 7-ஆம் மாதங்களில் தாய்க்குக் கொடுக்கும் மூலிகைச்சாறு |
| பூவளத்தல்<br>மலர் வளத்தல் } | - | கொள்ளி வைத்தல் |
| பூவா உதிரவிடல்<br>மலரா உதிரவிடல் } | - | கருச்சிதைதல் |
| பெரிய கலியாணம்<br>மகுந்த கலியாணம் } | - | சாந்தி சதாபிஷேகம், மகாபிஷேகம் |
| பெரிய நகை<br>மகுந்த நகை } | - | வயிர நகை |
| பெரியநாள்<br>மகுந்த நாள் } | - | விசேடமான நாள் |
| பெருக்கி வைத்தல்<br>பெருஞ்சேனை } | - | கழற்றுதல் |
| சேனைதளம்<br>மாசேனை } | - | உறவினர் |
| பெருமைச்சோறு<br>மகிழ்ச்சிச் சோறு } | - | புதுமை, திருமணம் போன்ற விசேடங்களில் அளிக்கும் விருந்துணவு |
| பெருவாரி | - | அளவற்ற |
| பெருவிதம் | - | ஏனோதானோ எனச் செய்வது |
| பெலவாயம் | - | பலம், வலிமை |
| பேச்சியுட பூ<br>மாரியுட பூ } | - | மாரியம்மன் பூச்சொரிதல் விழா |

| | | |
|---|---|---|
| போர் கேட்டல்<br>மாராயம் கேட்டல் | - | மக்கட்பேறுடைந்ததைப் பாராட்டல் |
| பொகுப்பு | - | நல்வினை, அதிட்டம் |
| பொடதி | - | பிடரி |
| பொட்டகம் | - | விலையுயர்ந்த பொருட்களைப் பாதுகாத்து வைக்கும் இரும்புப் பெட்டி |
| பொட்டி | - | ஓலைப்பெட்டி |
| பொட்டொசந்தார்<br>வடிவொசந்தார் | - | அழகானவர் |
| பொண்டி | - | மனைவி |
| பொத்துதல் | - | ஓலைக்கூடையில் ஓலை கொண்டு வேலைப்பாடு செய்தல் |
| பொய்க்கடியா | - | பொய்யோ எனும் அடியாள் |
| பொய்யை திரட்டல்<br>வையை திரட்டல் | - | இறந்தவரை நீராட்ட நீர் கொண்டுவருதல் |
| பொரசனம் | - | பிணம் |
| பொலிஞ்சாண்டார்<br>பொழிஞ்சாண்டார்<br>மதிச்சாண்டார் | | சீரும் சிறப்புடன் வாழ்ந்தார் |
| பொறக்கரியா<br>வளக்கரியா | - | மலடி |
| பொறசாதி<br>மறுசாதி | - | நகரத்தாரல்லாத வேறுசாதியினர் |
| பொறநாடு<br>மறுநாடு | - | அயல்நாடு |
| பொறந்தை<br>வளந்தை | - | சகோதரன், சகோதரி பிறந்த வீடு |

| | | |
|---|---|---|
| பொற வளவு<br>அசல் வளவு<br>மறு வளவு | - | பிறர் வீடு |
| பொனப்பாகம் | - | கஞ்சி |
| பொன்னரிசி<br>மணியரிசி | - | வாய்க்கரிசி |
| போத | - | நிறைய |
| போதம் | - | ஆண்டு |
| போகி | - | பணியாள் |
| போரழகி | - | கணவனுக்கு முன் இறந்துபடும் |
| வாவரசி (வாழ்வரசி) | - | சுமங்கலி |
| போர்<br>வாவு | - | மக்கட்பேறு |
| மக்யாநாள்<br>மகிர | - | மறுநாள் |
| மகுந்த<br>மகுர | - | நிறைய, பெரிய, மிகுந்த |
| மச்சம் | - | பொன், பணம் |
| மச்சு | - | நெல் சேமிப்பறை |
| மட்ட | - | கொஞ்சம், குறைந்த, சிறிய |
| மத்துவம் | - | குறைவாக |
| மரவை | - | மரத்தால் ஆன தாம்பாளம் |
| மல்லாரி | - | பொல்லாதவர் |
| மறுத்து | - | மறுபடி, அடுத்து |
| மாட்டலியே | - | இயலவில்லை |
| மாராப்பு | - | பாசி, மேலாடை |
| முசுறு | - | ஓர் எறும்பு |
| முறி | - | ஏடு |
| மூட்டாங்கவுறு | - | கடிவாளம் |

| | |
|---|---|
| மெத்த | மிகுதி |
| மெலுக்கா | மென்மையாக |
| மேப்பாத்தால் | கண்காணித்தல் |
| மேவீடு | மாடி |
| மையெழுத்து | கடிதம், கையெழுத்து |
| மையோட்டம் | வயிரத்தின் தன்மை |
| மொடை | பற்றாக்குறை |
| ருதுவாகி | பூப்பெய்தி |
| வடுகர் | பிற நாட்டார் |
| வட்டி | உணவுண்ணும் தட்டு |
| வயிராவி | கோயில் பணியாள் |
| வரிசை பெறல் | சிறப்புப் பெறல் |
| வலதர் | சமத்தர் |
| வழி பண்ணுதல் | ஒழுங்குபடுத்துதல் |
| வழிவிடுதல் | வழியனுப்புதல் |
| வளவு | வீடு |
| (வனம்<br>கட்டத்தலம்<br>கானல்<br>கடலை<br>தெடல்<br>புனம்<br>பொனம்<br>வேனல்) | சுடுகாடு |
| விசாரம் | கவலை, துன்பம் |
| விடாய் | பரிசு |
| விராகன் | ரூ.3.50, ரூ.3500 -இடனறிந்து பொருள்கொள்ள வேண்டும். |
| வெஞ்சனம் | காய்கறி (சமைத்தது) |
| வேவு எடுத்தல்<br>உலுப்பை எடுத்தல் | பெண்ணின் பிறந்த வீட்டார், புகுந்த வீட்டில் பெண்ணுக்கு மகப்பேறு, மகளின் புதுமை, திருமணம் ஆகிய சமயங்களில் தலைச்சுமையாகத் தரும் பரிசுப்பொருள் |
| வேறு வைத்தல் | தனிக்குடித்தனம் வைத்தல் |

## ஒப்பாரி பாடலில் இடம்பெற்ற நகரத்தார் அணிகலன்கள் குறித்த விவர அட்டவணை

| அணிகலன் | அணிவோர் | அணியுமிடம் | அணியும் சூழல் | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | திருமணத்திற்கு முன் | | திருமணத்திற்குப் பின் | |
| | | | அன்றாடம் | விசேடம் | அன்றாடம் | விசேடம் |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
| காதோலை | மகளிர் | காது | / | / | / | / |
| கொப்பு | மகளிர் | காது | / | / | / | / |
| தோடு | மகளிர் | காது | / | / | / | / |
| மூக்குத்தி | மகளிர் | மூக்கு | / | / | / | / |
| அட்டியல் | மகளிர் | கழுத்து | --- | / | --- | / |
| ஆரம் | மகளிர் | கழுத்து | / | / | / | / |
| கண்டசரம் | மகளிர் | கழுத்து | --- | / | --- | / |
| தாலி | மகளிர் | கழுத்து | --- | --- | / | / |
| தும்பு | மகளிர் | கழுத்து | --- | --- | --- | / |
| பதக்கம் | மகளிர் | கழுத்து | --- | / | --- | / |
| பூணாரம் (கழுத்து உரு) | மகளிர் | கழுத்து | --- | --- | --- | / |

| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
|---|---|---|---|---|---|---|
| மங்கள சரம் | மகளிர் | கழுத்து | --- | --- | / | / |
| மங்கிலியம் | மகளிர் | கழுத்து | --- | --- | / | / |
| காப்பு | மகளிர் | கை | / | / | / | / |
| வளை | மகளிர் | கை | / | / | / | / |
| வளைவி | மகளிர் | கை | / | / | / | / |
| ரோடானி | மகளிர் | கை | --- | / | --- | / |
| மோதிரம் (கைவிரல்) | மகளிர் ஆடவர் | கைவிரல் | / | / | / | / |
| சலங்கை | மகளிர் | கால் | / | / | --- | --- |
| சிலம்பு | மகளிர் | கால் | --- | --- | / | / |
| தண்டை | ஆடவர் மகளிர் | கால் | / (குழந்தை பருவம்) | / | --- | --- |
| பாடகம் | மகளிர் | கால் | / | / | / | / |
| மோதிரம் (கால்விரல்) | ஆடவர் மகளிர் | கால்விரல் | --- | --- | / | / (திருமணத்தில் மட்டும்) |

| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
|---|---|---|---|---|---|---|
| கடுக்கன் | ஆடவர் | காது | / (குழந்தைப் பருவம்) | / | --- | / (திருமணத்தில் மட்டும்) |
| தங்க அருணா | ஆடவர் மகளிர் | இடுப்பு | / (குழந்தைப் பருவம்) | / | --- | --- |
| மாராப்பு | ஆடவர் மகளிர் | மார்பின் குறுக்கே | --- | / (புதுமையில் மட்டும்) | --- | --- |
| பதைக்கம் | ஆடவர் | கழுத்து | --- | --- | --- | / (திருமணத்தில் மட்டும்) |
| மகரி | ஆடவர் | கழுத்து | --- | --- | --- | / (திருமணத்தில் மட்டும்) |
| தாயத்து | ஆடவர் மகளிர் | இடுப்பு, கை | / | --- | / | --- |

## ஒப்பாரிப் பாடலில் இடம் பெறும் - உவமை, உருவகங்கள்

| | குழந்தை | ஆடவர் | மகளிர் |
|---|---|---|---|
| தெய்வங்கள் | கிருஷ்ணன், அச்சுதன் முருகு, லிங்கம் | அச்சுதர், கந்தர், ஈஸ்வரர், பரமன், நீலவர், பெருமாள், மாயவர் | கொப்பத்தா, செல்லாயி, ஈஸ்வரி, மீனாள், பொன்னழகி வள்ளி |
| தெய்வ அடியார்கள் | சிறுத்தொண்டன் சீராளன் | திருநீலகண்டர், மார்க்கண்டன், | --- |
| தெய்வத் தொடர்புடைய பொருட்கள் | சிவமாலை, சன்னதிக் கண்ணாடி, வேலிருக்கும் பொட்டகம், பார்வதி கைக் கிளி, மதுரை மீனாள் மார்பதைக்கம், மயில் வாகனம் | தீபம், தங்கரதம் வேல் | கோபுரம், தீபம் |
| புராணப் பாத்திரங்கள் | வீமன், கருணன் சீராளன் | வீமன், கருணன், தருமன், அருச்சுனன், நகுல சகாதேவர், அரிராமர், கிருஷ்ணன் | அல்லி, காந்தாரி, இந்திரனார், தேவி, சீதை, பாஞ்சாலி |

| | குழந்தை | ஆடவர் | மகளிர் |
|---|---|---|---|
| வரலாற்றுப் பாத்திரங்கள் | அரசு | சோழர், பாண்டியர், மன்னர், கொத்தவர், மகராசா, ராஜாக்க | தேவி |
| மலர்கள் | செம்பகம், தாமரை, பிச்சி, மல்லி, ரோசா | --- | அல்லிப்பூ, முல்லை, பிலாப்பூ, பின்னப்பூ,மருக்கொழுந்துமாலை |
| பறவைகள் | புறா, அன்னம், கிளி, தாரா, காடை, சிட்டு, குருவி | --- | கிளி, அன்னம், மயில், குயில், சிட்டு |
| பழங்கள் | கொய்யா, மாதுளை | --- | --- |
| மரங்கள் | --- | பிலா, நார்த்தை, எலுமிச்சை தென்னை | தென்னை, வாழை, பாக்கு, நெல்லி |
| காய் | தேங்காய், மாங்காய், பிலாக்காய், செவ்வெளனி | --- | வெள்ளரி, பூசணி, கத்திரி |
| விலங்கு | சித்தானை, குஞ்சல (ர)ம், மான் | புலி, கரடி, ஆனை, குதிரை | குரங்கு |

| | குழந்தை | ஆடவர் | மகளிர் |
|---|---|---|---|
| அணிகலன் | மோதிரம், தாயத்து, பதக்கம் | --- | --- |
| செல்வப் பொருள் | தங்கம், முத்து, வயிரம், மரகதம், ரத்தினம், பவளம், தெரவியம், மாணிக்கம் | தங்கம், வயிரம், வெள்ளி, முத்து, பவளம் | வயிரம் |
| செயற்பாடு | நாடகம் | --- | --- |
| விளையாட்டுப் பொருள் | கிலுகிலுப்பை, பாவை, பம்பரம், ஊஞ்சல் | --- | --- |
| மனைபடு பொருள் | பொட்டகம், மணிவிளக்கு | --- | --- |
| உணவு | மஞ்சப்பொடி, சீனிப்பொடி கருணைப் பொடி, வெல்லம், சோளம், கம்பு | அரிசி, பால், தேன் | பால், தேன் |
| பிற | முகதலவு, பட்டுக்கவுறு, குருத்து | சமுதாடு | பேய், முசுறு, பாம்பு |

## சொல்லாட்சி

| ஆடவர் | | | மகளிர் | | |
|---|---|---|---|---|---|
| அதிகாரி | சந்திரர் | புலந்திரன் | அருங்கிளியா | சமத்தி | மங்கை |
| அந்தணர் | சமத்தர் | புலந்திரனார் | அல்லி | சானகியா | மதுரைமீனா |
| அரசர் | சிறுத்தொண்டன் | பெருமாள் | அலங்காரி | சானகையா | மயிலனையா |
| அரிராமர் | சீராமர் | பொட்டொசந்தார் | ஆரணங்கு | சித்தடியா | மயிலி |
| அருச்சுனர் | சீராமன் | பொரதானி | ஆனிழையா | சீதேவி | மாது |
| அருச்சுனன் | சீராளன் | மகராசர் | இளங்குயிலா | சீதை | முடிகுழலாள் |
| இந்திரர் | சுந்தரனார் | மகராசன் | இளங்கொடியா | சுந்தரி | மெல்லி நல்லாள் |
| இந்திரனார் | செல்லர் | மகராசா | உத்தமியா | செல்லி | வள்ளி |
| உத்தண்டர் | செல்வர் | மந்திரி | ஊர்வசியா | தேவி | வாவரசி |
| கருணர் | சோழர் | மன்னர் | எளங்குயில் | தேன்மொழியா | |
| கருணன் | தனஞ்சயர் | மாயவர் | ஏந்திழை | தோகை | |
| குமரர் | தருமர் | மார்க்கண்டன் | ஒய்யாரி | நாயகி | |
| கொத்தவனார் | தருமவான் | முடிமன்னர் | கட்டழகி | பாங்கி | |
| கொத்தவுர் | துரை | வடிவொசந்தார் | கண்ணகி | பாஞ்சாலி | |
| குழலான் | தெசையர் | விசயன் | கன்னி | பைங்கொடியா | |
| கொம்பனையான் | நித்தியர் | வீமன் | கனதி | பொண்ணு | |
| கோதண்டர் | பாண்டியர் | வீமர் | காந்தாரி | பொய்க்கடியா | |
| சத்தியர் | புண்ணியர் | வேதியர் | காரிழையா | பொற்கொடியா | |
| சத்தியவார் | புண்ணியவார் | | கொம்பனையா | போரழகி | |
| | | | கோதை | | |

| மலர்கள் | மலர்கள் | ஊர்கள் | ஊர்கள் | காய் | நெல் |
|---|---|---|---|---|---|
| அடுக்கரளி | தாமரைப்பூ | அங்கவளநாடு | சோழபுரம் | அவரைக்காய் | மட்டை |
| அடுக்குமல்லி | தாழம்பூ | அத்தினபுரம் | தஞ்சை | ஈச்சங்காய் | வெள்ளை |
| அரளிப்பூ | தெகழிப்பூ | ஆத்தூர் | தருமபுரம் | கத்திரிக்காய் | குறுவை |
| அல்லிப்பூ | பிச்சிப்பூ | ஆரணி | திருப்பூர் | கஸ்தூரிக்காய் | சிறுமொளகி |
| ஓலைப்பூ | பிலாப்பூ | எலங்கை | திருவண்ணாமலை | சாதிக்காய் | வரக்கருடன் |
| கதம்பமலர் | பின்னப்பூ | கம்பம் | தில்லை | சுண்டைக்காய் | கார்சம்பா |
| கனகாம்பரம் | பொடலம்பூ | கல்கத்தா | பட்டணம் | செந்தூரக்காய் | அரைச் சம்பா |
| காந்திமலர் | மருக்கொழுந்து | காசி | பம்பாயி | தேங்காய் | மொளகு சம்பா |
| கார்த்திகைப்பூ | முல்லைப்பூ | காஞ்சிபுர் | பர்மா | பிலாக்காய் | சரச் சம்பா |
| குடமல்லி | ரோசா | கும்பகோணம் | பாண்டிபுரம் | பீக்கங்காய் | |
| குண்டுமல்லி | வங்காளமல்லி | குன்னக்குடி | புதுக்கோட்டை | புடலங்காய் | |
| கொடமல்லி | வடமல்லி | சவுங்கம் | புள்ளையார்பட்டி | பூசணிக்காய் | |
| கொத்தரளி | | கொள்ளிடம் | பொன்னிவளநாடு | மாங்காய் | |
| சரமல்லி | | சிங்கப்பூர் | மதராசு | வெண்டிக்காய் | |
| சிங்கப்பூர்மல்லி | | சிதம்பரம் | மதுரை | வெள்ளரிக்காய் | |
| செகமல்லி | | சீர்காழி | மலேயா | | |
| செண்டுமல்லி | | சீரங்கம் | மனுவளநாடு | | |
| செம்பகப்பூ | | சென்னை | மாயவரம் | | |
| செவந்திப்பூ | | சேங்கைக்கரை | முத்துவளநாடு | | |
| | | சேலம் | ரெங்கோன் | | |
| | | | வங்காளம் | | |
| | | | வீமபுரம் | | |

| கனி | மரம் | பறவை | விலங்கு |
|---|---|---|---|
| ஆப்பிள்பழம் | ஆக்கு | அன்னம் | ஆடு |
| ஆலம்பழம் | ஆலமரம் | காக்கா | ஆனை |
| எலந்தைப்பழம் | இலுப்பை | காடை | கரடி |
| கொய்யா | எலுமிச்சை | கிளி | கன்று |
| நாவப்பழம் | காஞ்சி | குயில் | குதிரை |
| பலாப்பழம் | கொய்யா | குருவி | குரங்கு |
| மாதுளை | சவுக்கு | கோழி | சிங்கம் |
| மாம்பழம் | சாக்குக்கட்டி | சிட்டு | நரி |
| வாழப்பழம் | தென்னை | தாரா | பசு |
| வேப்பம்பழம் | தேக்கு | புறா | புலி |
| | நார்த்தை | மயில் | மாடு |
| | நெல்லி | | மான் |
| | பனை | | |
| | பிள்ளை | | |
| | பிலா | | |
| | மா | | |
| | வாழை | | |
| | வில்வம் | | |
| | வேம்பு | | |

முனைவர் பழ. அன்பு மீனாள் அவர்கள்
திரு. பழ.லெ. பழனியப்ப செட்டியார்-
உமையாள் ஆச்சி ஆகியோரது மகளாக
7-8-1948ல் பிறந்தார்.
சென்னை மாநிலக் கல்லூரியில்
எம்.ஏ. தமிழ் இலக்கியம் படித்து விட்டு
மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில்
1989ல் பிஎச்.டி., பட்டம் பெற்றவர்.
மாணவப்பருவத்தில் பேச்சு,
கட்டுரைப் போட்டிகளில்
மாநில அளவில் பரிசுகள் பெற்றவர்.
33 ஆண்டுகளாக அரசுக் கல்லூரிகளில்
பணியாற்றி வரும் இவர் தற்பொழுது
அருள்மிகு மீனாட்சி அரசு மகளிர்
கல்லூரி தமிழ்த்துறையில் தலைவராக
உள்ளார். இளைஞர் நலம்,
பெண்கள் முன்னேற்றம்,
நாட்டுப்புறப் பாடல்களில் ஆர்வம்.
இவரது கணவர் திரு.மெ. ஆவிச்சி
எம்.ஏ. எம்ஃபில் அவர்கள் மதுரை
தியாகராசர் கல்லூரியில் ஆங்கிலப்
பேராசிரியராக பணியாற்றி வருகிறார்.
இந்நூல் இவரது முதல் முயற்சி.
செட்டி நாட்டு ஆச்சியர்கள் பாடும்
ஒப்பாரிப் பாடல்களின்
ஓர் அரிய தொகுப்பு.

